இயற்கையறிவு - சுயவறிவு.

இயற்கையுணர்வுடைமை - கடவுளெண்குணத்தொன்று; அத்—பூர்வஞானம்.

இயற்சீர் - ஆசிரியவுரிச்சீர்.

இயற்சீர்வெண்டளை - மாமுன்னிரையும் விளமுன்னேருமொன்றி வருவது.

இயற்சொல் - வழக்கச் சொல்.

இயற்பெயர் - காரணமின்றி வழங்கும் பெயர், செம்பொருளையுணர்த்தும் பெயர்.

இயற்றமிழ் - செந்தமிழ், வழக்கத் தமிழ்.

இயற்றல்
இயற்றுதல் } ஏவுதல், செய்தல்.

இயற்றளை - ஆசிரியத்தளை.

இயற்றனம் - கருவி, பாத்திரம்.

இயற்றி - முயற்சி.

இயற்று - இயற்றெனேவல், பாத்திரம்.

இயற்றுதல் - செய்தல், நடத்தல், விதித்தல்.

இயற்றும்வினை - தன்வினை.

இயனம் - மரமேறிகளின் கருவியுறை.

இயனிலையுருவகம் - உருவகவலங்காரத்தொன்று.

இயன்மொழிவாழ்த்து - ஓர் பிரபந்தம்.

இயாகதம் - சிற்றகத்தி.

இயாகம் - கொன்றை, வேள்வி.

இயாதம் - தோட்டியால் யானையைச் சுசலுத்துகை, யானைத் தோட்டியின் பிடர்.

இயாழ் - ஓரிசைக்கருவி.

இயுசாவியம் - கொன்றை.

இயை - இசைப்பு, இசையென்னேவல், புகழ்.

இயைதல் - பொருந்தல்.

இயைத்தல் - இணங்கல், பொருத்தல்.

இயைபின்மையணி - பொதுநீங்குவமை.

இயைபு - இசைவு, இணக்கம், செய்யுளிரேருறுப்பு, செய்யுள் வனப்பிலொன்று, புணர்ச்சி, பொருத்தம்.

இயைபுத்தொடை - அடிகளினிறுதிதோறு மோரெழுத்தே வருந்தொடை.

இயைபுருவகம் - ஓரலங்காரம்.

இயைபுவண்ணம் - இடையெழுத்து மிக்கு வருவது.

இயைபுளன் - புகழாளன்.

இயைவன - வழங்குவன.

இயைமே - வாழை.

இயைய - உவமைச்சொல்.

இர - இரா.

இரகசியம் - அந்தரங்கம், பெண்குறி, மறைவு.

இரகிதம் - இட்டம், கைவிடுதல், நீங்கிநிற்கை, விடுதல்.

இரகு - இராமனிரண்டாம் பாட்டன்.

இரகுநாதன் - இராமன்.

இரகுவமிசம் - இரகுவினுடைய புத்திர பௌத்திர பரம்பரை, காளிதாஸகவி செய்த ஒருமகா காவியம்.

இரக்கச்சொல் - பரிதாபமொழி.

இரக்கம் - உணர்வு, உருக்கம், ஒலி, கிருபை, துன்பம், பிச்சை, மனவுருக்கம்.

இரங்கல் - அகப்பொருட்டுறையி னென்று, அழுதல், உருகுதல், ஒலித்தல், பரிதபித்தல்.

இரங்கல்விலக்கு - ஓரலங்காரம்.

இரசகந்தபாஷாணம் - சாதிலிங்கம்.

இரசகருப்பூரம் - ஓர் மருந்து, கிண்ணிக் கருப்பூரம்.

இரசசன் - வண்ணான்.

இரசக்கட்டு - சூதகக்கட்டு.

இரசசானு - இருதயம், முகில்.

இரசசிந்தூரம் - ஓர் சிந்தூரம்.

இரசதம் - அரைப்பட்டிகை, இரத்தம், கழுத்தணி, பொன், யானைத்தந்தம், வெண்மை, வெள்ளி.

இரசதாது - சூதம்.

இரசநாதம் - இரசம்.

இரசபாஷாணம் - ஓர் பாஷாணம்.

இரசலிங்கம் - சாதிலிங்கம்.

இரசவாதம் - இரசவித்தை.

இரசதபஸ்பம் - வெள்ளிப்பஸ்பம்.

இரசம் - இனிமை, சத்ததாதுவி னென்று, சாறு, சுக்கிலம், சுவை, நஞ்சு, நீர், பாதரசம், பூந்தாது, மா, மிளகுநீர், வீர முதலிய வெண்சுவை.

இரசனம் - ஒலி, ஓர் பொறி, சுவை, நாக்கு.

இரசனை - அரத்தை.

இரசனி - இராத்திரி, நீலம், பயின், மஞ்சள்.

இரசனை - அணிவகுப்பு, அலங்கரித்தல், இரசிப்பு, சாறு, சுவை, நா, மயிர்க்கோதல், மாதரிடையணி, மாலை கோத்தல், வாசகவிணைப்பு.

இரசாதலம் - கீழேழுலகத்தொன்று.

இரசாபாசம் - அழிவு, இரசமின்மை.

இரசாயனம் - இரசவாதம், ஓர் மருந்து, நஞ்சு, மோர்.

இரசாலம் - கரும்பு, பலாமரம், மாமரம், கோதுமை.

இரசிதம் - இடி, ஒலி, வெள்ளி, வைப்புப்பாஷாணம் முப்பத்திரெண்டி னென்று.

இரசேந்திரியம் - நா.

இரச்சு - கயிறு, சடை.

இரஞ்சகம் - அன்பு.

இரஞ்சிதம் - பிரியம்.

இரட்சாபந்தனம் - காப்பு.

இரட்டல் - அசைத்தல், இரட்டித்தல், ஒலித்தல்.

இரட்டியர் - இடையர், வைசியர்.

இரட்டு - இரட்டென்னேவல், இருமடங்கு, ஒலி, ஓர்சாதி.

இரட்டுமி - ஓர் வாத்தியம்.

இரட்டுறமொழிதல் - இரு பொருள்படச் சொல்லுவது.

இரட்டை - பாடிவிச்சி, இரட்டையெண், மிதுனவிராசி.

இரட்டைக்கிளவி - ஒருசொல் பிரிக்கப்படாமல் இரட்டித்து வரல், ஒலிக்குறிப்பில் வரும் இரட்டைமொழி.

இரட்டைத்தொடை - அடி முழுதும் புகன்ற தொடையே புகல்வது.

இரட்டைமணிமாலை - ஓர் பிரபந்தம், அது—வெண்பாவும் கலித்துறையு மிருபஃதந்தாதித் தொடையான் வருவது.

இரணகளம் - போர்க்களம்.

இரணசுக்ரன் - கண்ணேயினென்று.

இரணசூரன் - யுத்தவீரன்.

இரணதாரை - போர்புரிய வூதுந்தாரை.

இரணதூரியம் - போர்ப்பறை.

இரணத்துருவம் - இரகபுடத்திற் கழிக்கப்படுவது.

இரணத்தொடை - முரண்டொடை.

இரணபரீட்சை - சத்திரபரீட்சை.

இரணபாதகம் - கொலை, நம்பிக்கைத்துரோகம்.

இரணபேரி } போர்ப்பறை,
இரணபேரிகை } யுத்தமுரசு.

இரணம் - அரவம், இரை, உப்பளம், உணவு, ஒலி, கடன், சதுப்பு நிலம், பகை, புண், போர்.

இரணரங்கம் - போர்க்களம், யானைக் கொம்பினிரண்டினிடைத்தலம்.

இரணாங்கணம் - போர்க்களம்.

இரணாபியோகம் - படையெழுச்சி.

இரணியகருப்பன் - பிரமன்.

இரணியதானம் - சொர்ணதானம்.

இரணியம் - பொன்.

இரணியன் - ஓரசுரன்.

இரணியாக்கன் - இரணியன்முன்னோன்.

இரணை - இரட்டை.

இரண்டடியெதுகை - முதலிரண்டடியோரெதுகையாய் மற்றையடிகளோரெதுகையாயேனும் பலவெதுகையாயேனும் வருவது.

இரண்டன் - துர்க்குணன்.

இரண்டுபடுதல் - ஐயுறல், வேறுபடுதல்.

இரதகம் - இத்தி.

இரதசாரதி - தேர்ப்பாகன்.

இரதசாரி - தேரேற்றம், வேசி.

இரததன்மாத்திரை - இரசதன்மாத்திரை, உருசியறிவு.

இரதபதம் - புறவு.

இரதம் - அரைஞாண், அவயவம், இனிமை, இரசம், உடல், குணம், ஸப்ததாதுவிலொன்று, அது - உமிழ் நீர். சுவை, சூதம், தேர், பல், புணர்ச்சி, மாமரம், வாகனம்.

இரதனம் - அரைஞாண், கிண்கிணி, பல்.

இரதன் - கண், கிளி.

இரதி - ஆசைப்பெருக்கம், இரதிதேவி, இலந்தை மரம், காந்தன், கார்த்திகைப்பூ, பித்தளை, புணர்ச்சி, பெண்யானை, வேண்டல்.

இரதிபதி - மன்மதன்.

இரதிகிரியை
இரதிக்கிரீடை } மைதுனம்.

இரதோற்சவம் - தேர்த்திருவிழா.

இரத்தபாஷாணம் - ஓர் பாஷாணம்.

இரத்தமாரணம் - காவிக்கல்.

இரத்தம் - உதிரம், குங்குமப்பூ, சாதிலிங்கம், சிவப்பு, செம்பு, பவளம்.

இரத்தவீசம் - மாதுளை.

இரத்தல் - பிச்சை, வேண்டுதல்.

இரத்தாட்சி - ஓர் வருஷம்.

இரத்தி - இத்தி, இலந்தை, முன்னிலை வினைமுற்று.

இரத்தினச்சுருக்கம் - உறுப்புவமைநூல், ஓர் வாகடம்.

இரத்தினம் - மாமணிப்பொது.

இரத்தினாகரம் - கடல், மஹோநதி.

இரத்தினி - முன்கைப்பேரெலும்பு.

இரத்துதல் - பேசலாவெழுமொலி.

இரத்தோற்பலம் - செங்குவளை, செந்தாமரை.

இரந்திரம் - இழி, ஜன்மலக்கினம், துவாரம்.

இரப்பன்
இரப்பாளன் } பிச்சைக்காரன்.

இரப்பு - தரித்திரம், பிச்சை.

இரப்புரை - இரத்தற்கு வருகிற சொற்கள்.

இரமணம் }
இரமணீயம் } இன்புறுத்தல்.

இரமணன் - காந்தன். தலைவன், நாயகன்.

இரமதி - காகம், காமன், காலம், ஆர்த்தன், மோட்சம்.

இரமாபதி - திருமால்.

இரமாப்பிரியம் - தாமரை.

இரமித்தல் - சந்தோஷித்தல்.

இரமியம் - அழகு, திருப்தி.

இரமை - இலக்குமி, செல்வம் மனையாட்டி.

இரம்பக்கல் - குருந்தக்கல்.

இரம்பம் - ஈர்வாள், கஸ்தூரி மிருகம்.

இரம்பிவம் - மிளகு.

இரலை - அச்வினிநாள், ஊதிடு கொம்பு, கருமான், கலைமான், புல்வாய்.

இரவச்சம் - இரக்கவஞ்சுவது.

இரவணம் - ஒட்டகம், குயில், பரிகாசம். வெண்கலம். வெப்பம்.

இரவலர் }
இரவோர் } இரப்போர்.

இரவல் - சொந்தமில்லாதது,முக மாற்று.

இரவறிவான் - கோழிச்சேவல்.

இரவி - சூரியன், மலை, மூக்கின் வலத் துவாரம், வாணிகத் தொழில்.

இரவிகன்னம் - சூரியனுக்கும் பூமிக்குமுள்ள தூரம்.

இரவிகாந்தம் - சூரியகாந்தம்.

இரவிகுலம் - சூரியவமிசம்.

இரவிகேந்திரம் - சூரியன் ஸ்தானத்துக்கும் உச்சஸ்தானத்துக்குமுள்ள தூரம்.

இரவிக்கை - முலைக்கச்சு.

இரவிநாள் - ரேவதிநாள்.

இரவிபுடபுக்தி - சூரியனது உத்தமபுடம்.

இரவிதி - வெள்ளி.

இரவிமத்தியமபுக்தி - சூரியமத்தியமபுடம்.

இரவிவிக்கேபம் - கிரகணகாலத்திற் சூரியன் கிராந்தி மார்க்கத்திற் சாய்ந்திருக்கை.

இரவு - இரத்தல், இராத்திரி, பிச்சை, வறுமை.

இரவுக்குறி - களவுப்புணர்ச்சியில் இரவிற் சந்திக்கக் குறித்த இடம்.

இரவுத்திரம் - இரௌத்திரம்.

இரவுரவம் - இரௌரம்.

இரவெரிமரம் - சோதிவிருட்சம்.

இரவை - அணு, அற்பம், துப்பாக்கியிலிடு மீயச்சன்னம், மணிப்பொதி, வச்சிரம்.

இரவோர் - இரவலர்.

இரவோன் - சந்திரன், இரப்போன், வறிஞன்.

இரளி - கொன்றைமரம்.

இரற்று - இரற்றென்னேவல், ஒலி.

இரா - இரவு, இருத்தலைச் செய்யாவென்னு மஃறிணைப் பன்மை முற்று, இருந்தென்னெச்சம்.

இராகம் - அன்பு, ஆசை, இன்னிசை, சடத்தீயினென்று, சிவப்பு, நிறம், மோகம், வித்தியாதத்துவமேழினென்று.

இராகவன் - இரகுவம்சத்தில் பிறந்தவன், இராமன்.

இராகவி - பெருநெருஞ்சில்.

இராகவிண்ணுடகம் - கொன்றை.

இராகவிராகம்-விருப்புவெறுப்பு.

இராகி - குரக்கன்.

இராகு - கரும்பாம்பு, கோமேதகம்.

இராகுகாலம் - இராகுவின் காலம்.

இராக்கதம் - எண்வகைமணத்தொன்று.

இராக்கதர் - ஓர் சாதியர்.

இராக்கதிர் - சந்திரன்.

இராக்கினி - அரசி.

இராசகம் - இராசகூட்டம்.

இராசகரம் - இறை.

இராசகனி - எலுமிச்சைக்கனி.

இராசகாரியம் - அரசியல்.

இராசகோழை - ஓர் கபரோய்.

இராசசின்னம் - அரசர்க்குரிய முடி முதலிய வரிசைகள்.

இராசசூயம் - அரசர்கள் செய்யும் வேள்வி, தாமரை, மலை.

இராசசேவை - அரசர்க்குத் தொண்டு, இராசதரிசனம்.

இராசதம் - ஓர்காலம், முக்குணத்தினென்று, அஃது— ஊக்கம், கல்வி, கேள்வி, ஞானம், தருமம், தானம், வீரமென்னு மேழுகுணமுடையது.

இராசதருமம் - அரசநீதி.

இராசதாலம் - கமுகு.

இராசாதானம், இராசதானி, இராசநகரம், இராசமாநகரம் } அரசன் வாழு நகரம்.

இராசபஞ்சகம் - இராசபயம்.

இராசபரி - பரியரிசு.

இராசபிளவை - முதுகில்வரும் பிளவைக்கட்டி.

இராசபுரி - இராசநகர், வெல்லம்.

இராசபுள் - எண்காற்புள்.

இராசமண்டலம் - இராசசங்கம்.

இராசமாநகரம் - கருவழலை.

இராசயுகம் - பாலை.

**இராசயோகம்** - சனனத்திற்சுபக் கோள்கள் கூடி நிற்கை, ஞானிக்குரிய யோகம் நான்கி னென்று.

**இராசராசன்** - குபேரன், சக்கிர வர்த்தி.

**இராசலேகம்** - திருமுகம்.

**இராசவள்ளி** - ஓர் கொடி.

**இராசனை** - வெள்ளைப்பூண்டு.

**இராசன்** - அரசன், இந்திரன், சந்திரன்.

**இராசாவர்த்தம்** - ஓரிரத்தினம்.

**இராசாளி** - ஓர் புள்.

**இராசி** - இணக்கம், ஒழுங்கு, ஓரை, குவிதல், கூட்டம், மத்தியானம், மேஷம் முதலிய விராசி.

**இராசிகம்** - அவஷ்ரகணிதம், அமிசம், அரசனால் வருவது, ஓரிராசி, குவியல், நரம்புவரி.

**இராசிகை** - வயல், வரி.

**இராசிசக்கிரம்** - இராசிமண்டலம்.

**இராசிநாதன்** - அதிகாரகிரகம்.

**இராசிமண்டலம்** - இராசிக்கூட்டம், ஓரை.

**இராசியம்** - அந்தப்புரம், சா, தாமரைப்பூ, பெண்குறி, மறைவு.

**இராசிலம்** - சாரைப்பாம்பு, நீர்ப் பாம்பு.

**இராசிவக்கிரம்** - கிரகம் ஒருராசியிலிருந்து பின்னுள்ள ராசிக் குப்போதல்.

**இராசீவம்** - தாமரைப்பூ.

**இராச்சியபாரம்** - அரசாளுகை.

**இராச்சியம்** - அரசாட்சி, அரசு செல்லுமிடம், உலகு, நாடு.

**இராடம்** - ஓர்தேசம், கழுதை, பெருங்காயம், வெங்காயம்.

**இராட்சத** - ஓர் வருடம்.

**இராட்சதர்** - இராக்கதர்.

**இராட்டு** - அரசன்.

**இராணம்** - இலை, மயிற்றோகை.

**இராணுவம்** - படை, யுத்தமுகம்.

**இராதங்கம்** - கால், கோரம்.

**இராதம்** - கடைக்கொள்ளி.

**இராதை** - கிருஷ்ணன் மனைவி, மின்னல், விசாகம்.

**இராதைகாந்தன்** - கிருஷ்ணன்.

**இராத்திரி** - இரவு, மஞ்சள்.

**இராந்து** - இடுப்பு, தொண்டைச் சந்து.

**இராந்துண்டு** - இலந்தை.

**இராப்போசனம்** - நற்கருணை.

**இராமக்கிரியை** - ஓரிராகம்.

**இராமசகன்** - சுக்கிரீவன்.

**இராமசந்திரன்** - இராமன்.

**இராமசீத்தா** - அணிநுணா.

**இராமடம்** - பெருங்காயம்.

இராமதூதன் - அனுமான்.

இராமபாணம் - இராமரம்பு, ஓர் புழு, ஓர் மருந்து.

இராமம் - அழகு, இசை.

இராமன் - தசரதன் புத்திரன்.

இராமன்றேவி - சீதை.

இராமானுசன் - இலக்குமணன், வைஷ்ணவ சமயா சாரியரி லொருவன்.

இராமாயணம் - இராமசரிதை.

இராமலை - கருகுமலை.

இராமிலன் - கணவன், காமன்.

இராயணி - அரசி.

இராவடம் - அசோகு, அரா வுத்தொழில்.

இராவடி - ஏலம், பேரேலம்.

இராவணம் - விளக்கு.

இராவணன் - இலங்கைவேந்தன்.

இராவணன்மந்திரி-மகோதரன்.

இராவணத்தம் - ஓர்யாழ்.

இராவணி - இந்திசித்து,

இராவதம் - சூரியன், குதிரை, மேகலோகம்.

இராவதி - ஓர் கொடி, ஓர் நதி, யமபுரம்.

இராவுதல் - அராவுதல்.

இரிகம் - இரத்தாசயம், இருதயம்.

இரிங்கணம் - ஓர் பூள்.

இரிசல் - இரிதல், புலனைவே றொன்றிற் செலுத்தல், மன முறிதல்.

இரிசியா - பூனைக்காலி.

இருஞ்சி - மகிழ்.

இரிஞர் - பகைவர்.

இரிதல் - அஞ்சுதல், ஓடுதல், கெடுதல், சாய்தல்.

இரிபு - பகை, பகைவன், தோல்வி.

இரிபேரம் - வெட்டிவேர்.

இரிப்பு - அச்சுறுத்தல், முறி யடிக்கை.

இரியல் - இரிதல், கெடுதல், நல்லாடை.

இரீதி - பித்தளை, முறைமை.

இரீதிகௌளம் - ஓரிராகம்.

இரு - இரண்டு, ஓர்வினைப்பகுதி, பெரிய.

இருகால் - அரை, இரண்டுதாள்.

இருக்கு - மந்திரம், முதல்வேதம், வேதம்.

இருக்கை - ஆசனம், இருத்தல், இருப்பிடம், ஊர்ப்பொது, குடியிருப்பு, வீடு.

இருசகம் - மாதுளை.

இருசு - உரித்து, செவ்வை, வண்டியுளிரும்பு, மூங்கில்.

இருசுடர் - சூரியசந்திரர்.

இருஞ்சிறை - காவல், நரகம், மதில்.

இருடி - ஆந்தை, முனிவன்.

இருடிகள் - முனிவர்.

இருடிகேசன் - விஷ்ணு.

இருடிபத்தினி } முனிவன்
இருடிபன்னி } மனைவி.

இருட்சி - இருள், மயக்கம்.

இருட்டு - அறியாமை, இருட்டென்னேவல், இருள், மயக்கம்.

இருட்டுதல் - இருளுதல்.

இருணம் - உப்பளம், உவர்த்தரை, கடன், கழிப்புக்குறி, கழிக்கப்படுமெண்.

இருணமோசனம் - கடன் தீர்த்தல்.

இருணிலம் - நரகம்.

இருண்டி - சண்பகம்.

இருதயம் - உள்ளம், உயிர்நிலை, கருத்துரை, மனம்.

இருதயகமலம் - இதயகமலம், உள்ளம்.

இருதிணை - அஃறிணை உயர்திணை இயங்குதிணை இயங்காத்திணை.

இருது - கடவுளின் முத்தொழில், பருவம், பருவத்தால் வருபெயர், பிரபை, மகளிர் சூதகம்.

இருதுக்காட்சி - அகப்பொருட்டுறையிலொன்று.

இருதுசந்தி - பருவசங்கிரமம்.

இருதுசாந்தி - சோபனகலியாணம்.

இருத்தல் - இருத்துதல், சீவித்தல், தங்கல், தாழ்தல்.

இருத்தி - இருவென்னேவல், சித்தி, மேன்மை.

இருத்து - அஸ்தக்கிரியை.

இருத்துதல் - அழுத்துதல், தங்குவித்தல், நிலைபெறச்செயல்.

இருத்தை - சந்திரனுன்காம் பக்கம், செங்கொட்டை, நாழிகைவட்டில்.

இருநா - உடம்பு, பாம்பு.

இருநிதிக்கிழவன் - குபேரன்.

இருந்து } அசைச்சொல், கரி.
இருந்தை }

இருபன்னியம் - செங்கொட்டை.

இருபால் - இரண்டுவகை.

இருபாவிருபது - ஓர் பிரபந்தம்.

இருபாற்று - இருபாலையுடையது.

இருபான் - இருபது.

இருபிறப்பாளர் - அந்தணர்.

இருபிறப்பு - அந்தணர், சந்திரன், சிறகு, முட்டையிற் பிறப்பன, பல்.

இருபெயரொட்டு - இருசொல்லொருசொல்லாக நிற்பது.

இருபெயரொட்டுப் பண்புத்தொகை - ஆகியவென்னும் பண்புருபு தொக்கு நிற்க முதலாவது சிறப்புப்பெயரு மிரண்டாவது பொதுப்பெயருமாய் ஒரு பொருட் கிருபெயர் வருவன.

இருபெயர் - பொதுப் பெயர், காரணப்பெயர்.

இருபொருள் - கல்விப்பொருள், செல்வப் பொருள்.

இருபோகம் - இரண்டுதரம் விளைவு.

இருப்பவல் - ஓர் பூண்டு.

இருப்பிடம் - இசனம், இருக்குமிடம்.

இருப்பு - இருக்கத்தக்கவிடம், இருக்குந்தன்மை, இருக்கை, குதம், பீடம்,மிகுந்திருப்பவை.

இருப்புக்காய்வேளை - ஓர்வகைக் காய்வேளை.

இருப்புக்கிட்டம் - கீச்சுக்கிட்டம்.

இருப்புக்கொல்லி - சிவனார் வேம்பு.

இருப்புப்பாரை - குழிகல்லுங் கருவி.

இருப்புமுள் - குற்றுக்கோல்.

இருப்புமுறி - ஓர் செடி.

இருப்புலி - துவரை.

இருப்பூறல் - இருப்புக்கறை.

இருப்பை - ஓர் மரம்.

இருமடியாகுபெயர் - ஆகுபெயர் மீண்டும் வேறொரு பொருளுக்கு ஆகு பெயராய் வருவது.

இருமடிமேவல் - ஈரேவல்.

இருமணம் - நற்கந்தம், துர்க்கந்தம்.

இருமரபு - தாய்மரபு, தந்தை மரபு.

இருமல் - இருமுதல்,கக்கல்நோய்.

இருமல்லி - சிறுமல்லி, பெருமல்லி.

இருமனம் - சந்தேகம்.

இருமு - இரண்டசையாலாகிய மொழி.

இருமை - இம்மை மறுமைகள், இரண்டு, இருதன்மை,கருமை, துக்கம், பெருமை, மகிமை.

இருமைக்குறில் - உயிர்க்குறில், உயிர்மெய்க்குறில்.

இரும்பலி } ஓர் செடி.
இரும்பிலி }

இரும்பன் - காரெலி.

இரும்பு - ஆயுதப்பொது, கரும்பொன்.

இரும்புளி - ஓர் மரம்.

இரும்பை - குடம், பாம்பு.

இருவகைத்தோற்றம் - சராசரம்.

இருவர்நூல் - கடவுள், பின்னவன் என்னும் இருவராற்செய்யப்பட்ட முதனூல் வழிநூல்.

இருவர்மாறுகோள் ஒருதலை துணிவு - ஒருவராலே மாறுபட்ட இரண்டனுள் ஒன்றை நீக்கி ஒன்றைத் துணிந்து எடுத்துக்கொள்ளுதல்.

இருவழக்கு - உலக வழக்கு, செய்யுள் வழக்கு.

இருவழி - வேற்றுமைவழி, அல்வழி.

இருவாச்சி - கருமுகைச்செடி.

இருவி - இருவிக் காந்தம், ஓர் நாபி, தினைத்தாள்.

இருவிக்காந்தம் - ஓர்நச்சுமூலிகை.

இருவினை - நல்வினை, தீவினை.

இருவேலி - வெட்டிவேர்.

இருவேளை - தைவேளை, நல்வேளை.

இருளர் - வேடர்.

இருளல் - அந்தகாரமாதல், இருளுதல், வியங்கோண்முற்று.

இருளி - இருசி, கருஞ்சீரகம், பன்றி, மூலையிலி, வெட்கம்.

இருளை - காணம்.

இருளிச்செவி - அமுக்கிராச் செடி.

இருளுதல் - ஒளிமழுங்கல், மங்கலாதல்.

இருன் - அந்தகாரம், இருட்டு, இருளென்னேவல், உன்மத்தம், கறுப்பு, நரகம், மயக்கம், யானை.

இருள்வலி - சூரியன்.

இரெப்பை - கண்மடல்.

இரேகை - எழுத்து, சந்திரரேகை, சித்திரமெழுதல், வரி.

இரேசகம் - பிராணுயாமத்தில் ச்வாஸத்தை விடல், பேதி மருந்து.

இரேசகி - கடுக்காய், சீந்தில்.

இரேசனம் - பேதி.

இரேசன் - வெள்ளைப்பூண்டு

இரேசிதம் - குதிரைவட்டமாயோடல், பரதவுறுப்புகளுளொன்று.

இரேசுதல் - அஜீரணம், அந்திப்பு.

இரேணு - அணு, அழகு.

இரேணுகம் - ஓர் மருந்து.

இரேதஸ் - விந்து, வீரியம்.

இரேபதம் - அட்டாதச தருமநூலிலொன்று.

இரேயம் - கள்.

இரேவகுப்தி - ஓர்ராகம்.

இரேவதம் - இரேவதிநாள்.

இரேவதன் - பலதேவன் மாமன்.

இரேவதி - கடைநாள், பலதேவன் மனைவி.

இரேவதிகொண்கன் - பலதேவன்.

இரை - ஆகாரம், இருப்பு, இலக்குமி, இரையென்னேவல், உணவு, ஒலி, பறவையுணவு.

இரைச்சல் - இரம்பம், ஒலி, வீக்கம்.

இரைதல் - ஒலித்தல், சீறுதல்.

இரைத்தல் - ஒலித்தல், சப்தித்தித்தல், வீங்குதல்.

இரைத்து - இண்டஞ்செடி, இரண்டு, உப்பிலி, புலிதொடக்கி, வெண்கலம்.

இரைப்பெலி - ஓர்வகையெலி.

இரௌத்தர் - குதிரைச்சேவகர், சோனகர்.

இரௌத்திரம் - பெருங்கோபம், நவரஸங்களிலொன்று.

இரௌத்திரி - ஓர் வருடம்.

இரௌரவம் - ஓர் நரகம், சிவகாமமிருபத்தெட்டினொன்று.

இர் - பன்மை விகுதி, முன்னிலை விகுதி.

இலஈடம் - யானைமேற்றவிசு.

இலகம் - ஊமத்தை.

இலகரி - ஓர் நூல், பெருந்திரை, மஸ்து, மிகுபுகழ்ச்சி, வெறி.

இலகல் - ஒலிசெய்தல், விளங்கல்.

இலகிமா - அட்டசித்தியிலொன்று

இலகிரி - அபின், கஞ்சா, சாதிக்காய், சாதிப்பத்திரி.

இலகு - அகில், இலகென்னேவல், குறிலெழுத்து, நொய்மை, தணிவு, தசகாலப்பிரமாணங்களுளொன்று.

இலகுசம் - ஈரப்பலா.

இலகுதல் - ஒளி செய்தல்.

இலக்கணச்சிதைவு - இலக்கணவழு.

இலக்கணப்போலி - இலக்கணமுடையதுபோல் வருவது.

இலக்கணம் - அடையாளம், அழகு, இயல், இலக்கியத்தினமைதி, ஒழுங்கு, சிறப்பு, தன்மை, பேர், போதப்பிரகாரம் மூன்றினொன்று, அஃது - தான் விவரிக்கும் பொருளின் சிறப்பைக்கூறல், முறைமை.

இலக்கணவழு - இலக்கணப்பிழை.

இலக்கணவிளக்கச்சூருவளி - ஓர் இலக்கணநூல்.

இலக்கணவிளக்கம் - இயற்றமிழ் நூலிலொன்று.

இலக்கணி - இலக்கண மறிந்தவன்.

இலக்கணை - இயற்பொருளின் சம்பந்தியை யுணர்த்துவது.

இலக்கம் - இலட்சம், ஒளி, எண், குறிப்பு, துலக்கம்.

இலக்கம் / இலக்காரம் } கந்தை, சீலை.

இலக்கியம் - இலக்கணநூற்படி முன்னோர் தந்த செய்யுள். உதாரணம், குறி.

இலக்கினம் - இராசிகளினுதயம், முகூர்த்தம்.

இலக்குமணன் } இராமனுக்கிளை
இலட்சுமணன் } யோன்.

இலக்கு - எண்ணம், எதிர், ஏது, ஒட்டம், ஒப்பு, குறிப்பு, சமயம், சுவடு.

இலக்குப்பார்த்தல் - குறிப்புப் பார்த்தல்.

இலக்குமணை - சாரசபட்சியின் பேடு.

இலக்குமி } சீதேவி,
இலட்சுமி } செல்வம்.

இலக்கம் - எறும்பு, களரி, கூட்டம், முடம்.

இலங்கனம் - கடத்தல், தாண்டுகை, பட்டினி.

இலங்கிசார் - அலைக்கழிவு, இடைஞ்சல்.

இலங்கு- ஒளிசெய்யென்னேவல், குளம்.

இலங்குதல் - ஒளி செய்தல், பிரகாசஞ் செய்தல்.

இலங்கை - ஆற்றிடைக்குறை, இலங்கைத்தீவு, இராவணனரண்.

இலசுனம் - மணியின் குற்றத்தொன்று, வெள்ளைவெங்காயம்.

இலச்சினை - குறி, முத்திரை, மோதிரம்.

இலச்சை - அவமதிப்பு, கூச்சம், தொந்தரவு, வெட்கம்.

இலச்சைகெட்டமரம் - கற்றேக்கு.

இலஞ்சம் - பரிதானம்.

இலஞ்சி - ஏரி, கீழ், குணம், குளம், கொப்பூழ், சாரைம்பாம்பு, புனம், புன்கு, மடு, மதில், மகிழமரம்.

இலட்சணம் - இடம், இலக்கணம், குறி, பார்வை, பேர்.

இலட்சம் - அடையாளம், இலக்கம், நூறாயிரம்.

இலட்சியம் - குறி.

இலட்சுமணம் - தாளி.

இலட்டுகம் - அப்பவர்க்கம், தோசை, பொரிமாத்திரை.

இலனை - அரசு.

இலண்டம் - யானையிலத்தி.

இலதை - கோற்கொடி, தக்கோலம், படர்கொடி.

இலதைவன்னி - கொடிவேலி.

இலந்தை - ஓர் மரம், குளம்.

இலபனம் - வாய்.

இலிபி - எழுத்து, பேறு, விதி.

இலிபிதம் - சம்பவிப்பது, பட்சித்தல், பேச்சு, பேறு, விதி.

இலிபித்தல் - சித்தித்தல், பேறு கிடைத்தல்.

இலப்தம் - அடைதல், பாசிதம்.

இலம்பகம் - அத்தியாயம், நுதலணிமாலை, மாலை.

இலம்படை - இடுக்கண், தரித்திரம்.

இலம்பம் } உச்சத்திற்குந்துரு
இலம்பனம் } வத்திற்குமுள்ளதூ
ரம், கைக்கூலி, தொங்குவது, திறதிட்டவரி, மாலை.

இலம்பாடு - தரித்திரம், வறுமை.

இலம்பாட்டோன் - தரித்திரன்.

இலம்பிகை - அண்ணுக்கு.

இலம்பிதமதி - சுத்தசசிபுடம்; கிராந்திமண்டலத்திற் கணக்கிட்ட சந்திரபுடம்.

இலம்பிதச்சா - உச்சராசி.

இலம்பிதம் - அசைவு, உயர்ச்சி, சந்திரபுடத்தை சூரிய பாதையிற் சேர்க்குமோரளவு, தொங்கல்.

இலம்போதரன் - விநாயகன்.

இலயம் - அடங்குகை, உருக்கல், ஒடுக்கம், கூத்தின் விகற்பம், கரைவு, கூத்து, சாவு, மறைவு.

இலயஸ்தானம் - ஒடுக்குமிடம்.

இலயித்தல் - ஒடுங்கல், சாதல்.

இலயை - தாளப்பிரமாணம்பத்தினொன்று.

இலலாடம் - நெற்றி.

இலலாடலிபி - தலையிலெழுத்து.

இலவிதம் - அழகு, அபிநயம், உபசாரம், ஓரிராகவிகற்பம், காமக்குறி, மாதுரியம்.

இலவிதை - இராக முப்பத்திரண்டினொன்று, பார்வதி.

இலவங்கம் - ஓர் வாசனைப்பண்டம், கராம்பு.

இலவணபஞ்சாட்சரம் - ஓர் மந்திரம், ஓர் மாந்திரீக நூல்.

இலவணபாஷாணம் - ஓர் பாஷாணம்.

இலவணம் - உப்பு, உவர்ப்பு.

இலவந்திகை - தண்ணீரிறைக்கும் யந்திரம்.

இலவம் - அழிவு, அற்பம், எழுதீவுகளிலொன்று, எண்கணப்பொழுது, கராம்பு, காலஅசப்மரமாணத்தொன்று, அது - எட்டுகணங்களைக்கொண்டது, சாதிக்காய், பஞ்சமரம், பிழை நீக்கல், பூசை.

இலவன் - இராமன் முதல் மைந்தன்.

இலளிதபஞ்சகம் - ஓரிராக விகற்பம்.

இலளிதம் - அழகு, உபசாரம், ஓரிராகம், சரசம், சிவாகமமிருபத்தெட்டிலொன்று, மாதுரியம்.

இலளிதை - பார்வதி.

இலாகரி - மஸ்து, வெறி.

இலாகவம் } இலகு, சாமர்த்தியம்.
இலாகு }

இலாகன் - ஓர் மீன்.

இலாக்கை - ஈர்.

இலாங்கலி - கலப்பை, செங்காந்தள், தென்னமரம், பனைமுதலியன.

இலாங்கூலம் - வால்.

இலாசசம் - ஓர் நில அளவை, மரக்கால்.

இலாஞ்சனம் - அடையாளம், கீர்த்தி.

இலாஞ்சனை - அலைவு, இலாஞ்சனம், புள்ளி, பெயர், முத்திரை.

இலாஞ்சி - ஏலம்.

இலாடம் - ஓர்தேசம், ஓர்பாவைை, நெற்றி.

இலாடசிர்ஆரம் - குதிரைக்குளம்பிரும்பைப் புடஞ் செய்த பொடி.

இலாடன்பருத்தி - ஓர் வகைப் பருத்தி.

இலாபம் - ஆதாயம், நயம்.

இலாமச்சை } ஓர்வாசனைப்புல்,
இலாமிச்சை } விழல்.

இலாயம் - ஏலரிசி, குதிரைப்பந்தி.

இலாலனம் } அன்புவைத்தல்,
இலாலனை } கெஞ்சுதல், சீராட்டு, தாலாட்டு, நயஞ் செய்கை.

இலாலி - ஓர் வாழ்த்து, கற்பழிப்போன், நயஞ்செய்கை, துதி, மங்கலப்பாடல்.

இலாவணியம் - அழகு.

இலாவிருதம் - நவகண்டத் தொன்று.

இலி - இல்லாதவன்.

இலிகி - எழுதுகை, எழுத்து.

இலிகிதம் - கையெழுத்துப்பிரதி, கலைஞான மறுபத்து நான்கி னொன்று.

இலிகுசம் - எலுமிச்சை.

இலிங்ககோளம் - கோசகோளம்.

இலிங்கபாஷாணம் - முப்பத்திரண்டு பாஷாணங்களி லொன்று.

இலிங்கபுடோல் - ஐவிரலி.

இலிங்கபுராணம் - பதினெண் புராணத்தொன்று.

இலிங்கம் - அடையாளம், ஆண் குறி, சிவலிங்கம், இங்குலிகம்.

இலிங்கிகள் }
இலிங்கர் } முனிவர்.

இலிதை - குறிப்பிசை, பூமி.

இலிந்தகம் - கருங்குவளை.

இலிபி - இலக்கம், எழுத்து, மெழுகுதல், விதி.

இலிபித்தல் - அனுகூலமாதல், எழுதுதல், நியமித்தல், விதித்தல்.

இலிர்த்தல் - சிலிர்த்தல், தளிர்த்தல்.

இலீக்கை - ஈர், நமடு.

இலீலாவதி - ஓர் பீஜக்கணிதத்தின் பெயர்.

இலீலை - சரசம், புணர்ச்சி, விளையாட்டு.

இலுதை - அணில்.

இலுப்பை - இருப்பைமரம்.

இலேககன் - எழுதுவோன், கணக்கன்.

இலேகம் - எழுத்து, திருமுகம்.

இலேகர் - வானோர்.

இலேகியம் - நக்கல்.

இலேகினி - எழுதுகோல், எழுத்தாணி, தூவல்.

இலேகை - எழுத்து, சித்திரம், வரிவரை.

இலேசம் - இலேசு, ஓரலங்காரம், காலவிரைவு, நொய்மை.

இலேசு - கனமின்மை, விதப்புக்கிளவி.

இலேசுணம் - அரிதாரம்.

இலேந்து }
இலேவுந்து } கல்லுப்பு.

இலேபம் - வால்மிளகு.

இலேபனம் - தாதுவலுவிற்குப் பூச்சுமருந்து, புணர்ச்சி, பூச்சுமருந்து, வாசனைத்தைலம்.

இலேம்புகம் - நிலக்கடம்பு.

இலேவணம் - மெழுகுதல்.

இலை - உலோபம், ஏடு, தழை, வெற்றிலை.

இலைகிள்ளல் - சைச்சித்திரமைந்தினொன்று.

இலைக்கள்ளி - ஓர்வகைக்கள்ளி.

இலைக்கிளி - தத்துக்கிளி.

இலைக்கொடி - வெற்றிலைக்கொடி.

இலைங்கம் - அட்டாதச புராணத்தொன்று.

இலைச்சுருளி - ஓர் பூண்டு.

இலைத்தல் - சாரமின்மை, சுவைகுறைதல்.

இலைப்பசளி - பெரும்பசளி.

இலையம் - கூத்தின் விகற்பம், கூத்து.

இலையாடபொலிகை - கடம்புலிசை.

இலையான் - ஈ.

இலையுதிர்வு - இலைச்சொரிவு, முதுகாடு.

இலௌகிகம் - உலகசம்பந்தம்.

இல் - இடம், இல்லையெனல், இராசி, இல்வாழ்க்கை, ஐந்தனுருபு, ஏழனுருபு, ஓர் வினைப்பகுதி, சாவு, தலைவி, மனைவி, வினையெச்ச விகுதி, வேற்றுமையுருபு.

இல்பொருள் - உவமை.

இல்லடை - அடைக்கலம், இல்லுவமரம், பண்டகசாலை.

இல்லம் - இல்லறம்,தேற்றுமரம், வீடு.

இல்லல் - கடத்தல், நடத்தல்

இல்லவள் - தரித்திரி, மனைவி.

இல்லவன்
இல்லான்
இல்லோன் } கணவன்.

இல்லவை - இல்லாப்பொருள், மனைப்பொருள்.

இல்லாண்முல்லை - புறப்பொருட் டுறையுளொன்று.

இல்லாமை - இன்மை, தரித்திரம்.

இல்லார் - தரித்திரர்.

இல்லாள் - தரித்திரி, தலைவி, மனைவி.

இல்லி - சில்லி, தேற்று, பொள்ளல், வால்மிளகு.

இல்லிக்குடம் - ஓட்டைப்பானை.

இல்லிடம் - அகலம், வீடு.

இல்லுனர் - மேவினர்.

இல்லெனல் - இரத்தல், இல்லையெனல், சாதல்.

இல்லை - இன்மை, சாதல்.

இல்லோன் - கணவன், தரித்திரன், தலைவன்.

இவக்காண் - இங்கே, இந்நேரமளவும், இப்பொழுது.

இவணம் - இங்கே.

இல்வலன் - ஓர் அஸுரன்.

இல்வழக்கு - கூடாவழக்கு.

இல்வாழ்வு - இல்வாழ்க்கை.

இவண் - இவ்விடம்.

இவநட்டம் - மிளகு.

இவரும் - உலாவும்.

இவர்தல் - ஆசை, ஆசைப்பெருக்கம், எழுச்சி, ஏறுதல், செறிவு, சேறல், நடத்தல், படர்தல், பரத்தல், விரும்பல்.

இலவு - இழிவு.

இவறல் - ஆசை, ஆசைப்பெருக்கம், மறதி.

இவறன்மை - அசட்டை, ஆசை, உலோபகுணம்.

இவறுதல் - ஆசைகூறல், உலோபஞ்செய்தல், உலோபகுணம், மறத்தல்.

இவன் - சுட்டுச்சொல்.

இவுளி - குதிரை.

இவுளிமறவன் - குதிரைவீரன்.

இவை - இவ்.

இவ் - இவை, சுட்டுச்சொல்.

இழத்தல் - இழந்து போதல், வீணைப் போக்கடித்தல்.

இழப்பு - இழத்தல், கீழ்மை, நஷ்டம்.

இழவு - இழத்தல், சாதல்.

இழி - இகழ்வு, இழியென்னேவல், கீழ்மை.

இழிகடை - அறக்கீழானது.

இழிகண் - இழியற்கண்.

இழிகுலம் - தாழ்ந்தகுலம்.

இழிங்கு - ஈனம், வடு.

இழிஇருபால் - அஃறிணையில் வரும் இரண்டுபால்.

இழிசொல் - கடுஞ்சொல், கோள் குறளை, பயனில்சொல், பழிச் சொல், பொய்மொழி.

இழிஞர் - சண்டாளர்.

இழிதகவு - இழிவு, எளிமை.

இழிதல் - இறங்குதல், இழிவுறு தல், தாழ்தல், விழுதல்.

இழிதிணை - அஃறிணை.

இழித்தல் - இறக்குதல், கீழ்படுத் தல், கெஞ்சுதல்.

இழிந்தோன் - தாழ்ந்தோன்.

இழிபு - ஓரலங்காரம், கீழ்மை, தாழ்வு.

இழிப்பு - நவரசத்தொன்று, பழிப்பு.

இழிவு - ஈனம், குற்றம், கேடு, தாழ்வு, நிந்தை, பள்ளம்.

இழுக்கம் - இழிவு, ஈனம், குறைவு, தளர்வு, தவறு, தாமதம், பின்வாங்குதல், வசை, வழிவிலகுதல்.

இழுக்கல் - தளர்தல், வழுவுதல், வழுக்கு நிலம்.

இழுக்கார் - வழுவாது கூறுவார் கள்.

இழுக்கு-ஈனம், கேடு, தப்பு, தள ரென்னேவல், பொய், மறதி, வழு.

இழுது - தித்திப்பு, நிணம், நெய்.

இழுதுதல் - கொழுத்தல், நெய்த் தல்.

இழுதை - அறிவிலான், பேய், பொய்.

இழுத்தல் - இழுக்குதல், உறிஞ் சல், சுரம்பாடுதல், தாமதித் தல், பின்வாங்குதல், வசமாக் குதல், வலித்தல்.

இழுபறி - தொந்தரை, வாது.

இழுப்பறை - ஓர் பெட்டியில் இழுக்கும்படியான சின்ன அறை.

இழுப்பாணி - கலப்பையினோ ருறுப்பு, தாமதக்காரன்.

இழுப்பு - இசைப்பு, இசைக்கு தல், தாமதம்.

இழுமு - தித்திப்பு.

இழுமெனல்- அநுகரணவோசை, இனிமை, சீர்மை.

இழுவை - ஓர் முட்செடி.

இழை - ஆபரணம், இழையென் னேவல்,எண்வனப்பினொன்று, நூற்கிறநூல், பஞ்சின்நூல்.

இழைக்கை - கலத்தல், செய்தல்.

இழைதல் - உரிஞல், உட்குழை தல், கலத்தல், பிணைதல்.

இழைத்தல்-அழுத்துதல், ஆராய்தல், ஒழுகுதல், கலப்பித்தல், செய்தல், நியமித்தல், மணிபதித்தல்,முடைதல், விதித்தல்.

இழைத்து - எழுதி.

இழைபு - செய்யுள் வனப்பினொன்று.

இழைபோடல் - பொத்துதல்.

இழைப்பிடித்தல்-காயங்கட்டல்.

இழைப்புளி - சீவுளி.

இழையிடல் - இழைபோடல்.

இழையோடுதல் - நூலோடுதல்.

இழைவாங்கி - இழையூசி.

இள - இளைய.

இளகல் - அசைந்து விழுதல்.

இளகுதல் - ஈரித்தல், கரைதல், குழைதல், தணிதல், தளர்தல், நுகைதல், நெகிழ்தல், மிருதுவாதல்.

இளக்கம் - இளகிய தன்மை, தணிவு, நுகைவு.

இளக்கரித்தல் - அஞ்சுதல், தளர்தல், தாழ்தல்.

இளக்காரம் - இளக்கம்.

இளக்குதல் - இளகச்செய்தல், நுகைத்தல்.

இளங்கண்ணன் - இளைய கண்களை யுடையவன்.

இளங்கார் - ஓர்வகை நெல்.

இளங்கால் - இளங்கொழுந்து, வெற்றிலைக்கொடி.

இளங்காற்று - சிறுகால்.

இளங்கோக்கன் - வைசியர் பொது.

இளத்தல் - இழுக்கடித்தல்.

இளநிறம் - வெண்ணிறம்.

இளநீர் - தெங்கினிளங்காய், தேங்காய்க்குண்ணீர், மணிகளின் வெள்ளொளி.

இளநீர்க்குழம்பு -ஓர் கண்மருந்து.

இளநெஞ்சு - இளகியமனம், கோழைமனம்.

இளந்தண்டு - முளைக்கீரை.

இளந்தலை - இளக்கம், இளப்பு, இளமைப்பருவம், எளிமை.

இளந்தென்றல் - சிறுதென்றல்.

இளந்தை - இளவயசு, இளையது, குழந்தை.

இளந்தோயல் - ஆயுதங்களினிளகிய தோய்ச்சல், தயிரிளந்தோயல்.

இளப்பம் - கீழ்மையானது, திடமின்மை.

இளமட்டம் - குறுங்குதிரை, வாலிபமுடையது.

இளஞ்சூல் - பயிரிளங்கதிர்.

இளமை - இளையதன்மை, உள்மந்தம்.

இளம்பதம் - இளம்பாகம், பக்குவமற்றது.

இளம்பிடி - சிறிய பெண்யானை.

இளம்புல் - அறுகு.

இளம்பெண் - கற்றூழை.

இளவரசு - பட்டத்திற்குரிய இராசகுமாரன்.

இளவல் - இளையோன், குழந்தை, தம்பி.

இளவழிபாடு - நிலையின்மை, சிறுபிள்ளைக்கல்வி.

இளவாடை - சிறுவாடை.

இளவுச்சம் - உச்சத்திற்கணிமை.

இளவேனில் - சித்திரை வைகாசியின் பருவம், வெப்பம்.

இளி - அவமதிச்சிரிப்பு, இகழ்ச்சிக்குறிப்பு, சிரிப்பு, நெற்றியிற்பிறக்குமிசை, இணக்கம், யாழிலோர் நரம்பு.

இளிவு - இழிவு.

இளை - இளமை, இளைத்தலைச்செய்யென்னேவல், காவற்காடு, தலைக்காவல், புதன் மனைவி, மேகம், வேலி.

இளைஞர் - இளையோர், தம்பியர்.

இளைத்தல் - சக்திகுறைதல், தளரல், தோய்ந்து போதல், தோற்றுப்போதல், மெலிதல், வளங்குன்றதல்.

இளைப்பம் - சொற்பம், தீமை.

இளைப்பு - தொய்வு, மெலிவு.

இளையாள் - இலக்குமி, தங்கை.

இளையோன் - இளைஞன், இலக்குவன், முருகன், தம்பி.

இற - இறவென்னேவல், இருல்.

இறகர் - இறகு, சிறை, சிறகு.

இறகு - சிறகு.

இறக்கம் - இறங்குதுறை, சரிவு, போகிறவழி.

இறக்குதல் - இறங்கச்செய்தல், கவலையொழித்தல், கீழ்படுத்தல், சாதல், தாழ்த்தல், தைலம் முதலிய படித்தல்.

இறங்கர் - குடம்.

இறங்கல் - இழிதல்.

இறடி - கருந்தினை.

இறஞ்சி - அவுரி.

இறத்தல் - அழிதல், கடத்தல், சாதல், மரித்தல், நடத்தல், மிகுதி.

இறந்தகாலம் - சென்றகாலம், போனகாலம்.

இறந்துபடல் - சாதல்.

இறந்தோர் - செத்தோர்.

இறந்தோர்சேர்வனம் - சுடுகாடு.

இறப்பு - அழிகை, சாவு, போக்கு, மரிப்பு, மிகுதி, வளைவி, போனகாலம்.

இறலி - இத்திமரம், எழுநிவுகளிலொன்று, கொன்றை, மருது.

இறல் - அழிதல், இறுதல், இற்றுப்போதல், கிளிஞ்சல், கேடு, சாவு.

இறவு - அழிவு, இறப்பு, இறால், உற்றசமயம், எல்லை, செல்கை, மிகை.

இறவுளர் - குறிஞ்சிநிலமக்கள்.

இறவை - ஏணி, கூடை.

இறாதல் - ஆறுபலங்கொண்ட நிறை.

இறால் - இடபவிராசி, எருது, ஓர் மீன், கார்த்திகைநாள், தேன் கூடு.

இறுகுதல் - அழுந்துதல், கடினமாதல், கட்டியாதல், நெருங்கல், முரணுதல்.

இறுக்கம் - அழுத்தம், உருமம், ஒடுக்கம், கடினம், கையழுத்தம், நெருக்கம்.

இறுக்கர் - பாலைநில மக்கள்.

இறுக்கல் - இறுகச்செய்தல், உடுத்தல், உறுக்கல், ஒடுக்கல், கடிந்துகொள்ளல், வியங்கோண்முற்று.

இறுங்கு - ஓர்வகைச் சோளம்.

இறுதல் - அறுதல், ஒடிதல், கெடுதல், முடிதல்.

இறுதி - எல்லை, கடைசி, கடைநிலை, சாவு, முடிவு.

இறுதிஅழிவு - ஈறுகெடுதல்.

இறுதிநிலை - ஈற்றிலே நிற்பது.

இறுதிநிலைத்தீவகம் } தீபகச்
இறுதிவிளக்கு } சொற்கள்
கடையினிற்பது.

இறுதிப்போலி - கடைப்போலி.

இறுத்தல் - இறையிறுத்தல், ஒடித்தல், செலுத்தல், சொல்லுதல், சேரல், தங்கல், தெளிதல், முடித்தல், முறித்தல், வடித்தல், வெட்டல்.

இறுநாகம் - இலாமிச்சை.

இறுப்ப - கிடக்க.

இறுப்பு - குடியிறை; இறுத்தல்.

இறுமாப்பு - எமாப்பு, மிகுமகிழ்ச்சி.

இறும்பல் - அதிசயம்.

இறும்பி - எறும்பு.

இறும்பு - இளமரக்காடு, காந்தள், கார்த்திகைப்பூ, குறுங்காடு, சிறுமலை, தாமரைப்பூ, வண்டு, தூறு, மலை.

இறும்பூது - அதிசயம், அற்புதம், காந்தள், சிறுதூறு, தாமரைப்பூ, தளிர், தீபம், பித்திகை, பெருமை, மலை,

இறுவதஞ்சாமை - வணிகரெண்குணத்தொன்று.

இறுவரை - முடிவு.

இறுவாய் - இறுதி.

இறை - அணு, அரசன், அற்பம், இறகு, இறையென்னுமேவல்,

உயர்ச்சி, ஊழித்தீ, உயர்ந்தோன், எப்பொருட்கு மிறைவன், கடன், கடவுள், காலவிரைவு, குடியிறை, கையிறை, சிவன், சிறுமை, தங்கல், தலை பெருமை, மூத்தோன், பிரமன், வருத்தம், விடை, வீட்டிறப்பு.

இறைத்தல் - அளவுபார்த்தல், நிதானம் பண்ணுதல்.

இறைகூடை - சிலாப்பூட்டை, நீரிறைக்குங்கூடை, பூட்டை.

இறைச்சிப்பொருள் - ஓரலங்காரம், புறத்துச்சொல்லுங் குறிப்புப் பொருள்.

இறைஞ்சல் - குனிதல், தொழுதல், வணங்கல், வியங்கோண் முற்று.

இறைஞ்சி - மரவுரி.

இறைதல் - சிதறுதல், சிந்தல்.

இறைதிரியல் - அரசு நீதிதிறம்பல்.

இறைத்தல் - அள்ளிச்சொரிதல், சிதறல், சொரிதல், நீரிறைத்தல்.

இறைபயப்பது - இருவகைவிடையினென்று, அது - வினவெதிர்வினவல், உடன்படல், உறுவதுகூறல், உற்றதுரைத்தல், ஏவல், சொற்றொகுத்திருத்தல், மறுத்தல்.

இறைமகள் - இராசகுமாரத்தி.

இறைமகன் - இராசகுமாரன், முருகன், விநாயகன்.

இறைமாட்சி - அரசர்மாண்பு.

இறைமாண்டார் - அரசர்.

இறைமை - அரசாட்சி, தலைமை தெய்வத் தன்மை.

இறைமையாட்டி - அரசி, தலைவி.

இறையவன்
இறையோன் } கடவுள்.

இறையனாரகப்பொருள்
இறைவனாரகப்பொருள் } ஓர் பொருளிலக்கணம்.

இறைவழு - விடைவழு.

இறைவன் - அரசன், எப்பொருளிலுமுறைபவன், கடவுள், குரு, சிவனார்வேம்பு, சிவன் தந்தை, தலைவன், பிரமன் மூத்தோன்.

இறைவன்வேம்பு - சிவனார் வேம்பு.

இறைவாசநல்லூர் - ஓரூர்.

இறைவி - அரசி, அன்னை, குருவின் மனைவி, தலைவி.

இறைவை - இறைகூடை, ஏணி, நீரிறைக்கு மரப்பத்தல்.

இற்செறித்தல்
இற்செறிப்பு } அகப்பொருட்துறையிலொன்று

இற்பிறப்பு - குடிப்பிறப்பு.

இற்புலி - பூனை.

இற்று - இஃது, இத்தன்மைத்து, ஓர்சாரியை.

இற்றை - இன்று.

இற்றைநாள் - இன்று.

இனக்கட்டு - இனக்கூட்டம், உறவின்முறை.

இனக்குறில் - நெட்டெழுத்திற்கினமாகிய குற்றெழுத்து.

இனஞ்சனம் - சுற்றத்தார்.

இனத்தார் - சுற்றத்தார்.

இனமணி - ஒரு சாதிமணி.

இனமிகல் - வருமெழுத்திற்கு இனமான எழுத்துமிகல்.

இனமொழி - ஓர் இறை.

இனமொழிவிடை - இனத்தைச் சொல்விடை.

இனமோனை - இனவெழுத்தால் வருமோனை.

இன - இவைபோல்வன, பிற.

இனம் - அரசர்க்குறுதிச்சுற்றம், குலம், கூட்டம், சேர்க்கை, சுற்றம், பசுக்கூட்டம், பந்துக்கள், திரள்.

இனவழி - வமிசபரம்பரை.

இனவெதுகை - இனவெழுத்துக்களாலாகு மெதுகை.

இனவெழுத்து - இனமாயுள்ள வெழுத்து.

இனனிலை - சூரியன் நிற்கு நிலை.

இனன் - அரசன், சந்திரன், சூரியன்.

இனி - இப்பொழுது, இப்பால், பின்பு.

இனிது - இனிமையுடையது.

இனிப்பு - இனிமை, சிநேகம், தித்திப்பு.

இனிமை - இனிமை, சந்தோஷம், தித்திப்பு.

இனிய - இன்பமான.

இனியசொல் - இன்சொல்.

இனியவைகூறல் - நயச்சொல்.

இனியதுநாற்பது - ஓர்நூல்.

இனைதல் - இரங்குதல், துயருறல்.

இனைத்தல் - ஒலித்தல், வருத்தல்.

இனைத்து - இத்தன்மைத்து, இப்படி, இவ்வளவிற்று.

இனைய - இவைபோல்வன, பிற.

இனையன் - இத்தன்மையன்.

இன் - இறந்தகாலவிடைநிலை, இனிய, ஐந்தனுருபு, சாரியை, பூவின் மணம், மலைமுருவி, வினையெச்ச விகுதி.

இன்கண் - இன்பம்.

இன்சொல் - இனிய சொல்.

இன்சொல்லுவமை - ஒருவுமையணி.

இன்பம் } அகமகிழ்ச்சி, இனிமை,
இன்பு } ஓரலங்காரம், நவரசத்தொன்று, நூற்பயனென்று.

இன்பன் - கணவன்.

இன்பு - இன்பம்.

இன்புறல் - மகிழ்ச்சிபொருந்தல்.

இன்பூறல் - சாயவேர்.

இன்மை - இல்லாமை, துக்கம், வறுமை.

இன்றியமையாத - இல்லாமல் தீராத.

இன்றியமையாமை - இல்லாது முடியாமை.

இன்று - அசைச்சொல், இந்நாள்.

இன்ன - இத்தன்மைய, உவமையுருபு.

இன்னணம் - இவ்விதம்.

இன்னம் - அதிகம், இதுவரையும், மறுபடியும், மேலும்.

இன்னலம் - இனியநலம்.

இன்னல் - தீமை, துன்பம்.

இன்னன - இவைபோல்வன.

இன்னு - ஆகாமை, இகழ்ச்சி, கீழ்மையான, தீமை, துன்பம், வெறுப்பு.

இன்னுங்கு - தீமை, துன்பம்.

இன்னுச்சொல் - இழிசொல், கடுஞ்சொல், நிந்தைச்சொல்.

இன்னுதார் - பகைவர்.

இன்னுது - தீது, தீமையுள்ளது.

இன்னுநாற்பது - ஓரிலக்கண நூல். அது-கெடுதியை விவரிக்கும் நாற்பது பாட்டுள்ள ஒரு நூல்.

இன்னுமை - ஆகாமை, இனிதாகாமை, தவறு, துயரம், துன்பம், தீமை, வேண்டாமை.

இன்னுய் - இல்லாததாக.

இன்னுர் - இத்தன்மையர், பகைவர்.

இன்னுலை - இலைக்கள்ளி.

இன்னிசை - இராகம், எழு நரம்புள்ள வீணை.

இன்னிசைக்கலிப்பா - கலிப்பாவுளொன்று.

இன்னிசைகாரர் - பாணர்.

இன்னிசைவெண்பா - வெண்பாவுளொன்று.

இன்னியம் இனியவாத்தியம்.

இன்னியர் - பாவேர்.

இன்னினியே - உடனே.

இன்னே - இப்பொழுது, இத்தன்மையாய்.

இன்னோசை - இனியவோசை.

## ஈ

ஈ - அம்பு, அரைநாண், இந்திரவில், இலக்குமி, ஈயென்னேவல், ஈப்பொது, ஓரெழுத்து,

கொாசுகு, நெட்டெழுத்து, தேனீ, ஸரஸ்வதி, தாமரை யிதழ், பாம்பு, பார்வதி,முன் னிலை யசைச்சொல், வண்டு, வினைப்பகுதி.

ஈஇர் - ஈரமான.

ஈகம் - சந்தனம்.

ஈகை - இண்டங்கொடி, ஈதல், கற்பகம், கொடை, தானம், பொன், மேகம்.

ஈகையன்
ஈகையாளன் } கொடுப்போன்.

ஈக்க - தருக.

ஈங்கம் - சந்தனமரம்.

ஈங்கிசை - இமிசை. கொலை நிந்தை, வடு, வருத்தம்.

ஈங்கு - அண்டங்கொடி, அவ் விடம், சந்தனம்.

ஈங்கை - அண்டங்கொடி.

ஈசசகன் - குபேரன்.

ஈசதேசாத்தி - பெருமருந்து.

ஈசத்துவம்
ஈசிதை } அட்டசித்தியி னொன்று.

ஈசல் - ஈசெல், சீழ்க்கை.

ஈசனாள் - ஆதிரைநாள்.

ஈசன் - அயன், அரசன், அரன், அரி, ஆதி கடவுள், எப்பொ ருட்கு மிறைவன், கடவுள், குரு, கௌரிபாஷாணம், மூத் தோன்.

ஈசன்மைந்தன் - முருகன், விநா யகன், வீரபத்திரன்.

ஈசன்றூர் - கொன்றைமாலை, கொன்றை.

ஈசானமேரு - சிவனுடை. வெள்ளிமலை.

ஈசானம்
ஈசானியம் } சிவனைம்முகத் தொன்று, வட கீழ்த்திசை.

ஈசானன்
ஈசானியன் } சிவன், கடவுள், வடகீழ்த்திசைப் பாலகன்.

ஈசானி - சிவன் பஞ்சசக்தியி லொன்று.

ஈசுவரதரு - கடம்பு.

ஈசுரன்
ஈசுவரன் } கடவுள், சிவன்.

ஈசுரன்முகம் - சிவனுடையஐந்து முகம் அது- ஈசானம், தற்புரு டம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம்.

ஈசுரமூலி - தாராசுக்கொடி, பெருங்கிழங்குக் கொடி, பெரு மருந்துக்கொடி.

ஈசுரவிந்து - பாதரசம்.

ஈசுவரி - பார்வதி.

ஈசுவரிநாதம்
ஈசுவரிவிந்து } கந்தகம்.

ஈசெல் - சிறகுள்ள கறையான்.

ஈசை - ஏர்க்கால், கலப்பை.

ஈச்சு - ஈச்சமரம்.

ஈச்சுக்கொட்டல் - சீழ்க்கை விடுதல்.

ஈச்சுர - ஓர் வருடம்.

ஈச்சுரம் - சிவதத்துவமைந்தினொன்று.

ஈஞ்சை - இகழ்ச்சி, கொலை, நிந்தை.

ஈடணம் - புகழ்.

ஈடணை - விருப்பம், (ஈஷணைத்திரயம், புத்திரேஷணை, வித்தேஷணை, லோகேஷணை.)

ஈடழிதல் - பெருமை குன்றல்.

ஈடழிவு - சீர்கேடு.

ஈடன் - பணக்காரன், பலசாலி, பெருமையுடையோன்.

ஈடாடுதல் - தளர்தல், நேர்நிற்றல்.

ஈடாட்டம் - கொடுக்கல் வாங்கல், திராணி, விசாலம்.

ஈடிகை - எழுதுகோல், தூரிகை.

ஈடிதம் - துதித்தல்.

ஈடு - அடகு, இலக்காதல், உவமை, குழைதல், பதில், பெருமை, வலி.

ஈடுகட்டல் - ஈடுசெய்தல், பிணை கொடுத்தல்.

ஈடுசெலுத்தல் - பதிலளித்தல்.

ஈடுபாடு - ஒப்பு.

ஈடேறுதல் - உய்யப்பெறுதல், கடைத்தேறுதல், வாழ்வடைதல்.

ஈடேற்றம் - இரட்சிப்பு, உய்வு, கடைத்தேற்றம், மீட்பு.

ஈடை - ஈசை, புகழ்ச்சி.

ஈட்சணம் - நோக்கம், பார்வை.

ஈட்டம் - ஈட்டல், கூட்டம், திரள், தேட்டம்.

ஈட்டல் - கூட்டல், சம்பாதித்தல், தொகுத்தல்.

ஈட்டி - குந்தம், சவளம்.

ஈட்டியது - சஞ்சிதவினை, தேடியது.

ஈணை - அகணி.

ஈண்டல் - கூட்டல், நிறைதல்.

ஈண்டு - இவ்வண்ணம், இவ்விடம், ஈண்டென்னேவல், சீக்கிரம், புலிதொடக்கி.

ஈண்டை - இவ்விடம்.

ஈண்டையான் - இவ்விடத்தவன்.

ஈதல் - கற்பித்தல், கொடுத்தல், சொரிதல், பிரித்தல்.

ஈதி - உபத்திரவம், குட்டி, பயணம்.

ஈந்து - ஈஞ்சு, கர்ச்சூரம்.

ஈப்பி - இலையானெச்சம், ஈர்.

ஈப்பிணி - உலோபி.

ஈமத்தாடி - சிவன்.

ஈமப்பறவை - கழுகு. காகம், பருந்து.

ஈமம் - சுடுகாடு, விறகு.

ஈம் - சுடுகாடு.

ஈயக்குழவி - நீலபாஷாணம்.

ஈயம் - பஞ்சலோகத்தொன்று, பாதிரி, மிருதார்சிங்கி.

ஈயல் - ஈதல், தம்பலப்பூச்சி.

ஈயவரி - பெருமருந்து.

ஈழுவன் - இராவணன்.

ஈயை - இஞ்சி, சிங்கிலி.

ஈரக்கல் - இருந்தக்கல்.

ஈரங்கொல்லியர் - வெண்ணார்.

ஈரசைச்சீர் - ஆசிரியச்சீர்.

ஈரடி - இணையடி, ஈரொட்டு, கவர்.

ஈரடிப்பா - இரண்டடிச்செய்யுள்.

ஈரடிமடக்கு - வந்த சொல்லே யிரண்டடியினும் வரப்படுவது.

ஈரடிவெண்பா - குறள் வெண்பா.

ஈரடுக்கொலி - உபயவோசை.

ஈரடை - இரண்டு அடைமொழி கள்.

ஈரணம் - வெறுநிலம்,தளர்நிலம்.

ஈரப்பலா - ஆசினிப்பலா.

ஈரமதி - குளிர்ந்த சந்திரன்.

ஈரம் - அழகு, அறிவு, அன்பு, கரும்பு, கிருபை, குளிர்ச்சி, குங்குமப்பூ, நினைவு, பகுதி, பண்பு.

ஈரல் - ஈருள்.

ஈரல்கருகல் - நாணுதல், பயப் படுதல்.

ஈரவன் - சந்திரன்.

ஈரழிதல் - கடைசியில் கெடுதல்.

ஈரறம் - இல்லறந்துறவறம்.

ஈரறிவுயிர் - இப்பி, சங்குமுத லியன.

ஈராசிடைவெண்பா - இரண் டாசிடையிட்டுவரும் வெண் பா.

ஈராடி - ஈரம், காற்றினமைவு, நிலையின்மை, மழைக்குணம்.

ஈரி - கந்தைப்புடவை, பலாக் காய்த்தும்பு.

ஈரிப்பு - ஈரம், குளிர்மை.

ஈரியநெஞ்சம் - அன்புள்ளமனம்.

ஈருள் - ஈரல்.

ஈரெச்சம் - பெயரெச்சம் வினை யெச்சம்.

ஈரொட்டு - இரண்டுக்குற்றது, சந்தேகம்.

ஈரொற்றுவாரம் - இரண்டு மாத் திரை பெற்றுவரும் செய்யுள்.

ஈர் - ஈரமான, இரண்டு, ஈர்த லைச்செய்யென்னேவல், கரு ம்பு, மயிர்பற்றுமீர், முனை னிலைப் பன்மைவிகுதி.

ஈர்க்கில் - அம்பிறகு.

ஈர்க்கு - ஈர்க்கு.

ஈங்கதிர் - குளிர்ந்தகதிர், சந்திரன்.

ஈர்தல் - அறுத்தல், பிளத்தல், வெட்டல்.

ஈர்த்தல் - அறுத்தல், இழுத்தல், உரித்தல், குளிர்மையாதல், பிளத்தல்.

ஈர்ப்பு - இசிவு, இழுப்பு, ஈர்த்தல்.

ஈர்வான் - இரம்பம்.

ஈலி - கைவாள், சுரிகை.

ஈவிரக்கம் - இரக்கமுங்கொடையும்.

ஈவு - கொடுக்கப்பட்டது, கொடை, வரம்.

ஈழத்தலரி - ஓரலரி, பெருங்கள்ளி.

ஈழம் - உலோகக்கட்டி, கள், கள்ளி, சிங்களதேசம், பொன்.

ஈளை - காசநோய், கோழை, தொய்வு.

ஈளைக்கொல்லி - தாழகம்.

ஈளை - கோழை.

ஈறல் - துக்கம், நெருக்கம், பின்னல்.

ஈறிலான் } கடவுள்.
ஈறிலி }

ஈறு - இறுதி, உப்பளம், எல்லை, பல்லிடையின் முரசு, பள்ளம், முடிவு.

ஈறுகட்டி - இரசகருப்பூரம்.

ஈறுகெடுதல் - ஈறழிதல்.

ஈறுநிலை - எழுத்துக்கள்சொல்லின் கடைசியில் நிற்கும் இலக்கணம்.

ஈறுபோதல் - சொல்லின் கடைசியில் கெடுதல், இறுதி விகுதி நீங்கல்.

ஈற்றசை - இறுதியிலசையாகுமிடைச்சொல்.

ஈற்றயல் - கடையயல்.

ஈற்று - ஈறுகை, பெறுகை.

ஈற்றெலும்பு - கடையெலும்பு.

ஈற்றெழுத்து - கடையெழுத்து.

ஈனமிலணங்கு - தெய்வப்பெண்.

ஈனம் - இழிவு, கள்ளி, குறைபாடு, கேடு, தள்ளல்.

ஈனல் - ஈன்றல், கதிர், தருதல், பிறப்பித்தல்.

ஈனனம் - வெள்ளி.

ஈஞயம் - நிந்தை.

ஈஞமணிமை - சூதகம், புனிறு.

ஈனை - இலைசரம்பு, ஓர் வியாதி.

ஈன்றல் - உண்டாதல், பெறுதல்.

ஈன்றாள் - பார்வதி, தாய்.

ஈன்றான் - பிரமன், தந்தை.

உ

உ - இரண்டென்னு மெண்ணின் குறி, ஓரெழுத்து, ஓர் வினை யெச்சவிகுதி, சாரியை, சிவன், சுட்டெழுத்து, பிரமன்.

உஃது - ஒன்றன் படர்க்கைச் சுட்டுப்பெயர்.

உககனல் - வடவைத்தீ.

உகசந்தி - உகத்தின்சந்தி.

உகட்டு - உவட்டு.

உகட்டுதல் - தேக்கெடுத்தல், புரளுதல்.

உகத்தல் - உயர்தல், எழும்பல், சந்தோஷம், மகிழ்தல், விரும்பல்.

உகந்தது - அங்கீகரிக்கத்தக்க வஸ்து, தகுந்தது.

உகந்தவன் - இளக்கமானவன், தகுந்தவன், பிரியமானவன்.

உகப்பிரளயம் - யுகமுடிவு.

உகமாருதம் - ஊழிக்காற்று.

உகப்பு - உயர்ச்சி, மகிழ்ச்சி.

உகம் - இரண்டு, நாள், பாம்பு, பூமி, முடிவு, யுகம்.

உகரம் - ஐந்தாமுயிர்.

உகரக்குறுக்கம் - குற்றியலுகரம்.

உகல் - உதிரல், கழலல், சிந்தல், சொரிதல்.

உகவல்லி - நாகமல்லி.

உகவை - சந்தோஷம், மகிழ்ச்சி.

உகளம் - இஷ்டம், இரண்டு.

உகளல் - கடத்தல், குதித்தல், பாய்தல்.

உகளித்தல் - குதித்தல், பாய்தல்.

உகா - உகாமரம்.

உகாதி - அருகன், யுகாதி.

உகாந்தகாலன் } சிவன்,
உகாந்தநாதன் } விஷ்ணு.

உகாந்தம் - யுகமுடிவு.

உகிரம் - இலாமிச்சை.

உகிர் - நகம்.

உகுணம் - முகட்டுப்பூச்சி.

உகுதல் - உதிர்தல், சிந்துண்ணல், சொரிதல்.

உகுத்தல் - சிந்தல், சொரிதல், விடுத்தல்.

உகைதல் - எழுதல், செல்லல்.

உகைத்தல் - அம்புவிடுதல், எழுப்புதல், எறுதல், செலுத்தல்.

உக்கம் - ஆலவட்டம், எறு, கோழி, தீ, தூக்குக்கயிறு, பசு, பந்து, மருங்கு.

உக்கரித்தல் - உக்காரம்போடல், வாந்தி பண்ணுதல்.

உக்கலை - மருங்கின் பக்கம்.

உக்கல் - உக்கினது, உக்குதல், உளுத்தது, பக்கம், பதனழிவு.

உக்களம் - இராக்காவல், தலைக்காவல், பாளையஞ்சூழ்கழி.

உக்களவர் - இராக்காவலர்.

உக்காக்கம் - அரைநாண்.

உக்காரம் - சத்தியண்ணல், தொனுப்போடல்.

உக்காரி - பிட்டு.

உக்கிடர் - சிலந்திப்பூச்சி.

உக்கிரகந்தம் } கரும்பு, வெள்
உக்கிரகந்தி } ளுள்ளி, பெருங்
காயம், வசம்பு, வேம்பு.

உக்கிரமது - வெறிதருமது.

உக்கிரம் - உத்திரம், உறைப்பு, கடுமை, கொடுமை, கோபம், தலைக்காவல், பயங்கரம், பரணி, பாத்திரபதம், மகம், முருங்கை, மூர்க்கம், வியாதி, வெப்பம், வேகம்.

உக்கிரன் - சிவன்.

உக்கிராணம் - களஞ்சியம், வசம்பு.

உக்கிருட்டம் - உத்கிருஷ்டம், மிகுதி, மேன்மை.

உக்கிரை - கருவசம்பு.

உக்கு - இலவங்கம்.

உக்குதல் - இற்றுப்போதல், பயப்படல்.

உக்குளான் - சருகுமுயல்.

உக்குறள் - குற்றியலுகரம்.

உங்கரித்தல் - அதட்டுதல், உம்மென வெகுளல்.

உங்காரம் - அதட்டுகை, உம்மென வெகுள்கை, வண்டின்ஒலி.

உங்கை - உன்றங்கை.

உசிகம் - ஆமணக்கு.

உசரிதம் - நெருஞ்சில்.

உசரு - உயரு.

உசலம் - உசிலம்.

உசுனம் - அத்தன்மை, இத்தன்மை, இவ்விடம், உவ்விடம்.

உசற்காலம் - வைகறை.

உசனம் - அஷ்டாதச தருமநூலி னொன்று.

உசனன் - சுக்கிரன்.

உசா - ஆராய்வு, ஆலோசனை, உசாவென்னேவல், ஒற்றர்.

உசா } சூரியன் மனைவி.
உசாதேவி }

உசாத்துணை } ஆலோசனைத்
உசாவுதுணை } துணைவன்.

உசாவுதல் - ஆராய்தல், உசாவல், எண்ணல், யோசனைகேட்டல்.

உசி - கூர்மை, விருப்பம்.

உசிதசமயம் - அவதாரம்.

உசிதம் - அழகு, உத்தமம், தகுதி, மேன்மை, யோக்கியம்.

உசிதன் - பாண்டியன்.

உசிரம் } இலாமிச்சைவேர்.
உசீரம் } வெட்டிவேர்.

உசிரம் - இடபம், இலாமிச்சை வேர், கிரணம், செவ்வியம், மிளகு.

உசிர் - உயிர்.

உசிலம்
உசிலை } சீக்கிரிமரம்.
உசில்

உசு - உளு.

உசுப்பல் - எழுப்பல், ஏவுதல்.

உசும்புதல் - இயங்குதல்.

உசுவாசம் - உச்சுவாசம், மூச்சை யுள்ளேயிழுக்கை.

உஷை - இரவு, காலை, மாலை, பாணாசுரன் மகள்.

உச்சடை - கொடிக்கொம்பு, கோபம், வழக்கம்.

உச்சட்டம் - இலக்கு, நேர்.

உச்சந்தம் - அதிகப்படுதல், ஒடுக்கம், தணிவு, விலையுயர்வு.

உச்சம் - உயர்ச்சி, நுதி, மத்தியானம், கிரகநிலையைந்தினொன்று, வல்லிசை.

உச்சயினி - ஓர் நகரம்.

உச்சரித்தல் - சொல்லுதல்.

உச்சரிப்பு - எழுத்தினோசை, மந்திரோச்சாரணம்.

உச்சலம் - அறிவு, மனம்.

உச்சவம் - உற்சவம்.

உச்சாகம் - உற்சாகம், முயர்ச்சி.

உச்சாடனம் - அகற்றல், ஏவுதல், கலைஞானமறுபத்துநான்கினொன்று.

உச்சாரணம்
உச்சாரணை } உச்சரிப்பு.

உச்சி - ஆண்மயிர், சிகரம், தலை, நடுத்தலை, நடுப்பகல், நாய், நுனி, மயிர்முடி.

உச்சிக்கிழான் - சூரியன்.

உச்சிகாட்டல் - உச்சுக்காட்டல்

உச்சிக்கலயம் - சிறியமட்பானை.

உச்சிக்குழி - உச்சித்துவாரம், தலைநடு.

உச்சிக்கொம்பன் - காண்டாமிருகம்.

உச்சிச்செடி - புல்லுருவி.

உச்சிட்டசாங்கரியம் - ஒரேபாத்திரத்தில் பலர் கூடியுண்ணல்.

உச்சிட்டம் - எச்சில்.

உச்சிதம் - அரியது, அழகு, உசிதம், உயர்ச்சி, கொடை, தகுதி, நெருஞ்சில், மேன்மை.

உச்சிப்பொழுது - நடுப்பகல்.

உச்சிரதம் - பிரண்டை.

உச்சிரயம் - உயரம், முக்கோணத்தினின்றுதிட்டவரி.

உச்சினி - உச்சயினி.

உச்சுதல் - இலக்குக்கெறிதல், கவரல், தள்ளுதல், வெல்லுதல்.

உச்சைசிரவம் - இந்திரன் குதிரை.

உஞற்று - உஞற்றென்னேவல், ஊக்கம், முயற்சி, வழுக்கோதல்.

உஞ்சை - அவந்திநகர்.

உடக்கு - திருகாணிச்சுரையினுட் சுற்று.

உடங்கு - உருங்கு, ஒன்றிப்பு, கூடிநிற்றல்.

உடசம் - சிறுகுடில், பர்ணசாலை,

உடப்பு - தொரட்டுமுள்மரம்.

உடம்படுமெய் - உயிருமுயிரும் புணர விடைவருஞ் சந்தியொற்று.

உடம்பிடி - வேல்

உடம்பு - உடல், ஒற்றெழுத்து, தேகம்.

உடம்பை - கலங்கனீர்.

உடலம் - உடம்பு.

உடலல் - சினக்குறிப்பு, சினத்தல், பகைத்தல், பிரகாசித்தல், பொருதல்.

உடலிலான் - காமன்.

உடலூதல் - வருத்தப்படுதல்.

உடல் - உடம்பு, ஒற்றெழுத்து, சரீரம், பொருள், முப்பகையிலொன்று, பொருளன்னேவல், பொன்.

உடற்குறை - உறுப்புக்குறை, முண்டம்.

உடற்கூற்றுத்தத்துவம் - சரீரத்தினிலக்கணநூல்.

உடற்றல் - சினங்கொண்டு தாக்கல், பெருங்கோபம்.

உடற்றுதல் - அழித்தல், சிதறடித்தல், தூரத்தல், பிரயோகித்தல், பொருதல், வருத்தல்.

உடனிகழ்ச்சி - ஒருங்கு சம்பவித்தல், வினைகொண்டு முடிகிற பொருளினது தொழில் போன்ற தொழிலைத் தன்னிடத்திலும் உடனிகழ்கிறதாக உடையது.

உடனிலைமயக்கம் / உடனிலைமெய்ம்மயக்கம் } ஒரெழுத்தேதன்னோடுதான் மயங்குதல்.

உடனே - அப்பொழுதே, சம்பவித்ததும்.

உடன் - அந்நேரம், கூட, மூன்றும் வேற்றுமையின் சொல்லுருபு.

உடன்படல் - சம்மதித்தல், ஒப்புக்கொள்ளல், பிறர்மதத்திற்குத்தான் உடன்படல்.

உடன்பாடு - சம்மதம், விதி.

உடன்பாட்டுவினை - விதிவினை.

உடன்பிறந்தார் - சகோதரர்.

உடன்றல் - கோபம், சினக்குறிப்பு, பொருதல்.

உடு - அகழி, அம்பிறகு, அம்பு, அம்புத்தலை, ஆடு, உடுவென்னேவல், ஓடக்கோல், சீக்கிரி மரம், விண்மீன்.

உடுகொட்டை - பொன்னுங்காணி.

உடுக்கு - இடைசுருங்குபறை,ஒரு சட்பறை, சீலை.

உடுண்டுகம் - வாகைமரம்.

உடுநீர் - அகழி.

உடுபதம் - ஆகாயம்.

உடுபதி - சந்திரன், மாமஞ்சள்.

உடுபம் - தெப்பம்.

உடுபாதகம் - பனை.

உடும்பு - இரண்டு நாக்குள்ள ஓர் செந்து.

உடுவை - அகழ்.

உடை - உடைமை, உடையென்னேவல், உள், கலணை, கால், சீலை, செல்வம், வஸ்திரம், வேலமரம்.

உடைதல் - ஒடிதல், கெடுதல், சாய்தல், தளர்வு.

உடைத்தல் - இரித்தல், ஒடித்தல், கெடுத்தல், தகர்த்தல்.

உடைமை - ஆபரணம், உடைமைப்பொருள், உரிமை, செல்வம், பாக்கியம், பொருள்.

உடைய - ஆறும் வேற்றுமையினோர்சொல்லுருபு,உட,உடை.

உடையல் - உடைக்குதல், உடைந்தது, கெடல், முரியல்.

உடையவன் - உரிமைக்காரன், எசமான், கடவுள்.

உடையார் - ஓர்சாதியின் பட்டப்பெயர்.

உடைவு - இரிவு, கேடு, தகாவு, தளர்வு, மனநெகிழ்ச்சி.

உட்கரணம் - அந்தக்கரணம்.

உட்கருத்து - உட்பொருள், கருத்துரை, மனக்கருத்து.

உட்கல் - அஞ்சல், மடிதல்,வெட்கம்.

உட்கு - அச்சம், உட்கென்னேவல், நாணம்.

உட்குயிர் - உள்ளுயிர்.

உட்குறிப்பு - உள்ளக்குறிப்பு.

உட்கை - உட்கல், உளவு, உள்ளங்கை.

உட்கொள்ளுதல் - அருந்துதல், உட்கருதல், மனசில் வைத்தல், விழுங்கல்.

உட்சூத்திரம் - இலேசானவகை, உட்குறிப்பு, உள்ளுபாயம், நுட்பமான வகை, மூலகாரணம், மூலசூத்திரம்.

உட்டணசஞ்சீவி - நீர், பிரண்டை.

உட்டணம் - அகோரம், மிளகு, வெப்பம்.

உட்டணாதிக்கம் - அதிகவெப்பம்.

உட்டிரம் - களர்நிலம், தேட்கொடுக்கி, நீர், முட்செவ்வந்தி.

உட்டெறிவு - உள்ளைவாம், உள்ளத்தெளிவு, பேரறிவு, வடித்த சாறு.

உட்பகை - காமமுதலிய அறு பகை.

உட்பற்று - அகப்பற்று.

உணக்கம்-உலர்ந்ததன்மை, வாட்டம்.

உணங்கல் - உலர்தல், ஒசிதல், காய்தல், துக்கப்படுதல், வருந்தல், வாடல்.

உணரல் - உணர்தல், அறிதல்.

உணராமை - உன்மத்தம், மயக்கம்.

உணர்ச்சி - அறிவு, கல்வி, சுவரனை, நினைவு, புத்தி, மனச்சாட்சி.

உணர்தல் - அறிதல், ஊடறீர்தல், எண்ணல், தெளிவு, நினைத்தல், வாடல்.

உணர்த்துதல் - அறிவித்தல், கற்பித்தல்.

உணர்வியல் - அறிவுமயம்.

உணர்வின்றேற்றல் - அறிவில்லாமற்கொள்ளல்.

உணர்வு - அறிவு, உணர்ச்சி, ஊடலுர்துயிலு நீங்கல், கல்வி, தெளிவு, நீங்கல், புலன்.

உணவு - உ௵.

உ௵ - உண்டி, சோறு.

உணைதல் - மெலிதல்.

உண் - வினைப்பகுதி, உள் என்பதின் விகாரம்.

உண்ணோக்கல் - தியானம்.

உண்டல் - புசித்தல்.

உண்டாட்டு - மகளிர்விளையாட்டு, மதுவுண்டல், விளையாட்டு.

உண்டி - இரை, உணவு உண்டல், சோறு, பறவையுணவு.

உண்டுகம் - பெருவாகை.

உண்டை - திரட்சி, படைவகுப்பு.

உண்ணல் - புசித்தல்.

உண்மாசு - உபமலம்.

உண்மை - அறிவு, இயல்பு, ஊழ், நேர்மை, மெய்.

உண்மையளவை - பிரத்தியட்சப் பிரமாணம்.

உண்மையுவமை - ஓரலங்காரம்.

உதகக்கிரியை - நீர்க்கடன்.

உதகம் - நீர், பூமி, மழை, மழைத்துளி.

உதகவன் - கொடுவேலி, தீ.

உதகு - புன்கு.

உதக்கு - வடக்கு.

உதணம் - மொட்டம்பு.

உததி - கடல், நீர்குடல், முகில்.

உதபாரம் - மேகம்.

உதபானம் - கிணறு.

உதம் - அழைத்தல், கேட்டல், நீர்.

உதயகிரி - உதயமலை.

உதயம் - உதயவிராசி, பிறப்பு, விடியல்.

உதயலக்கினம் - சென்மவிராசி.

உதயன் - சூரியன்.

உதயாதிபன் - உதயவிராசிக் கதிபதி.

உதயாத்தமனம் - உதயமுமத்த மயமும்.

உதரகோமதம் - பாலடை.

உதரக்கனல் - தீபனக்கினி.

உதரநாடி - அடிவயிற்றோடு சம் பந்தமுள்ள நாடி.

உதரபந்தனம் - அரைப்பட்டிகை.

உதரப்பிரிவு - தங்குடித்தமர்.

உதரம் - அடிவயிறு, கருப்பை, வயிறு, யுத்தம்.

உதரவணி } கண்டங்கத்தரி.
உதரவாணி }

உதராவி - மரமஞ்சள்.

உதர்க்கம் - எதிர்காலம், வரப் போகிறகாலம்.

உதவகன் - நெருப்பு.

உதவல் - ஈதல், சகாயம், துணை செய்தல்.

உதவி - ஒத்தாசை, கொடை, சகாயம், துணை.

உதன் - ஆடு, மேடவிராசி, வெள் ளாட்டுக்கடா.

உதறல் - உதறுதல், நடுங்கல்.

உதறிமுறிப்பான் - விஷ்ணுக் ராந்தை.

உதாசனம் } நிந்தை.
உதாசினம் }

உதாசனன் - அக்னி தேவன், கண்குத்திப்பாம்பு, கொடு வேலி, தீ.

உதாத்தம் - ஓரலங்காரம், எடுத்த லோசை, வேதஸ்வரத்தி லொன்று.

உதாரணம் - இலக்கியமெடுத்துக் காட்டல், உதாஹரணம், ஒப் பனை, திருஷ்டாந்தம், துணைக் காரணம்.

உதாரம் - உத்தண்டம், ஓரலங் காரம், கொடை, தாராளம், வீரம், வாசகதாட்டிகம்.

உதாரன் } கொடையாளன்;
உதாரி } சாதுரியன், வீரன்.

உதாவணி - கண்டங்காலி.

உதானம் } கண்டத்தியங்கும்
உதானன் } வாயு, கண்மடல்.

உதி - உதித்தலைச்செய்யென்னே வல், உலைத்துருத்தி, ஒதிய மரம்.

உதிட்டிரன் - தருமராசன்.

உதித்தல் - தோன்றல், படுத்தல்.

உதிப்பு - தோற்றம், பிறப்பு.

உதியன் - சேரன், பாண்டியன்.

உதிரம் - இரத்தம்.

உதிரன் - செவ்வாய்.

உதிரி - உதிர்ந்தது, ஓர்வகை வாழை, சிறுகீரை, துளசி, வசூரி.

உதிரோற்காரி - சத்த முகிலி லொன்று.

உதிர்தல் - சாதல், சிந்தல், சொரிதல்.

உதிர்த்தல் - உகுத்தல், கண்ணீருகுத்தல், சொரிவித்தல், பொடியாக்கல்.

உதீசி - வடக்கு.

உதீர்ணன் - புருஷார்த்த சிந்தையுள்ளவன்.

உது - உஃது.

உதும்பரம் - அத்திமரம், எருக்கு, செம்பு, வாயிற்படி.

உதை - உதைத்தல், உதையென்னேவல், காலாலழுத்துகை.

உதைதல் - தாக்கிமீளல், பிரயோகித்தல்.

உதைத்தல் - அதைத்தல், அலட்சியம்பண்ணல், காலாலுதைத்தல், பிரயோகித்தல்.

உதைப்பு - உதைக்கை, தாக்குகை.

உத்கமம் - பிறப்பு, வியாபாரம்.

உத்கீதம் - கானம், ஸாமவேதம், பிரணவம், மேகம்.

உத்தண்டம் - அதிகாரம், இராசதம், உக்கிரம், கொடை, தைரியம், துணிவு, மகத்துவம், வலிமை.

உத்தமசத்து - அவுபல பாஷாணம்.

உத்தமதாளி } வேலிப்
உத்தமாகாணி } பருத்தி.

உத்தமபரி - இலை, கொத்துமல்லி.

உத்தமபலம் - முந்திரிகைப்பழம்.

உத்தமபுருஷன் - சன்மார்க்கன், தன்மை.

உத்தமம் - உண்மை, நன்மை, முதன்மை, மென்மை.

உத்தமவிம்சதி - அறுபது வருடங்களில் முதலிருபது.

உத்தமாங்கம் - தலை.

உத்தமி } நற்குணமுடையவள்.
உத்தமை }

உத்திரக்கிரியை - கருமாந்தரம்.

உத்தரகுருவம் - போகபூமியாறிலொன்று.

உத்தரகோசமங்கை - ஓர் சிவஸ்தலம்.

உத்தரணி - சுருவை, பஞ்சபாத்திரக்கரண்டி.

உத்தரதுருவம் - வடதுருவம்.

உத்தரபாகம் - பிற்கூறு.

உத்தரபாத்ரபதம் - உத்திரட்டாதி, இரேவதி.

உத்தரபூமி - வடபூமி.

உத்தரமங்தோச்சம் - சூரியனுக்கும் கிரகங்களுக்குமுள்ள அதிதூரம்.

உத்தரமீமாம்ஸை - சாத்திரமாறினுென்று.

உத்தரம் - அபரம், உயர்ச்சி, ஊழித்தீ, எதிர்மொழி, சேடம், பலம், பின், மறுமொழி, வடக்கு.

உத்தரவாதம் - ஈடு, வகைசொல்லுந்தன்மை.

உத்தரவு - கட்டளை, மறுமொழி, விடுதலை, விடை.

உத்தராசங்கம் - உத்தரீயம்.

உத்தராசாடம் - உத்திராடம்.

உத்தராயணம் - அரிபதம் முதல் விஷுபதம் வரையில் சூரியன் செல்லுதல்.

உத்தரி - குதிரை.

உத்தரித்தல் - அழுந்தல், அனுபவித்தல், ஈடுசெய்யல், சாதித்தல், மறுமொழிசொல்லல்.

உத்தரீயம் - ஏகாசம்.

உத்தரோத்தரம் - எதிர்மறுமொழி, மிகுதி, மேலும் மேலும்.

உத்தவன் - கிருஷ்ணனுடைய மந்திரி.

உத்தளம் - உத்தூளிதம்.

உத்தாபம் - உபத்திரவம், தவிப்பு, மிகுவெப்பம், முயற்சி.

உத்தாரணம் - உயர்த்துதல், நிலை நிறுத்தல், பிரித்தல்.

உத்தாரம் - அடுப்பு, உத்தரவு, உயர்ச்சி, கட்டளை, பங்கு, மறுமொழி.

உத்தாலகம் - ஓர்வகைச்சோளம், ஓர்மணி.

உத்தாலகன் - ஓர் முனிவன்.

உத்தாலம் - நறுவிலி.

உத்தானபாதன் - ஓரரசன்.

உத்தானம் - அடுப்பு, அத்தநாள், ஆழமின்மை, இசைப்பு, உயிர்ப்பித்தெழுதல், ஊழித்தீ, எல்லை, எழும்புதல், புடைப்பு, முயற்சி, முற்றம், யுத்தம்.

உத்தானி - அகங்கையை மேற்புறமாய்த்திருப்பும் பேசி.

உத்தி - அபினி, அறிவு, இசைவு, இணக்கம், செல்வம், சொல், தந்திரவுத்தி, திருவுறுப்பு, தாக்கங்கள், தேமல், பாம்பின் படப்பொறியுத்தி புத்திநுட்பம்.

உத்திட்டம் - குறிப்பு.

உத்தியம் - யாகமிருபத்தொன்றினுென்று.

உத்தியாபனம் - நோன்பு முடிவு, முடிவு.

உத்தியானம் } பூந்தோட்
உத்தியானவனம் } டம்.

உத்தியுத்தர் - உருபாநீபர்.

உத்தியோகபர்வம் - பாண்டவரும் கௌரவரும் யுத்தத்துக்கான முயற்சி செய்வதைத் தெரிவிக்கும் பருவம்.

உத்தியோகம் - உள்ளமிகுதி, தொழில், முயற்சி.

உத்திரட்டாதி - ஒரு நக்ஷத்திரம்.

உத்திரம் - ஒரு நக்ஷத்திரம்.

உத்திராசாடம் } ஒரு நக்ஷத்
உத்திராடம் } திரம்.

உத்திராபன்னி - சணல்.

உத்திரி - அருச்சை, செபம், தியானம், பருத்தி, பூசை, மந்திரம்.

உத்திரேகம் - தொடக்கம், மிகுதி.

உத்தீபகம் - மலையெறும்பு.

உத்தீபனம் - தீபமேற்றல், விகாரமூட்டல்.

உத்து - அத்தாட்சி, தெளிவு.

உத்துங்கம் - உயர்ச்சி, மேன்மை.

உத்துவாகனம் - இருமுறையேருழல்.

உத்துவாகிதமுகம் - அண்ணாந்து பார்த்தல், பரதவுறுப்பொன்று.

உத்துவாசனம் - கொலை, மிகவளர்ச்சி.

உத்துவேகம் - அச்சம், துக்கம், பாக்கு.

உத்தூளனம் } உடம்பெங்கும்
உத்தூளிதம் } பொடி விபூதி தரித்திருத்தல்.

உத்தேசம் - ஒப்பந்தம், சொல்லல், நோக்கம், போதப்பிரகார மூன்றினொன்று, அஃதுமதிப்பு, விசாரணை, விபரம்.

உத்தேசனம் - அனுப்பல், சாணைபிடித்தல்.

உத்தேசித்தல் - கருதல், தீர்மானித்தல்.

உத்தேரிதம் - குதிரை நடையைந்தினொன்று.

உத்பிஜ்ஜம் - நிலத்தைப் பிளந்துகொண்டு முளைக்குஞ்செடி முதலானவை.

உத்பிரேக்ஷை - ஓரலங்காரம், தற்குறிப்பேற்றம்.

உத்பூதம் - ஆரம்பம், பிறந்தது.

உந்தரம் - எலி, வழி.

உந்தி - ஆறு, ஆன்கூட்டம், உயர்ச்சி, கடல், கொப்பூழ், தேருருளை, நடு, நீர்ச்சுழி, பரப்பு, மகளிர் விளையாட்டிலொன்று, யாழினுறுப்பு.

உந்திக்கமலம் - கொப்பூழாகிய கமலம்.

உந்திச்சுழி - கொப்பூழ்ச்சுழி.

உந்திபூத்தோன் - விஷ்ணு.

கரந்துறைகோள்-காணுக்கிரகம்.

கரந்துறைச்செய்யுள் - மிறைக்க வியிலொன்று.

கரந்தை - ஓர்பூடு, கல்லாரை, நிரைமீட்டவர்களணியுமாலை.

கரபத்திரம் - ஈர்வாள்.

கரபம் - கழுதை,

கரபரிசம் - கையாற் றொடல்.

கரபாத்திரம் - கையிலன்னம் வாங்கிப்புசித்தல்.

கரப்பு - ஒளித்தல், களவு, மத்து, மீன்கூடு.

கரமஞ்சரி } நாயுருவி.
கருமஞ்சரி }

கரமுகன் - விநாயகன்.

கரம் - எழுத்தின் சாரியை, கழுதை, கிரணம், குடியிறை, கை, செய்வதென்னும் பொருளிலே வடமொழிப் பெயரோடு வருவது, யானைத்துதிக்கை, நஞ்சு, முழம்.

கரம்பு } சிறுகளா, பாழ்நிலம்.
கரம்பை }

கரருகம - நகக்கண், நகம்.

கரவடம் - களவு, வஞ்சகம்.

கரவடர் }
கரவர் } திருடர், வஞ்சகர்.
கரவயோர் }

கரவாகம் - காக்கை.

கரவாளம் - கைவாள்.

கரவிந்தை - களாச்செடி.

கரவீரம் - அலரிச்செடி.

கரவு-உலோபம்,ஒளித்தல், களவு, கொடாமை, வஞ்சம்.

கரளம் - எட்டிமரம், நஞ்சு.

கரன் - ஓரவுணன்.

கரா } ஆண்முதலை, முதலை.
கராம் }

கராசலம் - யானை.

கராசனம் - புலி.

கராடம் - மருக்காரை.

கராலகம் - கருந்துளசி.

கராளம் - கராளி, தீக்குணம்.

கராளமுகம் - பயங்கரமுகம்.

கரி - இருந்தை, கரியென்னேவல், கருமை, சாட்சி, திருட்டாந்தம், நஞ்சு, யானை, வயிரம்.

கரிக்ரலீலை - கலவி விளையாட்டி லொன்று.

கரிகன்னி - வெருகு.

கரிகாடு - கரிந்தகாடு, யானை திரியுங்காடு.

கரிகாலன் - ஓர் சோழன்.

கரிக்கண்டு - கரிசலாங்கண்ணி.

கரிக்கோலம் - அழிஞ்சில்.

கரிசம் - பஞ்சம்.

கரிசலாங்கண்ணி - கையாந்தகரை.

கரிசலை - பொற்றலைக் கையாந்தகரை.

கரிசல் - கருமை, முதிர்ந்தவிலை.

கரிசற்காடு - அடர்ந்தகாடு, கருமண்ணிலம்.

கரிசனம் - அன்பு, இழுத்தல், உழுதல், பிரிவு, பொற்றலைக் கையாந்தகரை,யானைக்கோடு.

கரிசன்னி - வெண்காக்கணம்.

கரிசாலை - கையாந்தகரை.

கரிசி - இருநூறுபறைகொண்ட அளவு,குறைவு,குற்றம்,தவறு.

கரிசு - குற்றம்.

கரிணி - பெண்யானை, யானை.

கரிதல் - கருகுதல், காந்தல், தீதல், பெருங்கோபம்.

கரிதன் - அச்சமுள்ளோன்.

கரிப்பான் - ஓர்பூடு.

கரிப்பு - அச்சம், கரித்தல்.

கரிப்புறத்திணை - புறத்திணையி னொன்று.

கரிமா - அட்டசித்தியினொன்று.

கரிமுகன் - விநாயகன்.

கரிய - கருமையானவை.

கரியபோளம் - கருப்புக்குங்கிலியம், நறும்பிசின்.

கரியமால் - காய்ச்சற்பாஷாணம், விஷ்ணு.

கரியல் - கருகல், வளாமரம்.

கரியவன் - கடவுள், சனி, தேவேந்திரன், நமன், விஷ்ணு.

கரியவன் - கருமையுடையவன்.

கரில் - கார்ப்பு, குற்றம், கொடுமை.

கரிவாகனன்-ஐயனார், இந்திரன்.

கரீரம் - அகத்தி, கருவேல், குடம், கும்பவிராசி, மிடா, மூக்கிற் பொந்து, யானை, யானைக்கொம்பு.

கரு - அட்டகருமக்கரு, கருப்பம், கருப்பொருள், நடு, நிறம், பிள்ளை, பெருமை, முட்டை, மேடு, மேன்மை, யோசனை.

கருகல் - கரியாதல், தீதல், மறைபொருள், மாலைநேரம்.

கருக்கல் - இருள், கருக்குதல், கருப்பாக்கல், சாய்ந்த பயிர், சப்பட்டை, மப்பு, மனதை நோவச்செய்தல், மாலைநேரம்.

கருக்கு - கருக்கென்னெவல், கூர், பனைமட்டை, வாட்கருக்கு.

கருக்குடி - சவர்க்காரம்.

கருக்குவாளி - ஓர் மரம்.

கரிக்கூட்டுதல் - கருத்துவிசாரித்தல், சினைத்தல், நியாயந்தேடுதல், யோசனைசெய்தல்

கருங்கடல்வண்ணன் - ஐயனார். விஷ்ணு.

கருங்காக்கணம் ஓர்காக்கணம்.

கருங்காலி - ஓர் மரம்.

கருங்குதிரையாளி - வயிரவன்.

கருநகுந்தம் - கண்ணோயி னொன்று.

கருங்குவளை - நீலோற்பலம்.

கருங்கை - அரியவேலை.

கருங்கொல் - இரும்பு.

கருங்கொல்லர் - கருமார்.

கருங்கோட்டு - கடுமையான கொம்பையுடையது.

கருங்கோள் - இராகு.

கருசம் - ஓர் தேசம்.

கருச்சிதம்-முழக்கம்,வீராவேசம்.

கருஞ்சனம் - முருங்கை.

கருடகேதனன் - விஷ்ணு.

கருடதிசை - கீழ்த்திசை.

கருடதியானம் - ஓர் மந்திரம்.

கருடத்தொண்டை - காக்கணஞ் செடி, கொவ்வை.

கருடன் - செம்பருந்து, விஷ்ணு வாஹநம்.

கருணன் - கர்ணன்.

கருணை - ஓர் வாச்சியம்.

கருணைகரம்-கருணைக்கிருப்பிடம்.

கருணைகரன் - கடவுள்.

கருணைநிதி - கடவுள், காருண் ணியன், கிருபையிற் சிறந் தோன்.

கருணைலயன் - கடவுள், சிவன்.

கருணி - குகை, பிடியன்யானை, வெற்பு.

கருணிகை - பூவினுட்கொட்டை.

கருணீகன் - கணக்கன்.

கருணை - ஓர் கிழங்கு, ஓர்செடி, கிருபை, பட்சம், பொரிக்கறி.

கருதலர் } பகைவர்.
கருதார் }

கருதல் - எண்ணல்,சிந்தித்தல், நினைத்தல்,மதித்தல்,விரும்பல்

கருதல்அளவை - அநுமானப்பிர மாணம்.

கருத்தபம் - கழுதை.

கருத்தமன் - வருணன் றந்தை.

கருத்தவியம் - செய்யத்தக்கது, தத்துவம்.

கருத்தன் - அரன், அருகன், செய்வோன், தலைவன்.

கருத்தா - அருகன், கடவுள், சிவன், வினைசெய்வோன், வினை முதற்பொருள்.

கருத்து - அபிப்பிராயம், ஆழ மானபயன், எண்ணம், கவ னம், குறிப்பு,சித்தம், சிந்தனை, சொற்பொருள், தாற்பரியம், நினைவு, பலன்,விழிப்பு, விவே கம்.

கருத்துப்பொருள் - நினைக்கப் படும்பொருள்.

கருத்துரை - செய்யுட்கருத் துரைத்தல்.

கருநந்து - நத்தை.

கருநாள் - கெட்டநாள்.

கருநிலம் - நீரின் மலையின் வனத்திற் பயன்படாநிலம்.

கருநெறி - தீ.

கருநெய்தல் - கருங்குவளை.

கருந்தனம் - மிகுசெல்வம்.

கருந்தாது - இரும்பு.

கருந்திடர் - மேடு.

கருந்துகிலோன் - பலபத்திரன்.

கருந்துகில் - கருப்புச்சீலை.

கருந்தோழி - அவுரி.

கருப்பகோளகை - கருப்பாசயப்பை.

கருப்பகிருகம் - மூலஸ்தானம்.

கருப்பப்பரிசம்-கருப்பந்தரித்தல்.

கருப்பம் - உள், கருப்பாசயம், சினை.

கருப்பரம் - அத்தி, இருப்புப்பாண்டம், தலையோடு.

கருப்பவதி, கருப்பிணி } கருப்பந்தரித்தவள்

கருப்பாதானம் - ஓர் சடங்கு.

கருப்பு - அரிது, குறுவிலை.

கருப்புவில் - மன்மதன் வில்.

கருப்புவில்லி - மன்மதன்.

கருப்பூரசிலாசத்து - ஓர்மருந்து.

கருப்பூரப்புல் - ஓர்வாசனைப்புல்.

கருப்பூரம் - கர்ப்பூரம், சூடன், பொன்.

கருப்பை - கருவின்பை,காரெலி.

கருப்பொருள் - அந்தந்த நிலத்திலுற்பத்தியாகும் பொருள், உரிமைப்பொருள்.

கருமகள் - கரும்பிள்ளை.

கருமகாண்டம் - கன்மவிருத்தி முதலியவற்றைச் சொல்லுதல்.

கருமகாண்டிகன் - கிரியாகாண்டிகன்.

கர்மகாரன் - கம்மாளன், வேலையாள்.

கருமசம் - அரசமரம், கலியுகம், களங்கம், சத்து, தீவினை.

கருமணி - கண்மணி, நீலமணி.

கருமத்தலைவர் - வருங்காரியஞ் சொல்லுவோர்.

கருமபந்தம், கருமபந்தனம் } கருமபாசம்.

கருமபாகை - வேதநூற்பொருள்.

கருமபூமி - வினைசெய்தற்குரிய பூமி.

கருமம் - காரியம், உஷ்ணம், கடமை, காரியம், செய்படுபொருள்,தொழில்,முன்வினை.

கருமயிர் - கரடி.

கருமா - யானை, பன்றி.

கருமாதி - ஈமச்சடங்கு, அந்தியேஷ்டி முதலியவை.

கருமாத்துமா - கன்மஞ் செய்தவன்.

கருமாநுஷ்டானம்-நியமநிஷ்டை

கருமாந்தம் - கருமாந்தரம், கார்காலம்.

கருமாயம் - அதிகவிலை, அருமையானது.

கருமாரன் - கொல்லன்.

கருமாரி - ஓர் மரம், பிரசூதவேதனை.

கருமானம் - கரியவானம், கருவித்தை.

கருமானுபவம் - செய்வினைபோகம்.

கருமான்- கலைமான், கொல்லன், பன்றி.

கருமி - நித்தியகருமம் வழுவாது செய்வோன், பாவி.

கருமுகிற்சிலை - காந்தக்கல்.

கருமுகிற்பாஷாணம் - ஓர் பாஷாணம்.

கருமுகை-இருவாக்ஷி, சிறுசெண்பகம்.

கருமேந்திரியம்-கன்மேந்திரியம்.

கருமை - கறுப்பு, நஞ்சு, பெருமை, வலி, வெள்ளாடு.

கரும்பாம்பு - இராகு.

கரும்பாலை - கரும்பாடியந்திரம்.

கரும்பிள்ளை - காக்கை.

கரும்பு - கன்னல், புநர்ப்பூசம்.

கரும்புசம்<br>கரும்புள் } வண்டு.

கரும்புறம் - பனை.

கரும்பொன் - இரும்பு.

கருவங்கம் - காரீயம்.

கருவடம் - மலையுமாறுஞ்சூழ்ந்தவூர், ஊர்நானூற்றின் தலையூர்.

கருவம் - அலங்காரம், ஓர் எண், சினை.

கருவரி - இருள்.

கருவழலை -ஓர் பாம்பு.

கருவா - இலவங்கமரம்.

கருவாமுப்பு - வெடியுப்பு.

கருவி - அகக்கருவி, ஆயுதப்பொது, உபகரணம், கவசம், காரணம், குதிரைக்கல்லணை, கூட்டம், தொடர்பு, நட்பு, புறக்கருவிகள், மேகம், யாழ், வாச்சியம், வீணைக்கருவி.

கருவிகரணம் - பொறியுங்கரணமும்.

கருவிகாண்டம்<br>கருவிநூல் } வாசிக்கப்பழகும் புஸ்தகம்.

கருவிப்புட்டில் - ஆயுதவுறை.

கருவிளங்கனி - மூன்றுநிரையசையாய் வருஞ்சீர்க்கு வாய்ப்பாடு.

கருவிளங்காய் - நிரை நிரை நேராய்வருஞ்சீர்க்குவாய்பாடு.

கருவிளநறுநிழல் - நான்கு நிரையசையாய்வருஞ்சீர்வாய்பாடு.

கருவிளநறும்பூ - நிரை நிரை நிரை நேராய் வருஞ்சீர்க்கு வாய்பாடு.

கருவிளந்தண்ணிழல் - நிரை நிரை நேர் நிரையாய் வருஞ் சீர்க்கு வாய்பாடு.

கருவிளந்தண்பூ - நிரை நிரை நேர் நேராய் வருஞ் சீர்க்கு வாய்பாடு.

கருவிளம் - இரண்டு நிரையசை யாய் வருஞ்சீர்க்கு வாய்பாடு, காக்கணஞ்செடி.

கருவிளை - காக்கணஞ்செடி.

கருவுயிர்த்தல் - ஈனல்.

கருவுளமைப்பு - ஜன்மத்தினியமம், (பெறுதல், இழத்தல்-இழவு, இன்பம், பிணி அல்லது இடையூறு, மூப்பு, சாக்காடு, பிரித்தல், பிரிவிலா திருக்கை)

கருவூர் - சேரனூர்.

கருவூலம் - பொக்கிஷம்.

கருவை - ஓரூர், வரகுவைக் கோல்.

கருள்-இருள், கறுப்பு, நல்லாடை

கருனை - பொரிக்கறி.

கரேணு - பெண்யானை, யானை.

கரை - அருகு, எல்லை, கரையென்னேவல், கானல், சொல், தீரம், முடிவு, வார்த்தை.

கரைக்கல்லோலம் - கடற்பாசி.

கரைஞ்சான் - அகில்.

கரைதல் - அழுதல், அழைத்தல், ஆரவாரம், இரங்கல், இளைத்தல். உருவழிதல், ஒலித்தல், கரைதல், சொல்லுதல், பதனழிதல், பேரொலி.

கரைதுறை - துறைமுகம், முடிவு.

கரைத்தல் - உருக்குதல், எழுத்திலாவோசை, கரைக்குதல், சொல்லாவெழுமொலி.

கரைப்போக்கு - இழிவானது, கரையோரம், கரைவழி, போலிமணி.

கரோடம் - தலையோடு.

கரோடி - தலையோட்டுப் பொருத்து, முடிமாலை.

கரோடிகை - கழுதை, சூட்டுமாலை. முடிமாலை.

கரோருகம - நகம்.

கர்க்கடகம் - ஓரிராசி, நண்டு.

கர்ச்சிதம் - இடிமுழக்கம், யானைப்பிளிறொலி

கர்சூரம் - கழற்கொடி, பேரீந்து.

கர்த்தபம் - கழுதை.

கர்வடம் - நானூறு கிராமத்திற்குத் தலைக்கிராமம், மலையுமாறுஞ் சூழ்ந்தவூர்.

கர்வம்-இலங்குங்கோடி, செருக்கு.

கலகம் - பேரொலி, போர்.

கலகண்டம் - குயில்.

கலகலம் - பறவைக்குரல், இரைச்சல்.

கலகலெனல் - ஈரடுக்கொலிக் குறிப்பு.

கலக்கம் - அச்சம், ஆரவாரம், குழப்பம், சஞ்சலம், துன்பம், தெளிவின்மை.

கலக்கல் - அச்சுறுத்தல், குழப்பல்.

கலங்கரைவிளக்கம் - கப்பலையழைக்குந் தீபவென்னும் விளக்கு.

கலங்கல் - அஞ்சல், அழுதல், கலங்குதல், சேற்றுநீர், துன்பமுறல், நீர்பாயுமதகு.

கலசப்பானை - கஞ்சனை, சிறுபானை.

கலசமுனி - அகத்தியன்.

கலசம் - குடம், பால்முட்டி

கலணை - குதிரைக்கல்லணை.

கலணைக்கரடு - குதிரைக்கல்லணைக்கனு.

கலதி - மூதேவி.

கலதை - கலக்கம்.

கலத்தல் - எழுத்திலாவோசை, கூடல், புணர்ச்சி.

கலந்தருநர் - குசவர், பணித்தட்டார்.

கலந்தை - பெருமை.

கல்பம் - கலாபம், மயிற்றோகை, யானைக்குட்டி.

கலப்பு - கலத்தல், கலவை.

கலப்புறமொழி - இருதிணையிலு கலந்து வருவது.

கலப்பை - உபகரணம், உழுபடை, கலப்பையுறுப்பு.

கலப்பைக்கிழங்கு - கார்த்திகைக் கிழங்கு, வெண்தோன்றிக் கிழங்கு.

கலப்பைப்படை - ஹலாயுதம்.

கலமர் - பாணர்.

கலம் - ஆபரணம், ஆயுதப்பொது, உண்கலம், ஓரளவு, பாத்திரம், மட்கலம், மரக்கலம், யாழ், ரேவதி.

கலம்பகம் - ஓர்பிரபந்தம், கலப்பு, சாந்து.

கலர் - கீழ்மக்கள்.

கலவசம் - காக்கை.

கலவர் - கடலோடிகள், படைவீரர்.

கலவல் - எழுத்திலாவோசை, கலத்தல்.

கலவி - புணர்ச்சி.

கலவை - கலப்பு, சாந்து, சேறு.

கலச்சேறு - சாந்து, பரிமளச் சேறு.

கலனை - கலப்பை, கலப்பையுறுப்பு.

கலன் - ஆபரணம், ஓமவுபகரணம், ஓர் அளவை, பாத்திரம், மரக்கலம், யாழ், வழக்கு.

கலன்கழிமடந்தை - கைம்பெண்.

கலாங்கம் } துத்தபாஷாணம்.
கலாங்கன் }

கலாநிதி - சந்திரன்.

கலாபம் - அம்புக்கூடு, அரைப் பட்டிகை, கலம்பகம், சரம ணிக்கோவை, பதினறுகோ வையுள்ளமணி, பீலிக்குடை, மயிலிறைண், மயிற்றேகை.

கலாபி - ஆண்மயில்.

கலாம் - ஊடல், கொடுமை, கோபம், சினம், பகை.

கலாம்பூரம் - ஓர் மருந்து.

கலாவல் - கலத்தல்.

கலி - அம்பு, ஒலி, ஓசை, ஓர்பா, கடல், கடையுகம், கலிப்பா, கலியென்னேவல், கேடு, சனி, சிறுமை, போர், வஞ்சகம், வலி.

கலிகம் - கற்பரிபாஷாணம்.

கலிகாலம் - உபத்திரவகாலம்.

கலிகை } இளம்பூவரும்பு, நாக
களிகை } மல்லி.

கலிங்கத்துப்பரணி - ஓர்செய்யுள்.

கலிங்கம் - ஆற்றுத்தும்மட்டி, ஊர்க்குருவி, ஓர்தேசம், கண் மருந்து, குதிரை, சீலை, பதி னெட்டு பாஷைகளிலொன்று, வானம்பாடி, வெட்பாலை.

கலிசம் - வன்னிமரம்.

கலிதம் - பாய்கை, பெருக்கு, பொருத்தம்.

கலிதி - திப்பிலி.

கலித்தல் - ஆரவாரம், எழுச்சி, ஒலித்தல், தழைத்தல், பொ சிகுதல், பொலிவு.

கலித்தளை - செய்யுட்டளையி ஞென்று.

கலித்தாழிசை - ஓர்கவி, ஓர் யாப்பு.

கலித்துருமம் - தான்றிமரம்.

கலித்துறை - ஓர்பாவினம், கலிப் பாவினத்திலொன்று.

கலித்தொகை - ஓர் பிரபந்தம்.

கலிந்தம் - ஓர் மரம், ஓர் மலை.

கலிபணம் - ஓர் பணம்.

கலிப்பா - பாநான்கிெனுன்று.

கலிப்பு - உயரம், எழுச்சி, ஒலி, கக்குதல், தரா, மிகுதி.

கலியர் - படைவீரர், தரித்திரர்.

கலியாணம் - கொண்டாட்டம், சந்தோஷம், சுபம், பொன், விவாஹம்.

கலியாணி - ஓரிராகம், பார்வதி.

கலியாத்தம் - கலியுகவருடம்.

கலியுகம் - கடையுகம்.

கலிவிருத்தம் - கலிப்பாவினத் திஞென்று.

கலிவெண்பா - வெண்டளை தட்டு வெள்ளோசை தழுவி யொரு பொருண்மேல் வந்து ஈற்றடி முச்சீரால் முடிவது.

கலினி - திப்பிலி.

கலினை - கைமை, கொள்ளு, மிளகு.

கலீர்கலீரெனல் - ஒலிக்குறிப்பு.

கலீமை - கடிவாளம்.

கலுடம் - கலங்கனீர், பாவம்.

கலுவடம் - பூவரும்பு.

கலுழம் - கலங்கனீர்.

கலுழன் - கருடன்.

கலுழி - கலங்கனீர் முல்லைநிலக் கான்யாறு.

கலுழ்தல் - அழுதல், கலங்கல்,

கலேர் } ஒலிக்குறிப்பு.
கலேல் }

கலை - அரைப்பட்டிகை, ஆண்மான், ஆண்முசு, இடைகலை, கலையென்னேவல், கல்வி, காலநுட்பம் சந்திரன், சரீரம, சீலை, சுறுமீன், துர்க்கைவாஹநம், நூல், பங்கு, மகரவிராசி, மகரமீன், மரக்கொம்பு, மேகலை, வயிரம், விலங்கேற்றின் பொது, பாகையிலறுபதிலொன்று, பிங்கலை, வண்ணங்களிறோரடி, வித்தியாதத்துவமேழிலொன்று, பிரகாசம்.

கலைஞர் - புலவர், கலையுணர்ந்தோர்.

கலைஞானம் - கல்வியுணர்வு, கல்விநூல், அறுபத்துநான்கு கலை, அதாவது - அக்கரவிலக்கணம், இலிகிதம், கணிதம், வேதம், புராணம், வியாகரணம், நீதிசாஸ்திரம், ஜோதிஷ சாஸ்திரம், தர்மசாஸ்திரம், யோகசாஸ்திரம், மந்திரசாஸ்திரம், சகுனசாஸ்திரம், சிற்பசாஸ்திரம், வைத்தியசாஸ்திரம் உருவசாஸ்திரம், இதிஹாஸம், காவியம், அலங்காரம், மதுரபாஷணம், நாடகம், நிருத்தம், சப்தபிரமம், வீணை, வேணு, மிருதங்கம், தாளம், அஸ்திர பரீக்ஷை, கனக பரீக்ஷை, இரதபரீக்ஷை, கஜபரீக்ஷை, அச்வபரீக்ஷை, இரத்தின பரீக்ஷை, பூமி பரீக்ஷை, ஸங்கிராமவிலக்கணம், மல்லயுத்தம், ஆகர்ஷணம், உச்சாடனம், வித்வேஷணம், மதனசாஸ்திரம், மோஹநம், வசீகரணம், ரஸவாதம், காந்தர்வவாதம், பைபீலவாதம், கவுத்துக வாதம், தாதுவாதம், காருடம், நஷ்டம், முஷ்டி, ஆகாயப்பிரவேசம், ஆகாயகமனம், பரகாயப் பிரவேசம், அதிர்ச்யம், இந்த்ரஜாலம், மஹேந்த்ரஜாலம், அக்நிஸ்தம்பநம் ஜலஸ்தம்பநம், வாயுஸ்தம்பநம், திருஷ்டிஸ்தம்பநம், வாக்ஸ்தம்பநம், சுக்லஸ்தம்பநம், கர்ணஸ்தம்பநம், கட்கஸ்தம்பநம், அவத்தைப் பிரயோகம்.

கலைதல் - குலைதல்.

கலைத்தல் - ஓட்டுதல், குலைத்தல், நீக்கல், பிரித்தல்.

கலைநாதன் - அருகன்.

கலைநாயகன் - புத்தன்.

கலைபயில்தெளிவு - நூல்களிலே பழகிய தெளிவு.

கலைமகள்
கலைமடந்தை } ஸரஸ்வதி.
கலைமலைவு - சாஸ்திரவிரோதம்.
கலையானத்தி
கலையூர்தி } துர்க்கை.
கலையினன் - சந்திரன்.
கலையுணர்புலவன் - குமரன்.
கலையூர்தி - ஸரஸ்வதி, துர்க்கை.
கலையோதல் - நூலோதல்.
கலைவல்லோர் - அறிஞர், புலவர்.
கல்-அரதனம், இரத்தினம்,ஒலிக் குறிப்பு,கல்,கல்லென்னேவல், சிலை, மலை.
கல்லகம் - மலை.
கல்காரம்
கல்லாரம் } செங்குவளை, நீர்க் குளிரி.
கல்லடிமூலம் - ஓர் பாஷாணம்.
கல்லல் - தோண்டல், பேசலா வெழுமொலி.
கல்லலை
கல்வலை } மலைமுழைஞ்சு.
கல்லாடம் - ஓர் நூல்.
கல்லாடர் - ஓர் புலவர்.
கல்லார் - கீழ்மக்கள், அறியா தார்.
கல்லி - ஆமை, ஊர்க்குருவி.
கல்லிச்சி
கல்லித்தி } இத்தி, ஓர்மரம்.
கல்லியம் - கட்டை, கள், கால், சாராயம்.
கல்லுக்கலைக்காத்தாள் - பொன் னுங்காணி.
கல்லுண்டை - ஓர் நெல்.
கல்லுருணி - புல்லுருவி.
கல்லுருவி - ஓர் பூடு.
கல்லூசி - ஓர் மருந்து.
கல்லூரி - கல்விபயிலிடம்.
கல்லெறி - கவண்.
கல்லெனல்-அநுகரணவோசை.
கல்லை - இலை, இலைக்கலம், பாத குறட்டின் குமிழ், பிணக்கு.
கல்லைமீராக்கி - மாமிசபேதி.
கல்லொட்டி - கத்தை.
கல்லோலம் - கடற்பெருந்திரை, புனற்றிரை.
கல்வளை - மலைப்பிளப்பு.
கல்வி - அறிவு, கற்றல், நூல், புண்ணியத் தோற்றம் சான்கி னொன்று, வித்தை.
கல்விபயிலிடம் - பள்ளிக்கூடம்.
கல்வியூரி - கல்லூரி.
கல்வெட்டு - அழியாதசொல், ஓர் பிரபந்தம், சிலா சாஸனம், புகழ்ச்சிச்செய்யுள்.
கல்வேகம் - அன்னபேதி.
கல்வேதி - ஸஹஸ்ரபேதி.
கவுக்குன்று - கடல் கடைந்தமத் தாகிய மந்தரமலை.
கவசகுண்டலன் - கவசத்தோ டும் குண்டலத்தோடும் பிறந்த கர்ணன்.
கவசம் - காவற்பண்ணுமந்திரம், சட்டை, சீலைமண்.

கவடி - பலகறை, சோழி.

கவடு - கபடம், கப்பு, கழுத்திடு கயிறு, மரக்கொம்பு, யானை கட்டுங் கயிறு.

கவட்டல் - மெல்லல்.

கவணை - கவண்.

கவண் - கல்லெறிகயிறு.

கவண்டர் - சண்டாளர்.

கவந்தம் - உடற்குறை, நீர்.

கவந்தன் - ஓரஸுரன்.

கவம் - கோளை, மத்து.

கவயம் }
கவயல் } காட்டான்.

கவரம் - சாமரம், சினம்.

கவரி - எருமை, கவரிமா, சாமரை, தேர்.

கவரிமா }
கவரிமான் } ஓர் மிருகம்.

கவரிறுக்கு - கடவுமரம்.

கவரெழுசங்கம் - முட்சங்கம்.

கவர் - இரண்டாகப்பிரிகை, கவரென்னேவல், மரக்கப்பு, வாழை.

கவர்தல் - ஆசைப்பெருக்கம், கடைதல், கொள்ளையிடல், திருடல், பறித்தல், வாருதல்.

கவலல் - கவலைப்படுதல், பேசலாலெழுமொலி, வருந்தல்.

கவலை - அக்கரை, அச்சம், ஓர் கொடி, கவர்வழி, கிலேசம், சந்தி, செந்தினை, துன்பம், நீரிறைக்குந்தோற்கூடை, நோய், மரக்கொம்ப.

கவவு - அகத்திடுதல்.

கவழிகை - திரைச்சீலை.

கவளம் - சோற்றுத்திரளை, யானைக்குக் கொடுக்குங் கவளம், வாயளவுகொண்டவுணவு.

கவளீகரித்தல் - அபகரித்தல், பக்ஷித்தல், புசித்தல், வழங்கல்.

கவறல் - துக்கித்தல், வருந்துதல்.

கவறு - சூதாடு கருவி.

கவற்சி - வருத்தம்.

கவனம் - கருத்து, கடுப்பு, கலக்கம், காடு, குதிரை நடை, சீக்கிரம், படை.

கவனன் - வேகமுள்ளோன.

கவனி - கந்தக பாஷாணம்.

கவாடம் - கதவு, புல்லுச்சுமை.

கவாட்சம் - சன்னல், வட்டச்சாளரம்.

கவான் - தொடை, மலைப்பக்கம்.

கவி - ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரமென்னும் நாற்கவிகளைப்பாடுவோன், கவியென்னேவல், குரங்கு, சுக்கிரன், பாட்டு, பா, புலவன், பூனைக்காலி.

கவிகற்றோர் - மங்கலபாடகர்.

கவிகுருந்தம் - கந்தகபாஷாணம்.

கவிகை - ஈதல், கவிதல், குடை.

கவிசக்கரவர்த்தி - கம்பன்.

கவிஞர் - கலைவல்லோர், புலவர்.

கவிதல் - மூடுதல், விரும்பல்.

கவிதை - பா

கவித்தல் - மூடுதல்.

கவித்துவம்-கவிதையின் தன்மை.

கவிநாயகன் - பாட்டுடைத்தலைவன்.

கவிப்பர் - செட்டிகள்.

கவிப்பு-இராசிக்கவிப்பு, உட்டுளை, குடை, மூடுதல்.

கவியம் - கடிவாளம்.

கவிரத்தினம் - ஓர் நூல்.

கவிரம் - அலரிச்செடி.

கவிராயன் - புலவன்.

கவிர் - முண்முருக்கு.

கவிவல்லோர், கவிவாணர் - புலவர்.

கவிழ்தல் - அகப்புறமாதல், இறத்தல், குனிதல், கெடல், தலைகீழாதல், தோற்றல்.

கவிழ்த்தல் - கவிழ்ப்பு, மூடுதல்.

கவினல் - அழகுறல்.

கவின் - அழகு, தக்கபண்பு.

கவீச்சுரர், கவீச்வரர் - கவிவாணர்.

கவீனம் - பசு மேய்ந்தவிடம் வெண்ணெய்.

கவுசி - குழைவு, வருத்தம்.

கவுசிகம் - கௌசிகம்.

கவுசிகன் - இந்திரன், விச்வாமித்திரன்.

கவுடம் - கௌடம்.

கவுடி - ஓர் பண்.

கவுள் - கதுப்பு, யானைக்கதுப்பு, யானைமதம் பாயிடம்.

கவுஸி-குதிரைப்பற் பாஷாணம், வாசல்.

கவை - அகில், ஆயிலியம், எள்ளிளங்காய், என்புக்கவை, கவர், கவர்வழி, காடு, கோட்டை, தேவை, மரக்கப்பு.

கவைத்தாள் - நண்டு.

கவைநா - பாம்பு.

கவைமுள் - வேலன்முள்.

கவையடி - கவர்க்குரை.

கவையம் - கவயம், காட்டுப்பசு.

கவ்வாணம் - ஓர்பண்.

கவ்வு - கவர், பெருமை.

கவ்வை - எள்ளிளங்காய், ஒலி, ஓசை, கள், துன்பம், பழமொழி, வேலை.

கழகம், கழகு - கல்வி, சூது, படை, மல் இவைபயிலுமிடம்.

கழங்கம் - சூதாடுங்கருவி.

கழுங்கல் - ஒலித்தல்.

கழுங்கு - ஓராடல், கழற்சிக் கொடி, வெறியாட்டாளனுடல்.

கழுஞ்சு - கொண்டகிறை, பன்னி ரெண்டு பணவெடை.

கழுப்பு - கள்ளத்தனம்.

கழுப்புதல் - சோம்பாயிருத்தல்.

கழலடி - கழற்சிக்கொடிவேர்.

கழலல் - நெகிழ்தல், விலகல்.

கழலை - கழலைக்கட்டி.

கழல் - ஆடவர் கொடையாலும் வீரத்தாலுமணியும் பூண், கழ லென்னேவல், கழற்சிக்கொடி, கால், செருப்பு, பொன் வண்டு.

கழறல் - உறுதிச்சொல், கழலு தல், சொல்லல், நெருக்கல்.

கழற்குடம் - கழற்காய் பெய்த குடம்.

கழற்பதி - பெருங்குமிழ்.

கழற்றுரை - உறுதிச்சொல்.

கழனி - சேறு, திரைச்சீலை, நிலம், மருதநிலம், வயல்.

கழனியடுத்தவர் - உழவர், மருத நிலமக்கள், வேளாளர்.

கழாயர் - கழைக்கூத்தாடிகள்.

கழி - உப்பளம், கழியென்னே வல், மிகுதி, மெழுகுவர்த்தி, யாழிசைக்குங்கருவி.

கழிக்காரை - ஓர் செடி.

கழிதல் - கடத்தல், சாதல், செல் லல், தீர்தல், நடத்தல், நீங்கல், பிரிதல், போதல், மிகுதல், வயிறு பேதித்தல்.

கழித்தல் - நீக்குதல், நீக்கல், விலக்கல்.

கழிநிலம் - உப்பளம், உவர்த்தரை.

கழிநெடிலடி - ஐஞ்சீரின் மிக்கவடி.

கழிநெடில் - கழிநெடில்விருத்தம்.

கழிபிறப்பு - முற்பிறப்பு.

கழிப்பு - ஓர்சடங்கு, கழித்தல், குற்றம்.

கழிமுகம் - ஆற்றுநீர்க்கழிவு.

கழிமுட்டான் - ஓர் புல்.

கழியர் - உப்பமைப்போர், நெய்த நிலமக்கள்.

கழியுடல் - ஊன்கழிந்தவுடல்.

கழியூணன் - பேருந்தீனன்.

கழிவு - இரக்கம், இழிவு, உள் ளது, கழிதல், சிறத்தல், சேஷம், பூரணம், மிகுதி.

கழு - கழுகு, கழுமரம், கழு வென்னேவல், சூலம், புற் பற்றை.

கழுகு - ஓர் பறவை.

கழுக்கடை - ஈட்டி, சூலம்.

கழுக்குன்றம் - ஓர்மலை.

கழுது - காவல், பரண், பிசாசம், வண்டு.

கழுதை - கழுதை, மூடன், வடமேற்றிசைப்பாலன் குறி, வாலேயம்.

கழுதைக்கரணம் - தைதுலாகரணம்.

கழுதைத்திசை - வடமேற்றிசை.

கழுதைவாகனி - மூதேவி.

கழுத்தல் - பொய்.

கழுத்து - கண்டம், மிடறு.

கழுநீர் - உற்பலம்.

கழுந்து - தேய்ந்து மழுங்கிய திரண்டவடிவு, பொருத்து, மரவயிரம்.

கழுமல் - இணைத்தல், நிறைதல், பற்றுதல், மயக்கம், மிகுதி.

கழுமுள் - ஆயுதப்பொது, ஈட்டி, கழுமரம், சூலம், மாதளை.

கழுவல் - கழுவுதல்.

கழை - கரும்பு, புநர்ப்பூசம், மூங்கில்.

கழைக்கூத்தர் - கம்பங்கூத்தர், வேழம்பர்.

கழைக்கூத்து - கம்பங் கூத்து, வேழம்பர்கூத்து.

கள - களாச்செடி.

களகம் - பெருச்சாளி, பொன்.

களகம்பளம் - அலைதாடி, ஆட்டின்கழுத்தாரம்.

களகளப்பு - ஈரடுக்கொலிக் குறிப்பு.

களகளம் - பேரொலி.

களகளெனல் - ஈரடுக்கொலிக் குறிப்பு.

களக்கர் - புலையர், வேடர்.

களங்கசத்துரு - ஈயமணல்.

களங்கட்டி - ஓர் மீன்.

களங்கம் - அடையாளம், களிம்பு, கறுப்பு, குற்றம், சீதாங்கபாஷாணம், நீலம், மாசு.

களங்கன் - சந்திரன்.

களஞ்சி - சூதபாஷாணம்.

களதவுதம் }
களதூதம் } வெள்ளி.
களதௌதம் }

களத்திரகாரகன் - சுக்கிரன்.

களத்திரதானம் - ஏழாமிடம்.

களத்திரம் - குடும்பம், மனைவி.

களந்துரி - தான்றிக்காய்.

களந்தை - களத்தூர்.

களபம் - கலப்பு, கலவைச்சாந்து, சுட்டசாந்து, யானை, யானைக் கன்று.

களமர் - உழுநர், சூத்திரர், பூவைசியர், மருதநிலமக்கள்.

களம் - இடம், களர், களர்நிலம், கறுப்பு, நெற்களம், போர்க்களம், மனைவி, மிடறு.

களம்பாடுதல் - போர்க் களத்தை வர்ணித்தல்.

களரவம் - புறா.

களரி - அரங்கம், கருமை, களர் நிலம், காடு, கூட்டம், பாழ் நிலம், போர்க்களம், மிடறு.

களர்நிலம் - உப்பு நிலம்.

களவம் - கலப்பு, களவைச்சேறு

களவர் - கள்ளர்.

களவன் - கர்க்கடகவிராசி, கள்ளன், நண்டு.

களவாடுதல் - களவெடுத்தல்.

களவியல் - அகப்பொருளிஞோரியல்.

களவு - உன்மத்தம், களாச்செடி, திருட்டு, களவொழுக்கம், வஞ்சனை.

களவுதம் - வெள்ளி.

களன் - இடம், உக்கிரம், உன்மத்தம், ஒலி, கழுத்து, சபை, சிநேகம், போர்க்களம், மருத நிலம்.

களா - களாச்செடி, கறுப்பு, கூட்டம்

களாசம் - பிரம்பு.

களாசாஸ்திரம், களா...ல் } காமநூல், கொக்கோகம்.

களாபடனம் - கற்பித்தல்.

களாவகம் - சிறுகீரை.

களி - இறுகியபழச்சாறு, களிப்பு, களியென்னேவல், கள், குழம்பு, சீதம், செறிவு, செருக்கு, பெருமை, மகிழ்ச்சி, மயக்கம், வெப்பு, வெறி.

களிகம் - வாலுளுவை.

களிகை - இளம்பூவரும்பு.

களிதம் - பெருக்கல், வழுக்கல்.

களித்தல் - இன்புறல், களிப்படைதல்.

களிர்த்தல் - மதர்த்தல், மிகவுவத்தல்.

களிப்பு - இன்பம், உள்ளக் களிப்பு, செருக்கு, மகிழ்ச்சி, மதர்ப்பு, மயக்கம்.

களிமம் - எலி.

களிம்பு - குற்றம், துரு, மலினம்.

களியர் - நெய்தநிலமக்கள், வெறியர்.

களியர்வண்ணம் - ஓர் வண்ணம்.

களியாட்டு - மதுவெறியாட்டு.

களிறு - அத்தநாள், ஆண்சுறா, ஆண்பன்றி, ஆண்யானை, யானை, விலங்கேற்றின்பொது.

களேபரம் - உடல், எலும்பு, பிணம்.

களை - அயர்வு, அழகு, ஒளி, களையென்னேவல், காந்தி, குற்றம், தாளப்பிரமாணம் பத்திலொன்று, புல்.

களைகண் - ஆதரவு, உதவி, தாவரம், புகல்.

களைஞர் - சண்டாளர்.

களைதல் - அகற்றல், களைகட்டல், கொல்லல், நீக்குதல், பிடுங்கல்.

களைத்தல் - இளைப்புறல்.

களைவு - களைதல், தள்ளிவிடல்.

கள் - ஓர்வண்டு, களவு, கள்ளென்னேவல், சோர்வு, பன்மை விகுதி, பொய், மது, மலர்த்தேன்.

கள்வன் - கரியன், கர்க்கடகவிராசி, கள்ளன், குரங்கு, நண்டு, முசு, யானை.

கள்ளம் - களவு, குற்றம், பொய், வஞ்சனை.

கள்ளல் - களவு, திருடல்.

கள்ளாமை - களவுதவிர்த்தல்.

கள்ளி - ஓர் மரம், திருடி.

கள்ளுண் - வண்டு.

கறங்கல் - ஒலித்தல், சுழலல், பேய், வளைதடி.

கறங்கு - கறங்கென்னேவல், காற்றாடி, சுழற்சி.

கறத்தல் - உறத்தல், கவருதல், பால்கறக்குதல்.

கறல் - விறகு.

கறவை
கறவையான் } பசு.

கறளை - ஓர்மரம், கருளை, குற்றம்.

கறள் - கறை, துரு.

கறு - கடைக்குறல்.

கறி - கறி, கறியென்னேவல், மிளகு.

கறித்தல் - கடித்தல், புசித்தல்.

கறுத்தல் - கருமையாதல், கறைபடல், கோபித்தல், சினக்குறிப்புக்காட்டல்.

கறுப்பி - எவச்சாரம், கருவண்டு, காகநிமிளை.

கறுப்பு - கருநிறம், கறை, கோபம், சினக் குறிப்பு, மனக்குறை, மீனம்பர்.

கறுவம் - ஆங்காரம், சினம்.

கறுவல் - சலஞ்சாதித்தல், சினக்குறிப்பு, சினத்தல்.

கருவா - இலவங்கமரம்.

கறுவு - கறுவென்னேவல், சலஞ்சாதித்தல், சினக்குறிப்பு, சினம், தணியாக்கோபம்.

கறுழ் - கடிவாளம்.

கறை - இருள், உதிரம், உரல், கருங்காலி, கறுப்பு, குடியிறை, குற்றம், நஞ்சு, நிறம், மாசு.

கறைமிடற்றிறை
கறைமிடற்றோன் } சிவன்.

கறையடி - யானை.

கற்கசர் - கீழ்மக்கள், கொடியர்.

கற்கடகசிங்கி - கடுக்காய்ப்பூ.

கற்கம் - இலுப்பைப்பூ, கடை மருந்து, பலவகைக்கூட்டு மருந்து.

கற்கரி - கரகம், தயிர்கடையுந் தாழி.

கற்கா - கொடுந்தமிழ் நாட்டி லொன்று.

கற்கி - குதிரை, திருமாலவதாரத்தொன்று, தேவர்கோவில்.

கற்கிச்சா - சாவாக்கியங்களி லொன்று, கற்கிசிக்கரபரிதி.

கற்பகக்கரம் - கோழித்தலைக் கந்தகம்.

கற்பகச்சோலை - தேவேந்திர னந்தவனம்.

கற்பகம் - ஐந்தருவிலொன்று, அது - வேண்டின வெல்லாந் தருமரம்.

கற்பகாலம் - பிரமனாயுள்.

கற்படை } கோட்டையிற்
கற்புழை } கள்ளவழி.

கற்பம் - ஆயிரம்கோடி, உலக முடியுங்காலம், ஓர் மருந்து, தேவலோகம், நவநிதியி லொன்று, பிரமனாயுள், வேதாங்கமாறி லொன்று.

கற்பான் - வெள்ளைப்பாஷாணம்.

கற்பரிபாஷாணம் - அதம்பம்.

கற்பனை - கட்டளை, கல்வி, புனைந்துரை.

கற்பாரியம்-சிற்பநூலிலொன்று.

கற்பிதம் - நியமம், போர்யானை.

கற்பித்தல் - கட்டளை கொடுத்தல், படிப்பித்தல்.

கற்பு - கல்வி, கற்பனை, சுத்தம், மகளிர்கற்பு, மதிலுண்மேடை, மதில், முல்லைக்கொடி, முறைமை.

கற்பூசரம் - நாகமலை.

கற்றல் - படித்தல், கற்றுக்கொள்ளல்.

கற்றவர் - புலவர்.

கற்றா - கன்றையுடைய பசு.

கற்றோர் - அறிஞர்.

கற்றை - கதிர்த்தொகுதி, மயிர்த்தொகுதி முதலியன, கூட்டம்.

கனகக்கொடியோன் - கன்னன்.

கனகசபை - பொன்னம்பலம்.

கனகதம் - ஒட்டகம்.

கனகதர் - சண்டாளர், புலையர்.

கனகபரீட்சை - கலைஞான மறுபத்து நான்கிலொன்று.

கனகுமிளகு - வால்மிளகு.

கனகம் - பொன்.

கனகன் - இரண்யன்.

கனகாசலம் - மேருமலை.

கனகாசனம் - பொன்னாசனம்.

கனகாமிர்தம் - வெள்ளி.

கனகாரியம் - ஊமத்தை.

கனக்கோட்டம் - அதிககோணல்.

கனசங்கலிகிதம் - இயற்கை யெண்ணின் கனங்களாலான ஆரோஹண அவரோஹண மாலே.

கனசாரம் - கர்ப்பூரம்.

கனத்தி - வைப்பரிதாரம்.

கனம் - அகலம், இசைவிகற்பம், இரசம், ஈயம், கூட்டம், கோரைக்கிழங்கு, சமமாகிய மூவெண்ணின் பெருக்கம், சீர்மை, செறிவு, நிறைவு, பாரம், பொன், மிகுதி, வட்டம், வேகம்.

கனாசம் - நீர்.

கனருசி - மின்னல்.

கனலல் - எரிதல், கோபித்தல், சுடுதல்.

கனலி - கள்ளி, கொடுவேலி, சூரியன், நெருப்பு, பன்றி.

கனல் - கனலென்னேவல், நெருப்பு.

கனல்பேதி - ஸஹஸ்ரபேதி.

கனவட்டம் - குதிரை, பாண்டியன்குதிரை.

கனவிரதம் - நீர்.

கனவு, கனா - கனா, சொப்பனம், மயக்கம்.

கனறல் - கடுப்பு, கனற்றுதல், சினக்குறிப்பு.

கனற்கூர்மை - வளையலுப்பு.

கனற்சிலே - மந்தாரச்சிலே.

கனற்றல் - எரிதல், சுடல்.

கனத்தம்பம் - கலைஞான மறுபத்து நான்கிலொன்று.

கனனம் - புதைத்தல்.

கனி - கனியென்னேவல், தித்திப்பு, பழம், பொன்முதலியவும், இரத்தினங்களும் பிறக்குமிடம்.

கனிட்டம் - அழகு, கடைவிரல், சிறுமை.

கனிட்டர் - கீழ்மக்கள், பின்பிறந்தோர்.

கனிட்டன் - தம்பி.

கனிட்டிகை - கடைவிரல்.

கனிட்டை - கடைவிரல், பின்பிறந்தாள்.

கனிதல் - இரங்கல், உருகல், கரைதல், சினக்குறிப்பு, நைதல், பழுத்தல், புதைத்தல், பெருங்கோபம், மனங்களித்தல்.

கனித்திரம் - மண்வெட்டி.

கனிவு - அன்பு, இரங்குகை, கனிதல், முதிர்வு.

கனை - ஒலி, கனையென்னேவல், செறிவு, நிறைவு, நெருக்கம்.

கனைத்தல், கனைப்பு - ஆரவாரம், ஒலித்தல், குதிரைமுதலியவனுமானித்தல், கொக்கரித்தல், சிரித்தல்.

கஜ்ஞைபலம் - ஆலாங்கட்டி.

கன் - கல்,சிறுதராசுத்தட்டு, கன்ஞர்தொழில்.

கன்மகாண்டம் - கன்மவிதிவிருத்தி சொல்லும் நூல்.

கன்மம் - இருவினை, செய்தொழில், தீவினை, பிராரப்தகர்மம், பாவம்.

கன்மி - பாவி.

கன்றல்-இரங்கல், கடுப்பு, சினக்குறிப்பு, நைதல், பதனழிதல்.

கன்று - அற்பம், இளமரம், கன்றென்னேவல் கைவளை, எருமை, ஒட்டை, கடமை, கவரி, காட்டா, குதிரை, பசு, மான், யானையிவற்றின்குட்டி.

கன்றுதல் - இரங்கல், நைதல், பதனழிவு, விசனப்படல்.

கன்றுபுக்கான் - ஓர் பூடு.

கன்னகம் - கன்னக்கோல்.

கன்னடகவுளம் - ஓரிராகம்.

கன்னடம் - ஓரிராகம்,ஓர்தேசம், கன்னடபாஷை.

கன்னடர் - ஓர் ஜாதியர்.

கன்னத்தட்டு - தராசுதட்டு.

கன்னபாகம் - காது.

கன்னபூரம் - காதணியினென்று, காது.

கன்னப்பூ - காதணி.

கன்னமதம் - யானை மும்மதத்தினென்று.

கன்னமூலம் - காதினடி, காது.

கன்னம் - அருகு, அக்ஷகன்னம், கதுப்பு,கன்னக்கோல், காது, தராசுத்தட்டு, நரம்பு, பொற்கொல்லன், யானைச்செவி.

கன்னல் - கரகம், கரும்பு, சருக்கரை, நாழிகை.

கன்னவேதம் } காதுகுத்தல்.
கன்னவேதை }

கன்னற்கட்டி - கற்கண்டு.

கன்னன் - அங்கராசன், இடையெழுவள்ளலிலொருவன்.

கன்னுடம் - ஓர்தேசம்.

கன்னுதம் - அன்னபேதி.

கன்னுர் - ஓர் சாதி, ஓர்மருந்து.

கன்னுவதம்ஸம்-காதணிவகுப்பு.

கன்னி - அத்தநாள், அழிவில்லாள், அழிவின்மை, இளமை, ஓராறு, ஓரிராசி, கற்புக்கெடாமை, கற்றாழை, காக்கணஞ்செடி, காவிளை, குமரி, தவப்பெண், துர்க்கை, தெய்வப்பெண், பார்வதி, பெண்.

கன்னிகாதானம் - கன்னியை மணமுடித்துக் கொடுத்தல்.

கன்னிகாரம் - கோங்கு.

கன்னிகை - கன்னிமைப்பழிவில்லான், தாமரைக்கொட்டை, பூவரும்பு.

கன்னியாகுமரி - ஓராறு.

கன்னிறம் - ஓர்செடி.

கன்னுவர் - கன்னர்.

கன்னுறுகம் - சிறுகீரை.

கன்னெஞ்சன் - வன்னெஞ்சன்.

கன்னெஞ்சி - அவுரி, வன்னெஞ்சி.

கன்னே - கட்சி, பக்கம்.

கன்னேக்கோல் - நெய்வார்கருவியினென்று.

## கா

கா - அசைச்சொல், ஓரெழுத்து, காத்தல், காவடி, காவென்னேவல், சோலை, துலை, பூந்தோட்டம், வருத்தம், வலி.

காகச்சிலை - கருமுகிற்சிலை.

காகச்சுக்கான் - கருஞ்சுக்கான்.

காகதாளியம் - ஓர்வகை நியாயம்.

காகதுண்டம் - அகில்.

காகதேரி - மணித்தக்காளி.

காகத்துரத்தி - ஆதொண்டை.

காகத்துவசத்தாள் - மூதேவி.

காகநதி - காவிரிப்பூம்பட்டினம், காவேரி.

காகநிமிளை - கருநிமிளை.

காகபக்ஷம் - சிறுகுடுமி, பக்கக்குடுமி.

காகபதம் - ஓர்கால அளவு, அஃது - குருஇரண்டு கொண்டது.

காகபீலி - குன்றிச்செடி.

காகப்புள்-அவிட்டநாள், காக்கை.

காகம் - அவிட்டம், காக்கை, கீரி, வடகீழ்திசைப் பாலன், குறி, வைப்புப் பாஷாண முப்பத்திரண்டினென்று.

காகயவம் - பதர்.

காகவாகனன் - சனி.

காகளம் - எக்காளம், ஓர்வாச்சியம், புள்ளோசை.

காகித்தம் } குறிஞ்சா.
காகித்திரம் }

காகுத்தன் - இராமன்.

காகுராசி - புடோல்.

காகுளி - ஆசனம், இசை, தவிசு, மந்தவிசை, மிடற்றெழுமோசை, மெத்தை.

காகூவெனல் - ஒலிக்குறிப்பு.

காகோடகி - வாலுளுவை.

காகோடி - எட்டிமரம்.

காகோடியர் - கூத்தர்.

காகோதரம் - பாம்பு.

காகோலம் - அண்டங்காக்கை.

காகோலி - அசோகமரம், கொடியரசு, தேட்கொடுக்கி.

காக்கணம் - கருவிளை.

காக்கம் - காச்சுரட்டை, கோவைச்செடி.

காக்காய் } அவிட்டம், காகம்.
காக்கை }

காக்காய்க்கொல்லி - ஓர்செடி, ஓர்விதை.

காக்காய்ப்பூ - ஓர் பூடு.

காக்காய்மூக்கு - கருமுகிற்பாஷாணம்.

காக்குரட்டை - காக்கணஞ்சசெடி கொவ்வை.

காக்கைக்கொடியாள் - மூதேவி.

காக்கைபாடினியம் - ஓர் யாப்பிலக்கணம்.

காங்கேயம் - ஓர் தேசம், பொன்.

காங்கேயன் - கங்கைமைந்தன், குமரன், பீஷ்மன்.

காங்கையன் - வைப்பு நீலப்பாஷாணம்.

காசசுவாசம் - ஓர் நோய்.

காசம் - ஓர்தேசம், ஓர் நோய், கோழை, பொன், கற்பாஷாணம்.

காசறை - கஸ்தூரிமிருகம், மணி, மயிர்ச்சாந்து.

காசனம் - கொலை.

காசனன் - கொலைசெய்வோன்.

காசா - எருமை, காயாசெடி, நாணல்.

காசாம்பூவண்ணன் - கச்சோலம், காய்ச்சற்பாஷாணம், துருசு, விஷ்ணு.

காசி - ஓர் நகரம், சீரகம்.

காசிகாண்டம் - ஸ்கந்தபுராணத்தின் ஒரு பகுதி.

காசிக்கல் - காகச்சிலை.

காசிச்சாரம் - ஒருப்பு.

காசித்தும்பை - பேய்த்தும்பை.

காசிபம் - தருமநூல்பதினெட்டினொன்று.

காசிபன் - ஓர் ரிஷி.

காசிரம் - வட்டம்.

காசிரோத்தம் - ஆடு தின்னாப்பாலை, வறட்சுண்டி.

காசிலவணம் - காசிச்சாரம்.

காசினி - பூமி.

காசு - ஒரு வாய்ப்பாடு, காசுக்கட்டி, குற்றம், கோழை, நாணயம், மணிப்பொது, மாதரணிவடம், பொன், வெண்பாவிறுதிச்சீரொன்று.

காசுமீரம்-ஓர்தேசம், குங்குமப்பூ.

காசை - காயா, நாணற்புல், க்ஷய ரோகம்.

காச்சுரை - புளிச்சுக்கீரை.

காஞ்சம் - நீலாஞ்சனக்கல்.

காஞ்சனம் - புன்கமரம், பொன்.

காஞ்சனி - மஞ்சள்.

காஞ்சி - எண்கோவை மணி, ஓரூர், ஓர்பண், ஓர்மரம், இரண்டு முன்னெ திருன்றுஞ் சேவகர்க்குமாலை, நிலையின்மை.

காஞ்சியம் - வெண்கலம்.

காஞ்சிரம் } எட்டிமரம்.
காஞ்சிரை }

காஞ்சிமாலை - ஓர் பிரபந்தம்.

காஞ்சினி - மஞ்சிட்டி.

காஞ்சுகம் } சட்டை.
காஞ்சுகி }

காஞ்சொறி - ஓர் செடி.

காஷாயம் - ஓர்மருந்து, காவிச் சீலை.

காடகம் - சீலை.

காடன் - ஓர்மீன்.

காடாக்கினி - பெருநெருப்பு.

காடாந்தகாரம் - பேரிருள்.

காடாற்றல் - ஈமக் கிரியையி னொன்று.

காடி - ஊறுகாய், கஞ்சி, கள், காடி, நெய், புளித்தநீர், மூளை.

காடிகம் - சீலை.

காடிக்காரம் - ஆயக்கல், நெருப் புக்சல்.

காடினியம் - மிருகடினம்.

காடு - ஆரணியம், இடம், ஊர், எல்லை, சுடுகாடு, செத்தை, தொழிற்பெயர்விகுதி, நெருக் கம், பரணி, மிகுதி, வனம்.

காடுகொள் - மூதணங்கு.

காடுபடுதிரவியம் - காட்டில் விளையுந்திரவியம், அஃது - அரக்கு, கருந்தினை, தேன், நாவி, மயிற்பீலி.

காடுவாழ்சாதி - சரீரத்தைப் பேணாது திரிவோர்.

காடுவாழ்த்து - வனதேவதையை வாழ்த்தும் பிரபந்தம்.

காடை - ஓர்புள்.

காட்சி - அறிவு, அற்புதம், ஓா ளவை, காண்டல், தோற்றம், பார்வை, பிரத்தியட்சப் பிர மாணம், விரகாவஸ்தைக் காட்சி.

காட்சிப்பொருள் - உருவப்பொ ருள், காணப்படுபொருள்.

காட்சியணி - ஓரலங்காரம்.

காட்டகத்தி - வீழி.

காட்டம் - விறகு, வெண்கலம்.

காட்டல் - காண்பித்தல்.

காட்டழல் - காட்டுத்தீ.

காட்டா } காட்டுப்பசு.
காட்டான் }

காட்டிக்கொடுத்தல் - குற்றத்தி லேற்படுதல், சுட்டிக்காட்டல்.

காட்டு - உதாரணம், காண்பித் தல், காட்டெனேவல்.

காட்டுமூரி - நாகரவண்டு.

காட்டுதல் - அத்தாட்சிபண்ணு தல், உரூபித்தல், காண்பித் தல், நினைப்பூட்டுதல், வெளிப் படுத்துதல்.

காட்டுரை - உதாஹரணம்.

காட்டை - எல்லை, காலநுட்பம், காலம், திசை, நுனி.

காணம் - ஓரளவு, கொள், செக்கு, பொற்காசு, பொன்.

காணல் - உண்டாதல், குறித்தல், நினைத்தல், வணங்கல்.

காணுர் - பகைவர்.

காணி - உரிமை, ஒரெண், நிலம், பொன்னுங்காணி, மனைஇரு பத்து நான்குகொண்ட ஓர்நில வளவு.

காணுதல் - அறிதல், காண்டல், சந்தித்தல், செய்தல், நினைக் குதல், பெறுதல், வணங்கல்.

காண் - ஓரிடைச்சொல்.

காண்டகம் - ஊர், காடு, கெண் டிகை, சரகாண்டபாஷாணம், நிலவேம்பு, நோய்.

காண்டம் - அதிகாரம், அம்பு, ஆபரணச்செப்பு, ஆயுதம், எல்லை, கமண்டலம், காடு, காண்டம், குதிரை, கோல், சமயம், சீலை, திரட்சி, திரைச் சீலை, நீர், படைக்கலம், மலை, முடிவு, வாச்சியம்.

காண்டல் - காணுதல், தோற்று தல், பெறுதல், வணங்கல்.

காண்டவம் } இந்திரன்
காண்டவனம் } வசித்த வனம்.

காண்டிகை - சுருக்கமான உரை, அஃது - கருத்துபதப்பொ ருள் உதாரணமென்னு முன் ரூடுவருமுறை.

காண்டிபம் - அருச்சுனன்வில், சரகாண்டபாஷாணம்.

காண்டில் - இரசதபாஷாணம்.

காண்டீபம் - அருச்சுனன்வில், தனுவிராசி, வில்.

காண்டீபன் } அர்ச்சுனன்.
காண்டீவன் }

காண்டு - கூப்பிடுதூரம்.

காதகம் - கொலை, பிறரைப்பீடித் தல்.

காதகன் - கொலையாளி.

காதணி - குண்டலம்.

காதம் - கள், காவதம், கொலை, நாலுகூப்பிடுகொண்ட தூரம், நாற்சதுரத்துரவு.

காதம்பம் - அன்னப்புள், கல ஹம்ஸம், காணுங்கோழி.

காதரம் - அச்சம், அமைவு, சாது, தீவினைத்தொடர்பு, விருப்பம்.

காதரன் - அச்சமுள்ளோன்.

காதலன் - அன்பன், சிநேகிதன், தலைவன், தோழன், மகன்.

காதலி - தோழி, மகள், மனைவி.

காதலித்தல் - ஆசைப்பெருக்கம்.

காதலித்தோர் - ஆசையுற்றோர், சிநேகிதர்.

காதல் - அன்பு, ஆசை, ஆந்தை, கெளளி முதலியவைகளின் ஒலி, ஓர்பிரபந்தம், கொலை, மகன்.

காதவம் - ஆலமரம், வான்கோழி.

காதன் - கொலையாளன்.

காதன்மை-அன்புடைமை. உருக்கம்.

காதாங்கி - பாற்சோற்றி.

காதி - ஓரரசன், ஓர்வகைக் கர்மம், மிருதபாஷாணம், விச்வாமித்ரன்தகப்பன்.

காதிதம் - ஓரெண்ணை அவ்வெண்ணால் மீண்டும் மீண்டும் பெருக்கவரும் குணிதம்.

காதிமைந்தன் -விசுவாமித்திரன்.

காதிவென்றோன் - அருகன்.

காது - காது, காதென்னேவல், கொலை.

காதுதல் - கூறுசெய்தல், கொல்லல், தறித்தல், முறித்தல்.

காதை - கதை, கொலை, சொல், சொல்லல்.

காதைகரப்பு - மிறைக்கவியினொன்று.

காத்தல் - அரசாளுதல், அளித்தல், காப்பாற்றுதல், காவல், பாதுகாத்தல்.

காத்தியாயனம் - தருமநூல் பதினெட்டினொன்று, உபநிஷதங்களிலொன்று.

காத்தியாயனர் - ஓர் முனிவர், வரருசி.

காத்தியாயனி - துர்க்கை.

காத்திரம் - உடல், உறுப்பு, கனம், கிரி, கூத்து, கோபம், சினம், பருமம், முக்கியம், யானையின் முன்கால்.

காத்திரவேயம் - பாம்பு.

காத்திரி - கிரி, படைக்கலம்.

காத்திரை - ஆயுதம்.

காந்தம் - அழகு, ஊசிக்காந்தம், பதினெண்புராணத்தொன்று, வைதர்பநெறியினொன்று.

காந்தருவம் - எண்வகை மணத்தினொன்று.

காந்தருவர் - கந்தருவர்.

காந்தருவவாதம் - கலைஞான மருபத்து நான்கினொன்று.

காந்தருவவேதம் - கானசாஸ்திரம்.

காந்தல் - உட்டணித்தல், உமி, ஓலை முதலியவற்றின்காந்தல், சினக்குறிப்பு, பல்லினாற்காந்துதல், முதிரக்காய்ந்தது.

காந்தள் - கார்த்திகைப்பூ, குறிஞ்சிப்புறம், சவர்க்காரம்.

காந்தன் - அரசன், எப்பொருட்குமிறைவன், கணவன், தலைவன்.

காந்தாரம் - இசை, இசைப்பாட்டு, ஓர்தேசம், ஓர்பண், காடு, குறிஞ்சியாழ்த்திறம்.

காந்தாரபஞ்சமம் - பாலைப் பண்ணின்றிர வைமந்தனுளொன்று.

காந்தாரி - தசநாடியிலொன்று, ஓர் பண், சத்திசாரம், சிவனார்வேம்பு, துரியோதன்தாய்.

காந்தாரிமைந்தன் - துரியோதனன்.

காந்தி - அழகு, உஷ்ணம், ஒளி, காவிக்கல், கிரணம், சிலா, சத்து, வைடூரியம்.

காந்தியதிகமேனி - காவிக்கல்.

காந்தியோனி - சிலாமதம்.

காந்துகம் - வெண்காந்தள்.

காந்துதல் - பிரகாசித்தல்.

காந்தை - பெண், மனைவி.

காபாலம் - சிவன்கூத்து, கொடுகொட்டி.

காபாலன்
காபாலி } சிவன்.

காபாலிகம் - வைசவசமயத்திலொன்று.

காபி - ஓரிராகம்.

காபிலகாலயூபம் - சிற்பநூன்முப்பத்திரண்டிலொன்று.

காபினி - நவச்சாரம்.

காப்பரிசி - அட்சதை.

காப்பியம் - காவியம்.

காப்பியன் - சுக்கிரன்.

காப்பு - ஆடை, கதவு, காவல், திருநீறு, மதில், ரக்ஷாபந்தனம், நூலிற்றெய்வ வணக்கச் செய்யுள்.

காப்புமாலை - ஓர் பிரபந்தம்.

காமகமனம் - காமத்தின் வழிநடத்தல்.

காமகலிதம் - வீரியம் பாய்தல்.

காமக்கவலை - காமநோய்.

காமக்கிழத்தி - குலப்பரத்தை.

காமக்கோட்டம் - குறம்பர் சோட்டத்தொன்று.

காமக்கோட்டி
காமகோடி
காமக்கோட்டத்தி } பார்வதி.

காமதகனன் - சிவன்.

காமதேனு - தெய்வப்பசு.

காமத்துப்பால் - அகப்பொருட்பால்.

காமத்துரோகி - காமங்கடிந்தோன்.

காமத்துப்பாலோர் - தூர்த்தர்.

காமநாசன் - சிவன்.

காமநூல் - மதனசாஸ்திரம்.

காமநோய் - மதனநோய்.

காமபாலன் - பலபத்திரன்.

காமப்பற்று - மனத்தீக்குணம் மூன்றிலொன்று.

காமப்பூ - மதனகாமியப்பூ.

காமமரம் - ஓர் மரம்.

காமமிகுபோகம் - விழைவுநர் ஆர்த்தர்.

காமம் - அன்பு, ஆசை, இந்திரியம், உட்பகையாறினொன்று, ஊர், காமநோய், குடி, சடத்தீயினொன்று, தாமத குணத்தொன்று, பனை, மதனம், முக்குற்றத்தொன்று, விகாரமெட்டினொன்று, வீரியம்.

காமரசி - நெருஞ்சில்.

காமரம் - அகில், அடுப்பு, அத்தநாள், ஆலமரம், இசை, இசைப்பொது, சோலை, வண்டு.

காமரி - புளிநறளை.

காமரீசம் - புல்லூரி.

காமரூபி - பச்சோந்தி, விரும்புமுருவெடுக்கவல்லவன்.

காமர் - அலங்காரம், அழகு, ஆசை, ஒளி, பேரழகு.

காமலீலை - மதனலீலை.

காமவல்லி - கற்பகத்தருவிற் படர்கொடி.

காமற்காய்ந்தோன் - அரன், அருகன்.

காமனுள் - இளவெனில்.

காமன் - திப்பிலி, மன்மதன், வண்டு.

காமன்பண்டிகை - மன்மதோற்சவம்.

காமன்மைத்துனன் - விநாயகன்.

காமாக்கினி - காமத்தீ.

காமாக்ஷி - பார்வதி.

காமாதுரன் - காமி.

காமாந்தகன் - சிவன், காமமிக்குடையோன்.

காமாரி - சிவன்.

காமி - உவர்மண், காமாதுரன், பொன்னிமிளை.

காமிகம் - சைவாகமத்தொன்று.

காமித்தல் - இச்சித்தல், மோகமுறல், விரும்பல்.

காமியகன்மம் - பயனுடிச்செய்யுஞ்செயல்.

காமியக்கல் - சோமேதகம்.

காமியமலம் - மும்மலத்தொன்று.

காமியம் - இச்சிக்கும்பொருள், ஒன்றை வேண்டிச் செய்யும் பூசை, கான்மிகம், வில்.

காமியன் - காமி.

காமுகர் - ஆர்த்தர், நகரப்பதி வாழ்நர், நாகரீகர்.

காமுருகி - ஓந்தி.

காமுறல் - ஆசைப்படல், மோகமுறல், விரும்பல்.

காம்பி - இறைகூடை, சலசூத்திரம்.

காம்பிலி - ஓர் தேசம்.

காம்பீரம், காம்பீர்யம் - ஆழம், கம்பீரம், முக்கியம்.

காம்பு - இலை முதலியவற்றின் காம்பு, கருவிகளின் காம்பு, கைப்பிடி, பட்டுச்சீலை, பூசணி, பூந்தாள், மரக்கொம்பு, மலர்த் தாள், மூங்கில்.

காம்போசம் - ஓர் தேசம், பதி னெண்பாஷையிலொன்று.

காம்போதி - ஓர் பண்.

காயகம் - காமப்பிராந்தி, பாடுகை, மருட்டுவித்தை.

காயகர் - பாடுவோர்.

காயகற்பம் - சரீரத்தைப் பலப் பிக்கு மருந்து.

காயகன் - பாடுவோன், மயக்கு வோன்.

காயசித்தி - அணிமா முதலிய சித்தி, சரீரத்தை நெடுகாளி ருக்கச்செய்யுஞ்சித்தி.

காயசித்திக்கடியான் - காந்தம்.

காயசித்திசுண்ணம் - கருப்பூர சிலாசத்து.

காயசித்தியானோன் - சூதபாஷா ணம்.

காயசித்தியுப்பு - அமரியுப்பு.

காயத்திரி - அயன்மனைவிகளி லொருத்தி, ஓர்மந்திரவிசே ஷம், கருங்காலி, ஸரஸ்வதி.

காயத்தையிருத்தி - பூவழலை.

காயத்தையுருக்கி - அஸ்திபேதி.

காயம் - ஆகாயம், உடல், ஓர் குழம்பு, கடுகு, கார்ப்பு, கோ பம், சுக்கு, தழும்பு, பெருங் காயம், மிளகு, வெண்காயம்.

காயல் - உப்பளம், கழி, கழி முகம், காய்தல்.

காயா - ஓர்மரம்.

காயாம்புமேனியன் - விஷ்ணு.

காய் - இளங்கனி, கழலைக்கட்டி, காயென்னேவல், காய், சூது காய்.

காய்தல் - உலர்தல், எரிதல், கோபம், சினம், சினக்குறிப்பு, பிரகாசித்தல், புண்ணாறுதல், மெலிதல், வெட்டல், வெறுத் தல்.

காய்த்தல் - மரமுதலிய காய்த் தல்.

காய்ப்பு - காய்த்தல், தடிப்பு, தழும்பு, பழுதானஇரும்பு, வெறுப்பு.

காரகம் - கருவி, காரணத்து வம், செயல், வினைகொண்டு முடிவது, வினைமுதல், வெப் பம்.

காரகவத்திணை - கருவி, காலம், செயல், செய்பவன், செய்பொ ருள் பிறவும் வரக்காட்டல், நிலம்.

காரகவேது - உருவப்பொருளில் ஆறு வேற்றுமைகளையுந் தந்து அவற்றவற்றின் முடிக்குஞ் சொல்லொடு முடித்தல்.

காரகன் - செய்பவன்.

காரக்கல் - பட்ட விடத்தைக் கருக்குமோர்கல், விஷக்கல்.

காரணக்குறி - காரணப்பெயர், ஒரு நிமித்தம்பற்றிவரும், இடு குறி, முற்குறி.

காரணகேவலம் - காரணுவஸ் தை மூன்றிலொன்று.

காரணசகலம் - காரணுவஸ்தை மூன்றிலொன்று.

காரணசக்தி - எவட்சாரம்.

காரணசரீரம் - சரீரத்திரயத் தொன்று.

காரணசுத்தம் - காரணுவஸ்தை மூன்றினென்று.

காரணச்சிறப்புப்பெயர் - ஒன்றற் குரிய காரணப்பெயர்.

காரணச்சொல் - கதை.

காரணப்பெயர் - யாதாயினு மோர் காரணம்பற்றிபொருள் களையுணர்த்தி நிற்கும் பெயர்.

காரணப்பொதுப்பெயர் - பல வற்றிற்குரிய காரணப்பெயர்.

காரணப்பொருள் - எதுப்பொ ருள்.

காரணமாயை - அகிலத்திற்கும் வித்தாம் மாயை.

காரணம் - ஏது, காரணச்சொல், கருத்தாமுதற் பல காரணம், கருவி, சிவாகம மிருபத்தெட் டினென்று, நிமித்தம், நோக் கம், பிரதானம், மூலம்.

காரணவகத்திணை - ஒன்றன் காரணத்தை விளக்கிக் காட்டல்.

காரணவனு - மூலவனு.

காரணவாகுபெயர் - காரணத் தின் பெயர் காரியத்திற்கு வழங்குவது.

காரணவிடுகுறி - ஒருகாற் கார ணப்பெயராகவு மொருகாலிடு குறிப்பெயராகவுமிருப்பது.

காரணவிலக்கணை - காரணத் தைக் காரியமாயுபசரித்தல்.

காரணவிலக்கு - ஓரலங்காரம்.

காரணன் - அரசன், கடவுள், நிமித்தன், மிருதபாஷாணம்.

காரணுவத்தை - கேவலம், சக லம், சுத்தம், என்னு மூன்ற வத்தை.

காரணி - பார்வதி.

காரண்டம், காரண்டவம் - நீர்க்காக்கை.

காரம் - எழுத்தின்சாரியை, காத் தல், காரியம், கார்ப்புப்பு, சாம் பலுப்பு, பொன், மரவயிரம்.

காரர் - அச்சமுள்ளோர், செய் வோர்.

காரவல்லி - பாகல்.

காரா - எருமை.

காராகிருகம் - சிறைச்சாலை.

காராடு - வெள்ளாடு.

காராமயம் - சிறைச்சாலைத்துன்பம்.

காராம்பி - இறைகூடை, சலசூத்திரம்.

காராளர் - சூத்திரர், பூவைசியர்.

காரானை - நீர்படியும் மேகம், யானை.

காரான் - எருமை.

காரி - ஆவிரை, இத்திரன், ஐயனார், கடையெழு வள்ளலிலொருவன், கண்டங்கத்தரி, காரிக்குருவி, கருமை, களர்நிலம், கள், காக்கை, கிளி, சனி, நஞ்சு, வயிரவன், வினைசெய்யிடம், வெண்காரம்.

காரிகம் - காவிக்கல், பாதை.

காரிகை - அழகு, ஓர்யாப்புநூல், ஓராரியச் செய்யுள், கலித்துறை, பெண்.

காரிக்கூன் - ஓர் காளான்.

காரிதாய் - வடுகி.

காரிப்பிள்ளை - கரிக்குருவி.

காரிமை - கொடிவேலி.

காரியப்படுத்தல் - சம்பவித்தல், தொழிற்படல், தோற்றப்படல்.

காரியம் - இலாபம், எச்சம், கருமம், கவ்வை, செய்கை, தொழில், பயன், மூலம், வழக்கு, விஷயம்.

காரியவிலக்கணை - காரியத்தைக் காரணமாயுபசரித்தல்.

காரியவிலக்கு - காரியத்தை மறுத்துக்கூறுவது.

காரிரத்தம் - ஆடுதின்னைப்பாலை.

காரு - செய்வோன்.

காருகபத்தியம் - வேதாக்னி மூன்றினொன்று.

காருகம் - அக்கினிதேவனை, வணங்கும் சமயம், கைங்கரியம், நெய்தொழில்.

காருகவினை - சூத்திரரறுதொழிலினொன்று

காருகர் - ஓவியர், நெய்வோர்.

காருகன் - நெய்பவன்.

காருசம் - காரெள், நுரை, புற்று.

காருச்சிவல் - கடற்பாசி.

காருடம் - உபநிஷதங்களிலொன்று, மருக்காரை, கறிப்புடோல், கலைஞானமறுபத்துநான்கினொன்று, பதினெண்புராணத்தொன்று.

காருணி - வானம்பாடி.

காருணிகன், காருணியன் - கிருபையுடையோன், பிதிருதேவதைகளிலொருவன்.

காருணியம் - கிருபை.

காருப்பு - கடுந்திலாலவணம், மரவுப்பு.

காருகம் - கருங்குரங்கு.

காரெலி - கறுப்பெலி.

காரை - ஓர்செடி, ஓர்மீன்.

காரைக்காலம்மை - ஓர் தவப்பெண்.

காரோடர் - உரைகாரர்.

கார் - ஆவணி புரட்டாசியின் பருவம், இருள், கருங்குரங்கு, கருமை, காரென்னேவல், கார்நெல், நீர், மேகம், வெள்ளாடு.

கார்கோளி } கடல்.
கார்கோள் }

கார்க்காய் - சந்திரகாகம்.

கார்க்கறட்டை - நீலக்காக்கணம்.

கார்க்கோடகன் - அட்டநாகத்தொன்று, கருடக்கல், துவ்ஷ்டன்.

கார்க்கோழி - கருங்கொள், கருஞ்சீரகம்.

கார்த்தம் - கழுதை.

கார்த்தல் - உப்புக்கரித்தல், காழ்த்தல்.

கார்த்தவீரியன் - அறுவகைச்சக்கரவர்த்திகளிலொருவன்.

கார்த்திகேயன் - முருகன்.

கார்த்திகை - ஓர் நக்ஷத்திரம், ஓர்மாதம், துர்க்கை.

கார்நாற்பது - ஓர் செய்யுள்.

கார்ப்பான் - கையாந்தகரை.

கார்புகாவரிசி } ஓர் மருந்து விதை.
கார்ப்போவரிசி }

கார்ப்பணியம் - உலோபம், தரித்திரம், மனத்தளர்வு, வறுமை.

கார்ப்பாசம் - பருத்தி, பருத்திப்பஞ்சு.

கார்ப்பு - உறைப்பு, கரிப்பு, காழ்ப்பு, துவர்ப்பு.

கார்மணி - கார்ப்பான்.

கார்மலி - கடல்.

கார்முகம் - மூங்கில், மேகம், வில்.

கார்வண்ணர் - அசுரர்.

கார்வண்ணன் - விஷ்ணு.

கார்வலயம் - கடல்.

காலகம் - சேங்கொட்டை.

காலகாலன் - சிவன்.

காலகூடம் - காளகூடம், விஷம்.

காலங்கரந்தபெயரெச்சம் - வினைத்தொகை.

காலசந்தி - நித்தியகருமம்.

காலசம் - காற்று, பேராலவட்டம்.

காலசூத்திரம் - ஓர் நரகம்.

காலடி - உள்ளங்கால், ஓர் ஸ்தலம், பரடு.

காலணி - பாதசதங்கை.

காலதண்டம் - நமனுயுதம், மரணம்.

காலத்திரயம் - முக்காலம்.

காலநியமம் - காலக்கடன்.

காலநேமி - ஓரஸுரன்.

காலபரிச்சேதம் - காலத்தின் நுண்ணிய அளவு.

காலபரிபாகம் - காலத்தினுற்பரி பக்குவ மடைதல்.

காலப்பெயர்ப்பகுபதம் - காலத் தால் வரும் பெயர்ப்பகுபதம்.

காலம் - காலத்தால் வருபெயர், சமயம், தாளப்பிரமாணம் பத்தினென்று, பருவம், பொழுது, முடிவு, யுகம், வித்தியா தத்துவமேழினென்று, விடியல்.

காலமயக்கம் - காலவழு.

காலமூன்று - இறந்த காலம், எதிர் காலம், நிகழ் காலம்.

காலயுக்தி - ஓர் வருஷம்.

காலல் - கொப்பளித்தல், சர்த்தி பண்ணுதல்.

காலவகை - காலக்கூறுபாடு, கால வேறுபாடு.

காலவம் - நெருப்பு.

காலவழு - காலமயக்கம்.

காலவாகுபெயர் - காலத்தால் வருமாகுபெயர்.

காலவிடநிலை - காலங்காட்டு மிடைநிலை.

காலவைரவர் - சங்காரவைரவர்.

காலன் - கறந்துறை கோளி னென்று, காந்த பாஷாணம், சனி, நமன், நமனேவலன், நீலபாஷாணம்.

காலா - ஓர்மீன்.

காலாக்கினி - ஊழித்தீ.

காலாந்தகன் - சிவன், துஷ்டன்.

காலாயுதம் - கோழி, சேவல்.

காலாழ் - குழைசேறு.

காலாள் - கால் நடைக்காரன், நால்வகைத் தானையினென்று, பதாதி.

காலி - கழிவுநாள், கள், காட்டு முருக்கு, பசுக்கூட்டம், பூனைக் காலி.

காலியம் - விடியல்.

காலிலி - அருணன், காற்று, பாம்பு, மீன்.

காலுதல் - கக்குதல், காலல், பொழுதல், வடிதல், விடல்.

காலூரம் - தவளை.

காலேகம் - நால்வகைச்சாந்து.

காலேயம் - அகில், கஸ்தூரிமஞ்சள், கள், பசுக்கூட்டம், மோர்.

காலை - அடைப்பு, ஓர்மீன், சமயம், தொழுவம், பொழுது, விடியற்காலம்.

காலோசிதம் - உசிதகால், உத்தம காலம்

காலோல்ம் - அண்டங்காக்கை.

கால் - அடிப்பக்கம், அளவு, இருள், ஏழனுறுப்பு, காலன், கால், காற்று, குறுந்தறி, கையூன்றுகோல், தூண், தேருருள், பாதம், பூந்தாள், பொழுது, மகன், மரக்கால், மூளை, வலி, வழி, வாய்க்கால்.

கால்செய்வட்டம் - விசிறி.

கால்வாய் - வாய்க்கால்.

காவகா - சேங்கொட்டை.

காவணம் - பந்தல்.

காவதம் - காதம்.

காவலர் - அரசர், புருஷர்.

காவலன் - அரசன், தலைவன், மெய்க்காப்பாளன்.

காவல் - அரண், சாத்தல், சிறைச்சாலை, புருடன், மதில்.

காவற்கடவுள் - திருமால்.

காவற்கலி - வாழை.

காவன் - சிலந்திப்பூச்சி.

காவி - கருங்குவளை, கருநொச்சி, காவிக்கல், செம்மண், மிதப்பு.

காவிதி - காவிதியர், கணக்கன், மந்திரி.

காவியம் - காப்பியம்.

காவிரி - காவேரி.

காவிளாய் } காய்வேளை,
காவிளை } கொளிஞ்சி.

காவுதல் - சுமத்தல், தோட்சுமையெடுத்தல்.

காவுவோர் - பல்லாக்குச்சுமப்போர்.

காழகம் - ஆடை, கடாரமென்னுமூர், கருமை, சோறு.

காழி - ஓர்தேவதை, சீகாழி.

காழியர் - அப்பவாணிகர், வண்ணார்.

காழியர்கோன் - சம்பந்தர்.

காழூன்றுகடிகை - குத்துக்கோல்.

காழ் - இரும்பிலி, ஒளி, காழென்னேவல், குற்றம், பருக்கைக்கல், பளிங்கு, மணிவடம், வயிரம், விதை.

காழ்த்தல் - கார்த்தல், வயிரித்தல்.

காழ்ப்பு - காரம், மரவயிரம், வயிரம்.

காளகண்டன் - சிவன்.

காளகந்தரி - பார்வதி.

காளகம் - எக்காளம், மருக்காரை.

காளகூடம் - நஞ்சு.

காளபதம் - மாடப்புறா.

காளபம் - போர்.

காளமுகி - எழுவகை மேகங்களிலொன்று.

காளமேகம் } ஓர் புலவன்,
காளமேகன் } முகில்.

காளம் - அவுரி, எட்டிமரம், கருமை, கழு, சிறுசின்னம், சூலம், நஞ்சு, மேகம்.

காளவனம் - சுடுகாடு.

காளவாய் - ஓர்விளையாட்டு, கழுதை, சூளை, நீறுசுடுங்கால்வாய், பெறுங்குரல்வாய்.

காளன் - மாகாளன்.

காளராத்திரி - பாம்பின்சுப் பல்லிலொன்று.

காளாமுகம் - உட்சமயமாறி லொன்று, சைவம்.

காளாமுகர் - சைவர்.

காளி - எட்டி, கக்கரி, கரியவள், காளி, சிங்கம், நஞ்சு, பதினெண் புராணத்தொன்று, பரிமளகந்தி, பார்வதி, பாம்பினச்சுப் பல்லிலொன்று.

காளிகம்-மணித்தக்காளி, மேகம்.

காளிக்கம் - பித்தளைமலை.

காளிங்கன் - ஓர் பாம்பு, கலிங்க நாதன்.

காளிதம் - களிம்பு.

காளிதாஸன் - ஓர் புலவன்.

காளிந்தம் - ஏலம்.

காளிந்தி - கண்ணன் மனைவி, ஸகரன்தாய், தேக்கின் விசேஷம், நீர்ப்பசு, யமுனை, வாகை மரம்.

காளிமம் } கறுப்பு.
காளிமை }

காளியன் - ஓர் பாம்பு.

காளினியம் - கத்தரி.

காளை - ஆண்மகன், இளையோன், இளவெருது, எறு, கட்டிளமையோன், பாலைநிலத் தலைவன், வாலிபன்.

காளையங்கம் - போர்.

காறல் - ஓர்சுவை, கார்ப்பானது, காருதல், காறற் கொட்டி.

காறு - அளவு, கொழு.

காறை - கழுத்தணியி லொன்று, நிலச்சாந்து.

காற்குளம் - பூசநாள்.

காற்பாசம் - பருத்தி, பருத்திப் பஞ்சு.

காற்றின்ஸஹாயன் - தீ.

காற்று - அபானவாயு, உயிர்ப்பு, சோதிநாள், வாயு.

காற்றுமுந்துநாள் - விசாகம்.

கானகஅமம் - கற்பாஷாணம்.

கானகநாடன் - குறிஞ்சிநிலத் தலைவன், முல்லை நிலத்தலைவன்.

கானகம் - கருஞ்சீரகம், காடு, கால்நகம், குறிஞ்சிநிலம்.

கானக்குதிரை - காட்டுக்குதிரை, மரை.

கானநாடன் - முல்லைத்தலைவன்.

கானமயில் - காட்டுமயில்.

கானமா - காட்டுப்பன்றி.

கானம் - இசைப்பாட்டு, இராகம், காடு, கீதம், குறிஞ்சி நிலம், சோலை, முல்லைநிலம், வனம், வாசனை, வானம்பாடி.

கானயூகம் - கருங்குரங்கு.

கானல் - உப்பளம், ஒளி, கடற்கரைச்சோலை, கழி, சூரியகிரணம், பேய்த்தேர், வெண்டேர்.

கானல்வரி - இசைப்பா வகையுளொன்று.

கானவர் - குறிஞ்சி நிலமாக்கள், முல்லைநிலமாக்கள், வேடர்.

கானவன் - குரங்கு, வேடன்.

கானவிருத்தம் - பாதிரிமரம்.

கானனம் - காடு.

கானனுசாரி . நன்னரி.

கானிலம்
கானிலிந்திரன் } கொடிவேலி.

கானீனன் - கன்னிகைக்குப்பிறந்தோன், கர்ணன், வியாஸமுனி.

கான் - எழுத்தின்சாரியை, காடு, கானம், கானகம், கான்யாறு, மணம், வனம், வீட்டறை.

கான்மரம் - ஆலமரம்.

கான்மா - பன்றி.

கான்மிகம் - மும்மலத்தொன்று.

கான்முளை - புதல்வன்.

கான்மௌவல் - காட்டுமல்லிகை

கான்யாறு - முல்லைநிலத்தியாறு.

கான்றல் - கக்கல்.

## கி

கி - ஓரெழுத்து.

கிகிணி - காக்கணஞ்செடி, வலியான்.

கிங்கரர் - ஏவல்செய்வோர், ஓர் ஜாதி.

கிங்கிணி - ஓர் மரம் கிலுகிலுப்பைச்செடி, சதங்கை.

கிங்கிரம் - யானையின் மத்தகம், குதிரை, குயில், வண்டு.

கிசம்
கிசலம்
கிசலயம் } தளிர்.
கிசலை
கிசாலம்

கிச்சு - நெருப்பு.

கிஞம் - அறிவு.

கிஞ்சபன்னி - நாயுருவி.

கிஞ்சம் - சிறுமை, புளியமரம்.

கிஞ்சனன்
கின்சன் } தரித்திரன்

கிஞ்சாரு - நெல்முள், பாணம்.

கிஞ்சி - முதலை, வேம்பு.

கிஞ்சிக்ஞனம்
கிஞ்சிஞ்ஞம் } ஆத்துமா, சிற்றறிவு.

கிஞ்சிதம்
கிஞ்சித்து } அற்பம், சிறுமை, புளிமா.

கிஞ்சித்துவம்-சிறுமை, சிற்றறிவு.

கிஞ்சில் - அற்பகாரியம், எளிமை, கீழ்மை, சிறுமை.

கிஞ்சுகம் - கேகயப்புள், சிவப்பு, பலாசு, முண்முருக்கு.

கிஞ்சுமம்
கிஞ்சுமாரம் } முதலை.

கிடக்கை - கிடத்தல், நிலைமை, பூமி, மஞ்சம்.

கிடங்கு - அகழ், குழி, குளம், சிறைச்சாலை, பொக்கிஷம், மறியல் வீடு.

கிடாரம் - கொப்பரை.

கிடாரை - கடாரை.

கிடி - பன்றி, மருட்பன்றி.

கிடுகு - ஓர்பாறை, கேடகம், சட்டப்பலகை, தேரின்மரச்சுற்று.

கிடுபிடி - ஓர் வாச்சியம்.

கிடுமுடி - ஓர்வாச்சியம், சந்தடி.

கிடை - உவமை, கிடை, கிடையென்னேவல், சடை, நிலைமை, படுக்கை, பட்டி, வேதம்பயிலிடம், வேதவொலி.

கிடைத்தல் - அடைதல், எதிர்த்தல், கிட்டுதல், பெறுதல்.

கிட்டம் - இருப்புக்கிட்டம் முதலியன, இறுக்கம், சமீபம், மலம், வண்டல்.

கிட்டார் - பகைவர்.

கிட்டல் - அடுத்தல், இறுக்குதல், எதிர்த்தல்.

கிட்டி - இடுக்குத்தடி, குறும்பொல், கைத்தாளம், சிறுவர் விளையாட்டுக் கருவியிலொன்று, தலையீற்றுப்பசு, நாழிகை வட்டில், நுகக்கிட்டி, வினையெச்சம்.

கிட்டினர் - உறவினர்.

கிஷ்கிந்தை - ஓர் பட்டினம், ஓர் மலை.

கிட்டுதல் - அடுத்தல், அணுகல், உருக்குதல், எதிர்த்தல், கிடைத்தல், நெருங்குதல்.

கிணகர் - அடிமை.

கிணுங்கு - ஓர் பூடு.

கிணி - கைத்தாளம்.

கிணிதம் - வாயுதேவன் வில்.

கிணிதி - கிலுகிலுப்பைச்செடி.

கிணை - மருதப்பறை.

கிண்
கிணீர்
கிணீல் } கிலுங்குமொலி.

கிண்கிணி - சதங்கை,

கிண்டல்-ஆராய்தல், தோண்டல்.

கிண்டுதல் - அகழ்ந்தெடுத்தல், களிசமைத்தல், கிளறுதல், பகையெழுப்பல்.

கிண்ணம் - சிறுவட்டில், நாழிகைவட்டில்.

கிண்ணுரம் - ஓர்வீணை

கிண்ணி - கிண்ணம்.

கிதம் - புருவம்.

கிதவம் - ஊமத்தஞ்செடி.

கிதவன்-சூதாடுவோன், வஞ்சகன்.

கிதி - பத்துலக்ஷங்கோடாகோடி.
கிந்திகம் - திப்பிலிமூலம்.
கிமித்துக்கினம்-புழு, ஓர்கரணம்.
கிம்புரி - தோளணி, பூண், முடியுறுப்பு,யானைக்கொம்பிற்பூண்.
கிம்புருஷம் - கிம்புருஷகண்டம்.
கிம்புருஷர் - கந்தருவர்.
கிம்புருஷன் - கிம்புருஷத்துமுதலரசன்.
கியாதம் - பிரசித்தம்,புகழ்,மேன்மை.
கியாதி - கீர்த்தி, பிருகுவின் மனைவி, புகழ், மேன்மை.
கிரகசாரம் - கிரகநடை.
கிரகணம் - கிரகித்தல், சூரியசந்திரர்களுக்கு இராகு கேதுக்களால் வரும் பீடை, நினைத்தல், பற்றுகை.
கிரகணி - கிராணி.
கிரகத்தன் - இல்லொழுக்கத்திருப்பவன்.
கிருகபதனம் } கிரகநழுவு.
கிருகவிச்சேபம் }
கிருகபதி - சூரியன்.
கிரகம் - தாளப்பிரமாணம் பத்தினொன்று, நவக்கிரகம், வீடு.
கிரகி - ஸம்ஸாரி.
கிரகித்தல் - உணர்ந்து கொள்ளல், உத்தேசித்தல், ஏற்றுக்கொள்ளல், கற்றல், குறிப்பாலறிதல், பற்றுதல், புலனறிதல், வெளவல்.
கிரசேபிரம் - பச்சைக்கற்பூரம்.
கிரஞ்சனம் - முருங்கை.
கிரணமாலி } சூரியன்.
கிரணன் }
கிரணம் - ஒளி, கதிர்.
கிரது - ஆராதனை, காணிக்கை, பலி, யாகம்.
கிரந்திகம் } திப்பிலிமூலம்.
கிரந்திமூலம் }
கிரமம் - ஒழுங்கு, சடங்கு, முறைமை.
கிரமி - ஒழுங்காக நடப்போன், வைதிகமுறைப்படி நடப்போன்.
கிரமுகம் - கமுகு, பாக்கு.
கிரவுஞ்சம் - அன்றில், ஓர்மலை, கோழிப்பறவை யளவு தூரம், ஏழுதீவுகளிலொன்று.
கிராகதி - நிலவேம்பு.
கிராகம் - ஆமை, பற்றுதல்.
கிராசம் - கவளம்.
கிராடம் - ஓர்தேசம்.
கிராணம் - சிறுவட்டில், மூகசு.
கிராணித்திரவியம் - அகிலம் பட்டை, அழிஞ்சில், இந்துப்பு, கருவேம்பு, கல்லுப்பு, கரியுப்பு, காவட்டம்புல், நற்சீரகம், நாய்வேளை, புளியாரை, பெருங்காயம், மிளகு, வசம்பு.
கிராதர் - குறவர், வேடர்.

கிராதன் - குறவன், சிவன், வேடன்.

கிராந்தி - கிரகச்சாய்வு, கிராந்தி மண்டலம்.

கிராமமுற்றோன்-கிராமணி. சான்றோன்.

கிராமம் - குறிச்சி, நீர்வாழ்பறவை, நூறுகுடியூர், மருதநிலத்தூர்.

கிராமியம் - இழிசனர் வழக்கு, கிராமத்திலுள்ளது, திசைச்சொல், நாட்டுச்சொல்.

கிராமியன் - கிராமணி.

கிராவணம் } கல், மலை.
கிராவம் }

கிரி - பன்றி, பிணையாளி, மருட்பன்றி, மலை.

கிரிகன்னி- வெள்ளைக்காக்கணம்.

கிரிசரம் - மலையிற்பிறந்தயானை.

கிரிசன் - சிவன்.

கிரிசை - பார்வதி.

கிரிச்சரம் - ஓர் நோன்பு.

கிரிச்சிரீட்டம் - சாதிக்காய்.

கிரிதசாக்கிரி - ஓர் பண்.

கிரிபயம் - மரப்பொது.

கிரிமல்லிகை - மலைமல்லிகை, வெட்பாலை.

கிரிமா - அட்டயோகத்தொன்று.

கிரியாகாண்டம் - கருமகாண்டம்.

கிரியாசக்தி - மூவகைச்சக்தியி னொன்று.

கிரியாசைவம் - ஓர் சைவம்.

கிரியாதீதன் - கிரியை யொழிந்தவன்.

கிரியாபதம் - வினைச்சொல்.

கிரியாபாதம் - கிரியைநிலை.

கிரியாவுத்திரி - அவுத்திரி தீட்சை யிரண்டினொன்று.

கிரியை - சிவபூசை யியல் பி னொன்று, தாளப்பிரமாணம் பத்தினொன்று, தொழில்.

கிரிவாணம் - நீலாஞ்சனக்கல்.

கிரீசன் - சிவன்.

கிரீடசாம்ராச்சியம் - முடிதாங்குமின்பம்.

கிரீடபங்கம் - முடியிழப்பு.

கிரீடம் - முடி, வேலிப்பருத்தி.

கிரீடி - அரசன், அர்ச்சுனன், கிரீடியென்னேவல்.

கிரீடை - புணர்ச்சி, மகளிர் விளையாட்டு, விளையாட்டு.

கிரீட்டி - பிரண்டை.

கிரீவம் - கழுத்து, தலை.

கிருகரன் - தசவாயுக்களிலொன்று, (சினமும், தும்மலும், வெம்மையும் விளைவிக்கும் வாயு)

கொழுந்து - இளந்தளிர்.

கொழுப்பு - செழுமை, நிணம்.

கொழுமை - கொழுப்பு, மதர்ப்பு, செழுமை, நிறம், வளம்.

கொழும்புகை - நறும்புகை.

கொளகொளெனல் - ஈரடுக் கொலிக்குறிப்பு.

கொளுச்சொல் - கருத்து.

கொளுத்து - கொளுத்தென்னேவல், சந்து, மூட்டு.

கொளுத்துதல் - அறிவு புகட்டல், தீப்பற்றுவித்தல், தெருட்டுதல், வீணை முதலிய வாசித்தல்.

கொளை - இசைப்பாட்டு.

கொள் - ஓர் தானியம், கொள்ளென்னேவல்.

கொள்கலம் - அணி, ஆடை, சாந்து மாலை முதலிய பெய்கலம், பாத்திரம், பிழா, இரப்போர்கலம்.

கொள்கை - அறிவு, எண்ணம், கருத்து, குணம், கோட்பாடு, சிநேகம், செய்கை.

கொள்வோன் - மாணுக்கன்.

கொள்ளம் - குழைசோறு.

கொள்ளல் - பிடித்துக் கொள்ளல், வாருதல், வாங்குதல்.

கொள்ளார் - பகைவர்.

கொள்ளி - எருமை நாக்கி, நெருப்புறு விறகு,

கொள்ளியம் - உமிரி, புன்கு.

கொள்ளிடம் - ஓராறு.

கொள்ளை - கொள்ளை, மிகுதி.

கொறி - கொறியென்னேவல், செம்மறியாடு, மேடவிராசி,

கொறிதலை - நிலவேம்பு.

கொறித்தல் - கொறிக்குதல்.

கொறுக்கச்சி - எருவை, கொறுக்கை, நாணல்.

கொறுக்கை - உயிர்ப்பு, ஓர்நகர், குறட்டை, நாணல், வலி,

கொற்கை - ஓர் ஊர்.

கொற்கையாளி } பாண்டியன்.
கொற்கைவேந்தன் }

கொற்றம் - அரசியல், எல்லை, கொத்தம், வலி, வெற்றி.

கொற்றவள்ளை - பகைவர்நாடழித்தல்.

கொற்றவன் - அரசன், முடக்கொத்தான், வெற்றிசிறந்தோன்.

கொற்றவை - துர்க்கை, வெற்றி சிறந்தேன்,

கொற்றன் - கற்சிற்பன்.

கொற்றி - துர்க்கை, பசுவிளங்கன்று, வடுகி.

கொற்று - கொற்றுத்தொழில்.

கொன் - அச்சம், காலம், நரகம், பயமின்மை, பெருமை.

கொன்றை - கொன்றைமரம்.

கொன்றைசூடி - சிவன்.

## கோ

கோ - அம்பு, அரசன், ஆகாயம், ஆண்மகன், இலந்தை, எருது, ஓரெழுத்து, கண், கோவென்னேவல், சுவர்க்கம், திசை, தெய்வலோகம், தேவன், நீர், பசு, பசுப்பொது, பூமி, மலை, பொறி, வச்சிராயுதம், மேன்மை.

கோகண்டம் - நெருஞ்சில்.

கோகத்தி - கோவதை.

கோகநகம், கோகநதம் } தாமரை.

கோகநகை, கோகநதை } இலக்குமி.

கோகந்தம் - கந்தகபாஷாணம்.

கோகம் - உலர்ந்த பூ, சக்கரவாகப்புள், செந்நாய்.

கோகர்ணம், கோகன்னம் } ஓர் சிவஸ்தலம்.

கோகலி - கடம்பு.

கோகழி - ஓர் சிவஸ்தலம்.

கோகனம் - கடம்பு, கையாந்தகரை, நிலக்கடம்பு.

கோகிலம் - குயில், குரங்கு, சிறுகுறிஞ்சா, பல்லி.

கோகிலாட்சம் - கொம்மட்டி, நீர்முள்ளி, மாதுளை.

கோகிலோற்சவம் - மாமரம்.

கோகு - கழுதை.

கோகுத்தம் - மல்லிகை.

கோகுலம் - ஆன்கொட்டில், இடையரூர், காலிவருக்கம், குரங்கு, துளையுடைப்பொருள், பல்லி.

கோக்கள் - அரசர், சிறந்தோர், பசுக்கள்.

கோங்கு, கோங்குல் } ஓர்மரம்.

கோசமம் - பீர்க்கு.

கோசம் - ஆண்குறி, உறை, கருகூலம், சாதிக்காய், தெரு, பஞ்சகோசம், பண்டாரம், புத்தகம், மதிலுறுப்பு, முட்டை.

கோசரபலம் - கிரகபலம்.

கோசரம் - அடங்கல், அறியத்தக்கது, இராசி, உணர்ச்சி, ஊர், விடயம், கிரகநிலை, மகிழமரம்.

கோசலம் - ஆனீர், ஓர்தேசம், பதினெண்பாஷையிலொன்று.

கோசலை - ஓர் தேசம், இராமன்றாய்.

கோசவம் - கோமேதகம், ஓர்யாகம்.

கோசனை - பேரொலி.

கோசன் - சேர்பந்த பாஷாணம்.

கோசாங்கம் - நாணல்.

கோசாரி - பீர்க்கு.

கோசிகம் - சாமவேதம், சீலை, பட்டுச்சீலை.

கோசிகன் - கௌசிகன்.

கோசு - ஓரெல்லையளவு.

கோடகசாலை - ஓர் பூடு.

கோடகம் - குண்டிகை, குதிரை, நாற்றெருக்கூடுமிடம், புதுமை, முடியுறுப்பு.

கோடணை - ஒலி, பேரொலி, கொடுமை, வாச்சியப்பொது.

கோடதரம் - சுக்கு.

கோடம் - எல்லை, செங்கருங்காலி.

கோடரம் - எட்டிமரம், குதிரை, குரங்கு, சோலை, தேர்மொட்டு, மயிர்ச்சாந்து, மரக்கொம்பு, மரப்பொது, மரப்பொந்து.

கோடல் - கற்றுக்கொள்ளல், கொள்ளல், முறித்தல், வளைதல், வெண்காந்தள்.

கோடவதி - ஓர் வீணை.

கோடற்பொருள் - கொடுத்த தொழிலின் செயப்படு பொருளைத் தனக்கு உரியதாக்கிக் கொள்ளுதலையுடைத்து.

கோடாகோடி - பதுமம், அளவின்மை.

கோடாசொரி - ஓர்பாஷாணம்.

கோடாய் - செவிலித்தாய்.

கோடி - ஓரெண், சீலை, புதுமை, முடியுறுப்பு, முனை, மூலை, வாள்வினை, விற்குதை.

கோடிகம் - அணிகலச்செப்பு, கெண்டிகை, சீலை, பூந்தட்டு.

கோடிக்கரை - ஓரூர்.

கோடியர் - நாடகர்.

கோடிரவம் - சதுரக்கள்ளி.

கோடிலம் - கோட்டம்.

கோடீரம் - இந்திரகோபம், இந்திரன் வில், கிரி, சடை, சடைமுடி, முடி.

கோடு - அரணிருக்கை, ஊதுகொம்பு, கோடென்னேவல், சங்கு, திரள் நீர்க்கரை, பக்கம், மரக்கொம்பு மலையினுச்சி, யானைக்கொம்பு, வஞ்சனை, வட்டம், வரம்பு, வரி, கொம்பு, விலங்கின் வளைவு.

கோடை - காற்று, குதிரை, செங்காந்தள், முதிற்வேனிற் பருவத்தின் காற்று, மேல் காற்று, வெண்காந்தள், வெயில்.

கோட்டகம் - குளம், கோயில்.

கோட்டம் - அநீதம், அழுக்காறு, ஆன்கொட்டில், இடம், ஓர் மருந்து, கடற்கொந்தளிப்பு, குராமரம், குளம், கூட்டம்,

கோணம், கோயில், சுடுகாடு, தேவலோகம், நாடு, பசுக்கூட்டம், மருதநிலத்தூர், வயல், விளைவு, வாசனைப்பண்டம், வீணை.

கோட்டல் - எழுதல், கோணுவித்தல், வளைத்தல், வியங்கோண்முற்று.

கோட்டாலை - துன்பம்.

கோட்டான் - கூகை, கோட்டான்.

கோட்டி - அழகு, உலைவு, கூட்டம், கோட்டாலை, கோபுரவாயில், சவை, துன்பம், நிந்தை, பரிகாசம்.

கோட்டியாழ் - நால்வகை யாழினொன்று.

கோட்டில்வாழ்விலங்கு - அணில் குரங்கு முதலியன.

கோட்டுநீறு - சங்குநீறு.

கோட்டுப்பூ - நால்வகைப்பூவினொன்று, கொடிப்பூ, நீர்ப்பூ, புதற்பூ.

கோட்டுமலை - யானை.

கோட்டுமோர் - பன்றி.

கோட்டுவான் - ஓர் நீர்ப்புள்.

கோட்டை - அரண், அரணிருக்கை.

கோட்பதம் - குளம்பின்சுவடு, மாட்டுக்குளம்பு.

கோட்பறை - நெய்தற்பறை.

கோணம் - குனில், குதிரை, சனி, செவ்வாய், திசை, ஆரம், முடுக்குத்தெரு, மூக்கு, யானைத்தோட்டி, வளைந்த வாள், வளைவு, வீணையியக்கும் வில்.

கோணல் - கூன், மாறுபாடு, வளைவு, வளைதல்.

கோணன் - கூனன்.

கோணுமுகம் - கழியிருக்கை, சூழ்.

கோணாய் - ஆணரி, தோண்டான்.

கோணி - அத்தி, இருநூணி என்னுமோரளவை, கந்தை, கோணி, பதினுயிரங் கோடா கோடி.

கோணை - அழிவின்மை, கொடுமை, பீடை.

கோணைக்களிறு - பல முள்ள இளம்யானை.

கோணைமாதம் - மார்கழிமாதம்.

கோணையெயில் - கன்னிமதில்.

கோண் - கெண்டிமூக்கு, கொடுங்கோன்மை, கோணென்னேவல், நேரின்மை, மாறுபாடு, வளைவு,

கோண்டம் - குறிஞ்சா, தூக்கு, நெருஞ்சில்.

கோண்டை - இலந்தைக்கனி, இலந்தை, கமுகு.

கோதண்டபாணி - இராமன்.

கோதண்டம் - கண்ணிமை, வில்.

கோதமநதி - கோதாவரி.

கோதமம் - ஓர் தீவு.

கோதமன் - கௌதமன்.

கோதம் - சிதாங்கபாஷாணம்.

கோதல் - கொந்தல், கோதுதல்.

கோதனம் - பசுமடி, பசுவின் கன்று.

கோதா - உடும்பு.

கோதாட்டம் } கோட்டி,
கோதாட்டு } சீராட்டு.

கோதாவரி - விருத்தகங்கை.

கோதி - கோதுமை, நெற்றி, முதலை.

கோது - ஒடு, குற்றம், கோதென்னேவல், சக்கை.

கோதுதல் - கோதல்.

கோதுபடல் - குற்றப்படல்.

கோதை - ஒழுங்கு, ஓர்கட்பறை, காற்று, கௌதமநதி, சேரன், நெற்சுமை, பூமாலை, பெண், பெண்மயிர், முன்கைத்தோற் கட்டு.

கோத்தல் - கோவைசெய்தல்.

கோத்தனி - முந்திரிகைச்செடி.

கோத்தனிகை - முந்திரிகை.

கோத்திரம் - ஓர் செட்டி, குலம், கோத்திரவம், பூமி, மலை.

கோத்திரவம் - கோசலம், வரகு.

கோத்திரை - பூமி, மலை.

கோத்தை - குருடன்.

கோபகுண்டம் - எட்டிமரம்.

கோபங்கம் - சரகண்ட பாஷாணம்.

கோபதி - இடபம், இந்திரன்.

கோபம் - காத்தல், சினம், தம்பலப்பூச்சி, தீக்குணம் ஆறினொன்று, துத்தபாஷாணம், வெறுப்பு.

கோபனம் - இரகசியம், தற்காத்தல், திகில்.

கோபாலர் - அரசர், இடையர்.

கோபாலன் - கிருஷ்ணன்.

கோபி - ஓர்மண், கோபியென்னேவல், சினமுள்ளோன்.

கோபிகாஸ்திரீ } இடைச்சி.
கோபிகை }

கோபுச்சம் - பசுவால்.

கோபுரந்தாங்கி - ஓர்பூடு.

கோபுரம் - கோபுரவாயில், நகரின்வாயில்.

கோப்பியம் - இரகசியம், கண்ணியம், காத்தல், கோலம், மறைத்தல்.

கோப்புடைமொழிகள் - கோக்கப்படுதலையுடைய சொற்கள்.

கோமகள் - இராச குமாரத்தி, தலைவி.

கோமகன் - அரசன், இராச குமாரன்.

கோமதி } ஓர் நதி.
கோமதை

கோமயம் - ஆப்பீ, ஆவிற்குரிய தன்மை.

கோமலம் - அழகு, சிவன்கையி லுள்ள மான், நீர், பேய்த்தேர், மிருது, வசந்தகாலம்.

கோமளம் - இளமை, இளமைச் செவ்வி, குருகு, பசு, மிருது.

கோமாட்டி - தலைவி.

கோமாப்பு - நரி.

கோமாள் - தலைவி.

கோமான் - அரசன், குரு, சிறந் தோன், பன்றி, மூத்தோன்.

கோமுகம் - ஆசனமெட்டி னொன்று.

கோமுகை - அபிஷேக நீர்செல் வழி.

கோமூத்திரிகை - கோமூத்திர ரேகைபோல் வளைந்த ரேகை யால் வாசிக்க வருங்கவி.

கோமேதகம் - நவமணியி னொன்று.

கோமேதம் - ஓர் யாகம்.

கோம்பல் - சினக்குறிப்பு, பெருங் கோபம்.

கோம்பி - ஓந்திப்பொது.

கோம்பு - பச்சோந்தி, கோம பென்னேவல், பெருங்கோபம்.

கோயில் - அரசன்மனை, ஆலயம்.

கோய் - பரணி.

கோரகம் - இளம்பூவரும்பு, நாளம், வட்டில்.

கோரகை - அகப்பை, இளம்பூ வரும்பு, குயில்.

கோரக்கநாதர் } ஓர் சித்தர்.
கோரக்கர்

கோரங்கி - ஓர் பட்டணம், சிற் றேலம்.

கோரசம் - கவுதாரி.

கோரண்டம் - குறிஞ்சி, மரு தோன்றி மரம்.

கோரம் - அச்சம், உஷ்ணம், குதிரை, கொடுமை, சீக்கிரம், சோழன்குதிரை, நஞ்சு, வட் டில், வளைவு.

கோரம்பர் - கழைக்கூத்தர்.

கோரவாரம் - சந்தனம்.

கோரான் - ஓர்செடி.

கோரிசை - அகப்பை.

கோரை - கோரைப்புல்.

கோலகம் - திப்பிலி.

கோலச்சங்கு - முட்சங்கு.

கோலம் - அழகு, இலந்தைக் கனி, ஒப்பனை, ஓராயுதம், ஓர் துலாம், சனி, சாயல், தழுவல், தெப்பம், நீரோட் டம், பலகோலம், பறவை, பன்றி, பாக்கு, பீர்க்கு, மருட்பன்றி, விர்தைநகர்.

கோலம்புனைபெண் - வண்ண மகள்.

கோலமூலம் - திப்பிலிவேர்.

கோலரம் - மூளை.

கோலலவணம் - துருசு.

கோலல் - கோலுதல், சூழ்ந்திடல், வளைத்தல்.

கோலாகலம் - பேரொலி, விலங்கினுறெலழுமொலி.

கோலாங்கூலம் - முசு.

கோலாட்டம் - மகளிர் விளையாட்டு.

கோலி - இலந்தைமரம், உடும்பு, திப்பிலி, மயிர்.

கோலுதல்-சூழ்ந்திடல், வளைதல்.

கோல் - அஞ்சனக்கோல், அம்பு, அளந்திடுகோல், இலந்தை, ஊன்றுகோல், எழுதுகோல், குதிரைச்சம்மட்டி, கோலென்னேவல், செங்கோல், தடி, துலாக்கோல், துலாம், துலாராசி, தூண்டில், தெப்பம், மரக்கொம்பு, யாழினரம்பு.

கோல்வளை - அழகிய வளை, கோற்றேடி.

கோவணம் - கௌபீனம்.

கோவணன் - ஈசன், வசிட்டன்.

கோவணி - ஆத்தி.

கோவம் - கோபம், பொன்.

கோவர்
கோவர்த்தனர்
கோவலர் } இடையர், கோபாலர்.

கோவலன் - கண்ணகி கணவன்.

கோவிந்தர் - இடையர்.

கோவிந்தன் - இந்திரன், இராசன், கண்ணன், பரமான்மா, பிரமன்.

கோவெனல்-அநுகரணவோசை.

கோவை - அணிவடம், ஓர்கொடி, ஓர் பிரபந்தம், கோத்தமாலை, கோத்தல், நிரை, வரிசை.

கோவைசியர் - வைசியரிலோர் வகையினர்.

கோவைத்துறை - ஓர் கோவை. அது—தலைவனுந் தலைவியுங் களவியாலானடக்கு மொழுக்கத்தைக் கூறுவது.

கோழி - உறையூர், கோழி, பன்றிக்கிழங்கு, வெருகு.

கோழிக்கரணம் - பதினோர்கரணத்தினென்று, பத்திரவம்.

கோழிக்கொடியோன் - ஐயனர், குமரன்.

கோழித்தலைக்கந்தம் - ஓர்பாஷாணம்.

கோழிவேந்தன் - சோழன்.

கோழை - கபம், குறைவு, கூச்சம், கொடுமை, சிலேட்டுமம், தவறு, நாணம்.

கோளகம் - கோளக பாஷாணம், திப்பிலி, பட்டுச்சேலை, மண்டலிப் பாம்பு, மிளகு.

கோளகன் - கைம்பெண்பெற்ற பிள்ளை.

கோளகை - அண்டகடாகம், உருண்டைவடிவம், மண்டலிப் பாம்பு, கவசம், வசிடம்.

கோளம் - உண்டை, வட்டம்.

கோளம்பம் - ஓர் நாடு, கிரகணம்.

கோளரி - சிங்கம்.

கோளன் - கோளுரைப்போன்.

கோளி - அத்திமரம், ஆலமரம், கொழிஞ்சிமரம், கொள்வோன், பூவாது காய்க்கு மரம்.

கோளிகை - பெட்டைக்கழுதை, பெட்டைக்குதிரை.

கோளிப்பொருள் - கொள்பொருள்.

கோளேசம் - குங்குமப்பூ.

கோள் - உதாஹரணம், இடையூறு, காவட்டம்புல், கிரகம், குணம், கொலை, கொள்ளல், கோட்பாடு, குறளை தீமை, கிரகம், நாள், புறங்கூறல், பொய், வலி.

கோறல் - கொல்லல்.

கோறிக்கை - நினைவு.

கோறை - குவளை, துணை, பழுது, பொந்து.

கோற்கொடி - இலந்தை, சுரை.

கோற்றேன் - கொம்புத்தேன்.

கோன் - அரசன், இடையன், எப்பொருட்கு மிறைவன்.

கோன்மை - ஆளுகை, இராசநீதி.

## கௌ

கௌ - ஓரெழுத்து, கவ்வல், கிருத்தியம், தீங்கு, பற்றல், மனஸ்தாபம்.

கௌசலம் - ஓர் தேசம், சாமர்த்தியம், திறமை.

கௌசலை - கோசலை.

கௌசனம் - கௌபீனம்.

கௌசிகம் - ஓர்பண், கூகை, குங்கிலியம், சாமவேதம், சோகி, பட்டுச்சேலை, விளக்குத்தண்டு.

கௌசிகன் - இந்திரன், பாம்பாட்டி, விசுவாமித்திரன்.

கௌடம் - ஒருகொடி, ஓர்தேசம், கௌடநெறி.

கௌடதர்க்கம் - ஓர் தருக்கசாஸ்திரம்.

கௌணம் - கௌணப்பொருள்.

கௌண்டர் - சண்டாளர், புலையர்.

கௌண்டிகர் - தோல்வினைஞர்.

கௌதமநதி - கோதாவரியின் பிரிவு.

கௌதமம் - தருமநூல் பதி னெட்டி னொன்று.

கௌதமன் - ஆதிபுத்தன், ஸப்த ரிஷிகளிலொருவன்.

கௌதமி } ஓர்பசு, கோதாவரி,
கௌதமை } கோரோசனம்.

கௌதம் - கிச்சிலிக்குருவி.

கௌதிகம் - வஞ்சனே.

கௌத்துவம் - அத்தநாள், பதும ராகம், மாணிக்கம்.

கௌந்தி - ஓர் பூண்டு, குந்தி தேவி, தவப்பெண்.

கௌபீனம் - கோவணம்.

கௌப்பு - பெருமை.

கௌமாரம்-அஷ்டாதசபுராணத் தொன்று, இளமை, ஓர் சமயம், ஓர் பருவம், குமரன், சத்தி.

கௌமாரி - ஸப்தமாத்ருகைகளி லொருவள்.

கௌரம் - சுத்தம், பொன்மை, வெண்மை.

கௌரவம் - மேன்மை.

கௌரவர் - குருகுலவேந்தர்.

கௌரி - கடுகு, காளி, தூர்க்கை, பத்தாண்டுப்பெண், பார்வதி, புளிநறளே, மஞ்சணிறம்,

கௌரிகேணி - வெள்ளேக்காக் கணம்.

கௌரிசங்கரமணி - இரட்டை யுத்திராட்சம்.

கௌரிசேயன் - விநாயகன்.

கௌரிநந்தனன் - குமரன்.

கௌரிபாஷாணம் - ஓர் பாஷா ணம்.

கௌரியன் - பாண்டியன்.

கௌலவம் - பன்றி, இஃது - கா ணம் பதினொன்றினொன்று.

கௌவல் - உரத்தல், பற்றல்.

கௌவியம் - பசுவினின்றுற் பத்தியாகும் பொருள்.

கௌவை - ஆயிலியநாள், எள்ளி ளங்காய், ஒலிகள், கலக்கம், துன்பம், பழிச்சொல்.

கௌளம் - ஓரிராகம்.

கௌளி - பல்லி.

ங

ங - ஓரெழுத்து, குருணிக்குறி.

ஙனம் - இடம், தன்மை.

ச

ச - ஓரெழுத்து.

சஃகுல்லி - அப்பவர்க்கம்.

சக - கூட.

சககமனம்-உடன்கட்டையேறல்.

சகசம் - உண்மை, இயற்கை, ஒற்றுமை, வட்டில்.

சகசரம் - சிறுகுறிஞ்சா.

சகசரன் - உடன்றிரிதோழன்.

சகசரி - பொன்னிறங்கலந்த கரும்பூவுள மருதோன்றிமரம், வாடாக்குறிஞ்சி.

சகசன் - சகோதரன்.

சகசா - குறிஞ்சா.

சகசாட்சி - ஸூரியன்.

சகசை - உடன்பிறந்தாள்.

சகச்சை - பொன்னுங்காணி.

சகடம் - அசுத்தம், உரோகணி, ஊர்க்குருவி, சகடாசுரன், தமரத்தை, பண்டி, பாண்டில் பூண்டவூர்தி, வட்டில்.

சகடயூகம் - ஓர்படையணி.

சகடயோகம் - ஓர்யோகம்.

சகடு - உரோகணி, சந்தேகம், பண்டி.

சகடை - பண்டி, முரசு, வாச்சியம்.

சகண்டை - முரசு, வாச்சியம்.

சகதி - சேறு, பொல்லாநிலம்.

சகதேவன் - பாண்டவரில் இளையோன்.

சகதேவி - பூதேவி.

சகநாதம் - ஓர் ஸ்தலம்.

சகநாதன் - கடவுள், விஷ்ணு.

சகநாயகன் - காந்தம்.

சகப்பிராந்தி - உலகமயக்கம்.

சகமார்க்கம் - யோகமார்க்கம்.

சகம் - ஓர்தேசம், சட்டை, சகவருஷம், பூமி, மார்கழி மாதம்.

சகரச்சாரி - சத்திசாரம்.

சகரர் - சகரபுத்திரர்.

சகரிகம் - நாயுருவி.

சகரன் - முதலெழுவள்ளலிலொருவன்.

சகலகம் - வெள்ளாட்டுக்கடா.

சகலத்தியாகம் - சகலத்துறவு.

சகலமங்கலை - பார்வதி.

சகலமோகினி - மாயை.

சகலம் - எல்லாம், ஆகமங்களிலொன்று, துண்டு, தோல், மீன்முள்.

சகலர் - எல்லோர், மூவகையான்மாக்களிலொருவர்.

சகலவியாபி - கடவுள்.

சகலன் - ஓர்குடியிற் கொண்டோன்.

சகல் - கொசுகு.

சகனம் - சடத்துவம்.

சகனம் - அகல், கடிதடம், பொறுமை.

சகன் - சாலிவாஹனன்தோழன்.

சகன்மகம் - செயப்படுபொருளுறுவினை.

சகா - தோழன்.

சகா, சகாதி } பாம்புகொல்லி.

சகாடி - பீர்க்கு.

சகாதேவன் - சகதேவன்.

சகாதேவி - நெய்ச்சிட்டி.

சகாயம் - துணை.

சகாயன் - தோழன்.

சகாரகுட்சி - வியாசன்.

சகாரி - முதலெழுவள்ளலி லொருவன்.

சகி - சகியென்னேவல், தோழி.

சகிதம்-ஒற்றுமை, கூடியிருத்தல்.

சகித்தல் - பொறுத்தல், மன்னித்தல்.

சகுடம் - சேப்பு.

சகுடை - சிற்றகத்தி.

சகுட்டநம், சகுட்டம் } ஆடுதின்னுப்பாலை.

சகுட்டம் - ஓர் கிழங்கு.

சகுந்தம் - கழுகு, பறவை, வல்லூறு.

சகுலி - ஒலி, மீன்.

சகுனம் - கிழங்கு, செம்போத்து, நிமித்தம், பறவை, பேராந்தை.

சகுனி - கூகை, அஃது-கரணம் பதினொன்றுமாம், துரியோதனன்மாமன், நிமித்தம் பார்ப்போன், பறவை.

சகுன்மம் - கருணைக்கிழங்கு.

சகோடம், சகோடயாழ் } யாழ்வகை நான்கினொன்று.

சகோதரி - உடன்பிறந்தாள்.

சகோரம் - சக்கரவாகப்புள், செம்போத்து, நிலா முகிப்புள்.

சகோரயாழ் - நால்வகையாழினொன்று.

சக்கரபாணி - துர்க்கை, விஷ்ணு.

சக்கரம் - கடல், சக்கரவாகப்புள், தேருருளை, பதக்கு என்னுமோரளவை, பிறப்பு, பூமி, பெருமை, மலைமல்விகை, வட்டம்.

சக்கரயூகம் - சகடயூகம்.

சக்கரவர்த்தி, சக்கரேச்வரன் } மற்றொருவரைப்பணியாது தனியாள்வோன்.

சக்கரவாகம் - சக்கரவாகப்புள்.

சக்கரவாளம் - எல்லை, ஓர் புள், சக்கரவாளகிரி, வட்டவடிவு.

சக்கரன் - ஆதித்தர் பன்னிருவரிலொருவன், இந்திரன், விஷ்ணு.

சக்கராயுதத்தி - துர்க்கை.

சக்ராயுதன் - விஷ்ணு.

சக்காரம் - தேமா.

சக்கிந்திரியம் - கண்.

சக்கியம் - அன்பு, இயன்றது, உறவு, சிநேகம், சேர்மானம்.

சக்கியன் - சிநேகன்.

சக்கிரி - அரசன், குயவன், செக்கான், தலைவன், திருமால், தேவேந்திரன், பாம்பு.

சக்கு - கண், பூஞ்சு.

சக்குபு - கரிசாலைப்பூடு.

சக்கை - கோது.

சங்கங்குப்பி - பீச்சுவிளாத்தி.

சங்கக்குழையோன் - சிவன்.

சங்கடம் - ஒடுக்கம், தொந்தரவு, நெருக்கம்.

சங்கதம் - சம்பந்தம், தேவர் மொழி, கட்டு, பொருந்தல்.

சங்கநிதி-சங்குருவாய்க் கிடக்கும் பொன், வட்டக்கிலுகிலுப்பை.

சங்கபதம் - அட்டாதச தரும நூலிலொன்று.

சங்கபாஷாணம் - ஓர் பாஷாணம்.

சங்கபாலன் - அட்டமாநாகத் தொன்று.

சங்கபீடம் - நாணல்.

சங்கபுங்கி - கடுகுரோகிணி.

சங்கப்பலகை - சங்கப்புலவராசனம்.

சங்கப்புலவர் - சங்கத்தார்.

சங்கமம் - இயங்கு திணை, கிரகங்களின் கூட்டம், கலத்தல், புணர்ச்சி, யாறுகூடுமிடம்.

சங்கமரூபம் - சிவரூபம்.

சங்கமன் - இலிங்கதாரி.

சங்கமேந்தி - திருமால்.

சங்கம் - அழகு, ஐக்கியம், ஓர் நிதி, கணைக்கால், கூடுதல், கூட்டம், சங்கு, சவை, தாலம்ப பாஷாணம், நூறுயிரங்கோடி, நெற்றி, படையிலோர் தொகை, புலவர் விருப்பம்.

சங்கரம் - கலப்பு, குப்பை, துகள், நஞ்சு, போர், வருத்தம்.

சங்கரர் - போர்செய்வோர்.

சங்கரன் - சங்கராசாரியார், சிவன்.

சங்கராபரணம் - ஓரிராகம்.

சங்கரி - சங்கரியென்னேவல், பார்வதி.

சங்கரித்தல் - அழித்தல்.

சங்கலர், சங்கலார் - போர்புரிவோர்.

சங்கலனம் - எண்கூட்டுகை, கலப்பு, குவித்தல், சேர்மானம்.

சங்கலிதம் - எண்கூட்டல், எண்களின் தொடர், கலத்தல், தருமநூலிலொன்று.

சங்கறுப்போர் - வளைபோழ்நர்.

சங்கற்பம் - எண்ணம், நியமம், மனோகற்பனை, விருப்பம்.

சங்கன்னம் - நரம்பு.

சங்காசம் - உவமை, தோழமை.

சங்காதம் - அழித்தல், ஐந்துதரமீரடிகளையு மொருங்கெடுத்து வைத்து நடத்தல், ஓர் நரகம், கூட்டம், சமூலம், வசனம்.

சங்காரம் - அழித்தல், பஞ்சகிருத்தியத்தொன்று, கடிதல்.

சங்காரி - குதிரைவாலி.

சங்காரித்தம் - ஸப்தமேகத் தொன்று.

சங்காவேசம் - அச்சத்தாலவச மாதல்.

சங்கிதை - சுருக்கம், வேதசாகை.

சங்கியை - எண்.

சங்கிரக்கூர்மை - சிந்துலவணம்.

சங்கிரகம் - உயர்ச்சி, காடு, காத்தல், கைச்சண்டை, சம்மதம், சுருக்கம்.

சங்கிரந்தனன் - இந்திரன்.

சங்கிரமம் - உபாய வழி, கலப்பு, கிரகநடை, மாதப்பிறப்பு.

சங்கிரம் - காடு.

சங்கிராந்தம் } கலத்தல், மாதப்
சங்கிராந்தி } பிறப்பு, வருஷப் பிறப்பு.

சங்கிராமசூரன் - போர்வீரன்.

சங்கிராமம் - போர்.

சங்கிராமவிலக்கணம் - கலைஞான மறுபத்து நான்கினொன்று.

சங்கிருதம் - தேவபாஷை.

சங்கிலி - ஓராபரணம், தொடர், தொடை, விலங்கு.

சங்கினி - ஓர் நாடி, மூன்றுஞ் ஜாதிப்பெண்.

சங்கின்குடியோன் - நாகரவண்டு.

சங்கீதம் - இசை, வாச்சியத் தோடு பாடுதல்.

சங்கிரணம் - ஓரலங்காரம், கலப்பு, பதப்புணர்ச்சி.

சங்கிரதம் - எழுத்துப் புணர்ச்சி, புணர்ச்சி.

சங்கீர்த்தனம் - துதித்தல், புகழ்ச்சி.

சங்கு - ஓரெண், ஓர் செடி, கணைக்கால், கூடுதல், கைவளை, சங்கு, சாயாமானி ஊசி, நெற்றி, படைக்கலம்.

சங்குநிதி - கிலுகிலுப்பை.

சங்குபுட்பம் - ஞாழல்.

சங்குமணி - அக்குமணி.

சங்குமரு - வேம்பு.

சங்குமூர்த்தனி - உச்சி.

சங்கூபிலம்- அட்டாதசசங்கித புராணத்தொன்று.

சங்கேதம்-ஏற்பாடு, கட்டுப்பாடு, குழூஉக்குறி, நியமம், ஆராலோசனை, பொருத்தம்.

சங்கை - அச்சம், அளவு, ஐயம், கனம், சக்கு.

சங்கோசம் - அடக்கம், கண் கூச்சம். கூச்சம், சுருங்கல், வெட்கம்.

சசம் - ஆடவர் வகுப்பின் நான்கி னொன்று, முயல்.

சசம்பரி - ஆமணக்கு.

சசவிடாணம் - முயற்கொம்பு. அஃது—ஓரில் பொருள் வழக்கு.

சசாபம் - சிறு நன்னாரி.

சசி - இந்திராணி, கர்ப்பூரம், சந்திரன்.

சசிசேகரன் } சிவன்.
சசிதரன் }

சசித்துருவம் - சந்திரன் நிலே.

சசிதேகம் - வந்திரன் சட்டார்த்தம்.

சசிமணாளன் - இந்திரன்.

சசியம் - ஆச்சா, கஞ்சா, நிலப்பனை, மராமரம்.

சசியாதிபன் - விளைவுகாரகக்கிரகம்.

சசுபம் - அசோகு.

சசேலஸ்நாநம் - உடையோடு முழுகல்.

சச்சடம் - தாமரை.

சச்சடி - கலம்பகம், சந்தடி.

சச்சம் - மெய்.

சச்சரி - ஓர் வாத்தியம்.

சச்சற்புடம் - பஞ்சதாளத்தொன்று.

சச்சிதானந்தன் - கடவுள்.

சச்சு - நீர்ச்சுண்டி, பறவைமூக்கு.

சஞ்சயம் - கூட்டம்.

சஞ்சயவாதம் - ஓர் சமயம்.

சஞ்சயனம் - காடாற்றுதல்.

சஞ்சயன் - வியாசர் சீடரிலொருவன்.

சஞ்சரிகம் } வண்டு.
சஞ்சரீகம் }

சஞ்சரித்தல் - வாசம் பண்ணல்.

சஞ்சலம் - அசைவு, காற்று, துன்பம், மனக்கவலே.

சஞ்சலே - இலக்குமி, திப்பிலி, மின்னல்.

சஞ்சாளிகம் - வண்டு.

சஞ்சிதம்-ஈட்டியது, கட்டுப்பட்ட வினை.

சஞ்சீவகரணி - புளி, மூர்ச்சை தீர்த்துயிர் தருமருந்து.

சஞ்சீவனம் - உயிர்ப்பித்தல்.

சஞ்சீவி } பூநாகம், மூர்ச்சை
சஞ்சீவினி } தீர்த்துயிர் தரு மருந்து.

சஞ்சு - ஆமணக்கு, பறவைமூக்கு.

சஞ்சேபம் - சுருக்கம்.

சடகம் - ஊர்க்குருவி, குடிக்கும் பாத்திரம் சாராயம், தேன்.

சடக்கோதன் - வசம்பு.

சடங்கம் - ஆறு சாத்திரம், ஆறு றாக்குக் கொண்ட ஓர் நிறை.

சடங்கு - செய்முறை.

சடசடெனல் - ஈரடுக்கொலிக் குறிப்பு.

சடசித்தி - ஓர் யோகம்.

சடத்துவம் - சடத்தன்மை.

சடப்பால் - முலேப்பால்.

சடப்பொருள் - சீரப்பொருள், உயிரில்லாதபொருள்.

சடம் - அசேதனப்பொருள், ஆறு, உடல், குங்குமம், கொடுமை, தகரம், பொய்.

சடரம் - வயிறு.

சடராக்கினி - உதராக்கினி.

சடரூபம் - அறிவற்ற பொருள்.

சடர் - மூடர்.

சடவுப்பு - அமரியுப்பு, சமாதியுப்பு.

சடாகம்
சடாதரம் } அருநெல்லி.

சடாதரி - சடையுடையோன், பார்வதி.

சடாதாரி - கொடியார் கூந்தல், சிவன், பார்வதி.

சடாமகுடன் - சிவன்.

சடாமாஞ்சி - ஓர்மருந்துச்சரக்கு.

சடாயு - ஓர் கழுகரசன்.

சடாரி - கவசம், நம்மாழ்வார்.

சடிதி - சீக்கிரம்.

சடிதிவு - கச்சோலம்.

சடிலம் - குதிரை, சடை, சிங்கம், நெருக்கம்.

சடினம்-சடைமரம், வசம்பு, வேர்.

சடு - ஆறு.

சடுரசம் - அறுசுவை.

சடுலம் - அசைவு.

சடுவர்க்கம் - கட்டுவர்க்கம்.

சடை - இரேகை, ஓர்மரம், கூட்டம், சடை, சடையென்னேவல், பிரபை, பின்னல்மயிர், வேர்.

சடைக்கந்தம் - வசம்பு.

சடைச்சி - கீரிப்பூண்டு, நெட்டி, பாசி, பொன்னிமிளை, புளியாரை.

சடைமுடியோர் - தாபதர்.

சடையோர் - சிவன், வீரபத்திரன்.

சட் - ஆறு.

சட்கருமம் - அந்தணரறுதொழில், அஃது—ஸ்நாநம், ஓமம், ஸ்வாத்தியாயம், ஜபம், தர்ப்பணம், பிருதிபூஜை; அன்றியும்: ஈதல், ஏற்றல், ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தலுமாம்.

சட்குணம் - அறுகுணம்.

சட்சமயம் - அறுசமயம்.

சட்சு - கண்.

சட்சுதீட்சை - தீட்சை வகைகளிலொன்று.

சட்டகம் - உடல், நாடக வகைகளிலொன்று, மக்கட் படுக்கைப்பொது, வடிவு.

சட்டம் - கட்டளை, கதவிற்பலகை போல்வன, திருத்தம், திட்டம், பூரணம்.

சட்டி - ஓர் திதி, ஓர் பாத்திரம், சட்டி யென்னேவல்.

சட்டித்தல் - அழித்தல், கொல்லல்.

சட்டு - அழிவு, ஆறு, சேதம்.

சட்டுவம் - அகப்பை.

சட்டை - அங்கி, கணிப்பு, சிறகு, தைவேளை, பாம்பின்றோல்.

சட்பம் - அறுகு, பசும்புல், மயிர்.

சணகம் - கடலை, புளியாரை.

சணம்பு - ஓர் பயிர், மருள்.

சணைப்பு - கிளைப்பு, செழிப்பு.

சண்டமாருதம் - பெருங்காற்று, உறைப்பு, எழுது.

சண்டம் - கருப்பம், கொடுமை, சீக்கிரம், பேடு, வேகம்.

சண்டன் - அசுரன், அலி, காலன், சிவன், சூரியன், நமன், பேடி.

சண்டாளன் - துரோகி, பிரதிலோமன், புலையன்.

சண்டிகை - காளி, துர்க்கை.

சண்டை - பிணக்கு, போர்.

சண்பகம் - ஓர் மரம்.

சண்பம் - செண்பகம்.

சண்பனி - யோகினி.

சண்பை - சீகாழி.

சண்மதம் - ஆறுசமயம்.

சண்முகன் - குமரன்..

சதகம் - ஓர் பிரபந்தம், தான்றிமரம்.

சதகுப்பி - ஓர் பூடு.

சதகோடி - இடி, ஓர் எண், நூறுகோடி, வச்சிராயுதம்.

சதக்கிரது
சதமகன் } இந்திரன்.

சதசு - சபை, அந்தணர்ஸபை.

சதஞ்சீவி - சிரஞ்சீவி.

சததம் - எப்பொழுதும்.

சததளம்
சதபத்திரம் } தாமரை, ஆடுதின்றாப்பாலை.

சதபுட்பம் - சதகுப்பி.

சதமகத்தான் - சதமகன், தேவேந்திரன்.

சதமுனை - வச்சிராயுதம்.

சதம் - அறுபடு பயிர், இலை, இறகு, எல்லாம், தமாலமரம், தாழ்தல், நித்தியம், நிலை, நூறு.

சதயம் - ஓர் நாள், ஓர் நக்ஷத்திரம்.

சதவீரியம் - வெள்ளறுகு.

சதவீரு - ஓர் மல்லிகை.

சதளம் - கூட்டம்.

சதனம் - இலை, இறகு, உறை, நீர், வீடு.

சதா - எப்பொழுதும், மரக்கலம்.

சதாகதி - சியாநடை, காற்று, மாறுநட்பு.

சதாசிவம் - எட்டு மங்கள மூர்த்திகளிலொன்று, முடியாநன்மை.

சதாசிவன் - சிவன்.

சதாதநன்-அழியாதவன்,விஷ்ணு.

சதாநந்தம் - நித்தியாநந்தம்.

சதாநந்தன்-கடவுள், கௌதமன், நீங்கா மகிழ்ச்சியுள்ளவன், பிரமன்.

சதாபடம் } எருக்கு.
சதாபூடம் }

சதாபதி - மரவட்டை.

சதாபலம்-அத்திமரம்,எலுமிச்சை, தெங்கு, வில்வமரம்.

சதாபுரம் - வண்டு.

சதாமூலம் } தண்ணீர்விட்டான்.
சதாவேரி }

சதாவரி - பாம்புகொல்லி.

சதி - அழிவு, அனுமரணம், ரோஹிணி, கற்புடையாள், சீக்கிரம், சோறு, தாழ்வாரம், தாளவொத்து, பார்வதி, வஞ்சனை, வட்டம்.

சதிபதி - சிவன்.

சதிரிசம் - உவமை.

சதீனகம் } பயறு.
சதீனம் }

சது - நான்கு.

சதுக்கம் - சதுரம், சத்திரம், திண்ணை, நாற்றெருக்கூடுமிடம்.

சதுட்டயம் - நான்கின் கூட்டம்.

சதுட்பாதம் - நாற்காலுள்ளது, விலங்கு, நாய்க்கரணம்.

சதுமுகன் - அருகன், பிரமன்.

சதும்பை - பேய்மருட்டி.

சதுரங்கசேனை - காலாள், தேர், பரி, யானை.

சதுரங்கபலம் - சதுரங்கதளம்.

சதுரங்கம் - ஓர்வகைச் சூதாடு கருவி.

சதுரம் - சதுரக்கள்ளி, திறமை, நாகரீகம், நாற்கோண வடிவம், விவேகம்.

சதுரர் - அறிஞர், திறமுடையோர், நகரப்பதியோர்.

சதுரன் - கற்றவன், நாகரிகன், பேராசை யுள்ளவன்.

சதுரை - சதுரங்கபட்டணம்.

சதுர் - திறம், நான்கு.

சதுர்கூலி - ஆவிரை.

சதுர்க்குணன் - ஓர்ப்பு, கடைப்பிடி, குறிக்கோள், தோற்றம், எனு நாற்குணமுடையான்.

சதுர்த்தசி - பதினான்காந்திதி.

சதுர்த்தர் - சமர்த்தர், சூத்திரர்.

சதுர்த்தல் - அப்புதல்.

சதுர்த்தி - நான்காந்திதி.

சதுர்ப்புயன் - திருமால்

சதுர்யுகம் - யுகம் நான்கும் கூடிய மகாயுகம்.

சதுர்வேதம் - நான்குவேதம்.

சதுனி - வௌவால்.

சதேசன் - நூறூர்க்குத்தலைவன்.

சதைபொருத்தி - ஓர் நீர்ப்பூடு.

சதோகநாதர் - நவநாதசித்தரி லொருவர்.

சத்தகன்னிகை - எழுமாதர்.

சத்தசாகரம் - எழுகடல்.

சத்தசாத்திரம் - ஒலியிலக்கணம், சொல்லிலக்கணம்.

சத்தசுரம் - எழுசுரம், அவை— ஸரிகமபதநி என்பன.

சத்ததன்மாத்திரை - ஒலிப்பிர கிருதி.

சத்ததாது - எழுதாது. அவை— உடல், இரசம், இரத்தம், சுக் லம், மூளை, சதை, எலும்பு, தோல் என்பன.

சத்ததாரணை - நவதாரணையி லொன்று.

சத்த தாளம் - ஏழ்வகைத்தாளம், அவை—துருவம், மட்டியம், ரூபகம், சம்பை, திரிபுடை, அடதாளம், ஏகதாளம் என்ப.

சத்தபுரி - காஞ்சி முதலேழு தலம். அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந் திகை, துவாரகை என்னும் எழு தலம்.

சத்தப்பிரமம் - கலைஞான மறு பத்துநாலிலொன்று. சத்தமே பிரமமென்கை.

சத்தமருத்துக்கள் - எழுவகைக் காற்று.

சத்தமி - ஏழாந்திதி.

சத்தம் - ஏழு, ஒலி, மொழி.

சத்தன் - சிவன்.

சத்தாவத்தை - அஞ்ஞானம், அப ரோட்சம், ஆவரணம், விட்சே பம், பரோட்சம், சோக நிவி ருத்தி, ஆனந்தம் என எழ வத்தை.

சத்தி - கக்கல், கந்தகம், கிரியை நாடல், குடை, கைவேல்,சத்தி யென்னேவல், கிளி, சூலம், தேரிடக்கியம், சவர்க்காரம், பார்வதி, வலி, விருதுக்கொடி, வெண்குடை.

சத்திகம் - குதிரை.

சத்திகுருநாதன் - கஞ்சா.

சத்திக்கூற்றோன் - நவச்சாரம்.

சத்திக்கொடி - கொம்மபடி.

சத்திசாரணை - மூக்கிரட்டை.

சத்திச்சாரம் - உருப்பு, காந்தாரி.

சத்திநாதம் - ஏமாப்பிரகம், பொன்னிமிளை.

சத்திநிபாதம் - சத்தியைவிடுதல்.

சத்திநிபாதர் - மனதையடக்கித் தெய்வ வழிபடுவோர்.

சத்தியநிருவாணம் - பிறவியறுத்தல்.

சத்தியபாமை - கிருஷ்ணன் மனைவிகளிலொருத்தி.

சத்தியம் - சபதம், மெய்.

சத்தியயுகம் - கிருதயுகம்.

சத்தியலோகம் - பிரம்மலோகம்.

சத்தியவதி - வியாசன்றாய்.

சத்தியவிரதன் - உண்மையினிலைநிற்போன், தருமன், திரேதாயுகத்திலிருந்த சூரியவம்சத்தரசன்.

சத்தியோசாதம் - சிவனைம்முகத்தொன்று.

சத்திரம் - அன்னசத்திரம், கைவிடாப்படை, கைவேல், தும்பை, கவிழ்தும்பை, பாணம், யாகம், வெண்குடை.

சத்திராட்சி - அரத்தை.

சத்திரியர் - அரசர்.

சத்து - அறிவு, ஞானி, அவுபலபாஷாணம், உண்மை, கற்பூரசிலாசத்து, சாரம், நன்மை.

சத்துநாமத்தி - ஏகம்பபாஷாணம்.

சத்துருத்தானம் - சன்மத்தாறாமிடம்.

சத்துவம் - சுபாவம், முக்குணத்துள் முதற்குணம், வலி.

சத்தை-இருக்கை, சாரம், நன்மை.

சநகநகர் - மிதிலை.

சநகந்தம் - வசம்பு.

சநகம் } புளியாரை.
சநசித்திரம் }

சநகன் - ஓர் முனிவன், சீதையின் தகப்பன், தந்தை.

சநநசக்கிரம் - ஓர்நூல்,(திருநந்திதேவர் செய்தது)

சநநசாகரம் - பிறவிக்கடல்.

சநநை - ஓர் ஊர்.

சநநமோசனம் - பிறவியறல்.

சநநம் - பிறப்பு.

சநநி - உருக்கம், ஓர்மல்லிகை, தாய்.

சநந்தன் - ஓர் முனிவன்.

சநபதம் - நாடு, சனம்.

சநமேசயன் - ஓரரசன்.

சநம் - இனம், கூட்டம், மனிதர்.

சநோலோகம் - மேலேழுலகிலொன்று.

சநற்குமாரன் - பிரம்மபுத்திரர் நால்வரிலொருவன்.

சநாதனன் - ஓர் முனிவன்.

சநார்த்தனம் - ஓர் தலம்.

சநார்த்தனன் - திருமால்.

சநி - ஓர் கிரகம், சநியென்னேவல், சனிக்கிழமை.

சநித்தல் - பிறத்தல்.

சநிப்பு - பிறப்பு.

சநு - பிறப்பு.

சந்தனி - அகரு, சந்தணம், செஞ்சந்தணம்.

சந்ததம் - எப்பொழுதும்.

சந்ததி - கோத்திரம், சந்தானம், பிள்ளை, மகன், வமிசம்.

சந்தப்பா - இருபத்தாறெழுத்து நான்கடியாக வரும்பா.

சந்தம் - அழகு, ஆசை, கவி வண்ணம், கற்பரிபாஷாணம், குணம், சந்தனம், நிறம், வடிவு.

சந்தர்ப்பம் - சமயம்.

சந்தவிருத்தம் - ஓர் விருத்தம்.

சந்தனம் - இரதம், சந்தனமரம்.

சந்தனுசலம் - பொதியம்.

சந்தநு - பீஷ்மன் தந்தை.

சந்தநுமைந்தன் - பீஷ்மாசாரி.

சந்தாபம் - துன்பம், வெப்பம்.

சந்தானகரணி - அறுகு, முரிந்த வுறுப்புக்களையிணைக்கு மருந்து.

சந்தானசருவோத்தரம் - சிவாகம மிருபத்தெட்டினொன்று.

சந்தானதீபிகை - ஓர் சோதிட நூல்.

சந்தானம் - ஐந்தருவிலொன்று, சந்ததி.

சந்தானவுவமை - சிலேடையுவமை.

சந்தானி - வெண்காரம்.

சந்தி-இசைப்பு, காலை, சந்தியென்னேவல். நிலைமொழி வருமொழி சந்தித்தலால் உண்டாகிய தோன்றல் திரிதல் கெடுதல் சந்தியாம், பலத்தெருக் கூடுமிடம், மாலைநேரம், மூங்கில், யுகசந்தி.

சந்தித்தல் - கூடுதல்.

சந்திபண்ணுதல் - நியமநிட்டை முடித்தல்.

சந்திமான் - இடையெழுவள்ளலிலொருவன்.

சந்தியாகாலம் - மாலை நேரம், யுகசந்தி.

சந்தியை - இணக்கம், எல்லை, காலை மாலையின் வெளிச்சம், தியானம், மல்லிகை.

சந்திரகம் - செந்திருக்கம், நகம், பொன்வண்டு, மயிற்றோகைக் கண், மிளகு.

சந்திரகாந்தம், சந்திரமணி } சந்திரமுகத்து நீர் விடுங்கல்.

சந்திரகாம்புயம் - வெண்டாமரை.

சந்திரகுப்தன் - ஓரரசன்.

சந்திரசேகரன் - சிவன்.

சந்திரசைலம் - ஓர்மலை.

சந்திரஞானம் - சிவாகமமிருபத்தெட்டினொன்று.

சந்திரதிலகம் - சந்தனம்.

சந்திரநாகம் - இராகு.

சந்திரபீசம் - இந்திரகோபம்.

சந்திரபூரம் - பச்சைக்கர்ப்பூரம்.

சந்திரமண்டலம் - இலாடத்தானம், இது - மும்மண்டலத்தொன்று, பரிவேடம்.

சந்திரமதி - அரிச்சந்திரன் மனைவி.

சந்திரமானம் - சந்திரன் சஞ்சரிக்குமளவு.

சந்திரமௌளி - சிவன்.

சந்திரம் - கர்ப்பூரம், நீர், பொன், மயிற்றோகைக்கண்.

சந்திரரேகை - சந்திரகலை.

சந்திரலவணம் - இந்துப்பு.

சந்திரவட்டம் - அருகன் முக்குடையினொன்று, தவளச்சத்திரம்.

சந்திரவாதம் - ஓர் சமயம்.

சந்திரனாள் - திதி.

சந்திரன் - சிவன், நிலவு.

சந்திரிகை - சந்திரனொளி, பேரேலம்.

சந்திரேகம் - கார்போகஅரிசி.

சந்திரோதயம் - நிலவுதயம்.

சந்தில் - சனி.

சந்திவிக்கிரகம் - சத்துருசினேகம்.

சந்திவிசட்சணன் - சமாதானஞ்செய்தூதன்.

சந்து - இடுப்பு, சந்தனம், சிவன், தூதன், தூது, நாற்பெருங்கூடுமிடம், பிளப்பு, முடுக்குத்தெரு, மூட்டு.

சந்துசெய்தல் - பொருந்துதல்.

சந்துநயத்தான் - தூதுளை.

சந்தேகநிவாரணம் - தயாவிருத்திபதினொன்கினொன்று.

சந்தேகம் - அசாத்தியம், ஐயம், நிலையாமை.

சந்தை - பண்டமாற்றுக்காகக் கூடும் கூட்டம்.

சந்தோவிசிதம் } வேதாங்க மாறி
சந்தோவிசி } னொன்று.

சந்நத்தன் - போருக்காயத்தமானோன்.

சந்நாகம் - போர்க்கவசம்.

சந்நிதானம் - அண்மை, சமூகம், திருமுன், தேவசந்நிதி.

சந்நிதி - உயர்ந்தோன், சமுகம், திருமுகம்.

சந்நிபம் - உவமை.

சந்நியம் - போர்.

சந்நியாசம் - துறவு.

சந்நிரோதம் - தடை.

சந்மம் - பிறப்பு.

சந்மானம் - உபசாரம்.

சந்மினி - காளியேவல் செய்பவன்.

சபக்கம் } ஒத்தபட்சம்.
சபட்சம் }

சபதம் - ஆணை.

சபதி - உடனே, விரைவு.

சபம் - ஆல் முதலியவற்றின்வீழ், மூங்கில்.

சபரம் - கெண்டைமீன்.

சபலத்துவம் - கைகூடல்.

சபலம் - இரதம், இலாபம், சித்தி, நிறைவேறல், மின்னல்.

சபலை - மின்னல்.

சபாகம்பம் - சபைக்கோழை.

சபாசனம் - சங்கம், மரியாதை.

சபிண்டர் - பிதிர்பிண்டமிடுதற்குரியோர்.

சபினம் } வசம்பு.
சபீனம் }

சபை - சங்கம், சபைமண்டபம், திருச்சபை, புலவர்கூட்டம்.

சப்பன்னம் - ஐம்பத்தாறு.

சப்பியம் - சபைக்கேற்றது

சமக்கிருதம் - ஆரியமொழி.

சமங்கை - ஆடுதின்னாப்பாளை, வறட்சுண்டி, தொட்டால்வாடி.

சமட்டி - எல்லாம்.

சமணம் } புறச்சமயமாறி
சமண் } னொன்று.

சமணர் - அமணர்.

சமணி - இலவமரம்.

சமதக்கி - ஓர் ரிஷி.

சமதம் - பொறுமை.

சமதன் - சங்காத்தி.

சமதாளம் - நவதாளத்தொன்று.

சமதை - ஒப்பு, நான்கடியுமெழுத்துத் தொடுத்துவரும்பா.

சமத்தம் - ஆதாரம், எல்லாம், சரி.

சமநிலை - ஓர்வகைச்செய்யுள், நடுநிலை.

சமநிலைவெண்பா - சவலைவெண்பா (குறள் வெண்பா).

சமப்பால் - நெய்தநிலம், முல்லைநிலம்.

சமமுகம் - நியாணிப்பது போற்றலையசைவின்மை.

சமம் - உவமை, நடு, போர்.

சமயம் - அடையாளம், உடம்படிக்கை, எல்லை, காலம், சைவமுதலிய சமயம், தருணம், நியாயத்தீர்ப்பு, மார்க்கம்.

சமரசம் - ஒன்றிப்பு, சமாதானம், தொகைநிலை, வித்தியாசமின்மை.

சமரதம் - நால்வகை ரதத்தினொன்று.

சமரம் - போர், முட்பன்றி.

சமர்ச்சனம் - துடைத்தல்.

சமர்த்தகம் - ஈகை.

சமர்த்தன் - திண்ணியன்.

சமர்ப்பணம் } கொடை, உயர்ந்
சமர்ப்பணை } தோருக்குக் கொ
சமர்ப்பகம் } டுத்தல்.

சமலம் } அசுத்தம், மும்மலம்.
சமலை }

சமவாசம் - சகவாசம்.

சமவாதம் - தர்க்கம்.

சமவாயம் - கூட்டம், தற்கிழமை.

சமவிருட்டி - மிதமழை.

சமழ்த்தல் - நாணுதல்.

சமழ்ப்பு - நாணம்.

சமழ்மை - தாழ்வு.

சமனம் - வசம்பு, புழுக்கொல்லி.

சமனிசை - ஓரிசை.

சமன் - ஒப்பு, காலன், சமம், நடு.

சமாசம் - இலிங்கபாஷாணம், தொகைப்படுவது, மொழியாக்கம்.

சமாதானகரணி - உறுப்பிசை மருந்து.

சமாதானவுருவகம் - ஓரலங்காரம்.

சமாதி - அஷ்டாங்க யோகத்தொன்று, ஓரலங்காரம், சாவு, சமாதிதரிசனை.

சமாதியுப்பு - ஓர் மருந்துப்பு.

சமாது - ஊமத்தை.

சமாப்தி - முடிவு, முற்றுகை.

சமாயுதம் - ஓரலங்காரம்.

சமாயோகம் - ஏது, ஐக்கியம், கூட்டம்.

சமாலம் - பீலிக்குஞ்சம்.

சமாலுகம் - குறிஞ்சா.

சமானகரணி - இரணத்தழும்பு தீர்க்கு மருந்து.

சமானம் - உவமை.

சமானன் - ஐந்து வாயுக்களிலொன்று, (அது நாபியினின்று மெழுவது)

சமி - அருகன், சமியென்னேவல், வன்னிமரம், தணக்குமரம், வாழை.

சமிக்கை - சங்கேதப்பெயர், சயிக்கை, சீரணிக்கை, சமிதம், அமைதி, தீ, போர்.

சமிதி - கூட்டம், போர்.

சமிதை - ஓமவிறகு.

சமித்தம் - ஓமமண்டபம், தயை.

சமித்தல் - அடக்கல், ஏங்கிப்போதல், சகித்தல், சீரணித்தல், பதனழிதல், பொறுத்தல்.

சமித்து - ஓமவிறகு, கஞ்சா.

சமிப்பாகம் - கொன்றை.

சமியன் - அருகன்.

சமிலாகி - இப்பிலி.

சமீகம் - அம்பு, கோல், போர்.

சமீபம் - அண்மை, அருகு.

சமீரணம் - எறிதல், கடாரை, வீசல்.

சமீரணன் - காற்று, வாயுதேவன், வாயுபுத்திரன்.

சமீரம் - காற்று, போர்.

சமீரன் - காற்று.

சமு - சமூகம், படை, படையிலோர்வகை.

சமூலம் - கூட்டம், சந்நிதி, முன்னிலே.

சமுகவிலாஸம் - ஓர் பிரபந்தம்.

சமுச்சயம் - கூட்டம், சமுச்சய வுவமை.

சமுதயம் - இலக்கினம், கூட்டம், நாள், பிறப்பு, போர்.

சமுதாயம் - கூட்டம், சங்கம், பின்னணி, பொது, போர்.

சமுத்தி - நிறைவு, பாடும்படி எதிர் கொடுக்கு முன்னுறை வசனம்.

சமுத்திரம் - ஓரெண், கடல், படையிலோர் தொகை, பத்துலட்சங் கோடி, மிகுதி, முடக்கறுத்தான்.

சமுத்திரவருணச்சிலை - ஓர்கல்.

சமுத்திராந்தகம் - சாதிக்காய், சிறுகாஞ்சொறி, பருத்திச் செடி.

சமுப்பவம் - தைவேளை.

சமுற்கம் - ஓர் மிறைக்கவி.

சமூகம் - கூட்டம், சவை, முன்னிலை.

சமேதம் - கூடவிருத்தல்.

சமை - சமையென்னேவல், சேர்த்தல், படை, பொறுமை, வருடம், மனதையடக்கல்.

சமைதல் - அமைதல், இருதுவாதல், உண்டுபண்ணல், எத்தனமாதல், ஒழியல், பாகமாதல்.

சமைத்தல் - அமைத்தல், செய்தல்.

சம் - அழகு, அன்பு, கலக்கம், கூட, சீக்கிரம், சுகம், சுத்தம், நன்மை, பிறப்பு, பிறப்பைக் குறிக்கும் வடமொழியிறுதி, பூரணம், வடமொழி-முதனிலையிடை, வெற்றி.

சம்பகம் - செம்பகம்.

சம்படம் - சீலை, சோம்பல்.

சம்பக்குவேட்டம் - தாளமைந்தினொன்று.

சம்பந்தர் - சிவனடியாரிலொருவர்.

சம்பம் - இடி, எலுமிச்சை, தண்ணீர், மரவயிரம், வச்சிராயுதம்.

சசம்பரம் - எண்காற்புள், சீலை, நீர்.

சம்பரன் - ஓரசுரன்.

சம்பராரி - இந்திரன், மன்மதன்.

சம்பரி - நேர்வாளம்.

சம்பர்க்கார்த்தம் - சூரியகிரண காலத்துச் சசிரவிதேகம், சந்திரகிரண காலத்துச் சசிபூச் சாயைகளின் தேகம்.

சம்பவம் - அழிவு, இணக்கம், ஒன்றின் காரணம், ஓரளவை, கலப்பு, சம்பவப்பிரமாணம், தற்கிழமை, பிறப்பு.

சம்பளம் - எலுமிச்சை, கரை, களஞ்சியம், கூலி, செம்மறிக்கடா, பண்டாரம், பொறுமை, மாதாந்தக்கொடை, வழிச்சேறற்கு வேண்டும் பொருள், வழியுணவு.

சம்பன் - ஓரிராக்கதன்.

சம்பன்னகரணி - இரணந்தீர்க்கு மருந்து.

சம்பன்னம் - குறைவில்லாமை, நிறைவு, பாக்கியம்.

சம்பன்னன் - நிறைவுடையோன்.

சம்பாகம் - நன்றாய்ச் சமைத்தது, நாடு.

சம்பாடணை - கூடிப்பேசல்.

சம்பாதி - அருணன் மகன்.

சம்பாவிதம் - மிகுதி, சங்கேதத்துக் கடுத்தது.

சம்பிரதம் - சித்து.

சம்பிரதாயம் - உபாயம், குரு பாரம்பரியம், குலாசாரம், சாதுரியம், சாமர்த்தியம்.

சம்பிரமம் - பரங்கியப்பாஷாணம்.

சம்பிரேட்சியம் - சீர்தூக்கல்.

சம்பீரம் - எலுமிச்சை.

சம்பு - அயன், அரன், அரி, அருகன், இரவி, எலுமிச்சை, ஓர் புல், நரி, நாவல், சம்புத்தீவு.

சம்புகம் - நரி.

சம்புகேசுவரம் - திருவானைக்கா.

சம்புரோட்சணம் - ஆலயப்பிரதிட்டை.

சம்புதம், சம்பூதம் } பிறப்பு.

சம்பை - ஓர்தாளம், மின்னல்.

சம்போகம் - புணர்ச்சி.

சம்போதனை - விளிவேற்றுமை.

சம்மதம் - அங்கீகாரம், இணக்கம், உடன்பாடு, உத்திரவு, கோட்பாடு.

சம்மானம் - உபசரிப்பு, சருவ மானியம், சிறுதோணி.

சம்மேளனம் - கூட்டம்.

சம்வர்த்தம் - ஏழு மேகங்களிலொன்று, தருமநூல் பதினெட்டினொன்று.

சம்வற்சரம் - வருடம்.

சம்வாகம் - ஊர், மலையூர்.

சய - ஓராண்டு, போற்றி.

சயகண்டை - பரந்தவட்டிகை.

சயகம் - பூவரும்பு.

சயதாளம் - தாளமொன்பதிலொன்று.

சயத்தம்பம் - வெற்றித்தம்பம்.

சயத்திரதன் - ஓரரசன்.

சயந்தமாலை - ஓர் நூல்.

சயந்தம் - ஓர் நாடகத் தமிழ் நூல்.

சயந்தனம் - தேர்.

சயந்தன் - இந்திரன் மகன், சந்திரன்.

சயந்தி - தழுதாழை, நந்தக்காரி, வாதமடக்கி.

சம்பாளம் - நேர்வாளம்.

சயபேரிகை - வெற்றிப்பறை.

சயமகள் - துர்க்கை, மிதுன விராசி.

சயம் - ஆம்பல், இரவி, ஓர் வியாதி, கூட்டம், கெடுதல், கை, சருக்கரை, சாரம், சிதைவு, நட்டம், படுக்கை, மாலை, வெற்றி.

சயம்பு - அருகன், கடவுள், தானாக வாதல், சிவன்.

சயனம் - நித்திரை, நித்திரை செய்யுமிடம், புணர்ச்சி.

சயா - கடுக்காய், சயந்தி, வாத மடக்கி.

சயித்தகம் - ஓர் சிற்பநூல்.

சயித்திரம் - சித்திரைமாதம்.

சயிரேகம் - மேகவண்ணப்பூவுள மருதோன்றி மரம்.

சயிலம் - மலை.

சயினி - திப்பிலி.

சயை - சந்திரனுஸடைய மூன்று, எட்டு, பதின்மூன்றுவது திதிகள்.

சய்யோகம் - சையோகம்.

சரகம் - ஓர் வைத்தியநூல், தேனீ, வண்டு.

சரகண்டபாஷாணம்-ஓர்மருந்து.

சரகண்டம் - அம்புக்கூடு, அம்புத்தாள்.

சரகூடம் - அம்பாற் சமைத்த கூடம்.

சரக்கு - கறிச்சரக்கு, சாராயம், பொருள், மருந்துச்சரக்கு, வியாபாரப்பொருள்.

சரக்கொன்றை-ஓர் கொன்றை.

சரங்கம் - சரங்கபாஷாணம்.

சரசம் - இனியகுணம், காம சேஷ்டை, தடாகம், தேக்கு, வெண்ணெய்.

சரசா<br>சரச்சா } சரகாண்டத்தின்சா.

சரசி - இனியகுணமுள்ளவன், பரியாசக்காரன்.

சரசு - குளம்.

சரசுவதி - ஓராறு குணவதி, கலைமகள்.

சரசுவதிமாலை - ஓர் பிரபந்தம்.

சரச்சிறு - குறிஞ்சா.

சரடம் - ஓணான்.

சரடு - நூல் முதலியவற்றினிழை.

சரணம் - அரசு, அடைக்கலம், கால், வீடு, சிந்துமுதலிய செய்யுளடி, நமஸ்காரம், மயில், மயிற்றோகை, மருதநிலத்தூர்.

சரணாகதம்<br>சரணாகதி } புகலடைதல்.

சரணாயுதம் - கோழி.

சரணி - பாதை.

சரணியம் - அடைக்கலம், வீடு.

சரண் - அடைக்கலம், கால், புகல்.

சரண்புகல் - அடைக்கலம்புகல்.

சரதம் - மெய்.

சரதலம் - கிரககதியறிகைக்குறி.

சரதலவிநாடி - கிரககதியறிகைக் குறியை விளக்கும் விநாடி.

சரநூல் - சரசாத்திரம்.

சரபம் - எண்காற்புள், குறும் பாடு, தத்துக்கிளி, யானைக் கன்று, வரையாடு.

சரமணி - அரைப்பட்டிகை.

சரமம் - முடிவு.

சரமாதம்-மேடம், கடகம், விருச்சிகம், மீனம் என்னும் சரராசிகளைச் சேர்ந்த மாதம்.

சரம் - அசைவு, அம்பு, உக்கிர மச்சா, கொறுக்கை, சரகாண்டம், சுவாசம், தடாகம், நடை, நடையுளபொருள், நாணல், மணிவடம், மாலை.

சரயு - சரயுநதி

சரவணபவன் - குமரன்.

சரவணம் - ஓர் தடாகம், கொறுக்கை, தாமரை, நாணல்.

சரளம் - ஒழுங்கு, சிவதை, தகுதி, தடையின்மை, நேர்மை.

சரளி - எழு சுரங்களையு மாரோகணவரோகணமாகப்பயிலல், கோழை.

சரற்காலம் - மாரிகாலம்.

சராகம் - தடையின்மை, நேர் வழி, போர், வண்டு.

சராகை - வட்டில்.

சராங்கம் - உறுதி, தடையின்மை.

சராசந்தன் - ஓரரசன்.

சராசரம் - அவுலபாஷாணம், ஆகாயம், நடையுள்ளதுமில்லதும், பிரபஞ்சம்.

சராசனம் - அரசமரம், வில்.

சராயு - கருப்பாசயம்.

சராயுசம் - கருப்பையிற் பிறப்பன.

சராவம் - அகல், சலாகை, மூடி.

சரி - ஒப்பு, ஒருதன்மை, கூட்டம், கைவளை, சரியென்னேவல், நிதானம், பசு, பிசகின்மை, மலைச்சாரல்வழி.

சரிகை - சரிதல், பொன்முதலியவற்றின் சரிகை.

சரிதம் - சரித்திரம், சுபாவம், நடத்தை.

சரிதல் - சாய்தல், நழுவுதல், பின்னிடல்.

சரிதை - ஒழுக்கம், சரித்திரம், நாற்பாதங்களிலொன்று, பிச்சை, வரலாறு.

சரித்தல் - சரியச்செய்தல், சஞ்சரித்தல், நடத்தல்.

சரித்திரம் - இயல்பு, ஒழுக்கம், கதை, சரிதம், நடக்கை.

சரித்திரை - புளியமரம்.

சரித்து - கங்கை.

சரிபம் - அசோகு.

சரியம் - சிறு நன்னாரி.

சரியை - ஒழுக்கம், சரிதை, பிச்சை.

சரிவு - சாய்வு.
சரிளப்பா - வெண்கடுகு.
சரிற்பதி - சமுத்திரம்.
சரிற்புதல்வன் - வீமென்.
சரீரத்திரயம் - முத்தேகம். (தூல சரீரம், சூக்குமசரீரம், காரண சரீரம், அல்லது யாதனுசரீரம் பூதனு சரீரம், பரிணுமசரீரம்.)
சரீரம் - உடல்.
சரு - சோறு, ஹவிர்பாகம்(தேவ ருணவு)
சருகு - உணர்ந்தஇலை.
சருக்கம் - அத்தியாயம், இலக்கி யச்செய்யுட்கூறுபாடு.
சருக்கரை - கன்னிலம், சருக் கரை, சிறு துண்டு.
சருச்சரை - எண்வகை ஊறுகளி லொன்று.
சருச்சை, சர்ச்சை - இகழ்ச்சி.
சருத்தி - தேரிடக்கியம், விரு துக்கொடி.
சருப்பம் - பாம்பு.
சருப்பராசி - நாணல்.
சருப்பராச்சி - சங்கங்குப்பி.
சருமம் - தோல், தோற்பாய், பரிசை, புளியம்புறணி.
சருமர் - சக்கிலியர்.
சருமன் - சக்கிலியன், சற்குணன்.
சருவசங்கபரித்தியாகம் - முற் றத்துறத்தல்.
சருவசாட்சி - கடவுள்.
சருவசாதகம் - வேங்கைமரம்.
சருவசித்தி - அட்டமாசித்தி.
சருவசித்து - ஓர் வருடம்.
சருவதா - எப்பொழுதும்.
சருவதாரி - ஓர் வருடம்.
சருவதோபத்திரம் - மிறைக் கவியினென்று.
சருவம் - எல்லாம்.
சருவரீ - இரவு, இருள், பெண், மஞ்சள்.
சருவல் - சருவுதல், சரசஞ் செய்தல்.
சருவாணி - பார்வதி.
சருவுதல் - கிட்டுதல், கொழு விப்போதல், பொறுதல், மரு வுதல்.
சருவேச்சுரன் - கடவுள்.
சரேந்திரன் - வில்லில் வல்லன்.
சரேலெனல் - விரைவுக்குறிப்பு.
சரை - ஓராக்கி, நரை.
சரோசம், சரோருகம் - தாமரை.
சரோருகன் - பிரம்மன்.
சர்க்கம் - சருக்கம்.
சர்ச்சரை - கரடுமுரடு, எட்டூறு களிலொன்று.
சரோவரம் - தடாகம்.
சர்வதா - எப்பொழுதும்.

சலகந்தி - சகத்திரபேதி.

சலகம் - சங்கு, நீராடல், நீருள்ள வீடு, பொட்டுப்பூச்சி.

சலகாமீ - நீரிலஞ்சாதிறங்கும் குதிரை.

சலகை - உலுப்பை, ஓர்தானிய அளவு, தெப்பம், மரக்கலம், வெளிப்பாடு.

சலக்கிரீடை - நீர் விளையாட்டு.

சலக்கு - நவச்சாரம்.

சலக்கூர்மை - அமரியுப்பு.

சலசம் - தாமரை, நீரிற்தோன் றியமுத்து.

சலசயனன் - திருமால்.

சலசரம் - மீனவிராசி, மீன்.

சலசருப்பிணி - நீரட்டை.

சலசலப்பு
சலசலெனல் } ஓரொலிக்குறிப்பு.

சலசலோனன் - திருமால்.

சலசூசி - சலசருப்பிணி.

சலசை - இலக்குமி.

சலஞ்சலம் - வலம்புரிச்சங்கு.

சலணி - வால்மிளகு.

சலதரம் - குளம், மேகம்.

சலதளம் - அரசு.

சலதி - கடல், பொய்சொல்லு பவன்.

சலத்தம்பம்
சலத்தம்பனம் } கலைஞான! மறு பத்து நான்கி னொன்று.

சலநிதி - கடல்.

சலபதி - சமுத்திரம், வருணன்.

சலபம் - விட்டிற்பறவை.

சலமலம் - நீர்ப்பஞ்சு.

சலமை - குளிர்மை, சன்னி.

சலம் - அசைவு, ஓர் வாசனை, குளிர், சலஞ்சாதித்தல், தணி யாக்கோபம், தீநடக்கை, நீர், பன்றிமுள், பொய், வெட்டிவேர், வைராக்கியம்.

சலம்புரி - சங்கு.

சலரசம் - உப்பு.

சலராகம் - வெண்சிவப்பு.

சலராசி - கடல்.

சலலம்
சலலி } முட்பன்றிமுள்.

சல்லியம் - முட்பன்றி.

சலவகு - இலவம் பிசின்.

சலவர் - நெய்தநிலமாக்கள்.

சலவை - சீதளம், வெளுத்தல்.

சலனம் - அசைவு, காற்று.

சலனன் - காற்று.

சலன் - கால்.

சலாகு - சலாகை.

சலாகை - அகன்மணி, அம்பு, ஈட்டி, ஊசிக்காந்தம், சலாகு, சூதாடுகருவி, நாராசம், பன்றிமுள்.

சலாங்கு - பொய்யாப்புள்.

சலாசயம் - நீர்நிலை.

சலாம் - வணங்கல்.

சலிகை - அதிகாரம், செல்வாக்கு, தத்துவம், நீரட்டை, பெருமை.

சலித்தல் - அசைவுகொள்ளுதல், இளைத்தோய்தல், ஒலித்தல், சலனமுறல், துக்கப்படுதல்.

சலியாமை - அசைவின்மை, இளையாமை.

சலிலம் - நீர்.

சலினி - திப்பிலி.

சல்லகி - ஆத்திமரம், இலவு, கருவாப்பட்டை, குந்துரு, கொசுகு, தளிர், முட்பன்றி.

சல்லடை - தானியமுதலியவற்றைச் சல்லுங்கருவி, துவாரம்.

சல்லம் - நார், முட்பன்றி.

சல்லரி - கைத்தாளம், திமிலைப் பறை, பம்பைமேளம்.

சல்லாபம் - கூடிப்பேசுகை, சம்பாஷணை, நாடகவகைப் பத்தினொன்று.

சல்லி - தகட்டுக்கல், ஆக்கங்கள்.

சல்லியகரணி - ஆயுதத்தாற்பட்ட காயமாற்று மருந்து.

சல்லியம் - அம்பு, ஆணி, ஆயுதநுணி, எலும்பு, கலக்கம், சச்சரவு, செஞ்சந்தணம், பாஷாணம், முட்பன்றி, முள்.

சல்லியன் - சுக்கிரன், நகுலஸஹாதேவன் மாமன்.

சவட்டல் - அழித்தல், துவட்டல், மிதித்தல், மெல்லல், வளைத்தல், விழுங்கல்.

சவம் - சீக்கிரம், பிசாசம், பிணம்.

சவரம் - ஓர் பொற்காசு, சாமரம், நீர், மயிர்.

சவரர் - கீழ்மக்கள், வேடர்.

சவரி - சாமரம், குறட்டை.

சவரிலோத்திரம் - ஓர் மருந்து, குறட்டைப்பருப்பு.

சவலம் - சபலம், பயன்.

சவலை - இளமை, சவலைவெண்பா, மெலிவு.

சவளம் - ஈட்டி, சங்கபாஷாணம்.

சவளை - வங்கமணல்.

சவற்சலம் - கல்லுப்பு.

சவனிகை-இடுதிரை, திரைச்சீலை.

சவாப்பு - ஜவாப்பு.

சவி - அழகு, ஒளி, கொடி, சரமணிக்கோவை, செவ்வை, பெலன், மிளகு.

சவிகம் - திப்பிலிக்கொடி, விஷ்ணுக்கிராந்தை.

சவிகற்பக்காட்சி - விகற்பக்காட்சி, அது - பெயர், சாதி, குணம், கன்மம், பொருளென்னும் ஐந்தும் விளங்கவுணருமறிவு.

சவிகற்பம் - விகற்பம்.

சவிசங்கம் / சவசங்கவாதம் } ஓர் வாதரோகம்.

சவிதா - சூரியன்.

சவித்ரு - துவாதசாதித்யர்களி லொருவன்.

சவுகந்தி - வசம்பு.

சவுக்கம் - கசை, சவுக்கை.

சவுக்காரம் - ஓர்வகைச் சரக்கு.

சவுக்கிதார் - போலீஸ் ஆபீஸர்.

சவுக்கி - காவற்காரன் வீடு.

சவுக்கு - அடிக்குங்கயிறு.

சவுக்கை - ஆயத்துறை, இளைத் துப்போதல், இளைப்பாறு மிடம், சதுக்கம், சவுக்கம், சவுத்தல், விலைநயம்.

சவுக்கைதார் - தீர்வைக்காரன்.

சவுசம் - சுத்தி, செளசம், தூய்மை.

சவுசன்னியம் - உறவு, செளசன் னியம், பட்சம்.

சவுண்டி - திப்பிலி.

சவுதரித்தல் - ஆதாயப்படுத்தல், ஆயமாக்குதல், சம்பாதித்தல், தாங்கல்.

சவுபாக்கியம் - செளபாக்கியம், நித்தியயோகத்தொன்று, வாழ்வு.

சவுமம் - சிற்பநூன் முப்பத்தி ரண்டினொன்று.

சவை - அம்பலம், கூட்டம், புல வர் சங்கம்.

சவைமகள் - மிதுனவிராசி.

சவ்வியசாசி - அருச்சுனன்.

சவ்வியம் - இடப்பக்கம், மிளகு.

சவ்வீரம் - ஓர்தேசம், ஓர்மருந்து, காடி.

சழக்கு - அறியாமை, ஒலிக் குறிப்பு, குற்றம், பொய்.

சளகந்தம் - வசம்பு.

சளசளெனல் - ஈரடுக்கொலிக் குறிப்பு.

சளம்-துன்பம், பொய், வஞ்சனை.

சளி - கோழை, சலதோஷம், பிசின்.

சளுகம் - அட்டை.

சளுக்கு - கீழ்மை, பிலுக்கு.

சளுக்குவேந்தர் - சாளுக்கிய வேந்தர்.

சறுக்கல் - வழுக்கல்.

சறுதாகம் - வேங்கைமரம்.

சற்காரம் - உபசாரம்.

சற்சங்கம் - நல்லோர்கூட்டம்.

சற்சலம் - தெளிநீர்.

சற்சுகாதி - பெருமருந்து.

சற்பாத்திரம் - உத்தமன், ஒழுக்க முடையோன்.

சற்று - அற்பம், எளிது, கொஞ்சம், சற்றே.

சன்மதி - ஓர் முனி.

சன்மானம் - உபசாரம்.

சன்மித்தல் - பிறத்தல்.

சன்மினி - காளியேவல் செய் வள்.

சன்னம் - குறுணி, சிறுமுத்து, சிறுமை, சிற்றரும்பு, நேர்த்தி, மறைக்கப்பட்டது, மென்மை.

சன்னிநாயகம் - கருஞ்சீரகம், தும்பைப்பூண்டு.

சன்னாகம் - போர்க்கவசம்.

சன்னி - சீதநோய்.

சன்னிபாதம் - இறங்குதல், ஓர் நோய், கலப்பு, கூட்டம், கூத்தினோர் வகை.

சன்னியம் - கடைவீதி, போர், மரமஞ்சள்.

சன்னிரோதம் - தடை.

சன்னை - சமிக்கை, சரசம், தேரியக்கு மரம்.

## சா

சா - ஓரெழுத்து, சாவென்னேவல், பேய், மரணம்.

சாகசம் - ஓர் பட்சி, கொடுமை, துணிவு, மெய்ம்மை, யானை, வீரம்.

சாகதன் - சாகசன், வீரம்.

சாகமனம் - உடன்கட்டையேறல்.

சாகம் - ஆடு, இலை, கீரை, சுகவருடம், சாகதீவு, சிறுகீரை, தாழை, தேக்கமரம், வெள்ளாட்டுக்கடா.

சாகரம் - கடல், கோடாகோடி, துயிலொழிதல், பதினாயிரங் கோடி, யானையின்கன்னமதம்.

சாகரி - ஓரிராகம்.

சாகாடு - உருள், உரோகிணி, பண்டி, வண்டில்.

சாகாதுண்டம்-அகில்,சாகாமூலி.

சாகாமிருகம் - அணில், குரங்கு.

சாகாமூலி - சீந்தில்.

சாகி - எச்சமரம், திராய், மரப்பொது.

சாகினி - சிறுகீரை, சேம்பு.

சாகேதம் - அயோத்தி.

சாகுபடி - வேளாண்மை.

சாகை-இலை, கஞ்சி, சாதல், புயம், மரக்கொம்பு, வட்டில், வேதம்.

சாக்கியநாயனர் - எறிபத்தர்.

சாக்கியம் - கூட்டம், சாட்சி, புத்தமதம்.

சாக்கிரதை-கவனிப்பு,சுறுசுறுப்பு

சாக்கிரம் - ஓரவத்தை, நனவு.

சாக்கு - பந்தி, போக்கு.

சாக்கை - கருமத்தலைவன்,புரோஹிதன்.

சாங்கம்-அவயவத்தோடுகூடியது, ஒழுங்கு, சங்கபாஷாணம், சங்கொலி,சிந்தில்,பூரணாங்கம்.

சாங்கரன் - உதவியாளன், தோழன்,கூடச்சூதாடுவோன்.

சாங்கரியம் - கலப்பு.

சாங்கியம்-ஓர்மதம், கணக்கிடுதல், கபிலர் செய்தநூல்.

சாங்கியாயகீயம் - ஒருபண்டிதம்.

சாங்குகௌளரி - புளிநறளை.

சாசங்காரம் - சமீகரணம்,பூர்த்தி செய்தல்.

சாசபுடம் - பஞ்சதாளத்தொன்று.

சாசனம் - அரசனாணை, ஆணை, இறையிறுக்காதவூர்,தண்டனை தானபத்திரிகை, முறி, வலையர்சேரி, வெண்கடுகு.

சாசி - திராய்.

சாசிபம் - தவளை.

சாசுவதம் - அசையாநிலை, நிச்சயம், நித்தியம்.

சாச்சா - சவரிலோத்திரம், குறட்டை.

சாடி - ஆண்மயிர், கும்பவிராசி, சீலை, தாழி, திப்பிலி.

சாடிலி - தசைதின்போன்.

சாடு - சாடென்னேவல், சாதுர்யம், பண்டி, புலவர் கூட்டம்.

சாடுதல் - அசைத்தல், அடித்தல், ஒடித்தல், சாய்தல், விலகுதல்.

சாடை - குறிப்பு, சமிக்கை, சாய்வு.

சாட்குலி - தசையுண்போன்.

சாட்டியம் - வஞ்சம், வருத்தம்.

சாட்டுவம் - நாபி.

சாட்டுவலம் - பசும்புல்தரை.

சாணம் - ஆப்பீ, சாணைக்கல்.

சாணை - சாணைக்கல், தீட்டுக்கல். தீட்டாங்கல்.

சாண் - அரைமுழம், பன்னிரங்குலவளவு.

சாதககுணசலம் - கந்தகம்.

சாதகச்சீர்த்தி-இரத்தபாஷாணம்

சாதகதிசை - பிறவி நீங்காதிருக்குங்காலம்.

சாதகபுட்பம் - கடனுரை.

சாதகம் - காரியசித்தி, சனனமெழுதல்,சாதகப்புள், துணைக்காரணம், பயிர்ச்சி, பிரமாணம்,பூதகணம், வானம்பாடி.

சாதகராகத்தி - கோழித்தலைக்கந்தகம்.

சாதகருமம் - பிறந்தவுடன் செய்யுமோர் சடங்கு.

சாதகும்பம் - பொன்.

சாதகூத்திரம் - வைடூரியம்.

சாதம்-உண்மை, சோறு, பிறப்பு, பூதம்.

சாதரூபம் - நால்வகைப்பொன்னிலொன்று, பொன்.

சாதரூபி - அருகன்.

சாதல் - இறத்தல்.

சாதவண்டு - கறிப்புடல்வண்டு.

சாதவாகனன் - ஐயனார், சாலிவாகனன்.

சாதவேதம் - கொடுவேலி, நெருப்பு.

சாதனம் - அடையாளம், இடம், உறுதி, ஊர், ஏது, ஐக்கியம், கருவி, சித்தியாதல், செல்வம். சேனை, தகுதி, துணைக்காரணம், பதார்த்தம், பஸ்மமாக்கல், பயிற்சி, முயற்சி, மெலிவு, வீடு.

சாதனசதுட்டயம் - முமுக்ஷுக்கள் அனுசரிக்க வேண்டிய நான்கு விஷயங்கள்.

சாதனசாத்தியம்-காரணகாரியம்.

சாதனுபாசம் - பூர்வாபரணங்களிலுள்ள தப்பு.

சாதனை-சலஞ்சாதித்தல், பொய், விடாமுயற்சி.

சாதாக்கியம் - சிவதத்துவமைந்திறைன்று.

சாதாரண - ஓர் வருடம்.

சாதாரணம் - இலேசு, பொது.

சாதாரி - ஓர்பண், முல்லைநிலத்திராகம்.

சாதாவேலி - தண்ணீர்விட்டான்.

சாதான்மம் - ஓர்தருமநூல்.

சாதி - அந்தணர் முதலிய நால்வகைச் சாதிகளால் வரு பெயர், ஆடாதொடை, உயர்வானது, கள், குலம், சாதிமரம், சாதியென்னேவல், சிறுசம்பகம், சீந்தில், தாளப்பிரமாணம் பத்திறென்று, திரள், தேக்கமரம், பிரம்பு, பிறப்பு, மரப்பொது.

சாதிக்காய் - பஞ்சவாசத்தொன்று.

சாதிசம்-சாதிக்காய், நறும்பிசின்.

சாதிப்பாய் - பிரப்பம்பாய்.

சாதிரம் - விஷ்ணுக்ராந்தை.

சாதிரேசம் - குங்குமப்பூ.

சாதினி - கம்பளிச்செடி, பீர்க்கு.

சாது - அருகன், சற்குணத்தோன், சாந்தம், மெத்தளவு.

சாதுரியம் - வாய்ச்சாலம்.

சாதுர்ப்பாகம் - நாலிலொன்று.

சாதேவம் - குழிநாவல்.

சாதேவன் - பஞ்சபாண்டவரிலொருவன்.

சாத்தல் - அப்புதல்.

சாத்தன் - அருகன், எருதின் பெயர், ஐயனார், ஓர் நூலாசிரியன், தண்டிப்போன், வயிரவன்.

சாத்தாவாரி - நீர்மீட்டான்.

சாத்தியம்-அனுகூலம், சாதிக்கத்தக்கது, நிகமனம், நித்திய யோகத்தொன்று.

சாத்தியதேவர் - வியாசர்.

சாத்திரம் - நூல், சோதிடம், வேதாகம முதலியன.

சாத்துவிகம் - முக்குணத்தொன்று.

சாத்தேயம் - சத்தியை வழிபடுவோர்.

சாத்விகம் - சாந்தகுணம்.

சாத்விகன் - சாந்தன்.

சாந்நித்தியம் - சமுகம்.

சாந்தம் - அமைதி, குளிர்ச்சி, சந்தனம், சாணி, சாந்தி, நவரசத்தினொன்று, பொறுமை.

சாந்தரூபம் - யோகநிஷ்டை.

சாந்தவாரி - தண்ணீர்மீட்டான்.

சாந்தன் - அருகன், புத்தன், சாந்தமுடையோன்.

சாந்தாற்றி - கால்செய்வட்டம், சிற்றாலவட்டம், பீலிக்குஞ்சம்.

சாந்தி-கழிப்பு, சாந்தம், தணிவு.

சாந்திரமானம் - சாந்திரமாதங்களால் வரும் வருடம்.

சாந்திரம் - நெருக்கம், நிறைவு, சந்திரசம்பந்தம், சந்திரகாந்தம்.

சாந்திராயணம் - ஓர் விரதம், சந்திர அயனம்.

சாந்து-சந்தனம், சாந்தம், பராகம்.

சாந்தை - கங்கை, பூமி, பொறையுடையாள்.

சாந்தோக்கியம் - உபநிடதமுப்பத்திரண்டினொன்று.

சாபம் - குட்டி, சபித்தல், தனுவிராசி, வில்.

சாபலம்-அநித்தியம், நிலையின்மை.

சாபலன் - ஆட்டுவொணியன்.

சாபல்லியம் - சபலம், சித்தி.

சாபறை - நெய்தநிலப்பறை.

சாபாலம் - ஓர்முனிவன், நூற்றெட்டுஉபநிடதங்களிலொன்று.

சாபேட்சை - மிகுவாஞ்சை.

சாப்பறை - பிணப்பறை.

சாப்பிடு - புசி.

சாப்பை - திராணியற்றவன், புற்பாய்.

சாமகானம் - மூன்றாம்வேதம், பாடல்.

சாமந்தம் - ஓரிராகம்.

சாமந்தர் - அரசர், அமைச்சர், தோழர், படைத்தலைவர்.

சாமந்தி - ஓர் பூ.

சாமம் - அறுகு, இரா, ஏழரைநாழிகைகொண்டகாலம், ஒருபாயம், கருமை, குயில், சமாதானம், பச்சை, பஞ்சம், பொன், மூன்றாம்வேதம், யாமம்.

சாமரம் - கழு, சவரி, சிவதை.

சாமளம் - பச்சை.

சாமளாதேவி, சாமளை - உமை, காளி.

சாமன் - காமன்றம்பி, புதன்.

சாமான் - தளவாடம்.

சாமானியம் - பொது, முழுமை.

சாமி - அருகன், கடவுள், குரத்தி, குரு, தலைவன், தலைவி, தாய், பொன், முருகன், மூத்தோன்.

சாமித்திரம் - ஏழாம்வீடு, மாடு கட்டடல், யாகபாத்திரம்.

சாமித்துரோகி - கடவுளுக்கு அல்லது எஜமானனுக்கு இரண்டகம் செய்வோன்.

சாமீகரம் - பொன்.

சாமீபம் } அண்மை, சமீபம்,
சாமீப்பம் } கடவுளின் சமீபத்தில் வாழ்தல்.

சாமுண்டி - அவுரி, காளி, துர்க்கை.

சாமுத்திரிகம் } அங்க
சாமுத்திரிகவிலக்கணம். } விலக்கணம்.

சாமை - ஓர் பயிர், கற்சேம்பு.

சாமோபாயம் - நான்குபாயத்தினொன்று, அஃது இணக்குமுபாயம்.

சாம்பம் - யானை நெருஞ்சில்.

சாம்பராயம் - இடர், சமீபம், போர், யானைக்கட்டு.

சாம்பராயிகம் - யுத்தம்.

சாம்பர் - சாம்பல்.

சாம்பல் - ஒடுங்கல், குவித்தல், சாம்பர், நாவல், நீறு, பழம்பூ.

சாம்பவதீட்சை - திருவடித்தீட்சை.

சாம்பவம் - அட்டாதசவுபபுராணத்தொன்று.

சாம்பவன் - அரன், இராமன் படைத்தலைவரி லொருவன், சிவனடியான்.

சாம்பவி - பார்வதி, பெருநாவல்.

சாம்பவியார்விந்து - கௌரி பாஷாணம்.

சாம்பிராச்சியம் - அரசனுக்கினை, செல்வம், தத்துவம், பாக்கியம், மேன்மை.

சாம்பிராணி - வாசனைக்குங்கிலியம்.

சாம்பு - சாம்பென்னேவல், சேக்கை, பறை.

சாம்புதல் - அடித்தல், இழுத்தல், ஒடுங்குதல், கூம்புதல்.

சாம்புநதம் - ஓராறு.

சாம்பூநதம் - பொன்.

சாம்வத்தகம் - சம்வர்த்தகம்.

சாயகம் - அம்பு, வாள்.

சாயங்காலம் - அந்திப்பொழுது.

சாயம் - அந்திநேரம், அம்பு, சாயவேர், நிறம்.

சாயரி - ஓர்பண்.

சாயல் - அழகு, ஒப்பு, சாய்தல், தோற்றம், நிழல், நிறம், நுண்மை, மஞ்சள், மனிதர் படுக்கை, மாதிரி, மேன்மை.

சாயவேளாகொல்வி - கொல்லித்திறத்தினொன்று.

சாயனதம் - சாயானதம்.

சாயனம் - கள், கிரகபுடம், ரசாயனம்.

சாயாகௌளம் - ஓரிசை.

சாயாகிரகம் - கேது.

சாயாதனயன் } சனி.
சாயாபுத்திரன் }

சாயாதேவி - சூரியன் மனைவி.

சாயாபதி - சூரியன்.

சாயாபுத்திரன் - சனி.

சாயானதம் - ஓந்தி.

சாயித்தியம்-புலமை, சேர்மானம்.

சாயுச்சியகாரர் - இலிங்கதாரிகள்.

சாயுச்சியம் - ஒன்றிப்பு, நான்காம் பதவி.

சாயும்உகரம் - குற்றியலுகரம்.

சாயை - சூரியன்தேவி, நிழல், நிறம்.

சாய் - ஓர் வகைக்கோரை, கோரைக்கிழங்கு, சாயென்னேவல்.

சாய்தல் - அசைதல், அழியல், இரிதல், இறத்தல், சரிதல், சாய்தல், நுண்மை.

சாய்த்தல்-சரித்தல், திருப்புதல்.

சாய்ப்பு - இறப்பு, சரிப்பு, சார்மானம், தாழ்வு, பத்தி, வெற்றிலை.

சாரங்கதரன் - ஓரரசன்.

சாரங்கம் - ஒரிசை, கர்ப்பூரம், சங்கு, சாதகப்புள், திருமால் வில், மயில், மான், மேகம், யானை, வண்டு.

சாரங்கி - ஓர்வகையாழ்.

சாரசம் - அவுபலபாஷாணம், இனியவோசை, குருகு, தாமரை, வெண்ணுரை.

சாரசியம் - இனிமை.

சாரணர் - சமணமுனிவர், வேவுகாரர்.

சாரதம் - இனியபண், ஓர்பூடு.

சாரதி - தேர்ப்பாகன், புலவன்.

சாரத்திரி - வேசி.

சாரத்துவம் - விபசாரம்.

சாரமேயம் - நாய்.

சாரம் - இரசம், இலுப்பை, இனிமை, உருக்கு, எதண்டை, கிரகசாரம், சத்து, நடை, நவச்சாரம், நிலாமுகிப்புள், பயன், பாலடை, மரவயிரம், மேடு, விபசாரம்.

சாரர் - வேவுகாரர், சோரநாயகர்.

சாரல் - கிட்டல், குளிர்காற்று, சாருதல், தூறல், மருதயாழிசை, மலைப்பக்கம்.

சாரவாக்கியம் - கிரகமானம்.

சாரி - அஞ்சனபாஷாணம், உலாப்போதல், சூதாடுகருவி, சூறைக்காற்று, நடை, பரதவுறுப்புளொன்று.

சாரிகை - கடமை, கவசம், சங்கம், சுழல்காற்று, சூதாடு கருவி, நாகணவாய்ப்புள், யாழ்வாசிக்குங்கருவி, வட்டமாயோடல்.

சாரிசம் - கறியுப்பு.

சாரிசாதன் - கத்தூரிமிருகம்.

சாரித்திரம் - ஒழுக்கம், கதை, சரித்திரம், வரலாறு.

சாரிபம் - நன்னாரி.

சாரியம் - எட்டி.

சாரியல் - இந்துப்பு.

சாரியை - பகுதி விகுதிகளைச் சார்ந்து இசைந்து நிற்பது சாரியை, புறக்கூத்துக்குரிய வாடலுளொன்று.

சாரியையுருபுகள் - அன், ஆன் முதலிய சாரியையுருபுகள்.

சாரீரம் - ஆன்மா, இனியகுரல், சரீரசம்பந்தமானது, வேதாந்த நூல்.

சாரு - அழகு, கிளி.

சாருகன் - கொலை செய்வோன்.

சாருசம் - கல்லுப்பு.

சாருவபூமம் - வடதிசையானை.

சாருவாகம் - உலகாயதமதம்.

சாரூபம் } சாரூப்பியம் } இணக்கம், ஓர் பதவி, அஃது-கடவுளுருப்பெற்றிருக்குதல், சாரல், பொன்.

சாரூரகம் } சாரூரசம் } கல்லுப்பு.

சாரை - ஓர்பாம்பு.

சாரோசி - நவச்சாரம்.

சார் - அணைக்கரை, அழகு, இடம், இளம்பருவமான வோலை, எழுனுருபு, சாரென்னேவல், தட்டி, தாழ்வாரம், திண்ணை, பகுதி, பக்கம், வகை.

சார்ங்கபாணி - திருமால்.

சார்ங்கம் - திருமால்வில், வில்.

சார்ச்சி - இணக்கம், சார்தல்.

சார்தல் - கலத்தல், கிட்டல், சேர்தல்.

சார்த்தல் - இணைத்தல், கலத்தல், சாரச்செய்தல், வீழ்த்தல்.

சார்த்தூலம் - ஒருவகைப்பண், புலி.

சார்ந்தார் } சார்ந்தோர் } உறவோர்.

சார்பறுத்தல் - துறவு.

சார்பிலார் - பகைவர், முனிவர்.

சார்பு - அடைக்கலம், அணைவு, ஆதரவு, இடம், இணைப்பு, உதவி, உரிமை கடவுள், கிட்டுகை, குணம், சேர்பு, தயவு, தன்மை, பற்று, புடைநூல்.

சார்புநூல் - முதனூல் வழிநூல்களதுபொருண் முடிபொரு வாறுஒத்துத்திரிபுவேறுடைய நூல்.

சார்பெழுத்து - சார்ந்து வருமெழுத்து, அது, உயிரையு மெய்யையுஞ் சார்ந்துவருவது.

சார்வபூமம் - வடதிசையானை.

சார்வபூமன் - ஒருவனைப் பணியாதுலகாள்வோன்.

சார்வாகம் - உலகாயத மதத்தினோர் பேதம்.

சார்வாரம் - கச்சின்கடைக்கயிறு, மூன்றூனை.

சார்வு - ஆசைப்பெருக்கம், இடம், சார்வு, துணை, பற்று.

சால - மிக, மிகவும்.

சாலகடங்கர் - இராக்கதர்.

சாலகம் - அதலலோகம், இளம்பூவரும்பு, உபாயம், ஓர்தேசம், கூட்டம், சலதாரை, சிலந்திப்பூச்சிவலை, சிறுகுறிஞ்சா, பலகணி, பறவைக் கூடு, பெருமை, வலை.

சாலக்கிராமபருவதம் - ஓர்மலை.

சாலக்கிராமம் - ஓர்வகைக்கல்.

சாலம் - அரண், ஆச்சாமரம், இளம்பூவரும்பு, கடம்பு, கூட்டம், சவை, செடி, தாழ்வாரம், பலகணி, பெருமை, மரப்பொது, மாயவித்தை, வஞ்சகம், வலை, விகற்பம், விலங்கின் கூட்டம்.

சாலர் - நெய்த நிலமாக்கள்.

சாலல் - மிகல், மேன்மையுடைத்தாதல்.

சாலவம் - ஐம்பத்தாறு தேசங்களிலொன்று.

சாலாங்கம் - ஓர் பாஷாணம்.

சாலி - அருந்ததி, ஓரீற்றுச்சொல், கவசம், கள், நாவி, நெல், நென்மணி, புழுகுசட்டம், மிக்கோன்.

சாலிகை - கவசம்.

சாலிவாகனன் - ஓரரசன், கலிசாகாப்தத்தைத்துவக்கியவன்.

சாலினி - கள்வாணிச்சி, தேவர்க்காடுபவன், மீர்க்கு.

சாலுதல் - நிறைதல்.

சாலுகம் - சாதிக்காய்.

சாலூரம் - தவளை, மேன்மை.

சாலேகம் - சந்தனம், சிந்தூரம் பலகணி, பூவரும்பு.

சாலேயம் - கம்புளிப் புடவை, சிறு தேக்கு, நெல்விளைநிலம்.

சாலை - அரசன்மனை, அறத்தின்சாலை, குதிரைப்பந்தி, கோயில், சபைகூடுமிடம், சாலை, தவச்சாலை, யாகசாலை.

சாலோகம்<br>சாலோக்கியம் } ஓர் பதவி.

சால் - சாலென்னேவல், நீர்ச்சால், படைச்சாரம், மிகுதி.

சால்பு - அறிவு, ஊக்கம், கல்வி, குணம், நிறைவு, மாட்சிமை, மேன்மை, மேம்பாடு.

சால்வம் - ஓர்தேசம்.

சாவகம் - ஓர் தேசம், பதினெண்பாடையிலொன்று.

சாவகர் - சமணர்.

சாவகன் - சனி.

சாவக்குறிஞ்சி - குறிஞ்சித்திறத்திலொன்று.

சாவகாசம் - வசதி, விரைவின்மை.

சாவணம் - ஓர்கருவி, குழாய், நாணல், முப்பதுஸௌர நாட்கள் கொண்டமாதம்.

சாவதானம் - கவனம், நிதானம், மிருது, விழிப்பு.

சாவற்பண்ணை - கோழிக்கொண்டைச்செடி.

சாவி - சப்பட்டை, திறவுகோல்.

சாவித்திரி - உமை, சரச்சுவதி, சூரியகிரணம்.

சாவு - சாவு, பிசாசம், மரணம்.

சாவுள் - சவர்க்காரம்.

சாவெழுத்து - நச்செழுத்து.

சாவேரி - ஓர்ராகம்.

சாழல் - ஓர் பாடல், ஓர் விளையாட்டு, கரடி.

சாளம் - குங்கிலியம், மணல்.

சாளரம் - சன்னல், பலகணி.

சாளிகம் } சாடி, பணப்பை,
சாளிகை } வண்டு.

சாளுவர் - சாளுக்யவேந்தர்.

சாளை - ஓர்மீன்.

சாறு - ஆணம். கள், குலை, கொத்து, சாரம், திருவிழா.

சாற்றல் } சொல்லுதல், பறை
சாற்றுதல் } சாற்றல்.

சானகம் - வில்.

சானகி - ஓரரக்கன், கொடிக்கொத்தான், சீதை, மூங்கில், பொன்னாங்காணி.

சானம் - பெருங்காயம், சாதிலிங்கம்.

சானவி - கங்கை.

சானித்யம் - சமீபம்.

சானினி - சிறுகீரை, சேம்பு.

சானு - மலைச்சாரல், முழங்கால்.

சானுக்கிரகம் - தேவர்மொழி.

சான்மலி - இலவமரம், ஓர்தீவு.

சான்றவர் } அறிஞர், அறிவால்
சான்றோர் } நிறைந்தோர்.

சான்றாண்மை- ஊக்கம், ஞானம்.

சான்று - உதாஹரணம், சாட்சி, பிரமாணம், முகவுரை.

சான்றோன் - சூரியன், கற்றோன், மிருகசீரிடம்.

## சி

சி - ஓரெழுத்து, சிவம்.

சிகண்டம் - ஆமணக்கு, இசை நுணுக்க நூலாசிரியர், உச்சிச்சிகை, ஓர் பண், பேடு, ஓரிருடி, துருபதன் மகன், பாலையாழிறேசை, மயில், மயிற்றோகை.

சிகண்டிசன் - வியாழன்.

சிகாதம் - அப்பிரகம்.

சிகரம் - உயர்ச்சி, காக்கை, சி என்னு மெழுத்து, சுக்கு, தலை, திசை, மலை, மலையுச்சி, வட்டில், வீடு.

சிகரி - எலி, கருநாரை, கோபுரம், சிகரம், புல்லுருவி. மலை.

சிகரிநிம்பம் - மலைவேம்பு.

சிகரியந்தம் - புல்லுருவி.

சிகல் - குறைதல், கெடுதல்.

சிகழிகை-கொண்டை, தொடுத்தமாலை, மயிர்முடி, மாலை, வாசிகை.

சிகா - அக்கினிச்சுவாலை, எலி, முத்திரை.

சிகாமணி :- சிரோரத்னம், சிறந்தோன்.

சிகாமூலம் - கிழங்குள்ளபூடு.

சிகாவலம் - பாசி.

சிகாவளம் - மயில்.

சிகி - அம்பு, எருது, குதிரை, கேது, சிலம்பு, சேவல், தீ, தீபம், மயில், மலை.

சிகிச்சை - நிவிருத்தி, பரிகாரம்.

கிகிடிமா - கொட்டைமுந்திரிகை.

சிகுரம் - மயிர்ப்பொது.

சிகுவாசன்னி - ஓர் சன்னி.

சிகுவை - உண்டிச்சிகை, நாக்கு, தசநாடியிலொன்று, மயிற்குடு.

சிக்கடி - அவரை,சிக்கு.

சிக்கம்-உச்சி, உறி, குடுமி, சிறைச்சாலை, சிப்ப, பின்னல் மெலிவு, வண்டு, வார், வேலை.

சிக்கு - அகப்படு, மாட்டிக்கொள், சிக்கிக்கொள்.

சிக்கர் - கள்.

சிக்கல் - இளைத்தல், கிடைத்தல்.

சிக்குரு - முருங்கை.

சிக்குவை - நா.

சிக்கெனல் - உரமாதல், உறுதியாதல், கையிறுக்கம்.

சிங்கத்துரியோன் - வீரபத்திரன்.

சிங்காதம் - ஓர் வாத்தியம், சிங்கத்தின் கருச்சனை, வீராவேசத்தாலார்த்தல்

சிங்கநோக்கு - சூத்திரநிலையிலொன்று.

சிங்கம் - ஓரிராசி, சிங்கம், உயர்ந்தோன், சரகண்ட பாஷாணம்.

சிங்கல் - இளைத்தல், குறைதல். கெடுதல்.

சிங்கவாகினி-பார்வதி, துர்க்கை.

சிங்களம் - ஓர்கூத்து, ஓர்தேசம். பதினெண் பாடையிலொன்று.

சிங்கன் - குறவன்.

சிங்காரம் - அணி, அலங்காரம், திருத்தம், நவரசத்தொன்று.

சிங்கி - ஓர்மீன், கடுக்காய், குறத்தி, நஞ்சு, மிருதாரசிங்கி.

சிங்கீகம் - முள்ளிக்கீரை.

சிங்கிட்டம் - ஓர் மரம்.

சிங்கிலி - இண்டு, குன்றி, குன்றிமணி.

சிங்கிவேரம் - சுக்கு.

சிங்கினி - வில், வின்ஞண்.

சிங்குதல் - அழிதல், இளைத்தல், தேய்தல்.

சிங்குவை-நா,தசநாடியினென்று.

சிசம் - தமரத்தை.

சிசிரம்-குளிர், சந்தம், பின்பனிக் காலம்.

சிசு - கருப்பம், குழந்தை, பாலகன்.

சிசுகத்தி - சிசுவதை.

சிசுநாயகம் - வாலநாயகம்.

சிசுபாலன் - இடையெழுவள்ளலி லொருவன்.

சிசுரம் - கிலுகிலுப்பை.

சிசுருட்சை- கருமமுடிக்குமாசை.

சிச்சிலி - சிரற்புள்.

சிச்சீ - இகழ்ச்சிக்குறிப்பு.

சிஞ்சம் - புளிமா, புளியமரம்.

சிஞ்சிதம் - அசையுமாபரணங்க ளாலெழுமொலி.

சிஞ்சினி - நாண்.

சிஞ்சுகம் - கேகயப்புள்.

சிஞ்சுமாரம் - கடற்பன்றி, சிம்சு மாரம், முதலை.

சிடம் - சாதிக்காய்.

சிட்சகன் - உபாத்தியாயன், மாணுக்கன்.

சிட்சன் - கற்போன்.

சிட்சை - கற்பித்தல், தண்டனை, வேதாங்கத்திலொன்று.

சிட்டர் } தெய்வத்தொண்டர்,
சிஷ்டர் } நல்லோர், பெரியோர்.

சிட்டித்தல் - உண்டாக்கல், படைத்தல்.

சிட்டு - அற்பம், ஓர் குருவி.

சிணுறு - மரக்கிளை.

சிணி - கெட்ட நாற்றம்.

சிணுக்கம் - அழுகை.

சிணுங்கல் - அழுதல், கொஞ்சு தல், மழைதூறல்.

சிண் - கூட்டாளி, கையாள், சூதாட்டம், தாயம்.

சிண்டு - அளவு, குடுமி, தலை மயிர்.

சிதகம் - இடி, தூக்கணங்குருவி.

சிதகன் - சுக்கிரன், தூக்கணங் குருவி.

சிதடன் - அறிவில்லான், குரு டன்.

சிதடி - அறிவிலி, குருடன், சின்வண்டு.

சிதடு - குருடு, பேதமை.

சிதம் - அசையப்பட்டமை, சந்த னம், சயமுறப்படல், ஞானம், புளி, வெண்மீன், வெண்மை, விஷ்ணுக்கிராந்தை.

சிதம்பரபாட்டியல் - ஓரிலக்கண நூல்.

சிதம்பு - ஓர் காலணி, குணமின்மை, பதனழிவு.

சிதர் - உறி, சிதறென்னேவல், சீலைத்துணி, தேனீ, பராகம், பூந்தாது, பூமி, மழைத்துளி, மழைத்தூறல், வண்டு.

சிதர்தல் - சிந்தல்.

சிதர்த்தல் - சிந்துதல்.

சிதலம் - பதனழிவு.

சிதலை - கறையான், சீலைத்துணி, நோய்.

சிதல் - ஒருபூச்சி, கறையான்.

சிதவல் - குறைவுபட்டது, சிதறுதல், சீரை, தேரிடக்கியம், படுக்கை, புரையோடுபுண், மரவுரி.

சிதறல் - சிந்தல்.

சிதறி - பாடலமரம், மழை.

சிதனம் - கோடகசாலை.

சிதன் - அச்சமுள்ளோன், சுக்கிரன்.

சிதாகாசம் - ஞானாகாசம்.

சிதாத்மா - கடவுள்.

சிதாபாசஞானம் - கடவுளைப்பற்றிய ஞானம்.

சிதாபாசம் } கடவுள்.
சிதாபாசன் }

சிதாம்புசம் } வெண்டாமரை.
சிதாம்போசம் }

சிதாரம் - தேரிடக்கியம்.

சிதார் - ஓர் வாச்சியம், சீரை மரவுரி.

சிதானந்தம் - ஞானாநந்தம்.

சிதிலம் - சிதலம், நெகிழ்தல்.

சிதுரம் - நேர்வாளம்.

சிதேகி - கடுக்காய்.

சிதேந்திரியம் - ஐம்புலனொடுக்கம்.

சிதை - ஈமவிறகு, கீழ்மை, சிதையென்னேவல், பாய்மரம்.

சிதைதல் - அழிதல், கெடுதல்.

சிதைத்தல் - அழித்தல், ஒவித்தல், கெடுத்தல்.

சிதையர் - கீழ்மக்கள்.

சிதைவு - குறைவு, கேடு, பதனழிவு.

சித்தகம் - தலைச்சிரா, மெழுகு.

சித்தக்கல் - குறிஞ்சிலைக்கல்.

சித்தசமுன்னதி - சத்தபாதகத்தொன்று, அஃது — அகங்காரம்.

சித்தசன் - மன்மதன்.

சித்தமன் - ஆமணக்கு.

சித்தம் - ஆகமமிருபத்தெட்டினொன்று, உண்மை, உள்ளம், உட்கரணம் நான்கினொன்று, நிச்சயம், யோக மிருபத்தேழினொன்று.

சித்தாரூடம் - விஷவாகடத்தொன்று.

சித்தர் - தேவகணத்திேனோர் திறத்தோர்.

சித்தல் - சீலை.

சித்தன் - அருகன், இலவு, சிவன், வயிரவன்.

சித்தாந்தசிரோமணி-ஓர் சோதிட நூல்.

சித்தாந்தம் - சிவாகமங்கள், தருக்கமுடிவு.

சித்தாந்தன் - சிவன்.

சித்தாந்தி - கணிதன், மீமாம்ஸா வழி நிற்போன், வேதாந்தி.

சித்தாமோகம் - பேரோசனை.

சித்தார்த்தம் - கடுகு, தத்துவ ஞானம், வெண்கடுகு.

சித்தார்த்தி - ஓராண்டு.

சித்தி - எட்டி, ஓர் யோகம், சவர்க்காரம், சித்தியென்னே வல், சிந்தித்தல், திடம், நித்திய யோகத்தொன்று, நிலப்பனை, நிறைவேற்றம், மகிழ்ச்சி, மறைவு, மோக்கம்.

சித்தித்தல் - கைகூடல்.

சித்திநெறி - முக்திவழி.

சித்திமூலம் - நிலப்பனங்கிழங்கு.

சித்தியார் - ஓர் சைவசித்தாந்தம்.

சித்திரகடம் - காடு.

சித்திரகண்டன்<br>சித்திரகிரீவன் } புறா.

சித்திரகம் - ஆமணக்கு, கொடிவேலி, திலகம்.

சித்திரகவி - மிறைக்கவி.

சித்திரகன் - சித்திரக்காரன்.

சித்திரகாயம் - புலி.

சித்திரகுப்தன் - எமன் கணக்கன்.

சித்திரகெண்டி - ஓரிருடி.

சித்திரகெண்டிகன் - வியாழன்.

சித்திரசேனன் - நரகக்கணக்கரிலொருவன்.

சித்திரதாரணை - நவதாரணையினொன்று.

சித்திரதாளம் - நவதாளத்தொன்று.

சித்திரபடம் - எழுத்துச்சீலை.

சித்திரபானு - ஓர் வருடம், சூரியன், தீ.

சித்திரப்பாலடை<br>சித்திரப்பாலாடை } ஓர் பூடு.

சித்திரப்பாலாவி - அம்மான் பச்சரிசி.

சித்திரமூலம் - கொடிவேலி, நிலப்பனங்கிழங்கு.

சித்திரம் - அதிசயம், அற்புதம், ஆகாயம், ஆமணக்கு, ஓர்கவி, கொடிவேலி, சித்திரப்பாவை, சித்திரிக்கப்பட்டது, சிறு குறிஞ்சா, சிறப்பு, சிற்பநூலுளொன்று, நூதனம், பேரழகு, மெய்போற் பொய்கூறல்.

சித்திரரேகை - குபேரன்மனைவி.

சித்திரர் - சித்திரக்காரர், தச்சர்.

சித்திரவித்தாரன் - சாதுரியன்.

சித்திரவேளாகொல்லி - கொல்லித்திறத்திலொன்று.

சித்திராங்கதன் - குருகுல வரசரிலொருவன், நாகிலோர் கணக்கன், விஞ்சையர் வேந்தன்.

சித்திராங்கி - நரேந்திரன் பாரி.

சித்திரான்னம் - வண்ணச்சோறு.

சித்திரித்தல் - சித்திரஞ் செய்தல்.

சித்திரை - சித்திரைநாள், ஓர் மாதம், சித்திரப்பாலாவி.

சித்திலிகை - சீலை.

சித்தினி - சித்திரிணி, நால்வகைப் பெண்களி லொரு வகுப்பினள்.

சித்து - அரூபம், அறிவு, மாய வித்தை, யாகம், சித்தி, (எட்டு விதசித்திகள்)

சித்துடு - கிலுகிலுப்பைப்பூடு.

சித்துப்பொருள் - ஆத்துமப்பொருள், உயிராகிய பொருள்.

சித்துரூபம் - அரூபம், நேர்வாளம்.

சித்தகம் - அக்கணங்குருவி, புளியமரம்.

சிந்தம் - புளியமரம்.

சிந்தனுபோகம் - மானதப் புணர்ச்சி.

சிந்தன் - குள்ளன், அக்கணங் குருவி.

சிந்தாகுலம் - மிகுவியாகுலம்.

சிந்தாசனம் - இதயாசனம்.

சிந்தாமணி - ஓர்மணி, ஓர் மாத்திரை, ஓரூர், பஞ்சகாவியத்தொன்று.

சிந்தித்தல் - நினைத்தல்.

சிந்தியம் - சிந்திக்கப்படுவது, சிவாகம மிருபத்தெட்டினொன்று.

சிந்தியல்வெண்பா - ஓர்வகை வெண்பா, அஃது - இருவகை நேரிசைச்சிந்தியல் வெண்பா, இன்னிசைச் சிந்தியல் வெண்பா.

சிந்து - ஆறு, இருவாட்சி, ஓர் தேசம், ஓர்பா, (பல்லவி அநுபல்லவி, சரணங்கள்) கடல், குள்ளன், சிந்தென்னேவல், சிந்துநதி, நீர், பதினெண் பாடையிலொன்று, முச்சீரடி, வைடூரியம், யானை.

சிந்துசாரம் - கடலுப்பு.

சிந்துதல் - கெடுதல், சிதறல், விடுதல்.

சிந்துரதம் - இந்துப்பு.

சிந்துரத்தம் - உப்பு.

சிந்துரம் - சிவப்பு, புளியமரம், யானை.

சிந்துலவணம் - கடலுப்பு.

சிந்துவாரம் - கடல், வில், வெண்ணொச்சி.

சிந்தூரம் - சிவப்பு, செங்குடை, சேங்கொட்டை, திலகம், புளியமரம், யானை, வெட்சி.

சிந்து - கருத்து, குறிப்பு, துன்பம், நினைப்பு, மனம்.

சிந்தைகூரியன் - கூர்ந்த அறிவுடையோன், புதன்.

சிபி - சூரியகுலத்தோரரசன்.

சிப்பி-இப்பி, கிளிஞ்சல், நச்சுப்பல்.

சிமந்தூரி - சிறுபுள்ளடி.

சிமம் - எல்லாம்.

சிமயம் - பொதியமலை, மலை, மலையுச்சி.

சிமி - குடுமி.

சிமிட்டி - பேய்க்கொம்மட்டி.

சிமிட்டு - இமைப்பு, சிமிட்டென்னேவல், மருட்டு.

சிமிண்டுதல் - தோற்றுமலெடுத்தல், நுன்னுதல்.

சிமிலம் - மலை.

சிமிலி - உறி, குடுமி, சிள்வண்டு, தோணி, பூளைச்செடி.

சிமிழ் - சிமிழென்னேவல், சிமிழ், செப்பு.

சிமிழ்த்தல் - கட்டல், பிடித்தல்.

சிமுக்கிடுதல் - அசைதல், சிற்றொலிக் குறிப்பு.

சிமுட்டி - கீழ்காய்நெல்லி.

சிமை - குடுமி, மலையினுச்சி.

சிம்பதை } சிறுபுள்ளடி.
சிம்பத்தை }

சிம்பல்-ஒலித்தல், சிம்பு, பாய்தல்.

சிம்பு - இரும்புத்துகள், இளம்வளார், சிராய், தும்பு.

சிம்புரி - சும்மாடு, புரிமணை.

சிம்புளாஞேன் - வீரபத்திரன்.

சிம்புளி - கம்பளி.

சிம்புள் - எண்காற்புள்.

சிம்பை - அவரை.

சிம்மதம் - பாம்பு.

சிம்மமுகி - ஆடாதொடை.

சிம்மு - எல்லை.

சியச்சினி - உத்தாமணி.

சியநாயகம் - தத்தபாஷாணம்.

சிரகம் - உறைத்துளி, கரகம், தலைச்சீரா, தீவலை, மழைத்துளி.

சிரக்கோழி - குழலாதொண்டை, வசம்பு.

சிரங்கு - ஓர்புண், சிரங்கு.

சிரசீவி - காகம், திருமால், நெடுங்காலம் வாழ்வோன்.

சிரட்டை - தேங்காயோடு.

சிரணி - ஓமச்செடி.

சிரத்தகாளகம் - மருக்காரை.

சிரத்தல் - அழித்தல், எழுத்திலாவோசை, ஒலித்தல்.

சிரத்துதல் - ஒலித்தல், பேசலா லெழுமொலி.

சிரத்தை - அன்பு, குருவினிடத்திலும், சாத்திரங்களிடத்திலும், மனதை நிறுத்தல், பத்தி, விச்வாசம், விருப்பு.

சிரநதி - கங்கை.

சிரபங்கம், சிரோர்பங்கம் } சிரச்சேதம்.

சிரமம் - இளைப்பு, சிலம்பம், யுத்தப்பயிற்சி, வருத்தம்.

சிரமை - வருத்தம்.

சிரம் - ஆமணக்கு, உயர்ச்சி, கமுகு, கூகைநீறு, தலை, திப்பிலிமூலம், நெடுங்காலம், மேன்மை, வாதமடக்கி.

சிரம்பம் - சாலாங்க பாஷாணம்.

சிரல்-கிச்சிலிக்குருவி, முடிவிடம்.

சிரவணம் - காது, திருவோண நாள், கேட்டல், கேள்வி.

சிரவம் - கவுதாரி, காது.

சிராங்கம் - சிரசு, தலை, பெருகல்.

சிராயத்திரம் - விளாமரம்.

சிராய் - சிராம்பு.

சிராவணம் - ஆவணிமாதம், கல்.

சிராவணி - யாகமிருபத்தொன்றி ளொன்று.

சிராவம் - கேட்டல்.

சிராவிருத்தம் - ஈயம்.

சிரி - அம்பு, சிரியேன்னேவல், வாள், வெட்டுக்கிளி.

சிரிதம் - கஷாயம்.

சிரித்தல் - நகைத்தல்.

சிரித்துப்பேசல் - நயச்சொல்.

சிரிப்பு - நகை.

சிரீ-அழகு, இலக்குமி, ஓரிராகம்.

சிரீடம் - குன்றி, வாகைமரம்.

சிரீமுகம், சிரீமுகவருடம் } ஓர் வருடம்.

சிருகம் - அம்பு, காற்று, தாமரை.

சிருகாலன் - நரி, வீரமில்லான்.

சிருக்கு - நெய்த்துடுப்பு.

சிருங்கம் - மலைமுடி, விலங்கின் கொம்பு.

சிருங்கலம் - சங்கிலி, யானைச் சங்கிலி.

சிருங்கலை - ஓர்செடி, கால் விலங்கு.

சிருங்காடகம் - நாற்றெருக்கூடுமிடம்.

சிருட்டம் - சிற்பநூல் முப்பத்திரெண்டிலொன்று.

சிருட்டித்தல் - பிறப்பித்தல்.

சிருட்டியாளன் - சவர்க்காரம்.

சிருணி - சத்துரு, யானைத் தோட்டி.

சிரேணி - இடையர்வீதி, ஒழுங்கு, கூட்டம், வரிசை.

சிரேணியம் - இடையர்வீதி.

சிரேவணம் - காட்டாமணக்கு.

சிரை - குரங்கு, சிரையென்னேவல், நரம்பு.

சிரைத்தல் - மயிர்கழித்தல்.

சிரோசம்
சிரோருகம் } மயிர்.

சிரோட்டம் - கடுக்காய் மரம், தான்றிமரம், நெல்லி.

சிரோந்தம் - மயிர்ச்செறிவு.

சிலகம் - சட்டுவம்.

சிலங்கம் - வெள்ளிலோத்திரம்.

சிலதன் - ஏவல் செய்வோன், தோழன்.

சிலதி - தோழி.

சிலதியர் - ஏவல் செய்தோழியர், தோழியர்.

சிலத்தின்பிரிதிவி - கர்ப்பூரசிலா சத்து.

சிலந்தி - ஓர்புண், ஓர்பூச்சி, ஓர் பூ மரம், பரு.

சிலந்திநாயகம் - ஓர்பூடு.

சிலப்பதிகாரம் - பஞ்சவிலக்கியத் தொன்று.

சிலமான்கல் - ஓர்வகைமணி.

சிலமாற்றம் - அசுமாற்றம், சிலம் பம், பயமுறுத்துகை.

சிலமி - சிலம்பக்காரன், பகடக் காரன்.

சிலம் - இந்துப்பு, சிலம்பு.

சிலம்பம் - தந்திரோபாயம், படைக்கலப்பயிற்சி, பயப் படுத்துகை.

சிலம்பல் - ஒலித்தல்.

சிலம்பன் - குறிஞ்சி நிலத்தலை வன், முருகன்.

சிலம்பி - ஓர்பரத்தை, சிலந்திப் பூச்சி.

சிலம்பு - ஒலி, காற்சிலம்பு, சிலம் பென்னேவல், பூசாரிகள் கைச் சிலம்பு, மலை.

சிலம்புதல் - ஒலித்தல்.

சிலர் - சில பெயர்.

சிலவங்கம் - மீனெலும்பு.

சிலவர் - வேடர்.

சிலாகை - சலாகை, தேகக்கல், தொட்டிப்பாஷாணம்.

சிலாசத்து - ஓர் மருந்து, மண் தைலம்.

சிலாசாதனம் - கல்வெட்டு.

சிலாஞ்சனம் - நீலாஞ்சனம்.

சிலாதரன் - நந்திதேவன்றந்தை.

சிலாசதலம் - கற்பரப்பிய இடம், பாறை.

சிலாநதி - ஓர் நதி.

சிலாநாகம் - சூடாலைக் கல்.

சிலாந்தி - சீந்தில்.

சிலாபேசி - செருப்பு நெரிஞ்சில்.

சிலாமணி - கருப்பூரச்சிலாசத்து.

சிலாமதம் - கன்மதம்.

சிலாமனு - மனோசிலை.

சிலாமேனி - கண்டகநதிக்கல்.

சிலாவங்கம் - ஈயக்கல்.

சிலாவட்டம் - சாணைக்கல்.

சிலாவருடம் - கல்மழை.

சிலியானை - முடக்கொற்றான்.

சிலிர்த்தல் - தளிர்த்தல், புளகித மாதல், மயிர்க்குச் செறிதல்.

சிலீமுகம் - அம்பு, கரலக்ஷண மிருபத்து மூன்றிலொன்று, தேனீ, மூலைக்கண், வண்டு.

சிலுகு - துன்பம், யுத்தம்.

சிலுப்பு - அசைப்பு, சிலுப்பென் னேவல், நடுக்கல்.

சிலும்பல் - அசைதல், ஒலித்தல், கிளம்புதல், பீறல்.

சிலேடை - ஓரலங்காரம், இரு பொருட் சொற்றொடர்.

சிலேட்டர்
சிலேட்டியர் } செட்டிகள்.

சிலை - ஒலி, ஓசை, ஓர்மரம், கல், சிலையென்னேவல், சூதபாஷா ணம், தனுவிராசி, மலை, மனோ சிலை, மூலநாள், விக்கினம், வில்.

சிலைத்தல் - ஒலித்தல், சப்தித்தல்.

சிலையாவி
சிலைவிந்து } கல்நார்.

சிலைவைரம் - வைரமணி.

சிலோச்சயம் - மலை.

சில் - அற்பம், ஆரவாரம், ஒலிக் குறிப்பு, தேருருளை வட்டம்.

சில்லம் - அவதி, எட்டி, துண்டு, தேற்றாமரம்.

சில்லர் - வேடர்.

சில்லரை - சிதறின தொகை, சொச்சம்.

சில்லி - கண்ணறை, சிள்வண்டு, சிறுகீரை, தேருருளை, வட்டம்.

சில்லிகை - சிள்வண்டு, சீலை, சூரியகிரகணம், நல்லாடை.

சில்லிடுதல் - ஒலிக்குறிப்பு, பயப் படல், விம்முதல்.

சில்லை - இழிவு, சிவல், சிள்வண்டு, தூர்த்தை.

சில்வழி - சிலவிடம்.

சிவகதியிறைவன் - அருகன், சிவன்.

சிவகம் - சாதிக்காய், நாய்ச்சீரகம்.

சிவகரந்தை - நறுங்கரந்தை.

சிவகாமி - பார்வதி.

சிவஞானசித்தி - ஓர் சைவசித் தாந்த நூல்.

சிவணல் - அளவளாவல், கலத் தல், கிட்டல், நட்பாடல், பொருத்தல், வியங்கோண் முற்று.

சிவதத்துவம் - முப்பதாறுவது தத்துவம்.

சிவதம் - இருக்குவேதம்.

சிவதன்மம் - அட்டாதசவுப்புரா ணத்தொன்று.

சிவதை - ஓர் கொடி.

சிவத்தம் - செம்முருங்கை.

சிவத்தல் - கோபம், சிவக்குதல், சினக்குறிப்பு.

சிவந்தி - கொடிப்பாலை.

சிவப்பிரகாசம்-ஓர்சித்தாந்தநூல்.

சிவப்பு - சிவப்பு, சினக்குறிப்பு, செம்மைநிறம்.

சிவமது - சிறுபுள்ளடி.

சிவமரம் - ஓர் மரம்.

சிவமல்லி - கொக்கு மந்தாரை.

சிவம் - உயர்வு, ஓர் குளிகை, கடலுப்பு, கடவுள், குறுணி, சுயஞ்சிவம், சிவதத்துமைந்தி னொன்று, நன்மை, நித்திய லோகத்தொன் று, முத்தி.

சிவலோகச்சேவகன் - காந்தம்.

சிவலோ ்ம் - மேலுலகங்களெல் லாவ ்ற ருமேலாகியலோகம், மோக்கத்தானம்.

சிவல் - கவுதாரி, பகண்டை.

சிவவாக்கியம் - ஓர்நூல்.

சிவவாக்கியர் - ஓர் நூலாசிரியர்.

சிவனார்கிழங்கு - கார்த்திகைக் கிழங்கு.

சிவனார்வேம்பு - ஓர் செடி.

சிவன் - உருத்திரன், வைடூரியம்.

சிவா-கடுக்காய், கீழ்காய்நெல்லி, நெல்லி, பங்கம்பாலை, வன்னி.

சிவாகமம் - இருபத்தெட்டு ஆக மங்கள், அவை—காமிகம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான், சுப் பிரபேதம், விசயம், நிச்சுவா சம், சுவாயம்புவம், அனலம், வீரம், ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், விம் பம், புரோற்கீதம், இலளிதம், சித்தம், சந்தானசருவோத் தம், பரமேச்சுரம், கிரணம், பேதம், வாதுலம் என்ப.

சிவிகரம் - சாதிக்காய்.

சிவிகை - தண்டிகை, பாண்டி யன் பூண்டவூர்தி.

சிவிறி - நீர்வீசுந்துருத்தி, பெருந் துருத்தி, விசிறி.

சிவுகம் - தாடை.

சிவேதை - ஓர்கொடி, சீந்திற் கொடி, தெற்கு, பகன்றை.

சிவை - ஆணரி, உலைத்துருத்தி, உலைமூக்கு, நெல்லிக்காய், பார் வதி, வேர்.

சிவ்வல் - கடற்பாசி.

சிள்வீடு - சில்வண்டு.

சிறகு - சிறகு.

சிறக்கணித்தல் - உபேட்சித்தல், குறைதல், சுருங்குதல்.

சிறக்கணிப்பு - கடைக்கணித்த பார்வை, சுருங்குகை.

சிறத்தல் - அருமையாயிருத்தல், கீர்த்திபெறுதல், சிறப்பு, மங்கலமாதல், மேற்படல், விசேஷித்தல்.

சிறந்தகற்பகம் - நாகபாஷாணம்.

சிறந்தோர் - அழகுள்ளோர், உறவோர், உயர்ந்தோர், துறந்தோர், பெருமையிற்சிறந்தோர்.

சிறப்பகத்திணை - அகத்திணை வகையிலொன்று.

சிறப்பிலாதாள் - மூதேவி.

சிறப்பு - அருமை, அலங்காரம், அழகு, இடைப்பொருள், உபசாரம், உயர்வு, ஒன்றற்கேயுரியது, சுபம், மகிமை, மிகுதி, மேன்மை, விசேஷம்.

சிறப்புச்சூத்திரம் - சிறப்புவிதி.

சிறப்புச்சொல் - ஒன்றற்கே யுரித்தாய் வருஞ்சொல்.

சிறப்புப்பாயிரம் - பொதுப்பாயிரம், ஆக்கியோன் முதலிய பதினொருவகையு முடையது.

சிறப்புப்பெயர் - ஒருபொருளை விசேஷித்துக் காட்டுவது.

சிறப்புவிதி - விசேஷிக்கும் விதி.

சிறப்பெழுத்து - ஆரியத்திற்கே உரிய சிறப்பெழுத்துத் திரிந்த எழுத்து.

சிறார் - சிறுவர்.

சிறிட்டம் - வெள்ளிலோத்திரம்.

சிறிது - சிறுமையுடையது.

சிறியசிந்தையர் - கீழ்மக்கள்.

சிறியத்தினி-உத்தாமணி, வேலிப்பருத்தி.

சிறியர் - அற்பர், கீழ்மக்கள்.

சிறியாணங்கை - ஓர் பூடு.

சிறிவில் - அகில்.

சிறு - ஓர் விகாரமொழி, தெரிநிலைவினைப்பகுதி.

சிறுகடலாடி - நாயுருவி.

சிறுகல் - குறைதல்.

சிறுகாக்கைபாடினியம் - ஓர் நூல்.

சிறுகாப்பியம், சிறுகாவியம்.

சிறுகாரிடம் - சாதிக்காய்.

சிறுகால்-காவட்டம்புல், தென்றல்

சிறுகாஞ்வாழை - ஓர் பூடு.

சிறுகு - இடைஞ்சல், சிறுகென்னேவல், துன்பம்.

சிறுகுடி - குறிஞ்சிநிலத்தூர், சிற்றில்.

சிறுகுரு - உவர்மண்.

சிறுகுழி - சிறுகோளீளமகலங்கொண்டது.

சிறுகுறிஞ்சா - ஓர்கொடி.

சிறுக்கல் - குறைத்தல்.

சிறுக்குதல் - கோபித்தல், சிறியதாக்கல்.

சிறுசின்னம் - சிறுகாளம், பீலி.

சிறுசெருப்படி - ஓர் பூடு.

சிறுசொல் - பழிச்சொல்.

சிறுதாரை - நீர்வீசுந்துருத்தி.

சிறுதாளி - ஓர்செடி.

சிறுதுருமம் - வெடியுப்பு.

சிறுதூறு - மரச்செறிவு.

சிறுத்தல் - இளத்தல், சிறிதாதல்.

சிறுத்தை - சிறுபுலி.

சிறுத்தொண்டன் - அறுபத்து மூன்று நாயன்மாரிலோர் தொண்டன்.

சிறுநறளை - ஓர்வகை நறளை.

சிறுநன்னாரி - ஓர்வகை நன்னாரி.

சிறுபஞ்சமூலம் - ஓர்நூல், கண்டங்கத்தரி, சிறுமல்லி, சிறுவழுதுணை, நெருஞ்சி, பெருமல்லி, இவைகளுடைய வேர்.

சிறுபதம் - சிறுவழி.

சிறுபதி - சிற்றூர்.

சிறுபறை - ஓர்பறை, பிள்ளைக்கவியிலோர் பகுதி.

சிறுபான்மை - அருகல்விதி, ஒரோவிடத்து அரிதாய் வருவது.

சிறுபுறம்-உயர்ந்த பக்கம், பிடரி.

சிறுபொழுது - ஐந்திணைக்குரிய முதற்பொருளினொன்று, அது - மாலை, யாமம், வைகறை, (ஏற்படு), காலை, நண்பகல் என்பது, காலநுட்பம்.

சிறுமணி - ஓர் நெல்வகை, சதங்கை, சிறுமட்டம், குன்ளம், சிற்றளவு.

சிறுமல் - தண்ணீர்விட்டான்.

சிறுமாரோடம் - செங்கருங்காலி.

சிறுமி - பெண்.

சிறுமியம் - சோறு.

சிறுமூலகம் }
சிறுமூலம் } ஓர்கிழங்கு,திப்பிலி.

சிறுமை - அற்பம், இளமை, எளிமை, கீழ்மை, குறைவு, தரித்திரம், துன்பம், நோய்.

சிறுமையர் - கீழ்மக்கள்.

சிறுவரை - அற்பம், காலநுட்பம். சிறுபொழுது.

சிறுவர் - மக்கள்.

சிறுவன் - மகன்.

சிறுவி - புத்திரி, மகள்.

சிறுவிதி - தக்கன்.

சிறுவிதிமகஞ்சிதைத்தோன்-வீரபத்திரன்.

சிறுவிலை - குறுவிலை, பஞ்சம்.

சிறை - அடிமை, அழகுள்ளவள், இடம், இறகு, கட்டுப்பாடு, காவல், சிறைச்சாலை, தடை, நீர்க்கரை, பக்கம், பிணிப்பு, மதில்.

சிறைப்புறம் - மதிற்புறம், மறைவிடம்.

சிற்குணன் - கடவுள்.

சிற்சக்தி - அறிவாற்றல், பஞ்சசத்தியினொன்று, விசேஷ சக்தி.

சிற்சபை - சபையைந்தினொன்று.

சிற்சுகம் - ஞானசுகம்.

சிற்சொரூபம் - ஞானரூபம்.
சிற்பம் - அற்பம், சிற்பநூல், சிற்பத்தொழில், நுண்மை.
சிற்பரக்கூர்மை - கந்தகவுப்பு.
சிற்பரம் - கடவுள், பிரமம்.
சிற்பரன் - சிவன்.
சிற்கரை - பார்வதி, சவர்க்காரம், பொன்னிமிளை, பராசக்தி.
சிற்பர் - சித்திரக்காரர்.
சிற்பியர் - கம்மாளர்.
சிற்றம்பலம் - சிற்சபை.
சிற்றறிவு - புல்லறிவு.
சிற்றுமணக்கு - ஓராமணக்கு.
சிற்றாலவட்டம் - விசிறி.
சிற்றாள் - ஏவலாள்.
சிற்றிலக்கம் - கீழ்வாயிலக்கம், சிற்றெண்.
சிற்றிலை-குன்றி, கடுமரம், நெய்ச்சிட்டி.
சிற்றில் - குடிசை, சீலை, பிள்ளைக் கவியிலோர் பகுதி.
சிற்றினம் - அற்பச்சங்காத்தம், ஆகாத கூட்டம்.
சிற்றின்பம் - காமநுகர்ச்சி.
சிற்றுண்டி - அப்பவருக்கம்.
சிற்றுயிர் - அற்பசந்து.
சிற்றுரு - குறள், சிறுதோணி.
சிற்றூர்-சிறூர், குறிஞ்சிநிலத்தூர்.
சிற்றூரல் - சிறியஆற்று.
சிற்றெண் - கீழெண், குறளடி பதினாறுள் வருவது.
சினகரம் - தேவர்கோவில்.
சினத்தல் - கோபித்தல்.
சினத்தன் - கோபமுள்ளோன்.
சினந்தவிர்ந்தோன் - அருகன்.
சினப்பு-கோபம், பரு, விம்முதல்.
சினம் - கோபம்.
சினவரன், சினன் } அருகன், புத்தன்.
சினவர் - பகைவர்.
சினவுதல் - கோபித்தல், சினக்குறிப்பு, பொருதல்.
சினு - பங்கம்பாலை, வட்டத்திருப்பி.
சினுவில் - தும்பை.
சினீவாலி - உமை, மதிதெரி கலையிரா.
சினேகம்-எண்ணை, நட்பு,பட்சம்.
சினேசம் - சாதிக்காய்.
சினேந்திரம்-சைனவியாகரணம்.
சினேந்திரன் - அருகன், புத்தன்.
சினை - அவயவம், உறுப்பு, கருப்பம், கொழுப்பு, சினையென்னேவல், பூவரும்பு, பொருளாதியாறினுளொன்று, மரக்கொம்பு, முட்டை, மூங்கில்.
சினைத்தல்-அரும்புதல், எழுதல், சினைகொள்ளல்.
சினைப்பு-சினைத்தல், வியர்க்குரு.
சினைப்பெயர் - உறுப்புப்பெயர்.

சினைப்பொருள் - உறுப்புப் பொருள்.

சினைமுதற்பெயர் - சினையையும் முதலையும் பற்றிவரும் பெயர்.

சினைவினை - முதல்வினை, அவயவத்தின் றொழிலாகிய வினை.

சின் - அசைச்சொல்.

சின்னீற-சிறியதன்மையுடையன.

சின்மயம் - ஞானமயம்.

சின்மயாத்மா - ஞானாத்துமா.

சின்மாத்திரம் - ஞானமாத்திரம்.

சின்முத்திரை - ஞானமுத்திரை.

சின்மொழி - இழிந்த மொழி, வானமொழி.

சின்னப்பூ - ஓர் பிரபந்தம்.

சின்னம் - அடையாளம், அற்பம், ஈனம், காளம், சங்கு, சிறுமை, தட்டு, துண்டு, பராகம், பெண்குறி, முறம், விசித்திரம்.

சின்னூருகம் - சீந்தில்.

சின்னி - இலவங்கம், ஓர்செடி.

சின்னிவிரல் - சிறுவிரல்.

சின்னீர் - நிலையாமை.

## சீ

சீ - ஓரெழுத்து, இகழ்ச்சிக் குறிப்பு, அடக்கம், இலக்குமி, காந்தி, சம்பத்து, சரச்சுவதி, சீயென்னேவல், பார்வதி, பிரகாசம், பெண், விடம், விந்து.

சீகம் - தமரத்தை.

சீகரம் - கடற்றிரை, கரகம், கவரி, தலை, திருநலம், திவலை, புனற்றிரை, மலையுச்சி, மழை, மழைத்துளி, மழைத்தூவல், வாழ்வு.

சீகரி, சீகர் - நீர்த்திவலை.

சீகாரம் - ஓர்பண்.

சீகாழி - ஓர் சிவத்தலம்.

சீக்கிரம் - அம்பு, காரம், குரூரம், கோபம், விரைவு.

சீக்கிரி - உசிலமரம்.

சீக்கு - செத்தை, நோய்.

சீக்குரு - முருங்கை.

சீக்கை - ஓர் நூல்.

சீசகம், சீசம் - ஈயம்.

சீச்சீ - இகழ்ச்சிக்குறிப்பு.

சீடர் - மாணாக்கர்.

சீடு - நூற்சீடு (குஞ்சம்)

சீணம் - பதனழிவு.

சீண்டுதல் - சருவுதல், தொடுதல்.

சீதகம் - ஈயம், குளிர்ந்தகாலம், தரா, தேள்.

சீதகன் - சந்திரன், சுக்கிரன், சோம்பன்.

சீதம் - அகில், சந்தனமரம், குளிர்ச்சி, கொடுந்தமிழ் நாட்டிலொன்று, நறுவிலி, நீர், பற்படாகம், மேகம், வெண்மை.

சீதரன் - விஷ்ணு.

சீதவாதக்கடுப்பு - சீதவாதம்.

சீதவாரம் - உத்தாமணி.

சீதளம் - ஈரம், குளிர்ச்சி, கொடி மாதளை, கோடகசாலை, சந்தனம், சிற்றகத்தி, தாமரை, துரிசு, பச்சைக் கர்ப்பூரம், முத்து.

சீதளை - ஒரு நாரத்தை, கொடி மாதளை.

சீதன் - சந்திரன்.

சீதாங்கபாஷாணம் - ஓர் பாஷாணம்.

சீதாங்கம் - ஓர் கள்ளி, சன்னி.

சீதாங்கனை - இராமன் மனைவி.

சீதாபதி - இராமன்.

சீதாளம் - தாளப்பனைமரம்.

சீது - ஈயம், கள், யானைக்கண்மதம்.

சீதேவி - இலக்குமி.

சீதை - உழுபடைச்சால், சீதை, பொன்னுங்காணி.

சீதோதகம் - குளிர்ந்தநீர்.

சீத்தலைச்சாத்தன் - ஓர் புலவன்.

சீத்தல் - செப்பம்பண்ணல், தூயதாக்கல், நீக்கல்.

சீத்துவம்-சித்தம்,செம்மை,திறம்.

சீத்தை - கீழ்மக்கள், சிதம்பல், சீட்டிச்சீலை, பதனழிவு,பீழை.

சீந்தில் - ஓர் படர்கொடி.

சீந்துதல் - சீறுதல், விரும்புதல்.

சீபதி-அருகன்,கடவுள், விஷ்ணு.

சீபாதம் - குருவடி, திருவடி.

சீப்பு - எலும்புக்கோவை, கதவின்றாள், தாழ்க்கோல், தோளெலும்பு, மயிர்சீவுஞ்சீப்பு, வாழைக்குலைச் சீப்பு, விலாவெலும்பு.

சீமந்தம் - ஓர்சடங்கு, முதுகுநீரிகை.

சீமந்தனீ-ஓர்மாது, மூத்தபெண்.

சீமாட்டி - தலைவி.

சீமான் - அருகன், குபேரன், செல்வன்.

சீமுக - ஓர் வருடம்.

சீமுகம் - திருமுகம்.

சீமூதம் - நீருண்டமேகம்,பிடியன் யானை, மலை, மேகம்.

சீமூதன் - இந்திரன், உழவன், ஓரசுரன், துன்புறுவோன், நரகாசுரன் சாரதி.

சீமூதை-இரா, கொடிமுந்திரிகை.

சீமை-அனுஷ்டிப்பு,எல்லை, கரை, தேசம், தோண்மேல், வயல்.

சீயகங்கன் - ஓரரசன்.

சீயம் - எருக்கம்பால், சிங்கம், சிங்கவிராசி, தென்றிசைப் பாலன்குறி.

சீய்த்தல் - உரஞ்சுதல், சிறுய்த்தல், சீவுதல், செருக்குதல்.

சீரகத்தாமன் } குபேரன்.
சீரகத்தாரோன் }

சீரகம் - சீரகம்.

சீரங்கம் - அரங்கம்.

சீரணம் - உண்டது சமித்தல், கேடு, பதனழிவு.

சீரணி - ஓமச்செடி, காடு, கூத்தின் விகற்பம், சிறந்த வழகு, சீரணியென்னேவல்.

சீரமோடா-காட்டெருமைப்பால், கார்ச்சீலை, விழுதி.

சீரம் - இரேகை, இலாமிச்சை, எழுத்து, கலப்பை, சீலை, பால், மரவுரி.

சீரா - கவசம், தலைச்சீரா, பலாசு.

சீராட்டல் - சிறப்புச்செய்தல்.

சீராளன் - சிறுத்தொண்டநாயனார் மகன்.

சீரி - பலதேவன், புளியமரம்.

சீரிடம் - தலை, வாகை.

சீரியர் - அறிஞர், உயர்ந்தோர், சிறந்தோர், நல்லோர், புலவர்.

சீருணம் - செம்பு.

சீருணி - சீருணம்.

சீருத்திரம் - உருத்திரம்.

சீருள் - ஈயம், காரீயம், செம்பு, செல்வம், பஞ்சலோகம்.

சீரை - சீலை, சீலைத்துணி, மரவுரி.

சீர் - அழகு, அளவு, இரைச்சல், ஒலி, ஒழுங்கு, காற்றண்டை, காவுதடி, சித்திரம், சிலம்பம், சுபாவம், செய்யுளுறுப்பு, செல்வம், சொல், தண்டாயுதம், தராசு, தாளவொத்து, துலாராசி, நடுத்தரம், நன்மை, நன்னடை, பாரம், புகழ், பெருமை, பொன்.

சீர்கேடி - மூதேவி.

சீர்க்கோழி - நரைக்கொள்ளு.

சீர்செய்தல் - சீராக்கல்.

சீர்த்தி - மிகுபுகழ்.

சீர்த்துழாய் - ஓர் துளசி.

சீர்பதி - கடவுள்.

சீர்பாதம் - சீபாதம்.

சீர்மை - எண்வகையூரிலொன்று, கீர்த்தி, சங்கை, சிறப்பு.

சீலம் - அழகு, குணம், சரித்திரம், சீந்தில், சுபாவம், தருமம், தன்மை, நல்லறிவு, நல்லொழுக்கம், பரிசுத்தம், நிலை.

சீலன் - குணவான்.

சீலா - இறைகூடை, இறைபட்டை, ஓர் நீர் பறவை.

சீலை - சீலை, வஸ்திரம்.

சீவகம் - இலந்தைப்பிசின், எலம்.

சீவகர் - புத்ததேவர்.

சீவகலை - இராகக்காட்சி, உயிர்ப்பு.

சீவகன் - ஓரரசன், குறவன், சீவன்முக்தன், வேலைக்காரன்.

சீவசாட்சி - அறிவுக்காதாரமாயிருப்பது.

சீவதம் - ஆமை, சன்மார்க்கம்.

சீவதேகம் - சரீரத்திரயம்.

சீவந்தி - கடுமரம், சீந்திற்கொடி, பாலைமரம், புல்லூரி, வெட்பாலை.

சீவம் - அர்த்தச்சா, சீவன், பரமாத்துமா.

சீவரத்தினம் - திருமாலணியுமணி, நாகரத்தினம்.

சீவரர் - புத்ததவத்தோர்.

சீவல் - சீவுதல், மிருதுவானது.

சீவனம் - அமுதம், உத்தியோகம், உயிர்வாழ்தல், தைத்தல், நீர், மூளை, வெண்ணெ.

சீவனுகினி - நீர், வெற்றிலை.

சீவனி - ஆடுதின்னுப்பாலை, சகநம், சஞ்சீவி, சீவகாடி, செவ்வள்ளி, பாலைமரம், மந்தாரச்சிலை, வெட்பாலை.

சீவனீயம் - நீர்.

சீவன் - உயிர், காந்தம், சிந்தை, சீவாத்துமா, பிராணி, முயற்சி, வியாழன்.

சீவன்முக்தன் - துறந்துஞானமடைந்தோன்.

சீவாளம் - வீணையின்சீர்.

சீவி - அழிஞ்சில்.

சீவிகா - சாதிக்காய்.

சீவிதம் - உயிர்வாழ்க்கை.

சீவியம் - ஆயுள், உயிரோடிருக்கை, காலக்ஷேபம், சீவனம், வாழ்நாள்.

சீவினி - சஞ்சீவி, செல்வழிப்பண், யாழிறேசை.

சீறல் - அதட்டல், இரைதல், சினக்குறிப்பு, பெருங்கோபம், வேகம்.

சீறுதல் - கோபித்தல்.

சீறூர் - குறிஞ்சி நிலத்தூர், வேடரூர்.

சீற்றம் - கோபம், சினம்.

சீனம் - ஓர்தேசம், பதினெண்பாடையிலொன்று, மான்.

சு

சு - அதட்டுமோசை, ஓரெழுத்து, நன்மை, ஒருபசர்க்கம், சுவ, நல், வியப்புக்குறிப்பு.

சுஃறெனல் - ஒலிக்குறிப்பு.

சுகட்டான் - நாணற்புல், மூடக்கற்றுன்.

சுகசிம்பி - பூனைக்காலி.

சுகதபேதம் - பேதம் மூன்றிலொன்று, அது — மரத்துக்கிளை, காய் முதலிய வித்தியாசம்.

சுகதாதை - வியாசர்.

சுகதாரு - கடம்பு.

சுகதுக்கி - பிறந்திறந்தழுந்துவோன்.

சுகத்திரம் - வாகை.

சுகந்தம் - அரத்தை, கிழங்கு, சீரகம், நறுநாற்றம், வாழை.

சுகந்தி - செவ்வந்திக்கல்

சுகம் - ஆரோக்கியம், இன்பம், கிளி, தர்மம், நன்மை, முக்தி, மூலைக்கண்.

சுகம்பல் - புளிநறளை.

சுகருமம் - யோகமிருபத்தேழிலொன்று.

சுகன் - ஓர் கந்தருவன், சுவர்க்க முற்றோன், வியாசன் புதல்வன்.

சுகாந்தம் - ஈரவெண்காயம்.

சுகிதம் - பால்.

சுகிர் - உட்டுளை, உட்டுளைப் பொருள், சுகிரென்னேவல், தெரிநிலை வினைப்பகுதி.

சுகிர்தம் - அறம், இன்பம், தவஞ் செய்தல், தயவு, நற்செய்கை, நன்மை, நெய்.

சுகிர்தல் - நார்முதலிய வகிர்தல்.

சுகிர்லாபம் - நட்புப்பேறு.

சுகுமாரம் - ஓர்கரும்பு, மிருது.

சுகோடம் - நகுலருடைய சங்கு.

சுகோததி - இன்பக்கடல்.

சுகோதரம் - தாளிசபத்திரி.

சுக்கியானம் }
சுஞ்ஞானம் } பரமஞானம்.

சுக்கியானர் - கடவுள்.

சுக்கிரசிடர் - அஸுரர்.

சுக்கிரபகவான் - நவக்கிரஹ தேவர்களிலொருவன்.

சுக்கிரம் - ஆனிமாதம், கண்ணோய், கழுநீர், கள், நீர் பொன், விந்து, வெண்ணிறம்.

சுக்கிரன் - அஸுரகுரு.

சுக்கிரீவன் - கிட்கிந்தையரசன்.

சுக்கில - ஓர் வருடம்.

சுக்கிலசோணிதம் - விந்துநாதம்.

சுக்கிலத்தம்பம் - சுக்கிலங்கட்டல்.

சுக்கிலபட்சம் - வளர்பிறை.

சுக்கிலபுட்டா - குங்குமமரம்.

சுக்கிலம் - இந்திரியம், இரேதசு, கண்ணோயினொன்று, பழமுண்ணிப்பாலை, பாலைமரம், புளி, பூர்வபட்சம், வெண்ணெய், வெண்மை.

சுக்கிலாசயம் - சுக்கிலமுறைவிடம்.

சுக்கு - சுக்கான்கல், சுண்டி, தண்டு.

சுக்குதல் - செய்தல், புணர்தல்.

சுக்குநாறிப்புல் - ஓர்புல்.

சுக்குமம் - சிற்றேலம்.

சுக்கை - கப்பற்கேழ்வு, மாலை, விண்மீன், முசுமுசுக்கை.

சுங்கம் - ஆடுதின்னாப்பாலை, ஆயம், களவு.

சுங்கன் - சுக்கிரன்.

சுசனம் - காற்று.

சுசி - ஆடிமாதம், இணக்கம், கழுவுகை, காமக்கவலை, கொடிவேலி, கோடைகாலம், சந்திரன், சுத்தம், சுசீலம், நெருப்பு, பாதரசம், வெண்குடை, வெண்மை.

சுசிகம் - புளியாரை.

சுசிதம் - பால்.

சுசிரூடை - பணிவிடை.

சுசீலம் - நல்லொழுக்கம்.

சுசுந்தரி - நாவி, முஞ்சூறு.

சுசூக்குமை - விந்துகலை.

சுச்சு - சுக்கு, சுண்டி, பறவை மூக்கு.

சுடரோன் - சூரியன்.

சுடர் - ஒளி, சந்திரன், சூரியன், தீ, தீச்சிகை, விளக்கு.

சுடர்க்கடை - மின்மினி.

சுடர்ச்செலவு - ஆறுவருக்கத் தோன்ற, அது—இராசியை இரண்டாகப் பகிர்தல்.

சுடர்தல் - ஒளிசெய்தல்.

சுடர்நிலை-தகழி,விளக்குத்தண்டு.

சுடர்மௌலியர் - வானோர்.

சுடர்விழியோன் - வீரபத்திரன்.

சுடலை - சவர்க்காரம், சுடுகாடு.

சுடலையாடி - சிவன்.

சுடிகை - உச்சி, கள், சடாமுடி, சூட்டு, தலை, நெற்றிச்சுட்டி, மயிர்முடி, முடி.

சுடரம் - துவாரம்.

சுடு - சுடுதல், தெரிநிலை வினைப் பகுதி, வெம்மையுறல்.

சுடுகலம் - இட்டிகை, குயக்கலம், செங்கல்.

சுடுகாடு - ஈமம், சுடலை, மயானம்.

சுடுசுண்டை - சுட்டசாந்து.

சுடுதல் - உலோகங்களை யொட்டுதல், கெடுத்தல், சூடுகாணுதல், தகித்தல், விசனமடைதல், வேகவைத்தல்.

சுடுதூரத்தம் - சித்திரப்பாலாவி.

சுடுநிலம் - மயானம்.

சுடுமண் - ஓடு, செங்கல்.

சுடுமருந்து - எரிமருந்து.

சுடுவல் } இரத்தம்.
சுடுவனம்
சுடுவன்

சுடுவு - சும்மாடு.

சுட்கம் - வறட்சி.

சுட்குதல் - வறளல்.

சுட்டல் - காட்டுதல், குறித்தல், சுடுதல், சுடல், மதித்தல்.

சுட்டி } ஒரு வினையெச்சம், துட்டன், நெற்றிச்
சுட்டிகை சுட்டி, நுதலணி.

சுட்டு - எண்ணம், குறிப்பு, சுட்டெனவல், சுட்டெழுத்து நான்கு, அவை—புறச்சுட்டு, அண்மைச்சுட்டு, சேய்மைச் சுட்டு, பொதுச்சுட்டு, என்ப; நன்கு மதிப்பு.

சுட்டுக்கோல் - உலயாணிக் கோல், தீயோன்.

சுட்டுச்சொல் - ஒன்றைக் குறித்துக்காட்டு மொழி.

சுட்டுதல்-எண்ணுதல், கருதுதல், குறித்தல், குறித்துக்காட்டல், மதித்தல்.

சுட்டுப்பொருள்-குறித்தபொருள்.

சுட்டுவிடை - சுட்டிக்காட்டும் விடை.

சுட்டுவிரல் - ஆட்காட்டி விரல்.

சுட்டுவைத்தல்-இலக்குவைத்தல்.

சுட்டெழுத்து - சுட்டிக்காட்டு கிற எழுத்து அது, அ, இ, உ என்னுமெழுத்துக்கள்.

சுணக்கம் - சோர்வு, தாமதம், பிணக்கம்.

சுணங்கன் - நாய்.

சுணங்கு - சுணங்கென்னேவல், தேமல், பூந்தாது, மெலிவு.

சுணை - அபிமானம், கூர்மை, சுணைக்கோரை, சொணை, தினவு.

சுணைக்கோரை - ஓர்புல்.

சுணைவு - பேய்க்கடலை.

சுண்டகம் - மூங்கில்வில்.

சுண்டங்காய் - சிறுகாய், சுண்டிக்காய்.

சுண்டம்-கள், யானைத்துதிக்கை.

சுண்டல் - இறுகல், எய்தல், சுண்டற்கறி, சுண்டுதல், தெறித்தல், வற்றுதல்.

சுண்டன் - அறிவிலி, சதயநாள், மூஞ்சூறு.

சுண்டாலம் } யானை, யானைத்
சுண்டாலி } துதிக்கை.

சுண்டான் - கள், அளவு.

சுண்டி - கள், சுக்கு, சுண்டில், தொட்டால்வாடி, நீர்ச்சுண்டி, வினையெச்சம்.

சுண்டிகை - உண்ணா.

சுண்டியம் - சுக்கு.

சுண்டியுண்டை - கொஞ்சி, சதுரங்கம், சீரகம்.

சுண்டு - அடிப்பற்றியது, அற்பம், ஓர் சிறு அளவு, சுண்டென்னேவல்.

சுண்டுகட்டை - நெய்வார் கருவியிலொன்று.

சுண்டுவிரல் - சின்னவிரல்.

சுண்டை - கள், கிணறு, சுண்டைச்செடி, நீர்ச்சுண்டு, யானைத்துதிக்கை.

சுண்ணக்கல் - சுக்கான்கல்.

சுண்ணமொழிமாற்று, மொழிமாற்றுப் பொருள்கோல்.

சுண்ணம் - கந்தப்பொடி, சதயம் சுட்டசாந்து, சுண்ணப்பொடி, பச்சைக்கற்பூரம், பராகம், புழுதி.

சுண்ணித்தல்-நீற்றுதல், பூசுதல்.

சுதந்தி - வடமேற்றிசைப்பெண் யானை, பெண்யானை.

சுதந்திரம் - உரிமை.

சுதந்திரி - இட்டமாய் நடத்துவோன், உரிமைக்காரன்.

சுதம்-கேடு, நெருஞ்சில், பரமாகமம், மலத்துவாரம், முறைமை.

சுதரிசனம் - அமராவதி, அழகு, கண்ணாடி, சக்கரம், சம்புநாவல், தேவலோகம், மேருமலை, வலியான்.

சுதருமம்
சுதர்மம்
சுதன்மம் } அறம், தேவஸபை.

சுதலம் - கீழேழுலகத்தொன்று.

சுதனம் - ஆயுதப்பொது, நற்பாக்கியம்.

சுதன் - இராசகுமாரன், மகன்.

சுதன்மம் - தேவேந்திரன் மண்டபம், நல்லதருமம்.

சுதன்வன் - விச்வகர்மா, வில்லாளி.

சுதாகரன் - கருடன், சந்திரன்.

சுதாச்சி
சுதர்ச்சி } சதுரக்கள்ளி.

சுதாசூதி-சந்திரன், யாகம், வசனம்.

சுதாநிதி - சந்திரன்.

சுதாமனு - மலை, முகில்.

சுதாவாக - தானுக.

சுதி - அறிஞன், குதத்துவாரம், சுருதி, பூருவபக்கம், பெண், யாழிநரம்பு.

சுதினம் - நல்லதினம்.

சுதை - அக்கினிதேவி, அமிழ்து, உதைகாற்பசு, கங்கை, சுண்ணச்சாந்து, சுண்ணும்பு, சுவை, பால், பூந்தேன், பொருள், மகள், மருந்து, மின், வெண்மை.

சுத்தக்காணம் - அஹங்காரம். பாதவுறுப்புளொன்று.

சுத்தகாந்தாரம் - ஓரிராகம்.

சுத்தகேவலம் - ஓரவத்தை.

சுத்தகௌடம் - பஞ்சகௌடத்தொன்று.

சுத்தசைதன்னியம் - சுத்தஸ்வரூபஞானம்.

சுத்தசைவம் - ஓர் சைவம்.

சுத்ததத்துவம் - சிவதத்துவமைந்தினென்று.

சுத்ததாளம் - ஓர்வகைத் தாளம்.

சுத்ததினம் - சென்றநாள், புண்ணியதினம், வருடத்தின் முதனாள்.

சுத்தநிருத்தம் - சாந்திக்கூத்துளொன்ருகிய சொக்கம்.

சுத்தப்புடம் - எண்ணலிற் கழிக்கெடுத்தது.

சுத்தமாயை - ஆறுவித அத்துவாக்களுக்கும் மேலாகிய காரணமாயுள்ளது.

சுத்தமார்க்கம் - சத்தியமார்க்கம், நன்னடை.

சுத்தம் - உண்மை, கலப்பற்றது, குற்றமற்றது, சுக்கிலபக்கம், சயம், சுசி, சுத்தாவத்தை, தூய்மை, பவித்திரம், பொறிக்கறி.

சுத்தம்பண்ணுதல் - தூயதாக்கல்.

சுத்தவாசனை - நறுமணம்.

சுத்தவிக்கேபம்
சுத்தவிட்சேபம் } சுத்தவிட்சேபம்.

சுத்தவித்தை - சிவதத்துவமைந்தினென்று.

சுத்தன் - அயன், அருகன், கடவுள், மெய்யன், நிர்மலன், யாவற்றையும் கடந்து நிற்பவன், விஷ்ணு.

சுத்தாவத்தை - ஓரவத்தை.

சுத்தி - அரைப்பலம், இரப்போர்கலம், ஓர் கருவி, கிளிஞ்சல், சும்பிடுகிளிஞ்சல், சங்கு, சுத்தியல், செய்க்குத்தி முதலியன, பரிசுத்தம், பவித்திரம்.

சுத்திகரம் - சுத்திசெய்தல்.

சுத்திகை - அகல், இப்பி.

சுத்தியல் - சிறுசம்மட்டி.

சுத்துாம் } கண்டங்கத்திரி.
சுத்துரு }

சுத்தோதகம்-சுத்தஜலம்,நன்னீர்.

சுநகன் - நாய், நிருருதிதிக்கு.

சுநச்சேபன்-ரிசிகமுனி புத்திரன்.

சுநாசீரன் - இந்திரன்.

சுநாரம் - வுடைக்கலான் குருவி, நாய்ப்பால், பாம்பின்முட்டை.

சுநி - பெண்ணுய்.

சுநிதம் - நன்னடை.

சுந்தரபாண்டியன் - ஓர் பாண்டியவரசன்.

சுந்தரமூர்த்தி - அறுபத்துமூவரிலொருவர்.

சுந்தரம் - அழகு, நன்மை, நிறம்.

சுந்தரன் - அழகன், காமன், சுந்தரமூர்த்தி.

சுந்தரி - அழகுள்ளவள், இந்திராணி, சிறுசெருப்படி, துர்க்கை, பார்வதி, பெண், மூஞ்சூறு.

சுந்தன் - ஓரரக்கன்.

சுபகதி - சந்தோஷம், மோக்கம்.

சுபகரன் - ஈகையாளன், நன்மைசெய்வோன்.

சுபகிருது - ஓர் வருடம்.

சுபக்கம் } தன்பக்ஷம், பொருளிருக்கும்பக்கம்.
சுபட்சம் }

சுபத்திரை - அருச்சுனன்மனைவி.

சுபமிருத்து - நன்மரணம்.

சுபம் - காற்று, தருமம், நன்மை, நித்தியலோகத்தொன்று, பரிசம், மங்களம், மோட்சம், யுத்தம், வாழ்த்து.

சுபயோகம் - ஓர்யோகம், அமுதயோகம்.

சுபராசி - நல்லராசி, அவை—கற்கடகம், மிதுனம், இடபம், கன்னி, தனுஸு, துலாம், மீனம் என்னுமேழாம்.

சுபவாதனை - ஆன்மாவானந்தத்தழுந்தல், ஞானுனுபவம்.

சுபன்னன் - கருடன், சேவல்.

சுபாசுபம் - இன்பதுன்பம், நன்மை தீமை.

சுபாலம் - உபநிடதங்களிலொன்று.

சுபாலிகை - அடுப்பு.

சுபாவஞானம் - அதிட்டானமுமாரோபமுமற்றிருத்தல்.

சுபாவமுக்தி - சுத்தமுக்தி.

சுபாவம் - இயல்பு, கபடமின்மை.

சுபாவவாதம் - ஓர் சமயநூல்.

சுபானு - ஓர் வருடம்.

சுபிட்சம் - செழிப்பு.

சுபுகம் - மோவாய்க்கட்டை.

சுபுட்பம் - கராம்பு, பவளமரம்.

சுபுத்தி - நற்புத்தி.

சுபை - அரசாட்சி, தேவகூட்டம், நியாயஸ்தலம், மூங்கில்.

சுபையதார் - ஓரதிகாரி.

சுப்பியம் - மாவிலிங்கம்பட்டை, விளாம்பட்டை, வெள்ளிலோத்திரம்.

சுப்பிரசுதை - காட்டெருமைப்பால்.

சுப்பிரதந்தி - வடமேற்றிசையானையின் பெண்யானை.

சுப்பிரதீபம் - மிக்கவொளி, வடகீழ்த்திசையானை.

சுப்பிரபேதம் - சிவாகமத்தொன்று.

சுப்பிரமதுவா - கூகைநீறு.

சுப்பிரம் - ஒளி, ஓர்யோகம், கருடப்பச்சையின் குணம், சந்தனம், நீர்மிக்கவொளி, வெண்மை, வெள்ளி.

சுப்பிரயோகம் - பஞ்சபாணவத்தையினொன்று.

சுப்பெனல்-ஒரொலிக்குறிப்பு, நீர்வற்றல், விரைவின் குறிப்பு.

சுமங்கலம் - நன்மங்கலம்.

சுமங்கலை - உமை, மங்கலியப்பெண்.

சுமங்கை - ஆடுதின்னாப்பாலை, வறட்சுண்டி.

சுமடர் - அறிவிலார், கீழ்மக்கள்.

சுமடு - அறிவின்மை, சும்மாடு, சுமை.

சுமதி - அறிஞன், நற்குணமுடையாள், நற்குணன், நற்புத்தி, நன்மதி, பாரம், மிகுதி.

சுமத்தல் - கட்டளைசார்தல், தண்டஞ்சார்தல், தாங்குதல், பாரமேற்றல், பொறுத்தல்.

சுமத்திரை - பாண்டுவின் மனைவிகளுளொருவள்.

சுமத்து - சுமத்துதல், சுமத்தென்னேவல்.

சுமம் - பூ.

சுமரணம் } உணர்ச்சி, சுரணை,
சுமரணை } சொரணை, நினைப்பு.

சுமருதல் - சுமக்குதல்.

சுமனசம் - பூமலர்.

சுமாரகம் - ஞாபகம், நினைவு.

சுமார் - ஏறக்குறைய.

சுமார்த்தம் - ஞாபகத்தோடு சம்பந்தப்பட்டது, ஸ்மிருதியிலே விதிக்கப்பட்டது.

சுமாலி - ஓரரக்கன், கள்.

சுமித்திரை - தசரதன் மனைவி.

சுமை - பாரம்.

சுமைதலை - பொறுப்பு.

சுமைதாங்கி - ஏதண்டை, பொறுப்பாளி.

சுமையடை - சும்மாடு.

சும்பகம் - ஊசிக்காந்தம், தீத்தட்டிக்கல்.

சும்பகன் - ஸ்திரீலோலன்.

சும்பனம் - சூப்புதல், முத்தம்.

சும்பித்தல் - முத்தமிடல்.

சும்புதல் - வாடிச்சுருங்கல்.

சும்புன் - கடம்பு.

சும்மா-இயல்பு, உபசாரயின்மை, ஒழிவிலாமை, தொழிற்படாமை, முகாந்தரயின்மை, மௌனம்.

சும்மை - ஆவாரை, ஊர், ஒலித்தல், சுமை, நகர், நாடு, நெற்போர்.

சுயஞ்சோதி - இயற்கையொளி, கடவுள், கலப்பிலாவொளி.

சுயபுணர்ச்சி - தற்புணர்ச்சி.

சுயம் - இயல்பு, கலப்பற்றது, சொந்தம், தானுதல்.

சுயம்பாகி - சமையற்காரன், சவர்க்காரம்.

சுயம்பிரகாசன் - தற்சோதியானவன்.

சுயம்பு இயற்கை, கடவுள், சிவன், சுயாதீனம், தானுகவாதல், பிரமன்.

சுயம்வரம் - கணவனைத்தானுகத் தேர்ந்தெடுப்பது.

சுயிரகம் - குசைப்புல்.

சுயேச்சை - தன்னிச்சை, தன்னிஷ்டம்.

சுயோகி - கள்.

சுயோதனன் - துரியோதனன்.

சுரகுரு - இந்திரன், வியாழன்.

சுரங்கம் - ஒளிப்பிடம், கீழறை, சாதிலிங்கம், திலகசிந்தூரம், தேன், தோடம் பழம், தோன்றுமலுள்ளறுக்குந்துவாரம்.

சுரசம் - அரத்தை, சாறு, சிறுகிழங்கு, சுகிர்தசாரம், துளசி, நறும்பிசின், நொச்சில், பாதரசம், முறித்தசாறு.

சுரசனி - இரவு.

சுரசா - துளசி.

சுரசி - வெண்ணொச்சி.

சுரசை - சிற்றரத்தை.

சுரஞ்சனம் - கமுகு.

சுரடி - ஓர்பண்.

சுரண்டல் - கவருதல், சீண்டுதல், தூண்டுதல், விபசாரஞ்செய்யல்.

சுரதநூல் - காமநூல்.

சுரதம்-அன்பு, இசைப்பு, இரதம், ஒட்டல், பாதரசம், புணர்ச்சி, மருந்திழிசாரம்.

சுரதனு - வானவில்.

சுரதரு - கற்பகம்.

சுரத்தல் - இடைவிடாது சொரிதல், உண்டாதல், ஊறுதல், நிறைதல், பயத்தல்.

சுரத்துய்த்தல் - ஒருதுறை.

சுரநதி - ஆகாயகங்கை, கங்கை.

சுரபதம்-ஆகாயம், தேவலோகம்.

சுரபி - கந்தகத்தூள், கள்ளி, காமதேனு, சாதிக்காய், சித்திரைமாதம், துளசி, தேட்கொடுக்கி, பசு, பிரமிப்பூடு, பூமி, மது, மல்லிகை, வாசனை.

சுரபு - இல்வம்பிசின்.

சுரபுன்னுகம் / சுரபுன்னை } ஓர் மரம், வாலுழ.

சுரப்பு - சுரத்தல்.

சுரப்புவடிவு - மூலமேற்றிரன்.

சுரமதி - சிலந்தி.

சுரம் - அருநெறி, இசை, இராகத்தகுதி, இராகபேதம், உட்டுளை, இருப்பு, கள், காடு, காய்ச்சல், கொம்பினுட் குருத்து, பாலைநிலம், வழி.

சுரரிடம் - தேவலோகம்.

சுரர் - வானோர்.

சுரர்துருமம் - தேவதாரு.

சுரர்பகைவர் - அஸுரர்,

சுரர்பதி - இந்திரன்.

சுரன் - அறிஞன்; சுரம், சூரியன், பாலை நிலம்.

சுரா - கள்.

சுராட்டு - இந்திரன், சிவன், விஷ்ணு.

சுராட்புருடன் - சிவன், வாஸ்து புருடன், விஷ்ணு.

சுராபகை - கங்கை.

சுராலயம் - கள்ளுக்கடை, சுவர்க்கலோகம், மேரு.

சுராலை - சாம்பிராணி.

சுரி - ஆணரி, எட்டுத்துளை, சங்குச்சுரி, சுரியென்னேவல், சுழற்சி, சேறு, தமர், முறுக்கு.

சுரிகுழல் - அளகம், கவசம், சுருண்டகுழல், பெண்மயிர்.

சுரிகை - உடைவாள், ஒருபநிடதம், கத்தி, கவசம்.

சுரிதகம் - கலிப்பாவுறுப்பாறனு ளொன்று.

சுரிதம் - கலக்கப்பட்டது, வெட்டப்பட்டது.

சுரிதல் } சுருங்கல், சுழித்தல்,
சுரித்தல் } சுழித்துள்ளே வாங்கல், சேறுதல், திரைதல்.

சுரிப்புறம் - சங்கு, துவாரமுள்ள பக்கம், நத்தை.

சுரியல் - இளைஞர் மயிர், சுரிதல், சுழலல், நீர்ச்சுழி, பெண்மயிர், மயிர், வளைவு.

சுருக்கம் - அடக்கமான செய்கை, கட்டல், குறைவு, சங்கிரகம், சிறுமை, சுருங்கல், வறுமை.

சுருக்கல் - அடக்கல், கட்டல், சுருக்குதல்

சுருக்கி - ஆமை, ஓர் வினையெச்சம், சிறுகீரை, தொட்டாற் சுருக்கி.

சுருக்கு - உருவுதடம், கட்டு, கண்ணி, கயிற்றுச் சுருக்கு, சுருக்கம், சுருக்கென்னேவல், சுருங்கப்பிடித்துக் கட்டியது, நெய்த்துடுப்பு, மடிப்பு.

சுருங்கச்சொல்லல் - நூலழகிலொன்று, அது—சொற்சுருங்கச்சொல்லுதல்.

சுருங்கல் - குறைதல், சுருங்குதல், திரைவு, நுழைவாயில், மாலை.

சுருங்கு - சலதாரை, சுருங்கென்னேவல்.

சுருங்குதல் - அடக்கமாயிருத்தல், அலைசுருங்கல், இறுகுதல், ஒடுங்குதல், ஒழுக்கந்தப்பல், குறைதல், கூம்புதல், கெடுதல், சங்கிரமாதல்.

சுருங்கை - கரந்தகற்படை, கோட்டையிற் கள்ள வழி, நுழைவாயில், மதகு.

சுருசுருத்தல் - ஊடுருவுமொழிக் குறிப்பு, விரைவுக்குறிப்பு.

சுருட்டல் - சுருட்டுதல்.

சுருட்டி - ஆலவட்டம், ஓர் ராகம், மயிர்ச்சிகைப்பூடு.

சுருட்டு - உபாயம், சீலைச்சுருட்டு, சுருட்டென்னேவல், சுருள், மடக்குகை.

சுருண்டுபோதல் - சோர்ந்துபோதல், பலங்குன்றல்.

சுருணி - யானைத்தோட்டி.

சுருணை - ஓர் வளைவு, சுருண்டது, நூல் முதலியவற்றின் பந்து, மயிர்ச்சுருணை.

சுருதி - இசை, ஒலி, காது, சுதி, சுரம், மங்கலச்சொல், மந்திரம், வேதம்.

சுரும்பர் - ஆண்வண்டு, மலைவண்டு.

சுரும்பாவன் - மன்மதன்.

சுரும்பு - ஆண்வண்டு, வண்டு.

சுருவை } நெய்த்துடுப்பு.
சுருவம் }

சுருளல் - சுருளுதல், மயிர்ச் சுருள், வளைதல்.

சுருள் - ஐம்பாவிலொன்று, அஃது,—பின்னே செருகல், சுருளென்னேவல், தாமரை யுட்சுருள், நூற்சுருள் முதலியன, பெண்மயிர், வெற்றிலைச் சுருள், வட்டாகாரமாய் மடிப் புண்ட பாத்திரம்.

சுரூபம் - உருவம், நல்லுருவம்.

சுரூபவதி - அழகுடையவள்.

சுரேசன் - இந்திரன், ஈசானன், குமரன்.

சுரேந்திரன் - இந்திரன்.

சுரேந்திரன்மைந்தன் - அருச் சுனன், சயந்தன்.

சுரை - அமுதம், அம்புத்தலை, உட்டுளை, களவு, கள், குழாய், சுரைக்கொடி, சூர்ணம், பசு, பசுவின் முலை, பூண், விலங்கின் முலை.

சுரோணராசம்வர்த்தம் - சிகப்பு இரத்தினம்.

சுரோணி - நிதம்பம்.

சுரோணிதம் - உதிரம், சிவப்பு, மகளிர் சூதகம்.

சுரோத்திரம் - காது, கேள்வி.

சுரோத்திரேந்திரியம் - ஞானேந் திரியமைந்திலொன்று.

சுலபம் - அற்பம், இலேசு.

சுலவல் - சுழலல், சுழற்றுதல்.

சுலனன் - அக்கினி.

சுலவுதல் - சுழலல், சுழற்று, சூழுதல்.

சுலுகம் - கலகம், குறைவு, சிரங் கை, சேறு.

சுலுப்பு - ஓர் மரக்கலம்.

சுலோகம் - ஆரியச்செய்யுள், பழ மொழி, புகழ், வசனம்.

சுலோகி - கள்.

சுலோசனம் - சிறந்தவிழி, மான், மூக்குக்கண்ணாடி.

சுலோபம் - அற்பம், எளிது, எறும்பு, மூதுரை.

சுல்கம் - கிரையப் பொருள்.

சுல்லம் - கயிறு, தாமிரம்.

சுல்லி - அடுப்பு, மடைப்பள்ளி.

சுல்லு - வெள்ளி.

சுவ - சொந்த.

சுவகதம் - ஒன்றிற்றோன்றி அஃதை நீங்காது பலதன்மை யாயிருத்தல்.

சுவகபோலம் - தாளுயுண்டு பண்ணல்.

சுவசனம் - சாதுரியம், நல்ல வசனம்.

சுவச்சம் - அழுக்கின்மை, எண் ணெய், குற்றமற்றது, சொச் சம், சௌக்கியம், நின்மலம், வெண்மை.

சுவடி - பனையோலையில் எழுதிய புத்தகம்.

சுவடு - அங்கவடி, அடிச்சுவடு, அடையாளம், இரும்புக்கவசம், கட்டு, கபடம், குறிப்பு, சுளுகு, தழும்பு, நெல்விலக்கம், பக்கரை, வண்டித்தடம்.

சுவணம் - கருடன், கழுகு, பொன்.

சுவத்தம் - சொஸ்தம், சுகம்.

சுவத்தி, சுவத்திகம் - ஓரடையாளம், நவாசனத்தொன்று, மங்கலவடையாளம்.

சுவநம் - சண்பகம், சுவப்பநம்.

சுவநன் - சூரியன், சந்திரன், தீ.

சுவப்பிரம் - நரகம், பாதாளம், வளை.

சுவம் - ஐசுவரியம், சொந்தம்.

சுவயம் - உரிமை, சுயம், தான்.

சுவயம்வரை - தானேமாலையிட்டு மணமுடித்த பெண்.

சுவயேச்சை - தன்னிச்சை.

சுவரகழ்கருவி - கன்னக்கோல்.

சுவரொட்டி - அணைசுவர், ஆட்டின் மண்ணீரல், சுவர் முள்ளங்கி.

சுவர் - அண்டச்சுவர், அலங்காரம், ஆகாயம், காயத்திரியிஞெருறுப்பு, தேவலோகம், மதில், வீடு முதலியவற்றின் சுவர்.

சுவர்க்கம் - தேவலோகம், மூலை.

சுவர்க்கர் - வானோர்.

சுவர்க்கோழி - ஓர்வண்டு.

சுவர்ச்சாதி - சத்திச்சாரம்.

சுவர்ணம் - சொன்னம், பொன்.

சுவலை - அரசமரம்.

சுவலோகம் - மேலேழுலகிஞென்று.

சுவல்லி - கார்போகிவிதை.

சுவல் - குதிரைக்கழுத்தின்மயிர், தோண்மேல், பிடர், முதுகு, மேடு.

சுவல்வரி - அணில்.

சுவவு - சுவர்க்கம், பறவைமூக்கு, மூஞ்சூறு.

சுவறல் - உறிஞ்சல், ஊறுதல், காய்தல், வற்றல்.

சுவற்றுதல் - குடித்தல்.

சுவன்னகாரன் - பொற்கொல்லன்.

சுவன்னயூதி - செப்புமல்லிகை.

சுவா - நாய்.

சுவாகதம் - கிள்ளை, க்ஷேமம், நல்வரவு, விசாரித்தல்.

சுவாகா, ஸ்வாஹா - அக்கிதேவி, மந்திரமுடிவிஞென்று.

சுவாசகம் - எட்டி, கிளி, சவட்டுமண், புருமுட்டி, பேராமுட்டி, விஷமுட்டி.

சுவாசம் - உயிர்ப்பு, சவட்டுமண், நல்லிருப்பிடம், நன்மணம்.

சுவாசினீ - பாதிரிமரம்.

சுவாதகத்தி - இத்திமரம்.

சுவாதம்-உருசித்தல், ஒருநோய், சுவாசம், பாகஞ்செய்தல், புசித்தல்.

சுவாதி - ஓர் நக்ஷத்ரம், சோதி நாள்.

சுவாதிட்டானம் - ஆதாரங்களா றிலிரண்டாவது.

சுவாது - ஆடாதொடை, தித்திப்பு, நல்லசலம்.

சுவாதுகண்டகம் - நெருஞ்சில்.

சுவாதுகந்தி - துளசி.

சுவாத்தியம் - இன்பம், சுகம், பாக்கியம்.

சுவாத்தியாயம் - அத்தியயனம், வேதமோதல், வேதம்.

சுவாந்தம் - மனம்.

சுவாபப்பிரமாணம் - ஓரளவு, அஃது— ஒருசொற்பல பொருள் விரிந்தவழி அதற்கேற்ற பொருள் கொள்ளல்.

சுவாபம் - இயல்பு.

சுவாமி - அரசன், அருகன், உவாத்தி, எசமானன், கடவுள், கணவன், கந்தன், குரு, சிவன், பொன்.

சுவாயம்பு - ஓர்மனு.

சுவாயம்புவம் - சிவாகமத் தொன்று.

சுவாரசம் - இனிமை, வெள்ளிலோத்திரம்.

சுவாரி - கப்பலின்பின்னணியம், சவாரி, சிவிகை முதலிய யானம்.

சுவார்த்தானுமானம் - தற்குறிப் பனுமானம்.

சுவாலை - சொலிப்பு.

சுவானம்-நாயுருவி, நாய், பொன்.

சுவானுபவம் } தெய்வவருள்,
சுவானுபூதி } தெய்வவறிவு.

சுவி - இத்திமரம், துளசி.

சுவிகை - கச்சோலம், கள்.

சுவீகாரம் - அங்கீகரிப்பு, அனுபவம், தனதாக்குதல்.

சுவீரியம் - இலந்தைக்கனி.

சுவேசம் - வெண்கரும்பு.

சுவேச்சை - தன்னிச்சை.

சுவுகம் - மோவாய்க்கட்டை.

சுவேதகம் - சவரிலோத்திரம்.

சுவேதகாண்டம் - வஞ்சிக்கொடி.

சுவேதகுசுதம் - வெள்ளெருக்கு.

சுவேதசம் - வியர்வையிற்பிறப்பன.

சுவேதசாரம் - நாணற்புல்.

சுவேதநீர் - சுக்கிலம்.

சுவேதமூலம் - சாரணை.

சுவேதம் - நாணல், மாவிலங்கம், வஞ்சிமரம், வியர்வை, வெண்மை, வெள்ளி.

சுவேதவராககற்பம் - ஓர்கற்பம்.

சுவேதவனப்பெருமாள் - சிவஞானபோதஞ்செய்த மெய்தேவர்.

சுவேதவனம் - திருவெண்காடு.

சுவேதவாகனன் - அருச்சுனன்.

சுவேதனை - தன்னறிவு.

சுவேதனைக்காட்சி - அபரோட்சஞானம்.

சுவேதாசுவதரம் - ஒருபநிடதம்.

சுவை - அறுசுவை, அவை— இனிப்பு, புளிப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, கார்ப்பு, கைப்பு, இனிமை, இரசாலங்காரம், உருசி, ஐம்புலத்தொன்று, சித்திரைநாள், சுவையென்னேவல், விலங்குறுகுறிப்பினுளொன்று.

சுவைத்தல் . இன்பந்தரல், உண்டல், உருசித்தல், போகம்நுகரல், முலையுண்ணல்.

சுழலல் - கன்றுதல், சுழல்வு.

சுழலாவிரை - பொன்னுவிரை.

சுழலுதல் - கலங்குதல், சுழலல், சுற்றுதல்.

சுழல் - காற்றூடி, சுழலென்னேவல், சுழல்,சுழிநீர் முதலியன, வஞ்சனை, வளைதடி, வழைவு.

சுழல்காற்று - சூறைக்காற்று.

சுழல்படை - சக்கரம், வளைதடி.

சுழல்வு - கலக்கம், சுற்று,சுழற்சி.

சுழற்றல் - உழற்றல், கிறுகிறுப்பு, சுற்றியாட்டல்.

சுழாரை - பொன்னுவிரை.

சுழி - அங்கச்சுழி, அக்ஷரக்சுழி, இலக்கணச்சுழி, உரோமச்சுழி, கபடம், சுழியென்னேவல், நீர்ச்சுழி முதலியன,மூர்க்கம், விந்து.

சுழிகுளம் - சித்திரக்கவியினொன்று, அது—நான்கடியுஞ்சுற்றி வாசிக்கினுஞ் சரிவரத்தொடக்குங் கவி.

சுழிகை - ஓர் சிவஸ்தலம், கள், சுருள், சுழிதல்.

சுழிதல்- கபடமுண்டாதல், கலங்கல், கழித்தல்.

சுழித்தல் - அலைதல், எழுச்சி, சுழிக்குதல், மறைத்தல், வேறோரிடத்தின்றி நிற்றல்.

சுழிமுனை - ஆறுதாரத்தையு மூடுருவிநிற்கும்நாடி, நடுநாடி மூன்றினொன்று.

சுழியச்சு - தட்டார் கருவியினொன்று.

சுழியல் - சுழிதல், சுருள், திருச்சுழியென்னுமோர்தலம்.

சுழிவு - ஒளிவு.

சுழுத்தி - ஐந்தவத்தையி னொன்று, அஃது—மயக்கமான நித்திரை, மூன்றாமவத்தை, அஃது இதயத்தானம்.

சுழுமுனை - மூவகைநாடியி னொன்று.

சுளகு - முறம், விசாகநாள்.

சுளி - புளியாரை.

சுளிகை - முருங்கை.

சுளிக்கு - ஊன்றுகோல்.

சுளித்தல்-கோபம், சினக்குறிப்பு. சினம், திரும்பல், வெறுப்பு.

சுளுகு-அற்பம், இலகு, உபாயம், சிறுமை.

சுளுகோதகம் - சிறங்கைநீர்.

சுளுந்து - கோரான், சூள்.

சுளுவு-இலேசு, சலக்கரணை, சுலபம், தணிவு.

சுளை - பலாக்காய் முதலியவற் றின் சுளை.

சுள் - அற்பம், உறைப்பு, கருவாடு, சூள், மெல்லியது.

சுள்ளக்கம் - கோபம், மேட்டிமை, வேர்க்குரு.

சுள்ளக்காய் - மிளகாய்.

சுள்ளம் - கோபம்.

சுள்ளாணி - மெல்லியவாணி.

சுள்ளாப்பித்தல் - அடித்தல், உறைத்தல், எரிதல், சூடுகாட்டடல், வீசுதல், வேகங்கொள்ளல்.

சுள்ளாப்பு - அடி, உறைப்பு, சீக்கிரம், பழிச்சொல், வெப்பம்.

சுள்ளி - அனிச்சமரம், ஆச்சமரம், சிறுகொம்பு, சிறுவிறகு, ஞாழல், மயிர்க்கொன்றை, மாமரம்.

சுள்ளிடுதல்-உறைத்தல், நோதல்.

சுள்ளிடுவான் - ஒருபூச்சு, மிளகுக்காய்.

சுள்ளு - கோபம், கள், வெப்பம்.

சுள்ளை - காளவாய், சூளை, மட்கலஞ்சுடுசூளை.

சுறடு - வறண்டது.

சுறட்டன் - முரடன்.

சுறட்டு - சிக்கு, தலையிடுகை, துறட்டு, தொரந்தரை, மூர்க்கம்.

சுறணம் - கருணைப்பூண்டு.

சுறண்டு - கோள், சருவுதல், தூண்டிவிடுதல், புரண்டுதல்.

சுறவு - சுறா.

சுறா - தேக அழுக்கு, மகரமீன், மகரவிராசி.

சுறாளம் - கதி, கோபம்.

சுறீரெனல் - ஒலிக்குறிப்பு, விரைவுக்குறிப்பு.

சுறுக்கு - ஆத்திரம், கதி, காரம், கூர்மை.

சுறுக்கெனல் - கடுப்பின்குறிப்பு.

சுறுசுறுப்பு - சாக்கிறதைவிரைவு, வேகம்.

சுறை - கொத்தான்.

சுரோணிதவழலை - இந்துப்பு.

சுற்பம் - செப்பு, சொற்பம்.

சுற்றத்தார் - இனத்தார், துணைவர், பரிசாரகர்.

சுற்றந்தாழல் - இனந்தழுவியிருத்தல்.

சுற்றம் - அரசர்க்குத் துணையினொன்று, உறவு, உற்றூர்.

சுற்றல் - உடுத்தல், எழுச்சி, சுற்றுதல், சூழ்தல், வட்டமாயோடல்.

சுற்றிக்கொள்ளுதல் - கவர்தல், சிக்குப்படுதல், சூழ்ந்து கொள்ளுதல்.

சுற்று - உழற்சி, கயிறு முதலிய சுற்றுஞ்சுற்று, கவர்தல், சுருள், சுற்றளவு, சுற்றுப்புறம், சுற்றென்னேவல், மதில், மரச்சுற்று, வட்டமாயோடல்.

சுற்றுதல் - அணிதல், கவர்தல், சுழற்றல், சூழுதல், நடத்தல், நூன் முதலிய சுற்றல், வஞ்சித்தல், வட்டமாயோடல்.

சுற்றுப்புறம் - அயல்.

சுற்றுவழி - நேரற்ற பாதை.

சுற்றுவாரி - கல்லூரி, சுவற்புறத்து நீண்டவுத்திரம்.

சுனகன் - நாய், நிருருதிமூலை.

சுனக்குடம் - சதுரக்கள்ளி.

சுனை - உரோசம், கரு, குளம், கூர், தினைவு, நீரடுத்தவிடம், நீரூற்று, பசும்புற்றரை, மலைச்சுனை.

சுனைக்கரந்தை - ஓர் கரந்தை.

சுனைதல் - குழியாக்கல், குழைதல், சொறிதல், மிருதுவாதல், வாடல்.

சுனைத்தல் - சொறிதல்.

சுனைவு - பேய்க்கடலை, மலைத்தண்ணீர்.

சுன் - சனி, சுன்னை, வட்டம், வெண்மை, வெறுமை.

சுன்னச்சி - சத்திச்சாரம்.

சுன்னிதம் - நுண்மை.

சுன்றுக்குட்டி - திரட்டுப்பாற்கட்டி.

சுன்னை - பூச்சியம்.

## சூ

சூ - ஓரெழுத்து, விலங்கினங்களை யோட்டுமோர் குறிப்பு, வியப்புச்சொல்.

சூகம்-அம்பு, இரக்கம், ஊர்வன, காற்று, சுனை, தவழ்சாதிப்பொது, தாமரை, நெல்வால்.

சூகரம் - பன்றி, மான்.

சூகை - ஓரெறும்பு, சுழற்சி, தலைச்சுழற்சி, யானை, வீட்டின் பின்புறம்.

சூக்கம் - சூட்சம்.

சூக்காட்டுதல் - உச்சக்காட்டுதல்.

சூக்குமசரீரம் - ஸ்தூலசரீரமல்லாதது, நுண்வடிவானவுட்சரீரம்.

சூக்குமதண்டுலம் - திப்பிலி.

சூக்குமபத்திரம் - கடுகு, கொத்தமல்லி, சீரகம், செங்கரும்பு.

சூக்குமபூதம் - ஸ்தூலபூதமல்லாதது.

சூக்குமம் - அணு, அற்பம், ஓரலங்காரம், கடவுள், சிவாகமத்தொன்று, சீந்தில், சீவதேகம் மூன்றினொன்று, தவறு, நுண்ணிய வறிவு, நுண்மை, வஞ்சகம், வானோர்வரம் நான்கினொன்று, அஃது — கண்டிப்பின்மை.

சூக்குமில் - சிலந்திப்பூச்சிக்கூடு.

சூக்குமை - நான்குவாக்கினொன்று.

சூக்குளி - வெற்றிலை.

சூக்தம் - புகழப்படுவது.

சூங்குமம் - வேலிப்பருத்தி.

சூசகம் - உளவு, தருப்பைப்புல்.

சூசகவாயு - சூதகவாயு.

சூசகன் - உவாத்தி, ஒற்றன்.

சூசம் - துருவாட்டேறு.

சூசநம் - அறிவித்தல், பார்த்தல்.

சூசனை - சமிக்ஞை, நுண்மை, போதனை, விவேகம்.

சூசாக்கிரம் - ஊசிமுனை.

சூசி - ஊசி, குறிப்பு, துளை.

சூசிகம் - ஓர் வாச்சியம்.

சூசிகாமுகம் - சங்கு.

சூசிகை - ஊசி, குறிப்பு, யானைத் துதிக்கை.

சூசியம் - ஊசிக்காந்தம், சூட்டிறைச்சி.

சூசியாசியம் - பாதவுறுப்புகளொன்று, மூஞ்சூறு.

சூசுகம் - முலைக்கண்.

சூடகம் - கிணறு, கைவளை, சடை

சூடம் - உச்சி, தலை.

சூடல் - அணிதல், சூடுதல், முடிதரித்தல்.

சூடன் - ஓர்மீன், கருப்பூரம்.

சூடாகரணம் - குடுமிவைத்தல்.

சூடாமணி - ஓர் காப்பியம், ஓர் தேவமணி, குன்றிமணி, முடிமணி.

சூடாமணிநிகண்டு - வீரைமண்டலவர்செய்தநிகண்டு.

சூடாலம் - சணப்புவிதை, தலை.

சூடாலைக்கல் - ஓர் கல்.

சூடி - சீலை, சூடினவன், புடவை.

சூடிகை - முடி.

சூடிச்சி - எவட்சாரம்.

சூடிணர் - கோங்குமரம்.

சூடு - அரிக்கட்டு, உச்சிக்குடுமி, எருத்துத்திமில், சுடுதல், சூடுதல், சூடென்னேவல், சேவற்சூடு, தலை, நுனி, நென் முதலியவற்றினரிக்குவியல், மயிற்சூடு, முடி, வெடி, வெப்பம்.

சூடை - ஓர்மீன், குடுமி, கைக்கடகம், வீட்டிறப்பு.

சூட்சி - உபாயம்.

சூட்சமபுத்தி - நுண்ணியபுத்தி.

சூட்சமம் - சூட்சமசரீரம், தந்திரம், நுட்பம்.

சூட்டல் - அணிவித்தல், ஏற்றுதல், வியங்கோண் முற்று.

சூட்டு - குற்றச்சாட்டு, கூர்மை, சூட்டுந்தன்மை, சூட்டென்னேவல், தரித்தல், நுதலணிமாலை, பாம்பின் சூட்டு, மயில் முதலியவற்றின் சூட்டு, மாலை, முடிப்பு.

சூதகசத்துரு - காந்தம்.

சூதகம் - அருவருப்பு, கிணறு, தீட்டு, பழமை, பிறப்பு, மகளிர் துடக்கு, மாமரம்.

சூதத்தைப்பொன்னுக்கி - நாகபாஷாணம்.

சூதநதி - பொருனைநதி

சூதநோக்கல் - நீலாஞ்சனக்கல்.

சூதபாஷாணம் - இரசபாஷாணம்.

சூதம் - இரசம், குறி, கேட்டல், சூதாடு கருவி, சூது, பவளமல்லிகை, பாதரசம், புளிமா, மடைத்தொழில், மன்மதன் கணை, மாமரம், வண்டு, விழுதல்.

சூதர் - சூதாடுபவர், தேர்ப்பாகர், பாணர், புகழ்வோர், வியாஸர் மாணக்கர்.

சூதவஞ்சனம் - சூதநோக்கல்.

சூதவம் - வண்டு.

சூதனம் - அழித்தல்.

சூதன் - சமையற்காரன், சூதமாமுனி, சூதாடுவோன், சூரியன், தச்சன், தேர்ப்பாகன், பாணன், புகழ்வோன், வஞ்சகன்.

சூதி - அசைவு, கதி, தைத்தல், நடை, பிள்ளைபெற்றவள்.

சூதிமம் - தைத்தல்.

சூது - ஓரிதழ்த்தாமரை, சூதாடு கருவி, சூதாட்டு, தாமரை, தாயம் விளையாடல், வஞ்சகம்.

சூதுவென்றி - ஒருதுறை.

சூத்திரதாரி - கடவுள், பதுமையாட்டி.

சூத்திரநிலை - கருத்துத்தொடர்ந்துநிற்குநிலை, சூத்திரப்பாடல்.

சூத்திரப்பா - ஓரகவல், நூற்பா.

சூத்திரப்பாவை - கயிற்றினாலாட்டும் பாவை.

சூத்திரப்புறனடை - சூத்திரத்துக்கு விலக்கு முதலியன கூறும் விதி.

சூத்திரம் - இயந்திரம், இரகசியம், உபாயம், ஒழுங்கு, சூத்திரயாப்பு, தீர்ப்புநூல், பஞ்சிநூல், பூணூல், வழி நூல்.

சூத்திரர் - சூத்திரவேலை செய்வோர், நான்காம் வருணத்தோர்.

சூத்திரர்தொழில் - சூத்திரர்க்குறியவறுதொழில், அவை— உழுதல், காருகவினைகளாக்கல், குயிலுவத்தொழில், பசுக்காத்தல், மூன்று வர்ணத்தோர்க்குமேவல் செய்தல், பொருளீட்டல்.

சூத்திரவிருத்தி - சூத்திரர்தொழில், சூத்திரங்களுக்குரிய ஓர் உரை.

சூத்திரன் - புஷ்பராகம், வைடூரியம்.

சூநம் - இறைச்சிக்கடை, பிறப்பித்தல், பூமலர், மான், வீக்கம்.

சூநர் - ஊன்விற்போர்.

சூநியன் - மூடவன்.

சூநு - சூரியன், பின்னோன், மகள், மகன்.

சூந்தமம் - சிலந்தி நாயகம்.

சூபகாரன் - சமையற்காரன்.

சூபம் - அம்பு, ஓர் பயறு, மடைத்தொழில்.

சூப்பியம் - பாம்புகொல்லி.

சூப்புதல் - உமிந்தெடுத்தல், சுருக்குதல், சும்பனம்பண்ணல்.

சூமம் - ஆகாயம், நீர், பால்.

சூரசுதன் - சனி.

சூரசூதன் - அருணன், புதன்.

சூரசேனம் - ஓர் தேசம்.

சூரசேனன் - கண்ணன்பாட்டன்.

சூரணம் - கருணைக்கிழங்கு, பஸ்மம்.

சூரணிகை - ஒருவகைப்பா, கருத்துப்பொருள், விவரம்.

சூரணித்தல் - பொடித்தல்.

சூரபன்பன் - சூரன்.

சூரம் - அச்சம், கடலை, வீரம்.

சூரர் - படைவீரர்.

சூரலன் - பாண்டியன்.

சூரல் - சூரைப்பூ, பிரம்பு.

சூரன் - ஓரஸுரன், கரடி, கிருஷ்ணன் பாட்டன், கோழிச்சேவல், கௌரிபாஷாணம், சிங்கம், சூரபன்மன், சூரியன், தீ, நவச்சாரம், நாய், புலவன், வீரன்.

சூரி - எருக்கு, காடுகாள், காளி, கிருஷ்ணன், சூரியன், நத்தைச்சூரி, பண்டிதன், புத்தகுரு, புலவன், புளிச்சக்கீரை, மட்டுக்குக்கத்தி, வீரமுள்ளவள்.

சூரியகணம் - அமங்கலகணம் நான்கினொன்று, நேர்நிரை நேரடுத்து வருவது.

சூரியகரந்தை-ஓர்விதக்கரந்தை.

சூரியகலை - சூரியசரம், பிங்கலை.

சூரியகாந்தம் - ஓர்பூ, சூரியமுகத்துத் தீவிடுங்கல்.

சூரியகுலம் - சூரியவமிசம்.

சூரியசங்கிரமம் / சூரியசங்கிராந்தி } மாதப்பிறப்பு.

சூரியசரம் - பிங்கலை.

சூரியசித்தாந்தம்-ஓர்கணிதநூல்.

சூரியசித்திரம் - சூரியபுத்தி.

சூரியபுடம் - ஓர் கணிதபுடம்.

சூரியபுத்திரன்- சனி, சுக்கிரீவன், நமன், வருணன்.

சூரியபுராணம் - பதினெண்புராணத்தொன்று.

சூரியமணி - ஓர்மரம், சூரியகாந்தம்.

சூரியமண்டலம் - ஓர் மண்டலம், சூரியலோகம்.

சூரியர்-துவாதசாதித்யர், புலவர்.

சூரியவிட்சேபம் - சூரியனது பதனகேந்திரம்.

சூரியன் - ஆதித்தன், செப்புமலை, செவ்வெருக்கு, சோழன், ஞாயிறு.

சூரியாஸ்தமயம் - மாலைப்பொழுது.

சூரியாஸ்திரம் - ஓர்பாணம்.

சூரியாலோகம் - சூரியகிரணம்.

சூரியேந்துசங்கமம்-அமாவாசை.

சூரியை - புதுமணப்பெண்.

சூரியோதயம் - உதயகாலம்.

சூருமம் - குசைப்புல், மாந்தப்புல்.

சூரை-ஓர்செடி, ஓர்பயிர், ஓர்மீன், கள், தூதுளை, நெற்றிப்புல்.

சூர் - அச்சம், ஓரசுரன், கொடுமை, சூரென்னேவல், துன்பம், தெய்வப்பெண், தெய்வம், நோய், மிளகு, யோகினி, வனதேவதை, மிளகு, வால்மிளகு.

சூர்த்தநோக்கு - கொடுங்கண், கொடுமை.

சூர்த்தல் - அச்சங்கொடுத்தல், சினத்தல், சுகிர்தல், சுழற்றல்.

சூர்ப்பகன்னம் - யானை.

சூர்ப்பகைவன் - முருகன்.

சூர்ப்பநகி / சூர்ப்பநகை } இராவணன் றங்கை.

சூர்ப்பம் - சுளகு, தாணியென்னு மோரளவை.

சூர்ப்பு-கொடுந்தொழில், சுழற்சி, பயம், வளைந்தகடகம்.

சூர்மகள் - தெய்வப்பெண், யோகினி.

சூர்வு - சுகிர்வு.

சூலதரன் } சிவன், வயிரவன்.
சூலபாணி }

சூலம் - இரேவதிநாள், ஓராயுதம் கழு, சதுரக்கள்ளி, சாமரம், சூலைநோய், துகிற்கொடி, நித்தியயோகத்தொன்று, மரணம்.

சூலல் - அறுத்தல், தோண்டல்.

சூலி - கருப்பிணி, காளி, சிவன், துர்க்கை, யோகினி.

சூலிகம் .. கோழி.

சூலிகை - யானைக்காதடி.

சூலினி - சவர்க்காரம், வெற்றிலை.

சூலுதல் - அறுத்தல், குடைதல், தோண்டல்.

சூலை - ஓர் நோய்.

சூல் - கருப்பம், சூலென்னேவல், முகிற்கரு.

சூழல் - ஆராய்தல், ஆலோசனை, இடம், கருத்து, குறிப்பு, கூட்டம், சுற்றுப்புறம், சூழ்ச்சி.

சூழாமை-ஆராய்வின்மை, ஆலோசனையின்மை.

சூழி - உச்சி, உச்சிக்கொண்டை, கடல், குளம், சுனை, நெற்றி, யானைமுகபடாம்.

சூழிகை - கள்.

சூழுதல் - ஆலோசனைபண்ணல், சூழ்ந்திடல்.

சூழ்ச்சி - ஆராய்தல், ஆலோசனை, உபாயம், நுண்ணறிவு.

சூழ்ச்சித்துணைவர் - மந்திரிமார்.

சூழ்தல் - அறிதல், ஆராய்தல், ஆலோசனைபண்ணல், கருதல், கூடல், தரித்தல், சூழ்ந்திடல், பிற்படை, பொருந்துதல், வட்டமிடல், வளைதல்.

சூழ்தாமை - தாமரை.

சூழ்ந்திடல் - வளைந்துகொள்ளல்.

சூழ்ந்தோர் - அடுத்தோர், உறவோர், சூழநிற்போர், மந்திரிகள்.

சூழ்வு - ஆராய்கை, உபாயம், சுற்றுகை, பக்கம்.

சூழ்வோர் - உறவினர், சூழ்ந்து நிற்பவர், மந்திரிகள்.

சூளாமணி - ஓர் நிகண்டு, சூடாமணி.

சூளி - ஆண்மயிர்.

சூளிகம் - அப்பவருக்கம்.

சூளிகை - அரமியம், உப்பரிகை, யானைச்செவியடி.

சூளுறல் - சத்தியம் செய்தல்.

சூளை - குயவன் சூளை, வேசி.

சூள் - ஆணை, சத்தியம், சபதம். சாபம், சுளுந்து, பாளை முதலியவற்றின்சூள்.

சூறல் - தோண்டல்.

சூறன் - மூஞ்சூறு.

சூறாவளி - சுழல்காற்று.

சூறை - ஆறலைத்தல், கொள்ளை, சுழல்காற்று, பனிச்சை.

சூனம் - பிறப்பித்தல், பூமலர், மான், வீக்கம்.

சூனர் - ஊனவிற்போர்.

சூனி - வேட்டைக்காரன்.

சூனியகதி - பிரபுலிங்கையிலோர் சருக்கம்.

சூனியதிசை - இயங்காத்திசை, தென்கீழ்த்திசை.

சூனியதிதி - சிரார்த்தத்திற் கொவ்வாத் திதி.

சூனியத்துவம் - நாசம்பண்ணு தல், வெறுமை.

சூனியமாதம் - ஆடி, புரட்டாசி, மார்கழி, மாசி மாதங்கள்.

சூனியம் - அசுசி, ஆகாயம், இன்மை, பாழ், புள்ளி, பூச்சியம், பொறி, மாயை, மாரண வித்தை.

சூனியம்பண்ணுதல் - கெடுத்தல், சூனியஞ் செய்தல்.

சூனியவாதம்-கடவுளில்லை யென் னுமோர் சமயவாதம்.

சூனியார்க்கம் - இன்ன இன்ன மாதத்தில் அகவிலையேற்ற மென்பதை அறிதற் கருவியா யுள்ளதொன்று.

சூனு - சூரியன், பின்னோன், மகள், மகன்.

சூனை - குற்றம், சூனம், சொத் தை, மகள்.

சூன்முகில் - கரிமுகில்.

சூன்றல் - தோண்டல்.

சூன்றிடல் - குடைதல்.

## செ

சே - ஓரெழுத்து, செம்மைப் பொருளடி.

செகதம் - பட்சித்தல்.

செகரிகம் - நாயுருவி.

செகில் - செதிள், தோண்மேல், தோள்.

செகிள் - சேம்வரகின்கப்பி.

செகுத்தல் - அழித்தல், வெல்லு தல்.

செக்கர் - சிவப்பு, செவ்வானம், மாலைநேரம்.

செக்கர்வானிறத்தோன் - அரன், வீரபத்திரன்.

செக்கவுரி - கற்சூரை.

செக்கான்-எண்ணெய்,வாணியன்

செக்கு - காணம், செக்கு, சதய நாள்.

செங்கட்டி - காவிக்கல், சாதி லிங்கம், செங்கற்கட்டி.

செங்கணன்
செங்கண்மால் } விஷ்ணு.

செங்கத்தரி - அலந்தல்.

செங்கதிரோன் - சூரியன்.

செங்கதிர்நாள், செங்கதிர்பிறந்தநாள் } உத்திர நாள்.

செங்கமலம் - செந்தாமரை.

செங்கமலை - இலக்குமி.

செங்கல் - காவிக்கல், சுட்டகல்.

செங்கழுநீர் - செங்குவளை.

செங்களம் - போர்க்களம்.

செங்களை - குதிரைப்பற் பாஷாணம், செங்கரும்பு.

செங்காகம் - செம்போத்து.

செங்காடு- ஓர்சிவஸ்தலம், சிவந்த நிலம், செங்காட்டான்குடி.

செங்காந்தள் - சிவப்புக்காந்தள்.

செங்காரணி - கருஞ்சிவலை.

செங்கார் - ஓர்விதநெல், கருஞ் சிவப்பு.

செங்கிளுவை - ஓர் பறவை, ஓர் மரம்.

செங்கீரை - ஓர் கீரை, பிள்ளைக் கவியிலோருறுப்பு.

செங்குத்து - நேரேநிமிர்ந்தது.

செங்குந்தம் - கண்ணோயுளொன்று.

செங்குந்தர் - கைக்கோளர்.

செங்குமுதம் - செவ்வாம்பல்.

செங்குவளை - செங்கழுநீர்.

செங்கை-ஆதிரைநாள், சிவந்தகை.

செங்கையான் - ஓர்பூடு.

செங்கொடிவேலி, செங்கொடுவேலி } ஓர்கொடி.

செங்கொல் - பொன்.

செங்கொல்லர் - தட்டார்.

செங்கோடு - ஓர்மலை, செருந்தி மரம்.

செங்கோடுபாய்தல் - மலை யுச்சியிலிருந்து பாய்தல்.

செங்கோட்டம் - ஓர் மருந்து.

செங்கோட்டியாழ் - நால்வகை யாழியொன்று.

செங்கோலம் - செம்புமணல்.

செங்கோலோச்சல் - அரசாளல்.

செங்கோல் - ஆணை நடத்துங் கோல், நீதி.

செங்கோற்கடவுள் - நமன்.

செச்சை-உதயசந்திரன், சட்டை, சிவந்தநிலம், செங்காடு, செஞ் சாந்தின் குழம்பு, செந்துளசி, சோடு, நீறு, வீட்டின் மேற் பக்கம், வெட்சிமரம், வெள் ளாட்டுக்கடா.

செஞ்ச, செஞ்சவே } சேர, நிறைய, நேராக.

செஞ்சடையோன் - காசி நிறப் படிகம், சிவன், வயிரவன், வீர பத்திரன்.

செஞ்சால்-துப்பாக்கி முதலியன.

செஞ்சி - அரணை பட்டினம், ஓரூர்.

செஞ்சிலை - கற்காவி, சாத்திர வேதி, செங்கல்.

செஞ்சீரகம் - ஓர் சீரகம்.

செஞ்சுடர் - சூரியன், தீ.

செஞ்சுடர்ப்பகவன் - சூரியபகவான், தீ.

செஞ்செயல் - உரியபொருளை யுணர்த்துவது.

செஞ்செழிப்பு - செழிப்பு, தாராளம், முகமலர்ச்சி.

செஞ்சேறு - இரத்தச்சேறு.

செஞ்சொல் - செம்மொழி, செவ்வியமொழி, நேர்மொழி.

செடல் - செடில்.

செடி - அற்பம், ஒளி, குணமின்மை, குற்றம், செத்தை, செறிவு, பதனழிவு, பற்றை, பாவம், புதர், பூண்டு, முடைநாற்றம்.

செடியன் - கூட்டற்றவன்.

செடில் - ஓர் கருவி.

செட்டி - குமரன், ஜட்டி, வாணியன், வைசியன்.

செட்டு - சிக்கனம், செட்டிமை, வியாபாரம்.

செட்டை - இறகு, கைப்பட்டை.

செண்டாயுதன் - ஐயனார்.

செண்டு - ஓராயுதம், குதிரை வையாளிவீதி, நூற்பந்து, பந்து, பந்தெறிவீதி, பூஞ்செண்டு.

செண்ணம் - நுண்ணியதொழில், வடிவு.

செண்பகம் - சண்பகம்.

செதில் - சிறுதுண்டு, சீவல், செகிள், தோல், பொருக்கு.

செதுக்கல் - செதுக்குதல்.

செதுக்கு - உடற்றழும்பு, சேறு, செதுக்கென்னேவல், பூதம், மந்தி, வாடல்.

செதுக்குதல் - சீவுதல், புன் முதலிய செதுக்கல்.

செதும்பு - சின்னீர், சேறு.

செத்தல் - அறக்காய்ந்தது, ஒத்தல், சாதல், சாகுதல், பசுமையற்றது, மெலிந்தது.

செத்து - அறிந்து, உவமையுருபு, ஒத்து, கருதி, சந்தேகம்.

செத்தை - உலர்ந்த சருகு முதலியன, துராய்.

செந்தணற்கொடி - பவளம்.

செந்தண்டு - சிவந்ததாள், செங்குருத்து, செந்தண்டுக்கீரை, பவளம்.

செந்தமிழ் - இயற்றமிழ், செந்தமிழ் நிலத்துமொழி.

செந்தமிழ்க்குரியோன் - அகத்தியன், வயிரவன்.

செந்தமிழ்நாடு - பாண்டிநாடு, அஃது—"சந்தனப் பொதியச் செந்தமிழ் முனியுஞ் சவுந்தர பாண்டியன் எனுந்தமிழ் நாட னும், சங்கப் புலவருந் தழைத் தினி திருக்கு மங்கலப் பாண்டி வளநாடென்ப.

செந்தழல் - கேட்டைநாள், செந் தணல்.

செந்தழற்கொடி - தழற்சிகை, பவளக்கொடி.

செந்தளிர் - இளந்தளிர்.

செந்தாது - செம்பொன்.

செந்தி - திருச்செந்தூர்.

செந்திரம் - சிவப்பு, செய்தநிலம்.

செந்திரு - இலக்குமி, தாளகம்.

செந்திலந்தாதி - ஓரந்தாதி.

செந்திறம் - குறிஞ்சியாழ்த்திறம், சிவப்பு.

செந்தினை - கம்பு, சிவந்ததினை.

செந்தீ - அக்கினி, ஓர் சிலந்தி.

செந்தீக்கடவுள்-அக்கினிதேவன்.

செந்தீவண்ணன் - சிவன், செவ் வாய்.

செந்தீவளர்ப்போர் - அந்தணர்.

செந்து - அணு, ஊர்வன, ஓசை, கிழநரி, சடாமாஞ்சி, சீவன், நரகம், பெருங்காயம்.

செந்துத்தானம் - எழுநரகிலொ ன்று.

செந்துத்தி - ஒருவகைத்துத்தி.

செந்துத்தீ - சடாமாஞ்சி,பெருங் காயம்.

செந்துரசம் - ஓர் பிசின்.

செந்துருக்கம் - ஓர்செடி, ஓலை யை யடைக்குஞ்சுருள்.

செந்துருதி - ஓர் நரகம், ஓர்பண், செந்நிறம்.

செந்துறை - ஆடற்கேற்கும் பாட்டு, குறட்செந்துறை.

செந்துறைவெண்பா - ஈரடியா யளபொத்துமுடியும் வெண்பா.

செந்தூக்கு - ஓர்வகைப்பாட்டு, கைத்தூக்கு, தாளங்களின் வழி வருவனவாகிய தூக்குக்கள் ஏழனுளொன்று.

செந்தூரத்தாசி - கந்தகம்.

செந்தூரம் - இலிங்கபாஷாணம், சுண்ணம்.

செந்தொடை - ஓர்தொடை, சிவந்தமாலை.

செந்தொடையன் - சிவன், வயிர வன்.

செந்தொட்டி - ஓர் பாஷாணம், சிறுகாஞ்சொறி.

செந்தோன்றி - கார்த்திகைப் பூ, செங்கழுநீர், செங்காந்தள்.

செந்நாகம் - கேது.

செந்நாடிக்கா - மூக்கிரட்டை.

செந்நாயுருவி - ஓர் நாயுருவி.

செந்நாய் - ஓநாய்.

செந்நிறக்கல் - மாமிசச்சிலை.

செந்நீர் - இரத்தம், சுரோணிதம்,

செந்நெல் - நன்னெல்.

செந்நெறி-சன்மார்க்கம், நல்வழி.

செந்நொச்சி - ஓர் நொச்சி.

செப்படி - செப்பிடுவித்தை.

செப்பட்டை - செட்டை, தோட்பட்டை.

செப்பமிடுதல் - செவ்வை பண்ணுதல், திருத்துதல்.

செப்பம் - இணக்கம், ஒப்பரவு, கருத்துஞ் சொல்லுஞ் செய்லுந் தம்முண் மாறுகாமை, செவ்வை, திருத்தி, நடுநீதி, மார்பு, வழி, வீதி.

செப்பலோசை - வெண்பாவினோசை.

செப்பல் ஓரோசை, சொல்லுதல்.

செப்பனிடுதல் - ஒப்பமாக்கல், செவ்வைபண்ணுதல்.

செப்பிடில் - சடாமாஞ்சி.

செப்பியம் - திரும்பத்திரும்பவுச் சரித்தல்.

செப்பிலை - தும்பை.

செப்பு - சிமிழ், செப்பென்னேவல், சொல், விடை.

செப்புச்சிலை - மாந்தளிர்க்கல்.

செப்புதல் - சொல்லல்.

செப்புத்தொட்டி - வைப்புப்பாஷாணமுப்பத்திரண்டினொன்று.

செப்புநெருஞ்சி - ஓர்நெரிஞ்சி.

செம் - சிவப்பு, செம்மை.

செம்பசலை }
செம்பசளை } ஓர் பசளை.

செம்பஞ்சு - சிவத்தபஞ்சு.

செம்படாம் - செவ்வாடை.

செம்படிகம் - செம்பளிங்கு.

செம்பணை - காவற்பணை.

செம்பரத்தை - செவ்வரத்தை.

செம்பருத்தி - ஓர் பருத்தி.

செம்பாகம் - இயல்பானநடை, சமபாகம், தெளிந்தசொன்னடை, நடுநிலை, நல்லபக்குவம்.

செம்பாம்பு - கேது.

செம்பாலை - ஓரிசை.

செம்பால் - இரத்தம்.

செம்பாலை - பாலையாழ்த்திறத்தினொருவகை.

செம்பி - கருவண்டு, சிவப்பி, மருதோன்றி.

செம்பிச்சி-செந்தோட்டிப்பாஷாணம்.

செம்பியன் - சோழன், முதலெழு வள்ளலிலொருவன்.

செம்பில்வேதை - சோரபாஷாஷணம்.

செம்பிறை - கற்கிட்டம், கானற்கல், தேகக்கல்.

செம்பின்பச்சை - நாகப்பச்சை.

செப்புக்குள்வேதை - கற்பரிபாஷாணம்.

செம்புலம் - சுடுகாடு, செம்புமலை, பாலைநிலம், போர்க்களம்.

செம்புள் - பருந்து.

செம்புனல் - இரத்தம், புதுவெள்ளம்.

செம்பூறல் - செம்பிற்களிம்பு.

செம்பை - ஓர்மரம், சிற்றகத்தி.

செம்பொருள் - அறம், உண்மைப்பொருள், கடவுள், தெளிவானபொருள்.

செம்பொன் - சுத்தப்பொன், பொன்.

செம்போத்து - சகோரம்.

செம்மட்டி - ஓர்மட்டி, மரமஞ்சள்.

செம்மணி - கண்ணின் கருமணியைச்சூழ்ந்திருக்குஞ் சிவந்தமணி, குருந்தக்கல், குருவிந்தம், கெம்பு, பதுமராகம், மாணிக்கம், மாமிசகந்தி.

செம்மந்தாரம் - ஓர்பூமரம்.

செம்மரம் - அழிஞ்சில்.

செம்மருதல் - களிப்படைதல்.

செம்மலை - ஆவிரை.

செம்மலைப்பாலை - ஓரிசை, செம்பாலை.

செம்மலா - சிவந்தமலர், நெற்றிமாலை.

செம்மல் - அரசன், அருகன், ஈசன், எப்பொருட்குமிறைவன், சாதிப்பூ, செம்முதல், தருக்கு, தலைமகன், தலைமை, பழம்பூ, புதல்வன், பூவாடல், பெருமை, பெருமையிற் சிறந்தோன், வலி.

செம்மறி - ஆட்டின்பொது, ஓர்வகையாடு.

செம்மாத்தல் - அகந்தையாயிருத்தல், இறுமாந்திருத்தல், நிமிர்ச்சியாயிருத்தல்.

செம்மாப்பு - இறுமாப்பு.

செம்மார் - சக்கிலியர், தோற்றுன்னர்.

செம்மை - அழகு, இணக்கம், ஒழுக்கம், கனம், சிவப்பு, சுத்தம், செப்பம், செவ்வை, பெருமை, மாணிக்கம், முறைமை.

செம்மைக்கல் - கானக்கல்.

செம்மைபண்ணல் - அலங்கரித்தல், ஒழுங்கு படுத்தல்.

செம்மையாதல் - நேராதல்.

செம்மொழி - நயமொழி, நற்சொல்.

செம்மொழிச்சிலேடை - ஓர்வகைச் சிலேடையணி.

செயநீர் - தாதுப்பொருளைக்கரைக்கும் நீர்.

செயநீர்க்கருத்தன் - நவட்சாரம்.

செயந்தி - திருச்செயந்தி.

செயபரம் - மரமஞ்சள்.

செயபீதம் - கௌரிபாஷாணம்.

செயப்படுபொருள் - வினைமுதற்றொழிற் பயனுறுவதாகிய இரண்டாம் வேற்றுமைப்பொருள்.

செயப்படுபொருள்குன்றாதவினை - செயப்படுபொருள் உள்ள வினை.

செயப்பாட்டுவினை - மூன்றாம் வேற்றுமைக் கர்த்தாவைக் கொண்டு முடிவது.

செயலறுநிலை - செயலற்று நிற்கை, கையறு நிலை.

செயலுவமம்-செயலையேயுவமானமாகக் கொண்டு வமிப்பது.

செயலை - அசோகமரம்.

செயல் - ஒழுக்கம், காவல், செய்கை, சேறு, தொழில்.

செயற்கை - செயல், விகாரம்.

செயற்கைப்பொருள் - ஒருபொருளை மற்றொரு பொருளாகச் செய்யப்படுபொருள்.

செயற்கைஅளபெடை - விகாரத்தால் வந்த அளபெடை.

செயற்கையளபெடை - செய்யுளில் வருமளபெடை.

செயிரியர் - வீணை முதலிய வியக்குவோர்.

செயிர் - ஊனம், குற்றம், கோபம், சினம், செயிரென்னேவல், துன்பம், நோய்.

செயிர்த்தல் - சினத்தல்.

செயிர்ப்பு - கோபம்.

செயிற்றியம் - நாடகத்தமிழ்நூல்களுளொன்று.

செய் - ஒருவமைச்சொல், செய்கை, சிவப்பு, செய்யென்னேவல், வயலினோரளவை, வயல்.

செய்கடன் - நித்யகருமம், முறைமை.

செய்கரை - கட்டுக்கரை.

செய்கின்ற - நிகழ்காலப்பெயரெச்ச வாய்பாடு.

செய்கை - உடன்பாடு, ஒழுக்கம், செயற்கை, தொழில், பண்படுத்துவது, வேளாண்மை.

செய்தல் - உண்டாக்கல், செயல், செய்குதல்.

செய்தது - வினையாலணையும் பெயர்.

செய்தி - இயல்பு, ஒழுக்கம், காரியம், சரித்திரம், செய்கை, செய்வாய் என்னு முற்று, தன்மை.

செய்து - இறந்தகாலத்தெரிநிலை வினையெச்சவாய்பாடு.

செய்பவன் - கர்த்தா.

செய்பொருள் - செய்யப்படு பொருள்.

செய்ய - அழகிய, சிவந்த, சிறந்த, செப்பமான, வினையெச்சம்.

செய்யல் - செயல், சேறு.

செய்யவன் - சிவந்தமேனியன், சூரியன், செவ்வாய்.

செய்யன் - செவ்வியன், சிவன், நேராளி.

செய்யா - தெரிநிலை வினையெச்ச வாய்பாட்டிலொன்று.

செய்யாள் - இலக்குமி, சீதை.

செய்யிய - அகரவீற்று வினை யெச்ச வாய்ப்பாடு.

செய்யிழை - பெண்.

செய்யுட்சொல் - உயர்ந்தசொல், திரிசொல்.

செய்யுட்பொருத்தம் - செய்யுளில் முதல் சொல் வைப்பதில் கவனிக்கவேண்டிய விஷயங்கள் பத்து, அவை—உண்டி, எழுத்து, கணம், கதி, சொல், தாளம், நாள், பால், மங்கலம், வருணம் என்ப.

செய்யுட்டாரணை - ஒன்பது தாரணையிலொன்று.

செய்யுணடை - செய்யுள் வழக்கு.

செய்யும் - இருதிணைக்கு மைம்பாற்குமுரிய வருங்கால வினைமுற்று, வருகாலப் பெயரெச்ச வாய்ப்பாடு.

செய்யுளுருப்பு - செய்யுட்கு வேண்டு முறுப்பு.

செய்யுளியல் - யாப்பிலோர்பிரிவு.

செய்யுள் - பாட்டு, விளைநிலம்.

செய்யுள்வழக்கம் - கவிகளில் வழங்கும் வழக்கம்.

செய்யுள்விகாரம் - செய்யுள் விகாரமெட்டு, அவை—இடைக்குறை, கடைக்குறை, குறுக்கல், தொகுத்தல், நீட்டல், மெலித்தல், முதற்குறை, வலித்தல், விரித்தல் என்ப.

செய்யோன் - அருகன், செந்நிறமுள்ளோன், செம்மையுடையோன், செவ்வாய்.

செய்வினை - சூனியம், செய்கை, செய்தொழில்.

செரித்தல் - சமித்தல், சீரணித்தல்.

செரு - சண்டை, போர்.

செருகல் - அடைதல், சொருகுதல்.

செருக்கல் - செருக்குதல், மிக மகிழ்தல்.

செருக்களம் - போர்க்களம்.

செருக்களவஞ்சி - ஓர் பிரபந்தம்.

செருக்கு - அகங்காரம், ஆண்மை, ஆணவம், இறுமாப்பு, ஒலி, களிப்பு, செருக்கென்னேவல், செல்வம், மயக்கம், மனோராச்சியம்.

செருக்குதல் - அகங்கரித்தல், களிக்குதல், பாக்கு முதலியன அடைத்தல், மயக்கமுறல்.

செருத்தல் - எருமைமடி, பசுவின் மடி.

செருத்தி - விருதுக்கொடி.

செருநர் - படைவீரர்.

செருந்தி - ஓர்மரம், கோரை, மணித்தக்காளி, வாட்கோரை.

செருப்படி, செருப்படை - ஓர்வகை மூலிகை, செருப்படிநாயன்.

செருப்பு-ஒருமலை,காலுறுதோல்.

செருமல் - அடைசுதல், இருமுதல், திணித்தல், நெருக்கல்.

செலகம் - மல்லிகை.

செலதம் - கோரைக்கிழங்கு.

செலம் - சலம், வெட்டிவேர்.

செலல் - கழிதல், துன்பம், போதல்.

செலவிடல் - அனுப்புதல், எறிதல், செலவழித்தல், விடுதல்.

செலவு - உத்திரவு, செலவிடுதல், செல்லும்பொருப்பு, நீங்குகை, பயணம், பெருங்காப்பியவுறுப்புளொன்று, போக்கு, போதல், போனகாலம், முடிவு, வழி, வீதி.

செவியம் - இலாமிச்சை.

செலு-செலுத்தல், நறுவிலிமரம், மீன்செலு.

செலுத்தல், செலுத்துதல் - அனுப்புதல், கொடுத்தல், செருகுதல், நடத்துதல், நிறைவேற்றல், விடுதல்.

செல் - இடி, உண்டியற்சீட்டு, கறையான், செல்லென்னேவல், கையொப்பம், மேகம், வேல்.

செல்காலம் - இறந்தகாலம், காரியஞ் சித்திக்குங்காலம்.

செல்லல் - கெடுதல், துன்பம், நடத்தல், பரத்தல், போகாதே, போதல், வெறுப்பு.

செல்லியம் - கோழி.

செல்லுதல் - அடைதல், கழிதல், காரிய சித்தியாதல், சாதல், போதல், வழங்குதல்.

செல்வம் - அழகு, இன்பம், ஐசுவரியம், கல்வி, சீர், சுவர்க்கம், பெருக்கம், பாக்கியம்.

செல்வன் - அரசன், அருகன், கடவுள், செல்வமுள்ளோன், மகன்.

செல்வி - இலக்குமி, ஐசுவரியமுடையாள், தலைவி, மகள்.

செவி - காது, கேள்வி.

செவிகொடுத்தல் - உற்றுக் கேட்டல்.

செவிகொள்ளல் - கேட்டல்.

செவிசாய்த்தல்-செவிகொடுத்தல்.

செவிடு - ஒரு அளவு, செவிப் புலன்கெடல்.

செவிட்டல் - அழித்தல், ஒருக் கடிதத்தல், கொல்லல்.

செவிமலர் - ஓர்வகைக்காதணி.

செவியம் - செவ்வியம்.

செவியறிவுறுத்தல் - செவியுப தேசமாய்ச் சொல்லும்புத்தி.

செவியறிவுறூஉ - உபதேசம், ஓர் பிரபந்தம், அஃது — அவை யடைக்கியற் பொருளுறக் கூறுவது.

செவியறை - காதில்லான், செவி டன்.

செவியிலி-காதில்லாதது, காதில் லாதவள், காதில்லாதவன்.

செவிரம் - பாசி.

செவிலி-அக்காள், தாதி, வளர்த் தாய்.

செவை - செம்மை.

செவ் - சிவப்பு, செம்மை.

செவ்வகத்தி - ஓரகத்தி.

செவ்வணி - சிவப்புடை, செந்நிற வணி.

செவ்வண் - செங்குத்து.

செவ்வந்தி - ஓர் பூச்செடி.

செவ்வரக்கு - சாதிலிங்கம்.

செவ்வரத்தை - செவ்வரத்தம்.

செவ்வலரி - ஓரலரி.

செவ்வல்லி - செவ்வாம்பல்.

செவ்வழி - ஓர்பண், அஃது— நெய்தநிலத்திராகம், செவ்விய மார்க்கம்.

செவ்வழிப்பாலை - ஓரிராகம்.

செவ்வழியாழி - நால்வகையாழி னொன்று.

செவ்வனர் - செவ்வல்லி.

செவ்வனிறை - நேரான பிரதி யுத்திரம்.

செவ்வன் - செவ்வையாக.

செவ்வாய் - ஓர் கிரகம், சிவந்த வாய்.

செவ்வாரை - ஓர்வகை ஆரை.

செவ்வி - அழகு, காலம், சித்தி ரைநாள், செம்மை, தகுதி, பருவம்.

செவ்வியம்-ஓர்மருந்து,அஃது— பஞ்சமூலத்தொன்று, மிளகுக் கொடி.

செவ்வியருமை - அருஞ்சமயம்.

செவ்வியான் - கிரகஸ்தன்.

செவ்விண்டு - ஓரிண்டஞ்செடி.

செவ்வு - சிவப்பு, செவ்வை, முத் துக்களின் நிறையளவு.

செவ்வுறல் - செப்பமாதல்.

செவ்வெண் - எண்ணிடைச் சொல்தொகைநிலை, செவ்விய தாகிய எண்.

செவ்வேள் - குமரன்.

செவ்வை - சுத்தம், செப்பம்.

செழித்தல் - செழிக்குதல், பெருகுதல்.

செழியன் - பாண்டியன்.

செழிப்பு - ஐசுவரியம், செழுமை, பொலிவு, வளர்ச்சி.

செழு - செழுமையான, செழித்த.

செழுமறை - நெருப்பு.

செழுமை - அழகு, கொழுப்பு, சவுந்தரியம், தழைவு நிறைவு, மாட்சிமை, வளமை.

செறல் - கொலை, கோபம், பகை.

செறி - செறியென்னேவல், நெருக்கம்.

செறிதல் - அடக்கம், இணைதல், இயைதல், இறுகல், உறவு செய்தல், கலத்தல், குளித்தல், சேர்தல், நெருங்கல், பொருந்தல், மிகுதல்.

செறித்தல் - அடக்கல், அழித்தல், கொல்லல், சேர்த்தல், நெரித்தல், பாதிடல், மூழ்கல், வைத்தல்.

செறிவு - குணலங்காரம் பத்தினுென்று, அஃது, நெகிழிசையின்றி வரச்செய்யுட்டொடுப்பது, நிறைவு, நெருக்கம், மரப்பொந்து, மிகுதி.

செறு - சிறுவயல், செறுவென்னேவல், பாத்தி, வயல்.

செறுத்தல் - அடக்கல், கொல்லல், கோபித்தல், தூர்த்தல், நெருக்குதல், வெறுத்தல.

செறுநர் - பகைவர்.

செறுப்பு - கொலை, செறிதல்.

செறும்பு - சலஞ்சாதித்தல், சிறும்பு, செற்றம், வெறுப்பு.

செறுவு - கொலை, வயல்.

செற்றம் - கோபம், சலஞ்சாதித்தல், சினம்.

செற்றலர் - பகைவர்.

செற்றல் - அழித்தல், கெடுத்தல், கொல்லல், செறிவு, செறுத்தல், நெருக்கல், பதித்தல், வெறுத்தல்.

செற்றார் - கொலைசெய்வோர், பகைவர்.

செற்று - செடி, சொற்றென்னேவல், நெருக்கம்.

சென்றுதேய்ந்திறுதல் - நூற்குற்றம் பத்தினொன்று, அஃது—செல்லச் செல்லச் சொல்வலி பொருள்வலி இரண்டுந் தேய்ந்து முடியச்சொல்லுதல்.

சென்னி - அச்வினிநாள், சிகரம், சோழன், தலை, பாணன், மலையுச்சி, முடி.

சென்னியர் - பாணர்.

சென்னை - கதுப்பு, சென்னைப்பட்டினம்.

## சே

சே - அழிஞ்சில் மரம், இடப விராசி, உயர்வு, எதிர்மறை, எருது, ஒலிக்குறிப்பு, ஓரெழுத்து, சிவப்பு, செம்மைப் பொருளைக்காட்டுமோர்விகார மொழி, சேரான்மரம், தெரிநிலைவினைப்பகுதி, படுக்கை, விலங்கேற்றின்பொது.

சேகண்டி - சேமக்கலம், தெருக் காவல்.

சேகரம்-அழகு,கூட்டம், சம்பாத்தியம், சேகரித்தல், தலை, தலையில் முடிக்கப்படுவன,மாமரம், முடி, முருங்கை.

சேகரி - நாயுருவி.

சேகிலி - வாழை.

சேகு - தழும்பு, திடம்பகை, மரவயிரம், வயிரம்.

சேக்கு - முலைப்பால்.

சேக்குதல்-உறங்குதல், சிவத்தல்.

சேக்கை - உடற்றழும்பு,கற்கடக விராசி, சிவத்தல், செம்பசளை, நண்டு, மக்கட்படுக்கை, முலை, விலங்கின் படுக்கை, வலை.

சேங்கன்று- நாம்பன்கன்று, நாம்பன், இளவெருது.

சேசனம் - நனைத்தல், பெண்ணுமை, பொசிகை.

சேசூரணம் - கௌரிபாஷாணம்.

சேசுனம்-தெளித்தல், புசித்தல்.

சேசே - ஒரொலிக்குறிப்பு.

சேச்சை - பாலை, முல்லை.

சேடகம் - கேடகம், பரிசை.

சேடம் - அடிமை, அழித்தல். எச்சில்,குறை,மிச்சப்பொருள்.

சேடர் - அடிமையார், அறிவுடையோர். ஏவல்செய்வோர், நெய்வாரிளொருசாரார்.

சேடன் } சேஷன் } அடிமைக்காரன், அனந்தன், இளையோன், ஏவல்செய்வோன், ஓர் சாதியான், கட்டிளமையோன், பலதேவன், பாங்கன்.

சேடி - அடிமைக்காரி, அழகுள்ளவள், இடையர்வீதி, இளையாள், ஏவல்செய்வாள், தோழி, வித்தியாதரருலகு.

சேடித்தல் - அலங்கரித்தல், குறைத்தல், மிஞ்சிநிற்றல்.

சேடியர் - அடிமைகளிற் சிறந்தோர், ஏவல்செய்பெண்கள், பாங்கியர்.

சேடு - அழகு, ஆகாயம், இளமை, சவுக்கு, திரட்சி, நன்மை, பெருமை.

சேட்சி - தூரம்.

சேட்டம் - அழகு, ஆனிமாதம், சிரேட்டம், செழிப்பு, திறம், முதன்மை, மேன்மை.

சேட்டன்-தமையன்,மூத்தோன்.

சேட்டா - செய்தல், பிரயாசம், முயற்சி.

சேட்டித்தல் - காரியப்படுத்தல், திறப்படல், நடத்தல்.

சேட்டை - அக்காள், அசைகை, இயக்கம், குணங்கெட்டதொழில், கேட்டைநாள், செய்கை, தொந்தரவு, தொழில், பெருமையிற்சிறந்தோன், முறம், மூதேவி, விசாகநாள்.

சேட்டைப்படல் - உருவாதல்.

சேட்படைநிலை - காதலன்றலைவியோடு சேராது தோழி தடுத்தல், தூரப்படல்.

சேணம் - கல்லணை, மெத்தை.

சேணுலு - விண்ணுலகு.

சேணுடர் - வானவர்.

சேணி - ஏணி, தாங்கல், முறை, வித்தியாதரருலகு.

சேண் - அகலம், ஆகாயம், உயர்ச்சி, தூரம், தேவருலகம், நீளம்.

சேதகம் - சிவப்பு, சேறு.

சேதநகி - கடுக்காய்மரம்.

சேதம் - அழிவு, இடையூறு, கீழ்வாயிலக்கம், கேடு, துண்டு, நட்டம், பிரிவு, வெட்டல்.

சேதனம் - அசையும்பொருள், அறிவு, வளர்ச்சி, வெட்டுதல்.

சேதனன் - அறிவுடையோன், ஆத்துமா.

சேதா - செவ்வியபசு, நற்பசு.

சேதாம்பல் - செவ்வாம்பல்.

சேதாரம் - அழிவு, கேடு, தேமாமரம், பொன்னுரை, வெட்சிமரம்.

சேதி - ஒரு நாடு, ஒரு வமிசம், செய்தி, புதினம்.

சேதித்தல் - அரிதல், அழித்தல், வெட்டல்.

சேதிமம் - தேவர்கோயில்.

சேது - இராமேச்சுரம், சிவப்பு, செய்வரை, சேதுவணை, சேதுதீர்த்தம், பாலம்.

சேதுகாவலன் } மறவநாட்டரசன்.
சேதுபதி }

சேதுபந்தனம் - அணைக்கட்டு.

சேதுபுராணம் - ஓர் புராணம்.

சேத்தல் - சிவத்தல், தங்குதல்.

சேத்திரஜ்ஞன் - ஆன்மா, மூவகை சரீரத்தை யறிபவன், வேளாளன்.

சேத்திரம் - உடம்பு, காற்று, மூவகைச்சரீரம், அவை—ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம், என்ப; தலம், புண்ணியபூமி, மனைவி, வயல்.

சேத்திரக்கோவை - ஓர் நூல்.

சேத்து - ஆசைச்சொல், உறப்பு, ஐயம், ஒப்பு, கருத்து, சிவப்பு, செம்மையுடையது, சொல், நெருக்கம், மிகுசிவப்பு, வயல்.

சேந்தன் - முருகன், திவாகரமென்னும் நிகண்டு செய்வித்தோன்.

சேந்து - அசோகம், ஓர்வினையெச்சம், சிவப்பு, நெருப்பு.

சேபாலங்கொட்டை - சேங்கொட்டை.

சேபாலிகை - கருநொச்சிமரம்.

சேப்பு - சிவப்பு.

சேமக்கலம்-எறிமணி, சேகண்டி.

சேமநிதி - சேமத்திரவியம்,புதையல்.

சேமம்-அரணனவிடம், இன்பம், காவல், சிறைச்சாலை, தஞ்சம், புதையல்.

சேமரம் - அழிஞ்சில், சேரான்.

சேமித்தல் - காப்பாற்றிவைத்தல், புதைத்தல்.

சேமுஷி - புத்தி.

சேமை } ஓர்செடி.
சேம்பு }

சேயமம் - கௌரிபாஷாணம்.

சேயம் - ஓட்டம், கரை, கூடப்பட்டது, வெற்றி.

சேயவன் - கந்தன், செவ்வாய்.

சேயன்-தூரத்திலுள்ளவன், மகன், வெல்லத்தக்கபகைவன்.

சேயா - கடுக்காய்.

சேயார் - தூரத்தார், பகைவர், பிறர்.

சேயிலம் - இலுப்பை.

சேயிழை - ஆபரணம், நல்லணி நால்நூற்கும் மடந்தை, பெண்.

சேயேபசம் - மரமஞ்சள்.

சேயோன் - சிவன், முருகன்.

சேய் - இளமை, குமரன், குழந்தை, சிவப்பு, செவ்வாய், தூரம், நீளம், மகன், மனை, மூங்கில்.

சேய்த்து - செம்மை, தூரம், நீளம்.

சேய்நீர் - ஓர்வித மருந்துநீர்.

சேய்மை - தூரம், நீளம்.

சேய்மைச்சுட்டு - தூரப்பொருளைச் சுட்டிக்காட்டல்.

சேர - அணித்தாக, ஒருங்கு, ஒன்றாக, முதுமை.

சேரங்கை - செரங்கை, அது ஒருகை கொண்டது.

சேரமண்டலம் - சேரநாடு.

சேரமான் } அறுபத்
சேரமான்பெருமான் } துமூவரிலொருவர், சேரன்.

சேரலர் } பகைவர்.
சேரர் }

சேரலன் - சேரன், பகைவன்.

சேரல் - கிட்டல், கொழியலரிசி, சேரன்.

சேரா - கள்.

சோான் - சேங்கொட்டைமரம், பகைவன்.

சேரி - ஊர், தெரு.

சேரிப்பரத்தையர் - பொதுஸ்த்ரீ களிலோர் வகையார்.

சேருகம் - நாகணவாய்ப்புள்.

சேர்-ஓர் அளவு, ஓர்முகத்தலளவு, ஒருவமையுருபு, சேரென்னே வல், தளை, தானியப்போர், திரட்சி, பிணையல்.

சேர்க்கை - ஒன்றிப்பு, சேர்க்குதல், சேருமிடம், நண்பு, புணர்ச்சி.

சேர்தல் - அடுத்தல் - அடைதல், இடைவிடாது சிந்தித்தல், இணங்கல், ஒருமித்தல், கிட்டுதல், கூடுதல், திரட்சி, புணர்தல், பொருந்தல்.

சேர்த்தல் - அடுத்தல், அணிதல், அறுத்தல், இணைத்தல், கலத்தல், கூட்டுதல், சமைத்தல், சேகரித்தல், சேர்த்திடல்.

சேர்ந்தலே - உற்றசினேகம், ஒன்றிப்பு.

சேர்ந்தார் - உற்றூர், சிநேகிதர்.

சேர்ந்தார்க்கொல்லி - தீ.

சேர்பு - சேர்மானம், பொருந்தி, வீடு.

சேர்ப்பது - கோலல்.

சேர்ப்பன் - நெய்தநிலத்தலைவன்.

சேர்ப்பு - அனுபந்தம், இறங்குதுறை, கடற்கரை, கரை, கலப்பு, சேர்க்கப்படுவது.

சேர்மானம் - ஒன்றிப்பு, கலப்பு, கூட்டு.

சேர்விடம் - சந்திக்குமிடம், மனிதர்படுக்கை.

சேர்வு - அடைதல், ஐக்கியம், கூட்டு, திரட்டு, மருதநிலத்தூர், வீடு.

சேர்வை - ஐக்கியம், கலப்புச் சரக்கு, கூட்டம், சேகரிப்பு, சேர்ப்பு, சேர்மானம், சேனை.

சேர்வைக்காரன் - சேனைத்தலைவன், போர்ச்சேவகன்.

சேலகம் - கோரைக்கிழங்கு.

சேலம் - ஒரூர், புடவை, பொருமை, மயிற்ரூகைக்கண்.

சேலுகன் - வேலைக்காரன்.

சேலேகம் - சந்தனம், சிந்தூரம்.

சேலே - அசோகு, சீலை, மகளிராடை.

சேலோதம் - சந்தனம்.

சேல் - கயல்.

சேவகம் - சேவகத்தொழில், சோம்பு, துயில், பேயுள்ளி, யானை துயிலிடம், வணக்கம், வீரம், வேலை.

சேவகனூர் - ஐயனூர்.

சேவகன் - ஐயன், சிற்றுமுட்டி, பணிவிடை செய்பவன், பேயுள்ளி, வீரன்.

சேவகன்பூடு - காந்தள், சிறுபுள்ளடி, சிற்றுமுட்டி.

சேவடி - சிவந்தபாதம்.

சேவதி - குபேரன்நிதி.

சேவநம் - தைத்தல்.

சேவல் - காவல், கோழி, சக்கரவாகம், சேறு, மயிலொழிந்த பறவையாண்.

சேவற்கொடியோன் - ஐயனார், குமரன்.

சேவற்பண்ணை - ஓர் பூமரம், சாவற்பண்ணை.

சேவியம் - வெள்ளைவெட்டிவேர்.

சேவாலம் - நேர்வாளம்.

சேவாலிசம் - கருநொச்சி.

சேவை - ஊழியம், கெடுதல், செல்லல், தொழுகை, வழிபடுதல்.

சேறல் - எழுச்சி, செல்லல், நடத்தல்.

சேறு - அளறு, இனிமை, கள், கும்பி, குழம்பு, குறிப்பு, செறிவு, தித்திப்பு, திருவிழா, தேன்.

சேறும் - செல்லுதும்.

சேர்கண்ணி - அரிதாரம்.

சேனம் - பருந்து.

சேனங்கம் -சேனையினோருறுப்பு.

சேனு - ஒரு பூண்டு, மலங்குமீன்.

சேனுபதி - படைத்தலைவன், முருகன்.

சேனுமுகம் - படையிலோர் தொகை, அஃது — பதாதி மூன்றுகொண்டது,முற்படை.

சேனுவரையர் - தொல்காப்பிய உரையாசிரியர்.

சேனுவு - தகரை.

சேனை - ஆயுதம், கடைவீதி, படை, மிருதி.

சேனைத்தலைவன் - படைத்தலைவன்.

சேனைப்பால் - சிவனிப்பால்.

## சை

சை - இகழ்ச்சிக்குறிப்பு, ஓரெழுத்து.

சைகதம் - மணல், மணற்கரை.

சைக்கினை-கண்சமிக்கை, சாடை.

சைசவம் - இளமை.

சைதன்னியம் - அறிவு, ஆத்துமா, கடவுள், தத்துவஞானம்.

சைத்தியம் - சீதத்தன்மை, பலிபீடம், புத்தாலயம்.

சைத்திரம் - சித்திரைமாதம், சித்திரவேலை, வெற்றி.

சைத்திரி - சித்திரைமாதம், யாகமிருபத்தொன்றினென்று.

சைத்திரியம் - தெளிவு, திடசித்தம்.

சைநர் - அருகன், புத்தர்.

சைநிகன் - சேனைத்தலைவன்.

சைந்தவம் - இந்துப்பு, குதிரை, சிந்துநதி, தலை.

சைந்தவி - ஓரிராகம்.

சைங்யம் - சதுரங்கபலம்.

சைமினி - ஓராசிரியர்—அவர் பூர்வமீமாம்ஸை ஸூத்திரம் செய்தவர், ஓர்முனி, யமன் பட்டணம்.

சைமினிநகரோன் - யமன்.

சையம் - கல், குடகுமலை, செல்வம், மலை.

சையுத்தம் - மயக்கம்.

சையை - சைகை.

சையெனல்- இகழ்ச்சிக்குறிப்பு, வெறுப்புக்காட்டல்.

சையோகம்-கலத்தல், கூட்டம், சம்யோகசம்பந்தம்.

சையோகை - சிவத்துக்கின்பந் தருஞ் சக்தி, மனைவி.

சைரிகம் - உழவெருது, கலப்பு.

சைரிகன் - உழவன்.

சைரிபம் - எருமை.

சைரியம் - பெருங்குறிச்சி.

சைலகம் - சாம்பிராணி, மலையிருவேலி.

சைலம்-கற்றன்மை, சேலை, மலை.

சைவசமயம் - சிவசமயம்.

சைவசித்தாந்தம் - ஓர் நூல்.

சைவம் - சிவசமயம், அவை— ஊர்த்தசைவம், அநாதிசைவம், ஆதிசைவம், மகாசைவம், பேதசைவம், அபேதசைவம் அந்தரசைவம், குணசைவம், நிற்குணசைவம், அத்துவாசைவம், யோகசைவம், ஞானசைவம், அணுசைவம், கிரியாசைவம், நாலுபாதசைவம், சுத்தசைவம் என்பன, பதினெண்புராணத்தொன்று.

சைவர் - சிவசமயத்தோர், இவர்- ஆதிசைவர், மகாசைவர், அநுசைவர், அவாந்தரசைவர், பிரவாசைவர், அந்தியசைவர்.

சைவலம் - பாசி.

சைவியம் - சைவத்திற்குரியது.

சைனர் - சமணர்.

சைனன் - அருகன், சினனை வணங்குவோன், புத்தன்.

சைனியம் } சேனை.
சைன்னியம் }

## சொ

சொ - ஓரெழுத்து.

சொகுசு - அழகு, சௌக்கியம், நாகரீகம்.

சொக்கட்டான் - ஓர் சூதாட்டம்.

சொக்கட்டான்கவறு-பாய்ச்சிகை.

சொக்கதேவன் - கூகை, கூகைக் கட்டு, பொன்னுக்கு வீங்கி.

சொக்கநாதன் - சிவன்.

சொக்கம் - அழகு, ஓர்கூத்து, கலப்பின்மை, களவு, களிம்பின்மை, கெம்புக்கல், சிறப்பு, சுத்தநிருத்தம், தூய்மை, நன்மை, மாணிக்கம், மேன்மை.

சொக்கரை - குறைவு, சிறிய அடைப்பு, மதில் முதலியவற்றின் துவாரம்.

சொக்கர் - அழகர், சொக்கநாதர், பொன்னையுடையவர்.

சொக்கவி - மூக்கிலிச்செடி.

சொக்காலி
சொக்காளி } சிறு பூளைப்பூடு.

சொக்கு - அழகு, அறியாமை, கண்ணுறக்கம், கதுப்பு, சொக்கன், சொக்கென்னேவல், சோர்வு, பொன், மயக்கு.

சொச்சம் - குறை, பணவட்டி, மாசின்மை, மிச்சம்.

சொடக்கு - கடுகு, கிலுகிலுப்பை, சோம்பற்றன்மை, செட்டி.

சொட்டு - குட்டு, குற்றம், சொட்டென்னேவல், திவலை, துண்டு.

சொட்டுதல் - அணைப்புதல், அபகரித்தல், இடித்தல், குட்டுதல்.

சொட்டை - ஓராயுதம், கோணல், கொன்னை, பரிகாசம், பள்ளம், வளைதடி.

சொண்டி - உத்தியோகம், கடனுறுதி, வேர்க்கொம்பு.

சொண்டு - அற்பன், ஆயுதநுனி, உதடு, உத்தியோகம், கனத்த விளிம்பு, தலையழுக்கு, நிந்தை, பறவைமூக்கு.

சொத்து - உடைமை, குறை, பசை, பொருள்.

சொத்துவம் - உரிமை, சுயம்பு.

சொத்தை - கதுப்பு, சீர்கேடு, புழுத்துளைத்தல்.

சொப்பனவத்தை - பஞ்சாவத்தையினொன்று.

சொம் - ஆஸ்தி, உடைமை, உரிமைப்பொருள், சொத்து.

சொரங்கம் - கச்சோலம்.

சொரசத்தோரசி - இலவங்கப் பட்டை, இலவங்கம்.

சொரிதல் - உதிர்தல், கொட்டல், சிந்துதல், பொழிதல், மிகவீதல்.

சொரிதரல் - ஈதல், சுழலல், பொழிதல், மிகத்தருதல்.

சொரிவு - ஈவு, உதிர்வு, தாராளம், பொழிவு.

சொருகுதல் - செருகுதல்.

சொரூபசாரம் - ஓர் சைவநூல்.

சொரூபஞானம் - மெய்ஞ்ஞானம்.

சொரூபம் - அழகு, உடம்பு, சாயல், பரம், வடிவு, விக்கிரகம்.

சொரூபலக்கணம் - சிறப்பியல்பு.

சொரூபன் - கடவுள்.

சொரூபானந்தம் - ஓர்வேதாந்த நூல், பூரணானந்தம்.

சொரூபானந்தர் - ஓர் யோகி.

சொர்க்கம் - கூத்தின்விகற்பம், சுவர்க்கம்.

சொர்ணம் - பொன்.

சொர்ணக்கல் - இராசவர்த்தம்.

சொர்ணபேதி - சுவர்ணத்திராவகம்.

சொர்ணமாக்கி-பவளபாஷாணம்.

சொலித்தல் } இடத்தல், சுவாவித்தல், பிரகாசித்தல்.
சொலித்திடல் }

சொலியல் - கலைதல்.

சொலியன் - முடக்கொத்தான்.

சொல் - உறுதிச்சொல், எழுத்தினாலாகிய சொல், கட்டளை, கள், செந்நெல், செந்நெல் கதிர், சொல்லென்னேவல், நாமகள், நெல், புகழ், பேச்சு, மொழி, வாக்கியம், பெயர்ச் சொல்முதலியன.

சொல்லணி - சொற்றொடை வகைச்சிறப்பு.

சொல்லல்-கூறல், சொல்லுதல்.

சொல்லாகுபெயர் - ஓராகுபெயர்.

சொல்லாடல் - பேசல்.

சொல்லானந்தம் - அறுவகையானந்தங்களுளொன்று; அது-சொல்லால்வருங்குற்றம்.

சொல்லிசையளபெடை - சொல்லிசையை நிறைக்க வருவது.

சொல்லிலக்கணம் - பதவிலக்கணம்.

சொல்லின் முடிவினப்பொருள் முடித்தல் - முப்பத்திரண்டுத்தியினொன்று.

சொல்லுதல் - புலமைபாடுதல், மொழிதல்.

சொல்லுறுதி - மெய்வார்த்தை.

சொல்லெச்சம் - சொல்லெஞ்சநிற்பது.

சொல்லெஞ்சணி - ஓரணி.

சொல்லேருழவர் - புலவர், மந்திரிகள்.

சொல்வகை - சொல்லின் வகை, நூலுரை பதினான்கினொன்று, விலங்குறுப்பினுளொன்று.

சொல்வன்மை - சொல்வளம், சொல்லுறுதி, வாக்குவல்லபம்.

சொல்விளம்பி - கள்.

சொள்ளல் - குறைவு, சொத்தை.

சொள்ளை - இழுக்கு, சொட்டு, பழுதுபட்டது, புழுவரித்தது.

சொறி - காஞ்சொறி, குட்டம், சொறிசிரங்கு, சொறியென்னேவல், தினவு.

சொறிகட்டை - ஆவுறஞ்சுதறி.

சொறிக்கல் - சுக்கான்கல், தவளைக்கல், மஞ்சட்கல்.

சொறிக்கிட்டம் - கீச்சுக்கிட்டம்.

சொறிதல்-அரித்தல், பறண்டுதல்.

சொறியன் - சொறியுள்ளவன், தவளை.

சொறிவு - தினவு.

சொற்கம் - மாணிக்கம், முலை.

சொற்கருவி - உரைக்காரக வேது, அஃது உதடு, நா, பல்.

சொற்காத்தல் - சொற்றவமுமை.

சொற்குறி - சூதபாஷாணம்.

சொற்குற்றம் - சொற்பிழை.

சொற்சீரடி - தளைகள் ஒன்றும் பலவுமடுத்து வருவது.

சொற்சுவை - சொன்னலம், சொல்லின்பம்.

சொற்சோர்வு - சொற்பிசகு.

சொற்பின்வருநிலை - மொழிந்த சொல்லே மொழியினும் பொருள் வேறுபட்டு நிற்பது.

சொற்பொருட் பின்வருநிலை - சொல்லும் பொருளுமொன்றே மறித்து வருவது.

சொற்பொருள் - சத்தார்த்தம், சொல்லுக்குப்பொருளெழுதும் உரை ; இதனை சொற்பொருளுரை, பதவுரையெனவும் வழங்குவர்.

சொற்பொருள்விரித்தல் - முப்பத்திரண்டுத்தியிலொன்று.

சொற்றல் - சொல்லல்.

சொற்றொடர்நிலைச்செய்யுள் - அந்தாதி, ஓர்பிரபந்தம்.

சொனகு - பெரும்புல்.

சொனுகம்-உத்தாமணி, வேலிப் பருத்தி.

சொன்மாலை - எற்றமொழி, புகழ்ச்சி.

சொன்றி - சுக்கு, சோறு.

சொன்னகாரர் - தட்டார்.

சொன்னசீரம் - கரும்பு.

சொன்னபேதி - ஓர் மருந்து.

சொன்னம் - பொன்.

சொன்னல் - இரும்பு, சோளம்.

சொன்னீர்மை - சொற்பயன்.

## சோ

சோ - அரண், உமை, ஓரெழுத்து, ஒலிக்குறிப்பு, வியப்புச் சொல், பாணாசுரன் நகர்.

சோகம் - உண்டை, ஒட்டகம், கடுகுரோகணி, சோம்பல், சோர்வு, திரன், துன்பம், தொடை, பஞ்சபாணவத்தையி லொன்று.

சோகநீக்கி - மாதவி.

சோகரிகன் - வேட்டைக்காரன்.

சோகரத்தல் - சோர்தல், துக்கப்படுதல், துன்புறல்,வதங்குதல்.

சோகாரி - கடம்பு.

சோகி - பலகறை, பிடாரன், விஷவைத்தியன்.

சோகித்தல் - அவசப்படல், துக்கப்படுதல்.

சோகு - பிசாசம்.

சோகை-அப்பிராணி, ஓர்நோய்.

சோங்கம் - அகில்மரம், கிச்சிலிக் கிழங்கு.

சோங்கு - ஓர் மரக்கலம், குருகு, துப்பாக்கி முதலியவற்றினடி, மலையின்கண்சோலை,மறத்தல்.

சோசக்காய் - தேங்காய்.

சோசனம் - உள்ளி, துக்கம்.

சோடசகலை - பதினாறுகலை, அவை—அகாரம், உகாரம், மகாரம், விந்து, அர்த்தசந்திரன், நிரோதினி, நாதம்,நாதாந்தம், சந்தி, வியாபினி, வியோமரூபை, அநந்தை, அநாதை, அநாசிருதை, ஸமனை, உன்மனை என்பன.

சோடசம் - பதினாறு, மரப்பட்டைநார்.

சோடசாவதானம் - பதினறவதானம்.

சோடசி - யாகமிருபத்தொன்றினென்று.

சோடசோபசாரம்-பதினறுவகை உபசாரம், அவை—அடைகாய்தல், அமுதமேந்தல், ஆசமநநீர்தரல், அடைசாத்தல், கருப்பூரதீபமேந்தல், கால் கழுவநீர்தரல், கைகழுவ நீர்தரல், தவிசளித்தல், தேய்வைபூசல், நறும்புகைகாட்டல், நீராட்டல், மஞ்சளரிசிதூவல், மந்திரமலராலருச்சித்தல், மலர்சாத்தல், முப்புரிநூறரல், விளக்கிடல் என்பன, (ஆவாஹநம், தாபநம், சந்நிதானம், சந்நிரோதம், அவகுண்டநம்,தேனுமுத்திரை, பாத்தியம், அர்க்கியம், ஆசமநீயம், புட்பதானம் தூபம், தீபம், நைவேத்தியம், பாநீயம், செபசமர்ப்பணை, ஆராத்திகை என்னு மிவற்றையே சைவர்கள் சோடசோபசாரம் என்பர்.)

சோடணம் - உமிந்து குடித்தல், உலர்த்தல்.

சோடம் - உலருதல், சந்தோஷம், பொறுமை, மார்ப்புச்சட்டை.

சோடித்தல் - அலங்கரித்தல், கவைத்தல், வற்றுதல்.

சோடு-இணையானவை, இரண்டு, கவசம், சரியொப்பு, தொடு தோல்.

சோடை - சடைந்தது, சடைவு, வறட்சி.

சோட்டை - ஆசை, பேராசை.

சோணகிரி
சோணசைலம் } அருணாசலம்.

சோணநதி - கங்கையின் ஒருப நதி.

சோணம் - இரத்தம், ஓர் யாறு, கடல், சிவப்பு, செங்கரும்பு, செந்தூரம், தீ.

சோணாகம் - பெருவாகை.

சோணாசலம் - சோணகிரி.

சோணாடு - சோழநாடு.

சோணிதபுரம் - பாணாஸுரன் பட்டினம்.

சோணிதம் - இரத்தம், சிவப்பு, சுரோணிதம், மஞ்சள்.

சோணேசன் - சிவன்.

சோணை - அருகு, அருணைமா நகர், காதினருகு, சோணைநதி, புகையிலை முதலியவற்றினடிப் புறம்.

சோதகம் - கழிக்குந்தொகை, சுத்தம்பண்ணல், துளி, மழை விடல்.

சோதகர் - எழு தலைமுறையிற் புத்திரர்.

சோதம் - ஒழுகல், சுத்தமானநீர்.

சோதரன் - சகோதரன்.

சோதனம் - சுத்தஞ் செய்தல், சோதித்தல், தரிசு, புடமிடுகை.

சோதனை - அளவு, ஆராய்வு, கட்டளை, சோதிப்பு, பிரமாணம், புடமிடுகை.

சோதி - அருகன், இடிவு, உணர்வு, ஒளி, கடவுள், கருப்பூரம், சாதிலிங்கம், சிவன், சுவாதிநாள், சூரியன், சோதியென்னேவல், தீ, பிரகாசம், பூராகம், விண்மீன், விஷ்ணு.

சோதிடநூல் - கலைஞான மறுபத்து நான்கினொன்று.

சோதிடம் - சோதிடநூல், நன்னிமித்தம்.

சோதிதம் - அறிவிக்கப்பட்டது, கழிந்துவந்தபேறு, சந்திரனது பதினாறு கலைகளிலொன்று.

சோதித்தல் - அளத்தல், ஆராய்தல், இலங்கல், சுத்திபண்ணல், பரீட்சித்தல்.

சோதியம் - வாலுளுவை.

சோதிராத்திரி - நடுராத்திரி.

சோதிவிருட்சம் - இராவரி.

சோதினி-செத்தை, துடைப்பம்.

சோத்தம் - ஸ்தோத்திரம்.

சோத்தி - அத்தசாமம், சுழுத்தி, நித்திரை.

சோத்தியம் - அதிசயம், கழிக்கப்படுந்தொகை, சுத்தம், சோதிக்கப்படுவது, தவறு, வினா.

சோத்திரம்-காது, கேள்வி, செவி.

சோர்தை - உடந்தை, தடை.

சோபகிருது - ஓர் வருஷம்.

சோபம் - அசைவு, அழகு, ஆட்டம், ஆயாசம், இரக்கம், ஒளி, கள், சோம்பல், சோர்வு, தாமத குணத்தொன்று, பத்துக் கோடிகொண்டகோடி, பிரபை.

சோபனம் - அழகு, சகுணம், சந்தோஷம், சுபம், தாமரை, நன்மை, நித்தியயோகத்தொன்று, பல்லாண்டு, முகூர்த்தம், வாழ்த்து.

சோபாதானம் - முதற்காரணமாயுள்ளது.

சோபாலிகை - அடம்பு, அடுப்பு, சுவாலை, விரிதூறு.

சோபானம் - கற்படி, தாழ்வாரம், நன்னிமித்தம், வசதி.

சோபிதம்-சௌந்திரம், பிரபை.

சோபை - அழகு, ஒருவகை நோய், ஒளி.

சோப்பம் - அயர்வு, சோர்வு.

சோப்பு - அடி, சொப்பென்னேவல்.

சோமகதி - சந்திரன் தினகதி.

சோமசுதன் - புதன்.

சோமசுந்தரன் - ஓர்பாண்டியன், சிவன்.

சோமசேகரன் - ஓர்சோழன், ஓர் பாண்டியன், சிவன்.

சோமதாரி - இந்துப்பு, சிவன்.

சோமதாரை - ஆகாயம்.

சோமநாதன் - சிவன்.

சோமநாதி - பெருங்காயம்.

சோமபந்து - ஆம்பல், சூரியன், புதன்.

சோமம் - ஆட்டாங்கொடி, ஆதாயம், ஓர்பூடு, ஓர்யாகம், கஞ்சி, கள்.

சோமராகம் - பாலைப்பண்ணின் திறமைந்தனுளொன்று.

சோமவல்லி - சீந்தில்.

சோமவாரம் - திங்கட்கிழமை.

சோமனுப்பு - இந்துப்பு, பச்சைக் கருப்பூரம்.

சோமன் - அட்டவசுக்களிலொருவன், அமுதம், ஓர் வள்ளல், கருப்பூரம், காற்று, குபேரன், சந்திரன், சவர்க்காரம், சிவன், சீலை, தண்ணீர், தூசு, நமன், நீலபாஷாணம், புதன், மலை, வேட்டி.

சோமாரணியம் - ஓர் வனம்.

சோமுகன் - ஓரஸுரன்.

சோமேசன் - சிவன்.

சோம்பலம் - சேங்கொட்டை.

சோம்பல் - அழுங்கல், சோம்புதல், மயக்கம், வசூரி.

சோம்பு - அழுங்கல், சோம்பல், சோம்பென்னேவல், தாமத குணத்தொன்று, பெருஞ்சீரகம், மடி, மந்தம்.

சோம்புதல் - உறங்கல், தாமதித்தல், மடியாதல், வாட்டங் கொள்ளுதல்.

சோம்பேறி - சுவர்ண பேதி, சோம்பி.

சோரசத்துரு - சவ்வீரம்.

சோரபேதி - அஞ்சனபாஷாணம்.

சோரம் - களவு, வஞ்சனை, விபசாரம்.

சோரர் - திருடர்.

சோரல் - சோருதல், தளர்தல், வாடல்.

சோரன் - ஆட்டுக்குட்டி, ஓர் வருடதேவதை, திருடன்.

சோராவாரி - கொள்ளை, மானபங்கம்.

சோரி - இரத்தம், சிறுசெருப்படி.

சோர்தல் - அவிழ்தல், அழிதல், கண்ணீர் முதலியன சொரிதல், சுழலல், சொரிதல், தவறுதல், தளர்தல், வதங்குதல், வாடல், விழுதல்.

சோர்த்தல் - கவர்தல், திருடல்.

சோர்வு - அயர்ச்சி, அழிதல், கழலுகை, களவு, குறைவு, தவறு, தளர்வு, நிறையழிவு, நெகிழ்வு, மயக்கம், மறதி, மெலிவு, வதக்கம்.

சோலி - காரியம், தொந்தரை, தோணியிலொதுங்கிடம், மார்க்கச்சு.

சோலை - தோப்பு, பூஞ்சோலை, பொழில், மரச்செறிவு, வனம்.

சோழகக்கச்சான் - தென்மேற்றிசை, தென்மேற்றிசைக் காற்று.

சோழகக்கொண்டல் - தென்கீழ்த்திசை, தென்கீழ்த்திசைக் காற்று.

சோழங்கன் - சோழன்.

சோழன் - தமிழ் நாட்டு மூவேந்தரிலொருவன்.

சோழியன் - ஒருவகை வேளாளன், சோழநிலத்தான்.

சோளம் - ஓர்பயிர், சங்கஞ்செடி.

சோளி - ஒரு கூடை, பிச்சைக்காரர் பை.

சோறு - அன்னம், பரணிநாள், பூஞ்சுண்ணம்.

சோற்றுலாத்தி - கண்ணேறு முதலிய நீங்கும்பொருட்டுச் சோறு.

சோற்றிலை - கற்றாழை.

சோனகம் - ஓர்தேசம், பதினென்பாடையிலொன்று.

சோனகர் - துலுக்கர்.

சோனை - சொரிதல், திருவோணநாள், விடாமழை.

சோனைப்புல் - அக்கதேவி.

சோனைமழை - பெருமழை.

## சௌ

சௌ - ஓரெழுத்து, பள்ளி யெழுச்சி பாடுவோன்.

சௌகதன்-சூனியவாதி, புத்தன்.

சௌகந்தம் - நறுமணம்.

சௌகதிகம் - சந்தேகம்.

சௌகந்தி - கந்தபாஷாணம்.

சௌகந்திகம் - கருங்குவளை, செங்குவளை, பதுமராகமணி.

சௌகரியம் - சுகம்.

சௌக்கியம் - சந்தோஷம், சுகம், வசதி.

சௌகுமாரியம் - இளமை.

சௌசம் - சுத்தம்.

சௌசன்னியம் - அன்பு, இரக்கம், சினேகம், பட்சம்.

சௌசிகன் - தையற்காரன்.

சௌசேயன் - வண்ணான்.

சௌண்டீரியன் - வீரன்.

சௌண்டி - ஓர் பிதிர், திப்பிலி.

சௌண்டிகர் - கள் விற்போர்.

சௌதாயம் - நன்கொடை, பந்தயப்பொருள்.

சௌதம் - அரண்மனை, சாலை, மலிவு, வெள்ளி.

சௌத்திராந்திகம் - நாத்திகவாதம்.

சௌந்தரமுகம் - மலர்ந்தமுகம்.

சௌந்தரியலஹரி - ஓர் நூல்.

சௌந்தரியம் - அழகு.

சௌபஞ்சனம் - புனல்முருங்கை.

சௌபரி - ஓர் முனி.

சௌபன்னம் - சுக்கு, மரகதம்.

சௌபாக்கியம் - நித்தியயோகத்தொன்று, மிகுபாக்கியம்.

சௌமன் - புதன்.

சௌமிய - ஓர் வருஷம்.

சௌமியம் - அழகு, சாந்தம்.

சௌமியன் - அருகன், சாந்தன், பதினோருருத்திரர்களி லொருவன், புதன்.

சௌரபம் - குங்குமம், பரிமளம்.

சௌரபேயம் - எருது.

சௌரம் - சூரியமதம், நாள், அட்டாதசவுபபுராணத்தொன்று.

சௌராட்டிரம் } ஓர் ராகம், ஓர்
சௌராஷ்டிரம் } தேசம்.

சௌரி - கருடன், கன்னன், சனி, தாருகன்மனைவி, திருமால், துர்க்கை, நமன்.

சௌரியம் - களவு, பலம், வீரம்.

சௌரியன் - கன்னன், சூரன், சூரபத்மன், சூரியபுத்திரன்.

சௌவர்ணம் - சுக்கு, மரகதம்.

சௌவஸ்திகன் - புரோஹிதன்.

சௌவிதன் - அண்ணகன், அந்தப்புரக்காவற்காரன்.

சௌவீரம் - இலந்தைமரம்.

சௌளம் - ஓர் சடங்கு.

சௌனகன் - ஓரிருடி.

சௌனகீயம் - ஒருபநிஷதம்.

சௌனந்தி - பலராமன்.

சௌனிகன் - ஊன்விற்போன், புலைஞன்.

## ஞ

ஞ - ஒரெழுத்து.

ஞஃகான் - ஞ.

ஞெண்டு - உருண்டு, கர்க்கட கவிராசி.

ஞமகண்டன் } காந்துரைகோளி
யமகண்டம் } னென்று.

ஞமலி - கள், நாய், மயில்.

ஞமன் - நமன்.

ஞயம் - நயம்.

ஞரல்வு - ஒலி.

ஞலவல் - மின்மினிப்பூச்சி.

ஞெ - மயிற்குரல்.

## ஞா

- ஒரெழுத்து.

ஞாங்கர் - இடம், இனி, கைவேல், பக்கம், முன், மேல், வேல்.

ஞாஞ்சில் - கலப்பை, மதிலுறுப்பு.

ஞாட்பு - கூட்டம், படை, பாரம், பூசல், போர்க்களம், வலி.

ஞாணை - விண்ணுளெளி.

ஞாண் - கயிறு, விண்ணுண்.

ஞாதம் - அறியப்பட்டது.

ஞாதா - அறிவாளன்.

ஞாதி - சுற்றம், தந்தை, தாயத்தான்.

ஞாத்ரு - அறிவுள்ள ஆத்மா, காண்போன்.

ஞாபகம் - அரும்பொருள், அறிவு, இலக்கிய மெடுத்துக்காட்டல்.

ஞாபகக்கருவி } அறியுங்கருவி.
ஞாபகவேது }

ஞாபகத்துணைக்கருவி - அறிவிற்குக் காரணமாய கருவி; அஃது கண், செவி, மூக்கு, மெய், வாய்.

ஞாபகநிமித்தக்கருவி - ஆத்துமா.

ஞாயில் - மதிலுறுப்பு.

ஞாயிறு - ஸூரியன்.

ஞாயிறுதிரும்பி - ஸூரியகாந்தி.

ஞாலமாது - ஊமத்தை, பூமிதேவி.

ஞாலமுண்டோன் - திருமால்.

ஞாலம் - பூமி.

ஞாலம்படைத்தோன் - பிரமன்.

ஞாலல் - நாவல்.

ஞாலுதல் - தொங்கல், நாலல்.

ஞாழல் - குங்குமமரம், கோங்கு மரம், பலினிமரம், பொன்னுவிரை, மயிற்கொன்றை, சங்குபுட்பம், மரவைரம்.

ஞாளி - கள், நாய்.

ஞாளிகம் - வள்ளிச்செடி.

ஞாளியூர்தி - வயிரவன்.

ஞாற்சி - ஞாவல்.

ஞானகஞ்சுகன் - கடவுள்.

ஞானகாண்டம் - வேதத்திலோர் பகுதி.

ஞானசக்தி - மூன்று சக்தியி லொன்று.

ஞானதீட்சை - ஞானோபதேசம்.

ஞானபாகை - வேதநூற்பொருள் களிலொன்று.

ஞானபாதம் - ஞானநிலை.

ஞானபூர்வகம் - முன்னறிவு.

ஞானமூர்த்தி - ஸரஸ்வதி, சிவன்.

ஞானவல்லி - பார்வதி.

ஞானம் - அறிவு, இராசதகுணத் தொன்று, கல்வி, சாத்துவிக குணத்தொன்று, நல்லொழுக்கம்.

ஞானன் - பிரமன்.

ஞானுகரன் - கடவுள்.

ஞானுவரணீயம் - அறிவுமங்குதல்.

ஞானுனந்தம் - பேரின்பம்.

ஞானுனந்தன் - கடவுள்.

ஞானி - அருகன், அறிஞன், நாலாம்பாதத்தோன், பிரமன்.

ஞானேந்திரியம் - அறிகருவி; அஃது—மெய், வாய், கண், மூக்கு, செவி.

ஞானோதயம் - மெய்யறிவு.

ஞான்று - இசைநிறை, ஓரிடைச் சொல், காலம், நாள்.

## ஞி

ஞி - ஓரெழுத்து.

ஞிமிர் - ஒலி, நிமிரென்னேவல்.

ஞிமிர்தல் - ஒலித்தல், நிமிர்தல்.

ஞிமிறு - வண்டு.

## ஞெ

ஞெ - ஓரெழுத்து.

ஞெகிழம் - பொற்சிலம்பு.

ஞெகிழி - சிலம்பணி, சிலம்பு, தீ, தீப்பொறி, நெருப்புக் கொள்ளி.

ஞெகிழ்தல் - அலையல், அவிழ்தல், கழலல், கழுவல், சோரல்.

ஞெண்டு - கர்க்கடகவிராசி, நண்டு.

ஞெமிர்தல் - ஒடிதல், நெரிதல், பரத்தல்.

ஞெமிர்த்தல் - ஒடித்தல், நெரித்தல், பரப்பல்.

ஞெமுங்கல் - அழுந்தல்.

ஞெரிதல் - நெரிதல், முறிதல்.

ஞெரித்தல்-நெரித்தல், முறித்தல்.

ஞெரேலெனல் - அச்சக்குறிப்பு, ஒலி, விரைவுக்குறிப்பு.

ஞெலிகோல் - தீக்கடைகோல்.

ஞெலிதல் - கடைதல், குடைதல்.

ஞெளிர் - உள்ளோசை, ஒலி.

ஞெள்ளல் - உடன்படல், ஒலித்தல், சீக்கிரம், சோர்வு, பள்ளம், மிகுதி, மேன்மை, வீதி.

ஞெள்ளெனல் - அநுகரணவோசை.

## ஞே

ஞே - ஓரெழுத்து.

ஞேயம் - அறியப்படுபொருள், அன்பு, சிநேகம், நெய்.

ஞேயர்-அறிவுடையோர், சிநேகர்.

ஞேயா - பெருமருந்து.

## ஞொ

ஞோ - ஓரெழுத்து.

ஞொான்கல் - அச்சக்குறிப்பு, அலைதல், இணைத்தல், சோம்பல்.

## த

த - ஓரெழுத்து. குபேரன், பிரமன்.

தகசு - ஓர் மிருகம்.

தகடு - அடர்பு, இலை, ஐமை வடிவு, தட்டு, மண்படை.

தகதகெனல் - ஒளிக்குறிப்பு.

தகப்பன் - ஈன்றோன்.

தகமை - தகைமை.

தகம் - உட்டணம், எரித்தல், நித்திரை, நீர், வேகம்.

தகரம் - ஈயம், ஓரெழுத்து, தகரம், மயிர்ச்சாந்து, வாசனைப் பண்டம், விலங்கின்பிள்ளை.

தகர் - சுறுவிறுண், செம்மறிக்கடா, தகரென்னேவல், துண்டு, துருவாட்டேறு, பராகம், பலாசு, பூமி, மேடவிராசி, யாளி, யானை இவற்றினாண்.

தகர்த்தல் - அடித்தல், உடைத்தல், குட்டுதல், நெரித்தல்.

தகல் - தகுதல், திராய்.

தகவு - அறிவு, உரிமை, உவமை, ஒழுக்கம், கிருபை, குணம், தகுதிப்பொருள், தகுதி, தெளிவு, நன்மை, நீதி, பாத்திரம்.

தகழி - அகல்.

தகழிகை - உண்கலம்.

தகனம் - சுடல்.

தகனன் - அக்னிதேவன், நெருப்பு.

தகனை - உலோகக்கட்டி.

தகனோபலம் - சூரியகாந்தம்.

தகா-தந்திரம், தாகம், பேராசை.

தகாமை - ஒவ்வாமை, தகுதியின்மை.

தகித்தல்-எரித்தல், சீரணித்தல், சுடுதல்.

தகிலிமா - செங்கொட்டைமரம்.

தகுணிதம் - ஓர்வாச்சியம்.

தகுதல் - இயலுதல், உரிமை, எற்குதல்.

தகுதி - அறிவு, உரிமை, ஒழுக்கம், குணம், சனக்கூட்டம், பாத்திரம், பொறுமை.

தகுதியோர் - அறிஞர், தமர், பெருமையிற் சிறந்தோர்.

தகுவ - இயன்றவை.

தகுவர் - அசுரர்.

தகுளம் - மகளிர் விளையாட்டு.

தகை - அழகு, அன்பு, குணம், கவசம், தகையென்னேவல், தளர்வு, பெருமை, முகடு.

தகைதல் - ஆணையிடல், இளைத்தல், தடுத்தல், வாட்டுதல்.

தகைப்பு - இளைப்பு, தடுப்பு, மதிற்சுற்று.

தகைமை - அழகு, குணம், தன்மை, பெருமை.

தக்ககன் - அட்டநாகத்தொன்று.

தக்கடி - குதர்க்கம்.

தக்கடை - தராசு.

தக்கணகோளார்த்தம் - தென்பாதியுருண்டை.

தக்கணதுருவம் - தென்துருவம்.

தக்கணமந்தோச்சம் - கிரஹங்கள் சூரியனுக்குச் சமீபத்தில் செல்லும் எல்லை.

தக்கணம் - தாளப்பிரமாணத்தொன்று; அஃது—எட்டு மாத்திரைகளை ஓர் கலையாகக் கொண்டது, தெற்கு, வலப்பக்கம்.

தக்கணுக்கினி - தக்ஷிணுக்கினி.

தக்கணுட்சம்- உத்திரவிட்சேபம்.

தக்கணுயனம் } நிரட்ச ரேகைக்குத் தெற்காய்ச் சூரியன் செல்லுதல்.
தட்சிணுயனம் }

தக்கன் - அட்டநாகத்தொன்று, நவப்பிரமாவிலொருவன்.

தக்கவர் - தகுதியுடையோர்.

தக்கன்மகன்சிதைத்தோன் - வீரபத்திரன்.

தக்காரி - வாதமடக்கி.

தக்கார் - அறிஞர், உறவோர், தகுதியுடையோர், பெருமையிற் சிறந்தோர்.

தக்காளி - ஓர் செடி.

தக்கிரம் - மோர்.

தக்குவித்தல் - ஆட்சிக்குட்படுத்தல்.

தக்கேசி - ஓர் பண்.

தக்கை-காதிடுதக்கை, கிடைச்சி, தெப்பம், பம்பைவாச்சியம், பலவகைப்பறை.

தக்கோர் - அறிஞர், தக்கார்.

தக்கோலம் - ஓர் ஊரின் பெயர், சிறுநாவற்பூ, திப்பிலி, வாசனைப்பண்டம், வால்மிளகு.

தங்கம் - உயர்ந்தபொன், சுத்தம், பயம்.

தங்கல் - தங்கல், தாங்கல்.

தங்குடித்தமர்- தாயத்தார்.

தங்கை - இளையாள்.

தங்கைச்சி - கூலவளை.

தசகண்டசித்து - இராமன்.

தசகண்டன் } இராவணன்.
தசக்கிரீவன்

தசகரம் - பத்துவித வியசனங்கள், அவை—அபாவனை, காமம், சிற்றின்ப கவி, சூது, நடனம், பகற்றுயில், மதுவூண், மாயம், விளையாட்டு, வேட்டம்.

தசதானம் - பத்துத்தானம், அஃது—உப்பு, எள், நெய், நெல், பசு, பூமி, பொன், வஸ்திரம், வெல்லம், வெள்ளி.

தசநாடி - பத்துநரம்பு; அத்தி, அலம்புடா, இடை, காந்தாரி, குஹூ, சங்கிலி, சிகுவை, சுழிமுனை, பிங்களை, புருஷன்.

தசப்பிராதுர்பவம் - ஆசிரியவிருத்தம், உற்பவமாலை.

தசப்பொருத்தம் - செய்யுட் பொருத்தம், மணப்பொருத்தம் பத்து.

தசமி - பத்தாந்திதி.

தசமுகன் - இராவணன்.

தசமூலம் - பத்துவகை மருந்துவேர்; அஃது—கண்டங்கத்திரி, சிறுமல்லிகை, சிறுவழுதுணை, தழுதாழை, நெரிஞ்சி, பாதிரி, பெருங்குமிழ், பெருமல்லிகை, வாகை, வில்வம்.

தசம் - சிவிகை, பத்து.

தசரதன் - இராமன் தந்தை.

தசவாயு - பிராணவாயு பத்து; அஃது—பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன்.

தசனம் - பல், போர்க்கவசம், மலைமுடி.

தசாங்கம் - அரசர்க்குரிய பத்து அங்கம்; அவை—ஊர், கரி, கொடி, செங்கோல், நாடு, பரி, மலை, மாலை, முரசு, யாறு.

தசாங்கதத்தயல் } நேரிசை வெண்பா.
தசாங்கபத்து

தசாட்சரி - ஓர்மந்திரவகை.

தசாநாதன் - உச்சத்தானத்திருத்தல்.

தசாபலன் - கிரகபலன்.

தசாவதாரம் - திருமாலவதாரங்கள்பத்து, அவை—மத்ஸ்யம், கூர்மம், வராஹம், நரஸிம்ஹம், வாமனம், இராமன், பரசுராமன், கிருஷ்ணன், புத்தன், கல்கி.

தசானனன் - இராவணன்.

தசிரம் - உட்டுளை.

தசுகரம் - களவு - தஸ்கரம்.

தசும்பர் - தசும்பு.

தசும்பு - குடம், கொப்பரி, பொன்.

தசை - ஊன், தாது, நிலைமை, புலால்.

தச்சன் - சித்திரைநாள், தச்சன்.

தஞ்சம் - எளிமை, தாழ்வு, துணை, பற்றுக்கோடு, பெருமை.

தஞ்சை - தஞ்சாவூர்.

தடத்தம் - நடுவாய் நிற்றல்.

தடம் - ஓமகுண்டம், கரை, குளம், பெருமை, மலை, மலைப் பக்கம், வரம்பு, வழி.

தடவரல் - தடவல்.

தடவல் - தடவல், வீணை வாசித்தல்.

தடவு - தடவென்னேவல், தூபக்கால், பெருமை, வளைவு.

தடறு - ஆயுதவுறை.

தடா - பானை, மிடா.

தடாகம் - குளம்.

தடாரி - பம்பை, பேரிகை, மத்தளம், வாச்சியப்பொது.

தடி - அளவுகோல், ஆற்றங்கரை, உடம்பு, உலக்கை, ஊன், தறுவயல், தடியென்னேவல், தண்டு, பற்றுக்கோடு, மின், வயல், வளைதடி, வில்.

தடிதல் - அறுத்தல், குறைத்தல், தறித்தல், மின்னுதல், வெட்டல்.

தடித்தல் - கனத்தல், தாமதித்தல், புடைத்தல்.

தடித்து - மின்னல்.

தடிப்பு - கனப்பு, தழும்பு, பருமை.

தடினி - யாறு.

தடுத்தல், தடுப்பு - ஆணையிடல்.

தடை - கவசம், தடக்கு, தடுத்தல், மறியல்.

தட்சிணாக்கினி - வேதாக்கினி மூன்றிலொன்று.

தட்சிணாமூர்த்தம் - குருமூர்த்தம்.

தட்சிணாமூர்த்தி - சிவன், அகத்தியன்.

தட்சிணாயநாந்தம் - சூரியகதியின் தென்னெல்லை.

தட்டம் - உண்கலம், பல், பாம்பினச்சுப்பல், மக்கட்படுக்கை.

தட்டல் - அடித்தல், அபகரித்தல், ஆணையிடல், கிட்டல், தடுத்தல், தாளம்போடல்.

தட்டான் - கோஷ்டம், புடோல், பொற்கொல்லன்.

தட்டி - காவல், கேடகம், கோட்டம், படல், பலகை.

தட்டு - உபகட்டு, கம்புமுதலிய புன்பயிர்த்தாள், குறை, குற்றம், தட்டென்னேவல், தராசுத்தட்டு, திரிகை, தேர் நடு, பரிசை, மரவட்டணை, முட்டு, புறம், வட்டம், வளைவு, விலக்கு.

தட்டை - அரிதாள், கவண், கிளிகடிகோல், தினைத்தாள், மூங்கில், மொட்டை.

தட்பம் - குளிர்ச்சி.

தணக்கு - தணக்கு, நுணாமரம்.

தணத்தல் - நீங்கல், பிரிதல், போகல்.

தணல் - நெருப்பு.

தணவம் - அரசமரம்.

தணிகை - திருத்தணிகை.

தணிசு - கவிசு, குறைவு, தாழ்ச்சி.

தணிதல் - ஆறுதல், இளகுதல், குளிர்தல், குறைதல், பருத்தல்.

தணித்தல் - அவித்தல், ஆற்றல்.

தணியல் - கள்.

தணிவு - ஆறுதல், குறைவு.

தண் - குளிர்ச்சி.

தண்கதிர், தண்சுடர் - சந்திரன்.

தண்டகமாலை - ஓர் பிரபந்தம், வெண்பா அல்லது புணர்ச்சி மாலை.

தண்டகம் - ஆபரணம், கரிக்குருவி, குருந்தறி, தண்டகாரணியம், தொண்டைமண்டலம், நுரை, வடமொழியில் ஓர் வகை அகவற்பா.

தண்டகன் - ஓரரக்கன், ஓரரசன்.

தண்டகாரணியம் - ஓர் வனம்.

தண்டதரன் - யமன்.

தண்டநாயகன் - அரசன், சேனாதிபதி, நந்தி.

தண்டபாணி - தண்டேசன், நமன், முருகன், விஷ்ணு.

தண்டமிழ் - தண்ணிய தமிழ்.

தண்டம் - அபராதம், அரசன் கொடுங்கோன்மையாளி நை யிருத்தல், ஊன்றுகோல், ஓர் புருடப்பிரமாணம், குடைக்காம்பு, தண்டிப்பு, நாடு, நால்வகை யுபாயத்தினொன்று, படை, பண்டாரம் பற்றுக்கோடு, யானைத்துதிக்கை, யானைசெல்வழி, வணங்கல்.

தண்டலை - ஓரூர், சோலை, பூந்தோட்டம்.

தண்டன் - அரசன், கடவுள், குயவன், நமன், வணக்கம், வணங்கல்.

தண்டாச்சிறப்பினள் - ஸரஸ்வதி.

தண்டாமை - நிலைநீங்காமை.

தண்டாயுதபாணி - குமரன்.

தண்டாயுதன் - ஐயனார், வயிரவன், வீமன்.

தண்டி - ஓர்புலவன், தண்டியென்னேவல், தண்டியடிகள், தண்டேசன், வாயில்காப்போன், வானப்பிரஸதன்.

தண்டிகை - சிவிகை.

தண்டித்தல் - கண்டித்தல், வெட்டல்.

தண்டியலங்காரம் - ஓர் நூல் (அணியிலக்கணம்)

தண்டு - ஒந்தி, சிவிகை, சேனை, தடி, தண்டாயுதம், தண் டென்னேவல், துளையுடைப் பொருள், கமண்டலம், படை, பூவிதழ், மிதுனவிராசி, மூங் கில், வரம்பு, வளைதடி, வாழைத்தாறு, வில், வீணை.

தண்டுதல் - தண்டல்.

தண்டுலம்-அரிசி, வாயுவிளங்கம்.

தண்டேசன் / தண்டேசுரன் } சிவன் தொண்டரறுபத்துமூவரிலொருவன்.

தண்டை - காலணி, பிரப்பங் கேடகம்.

தண்ணடை - நாடு, பச்சிலை, மருதநிலத்தூர்.

தண்ணம் - ஓர்கட்பறை, காடு, குளிர், பறைப்பொது, மழு.

தண்ணவன் - சந்திரன்.

தண்ணளி - இரக்கம், கருணை, கிருபை.

தண்ணீர்விட்டான் - ஓர் பூடு, சாத்தாவாரி.

தண்ணுமை - உடுக்கை, உறுமி மேளம், ஓர்கட்பறை, பேரிகை, மத்தளம்.

தண்ணெனல் - குளிர்தல்.

தண்மை - அழகு, இகழத்தகு பொருள், இன்பம், எளிமை, குளிர்ச்சி, அஃது—எண்வகை யூறுகளிலொன்று, சாந்தம், தாழ்வு, புல்லறிவு.

ததம் - அகலம், வாச்சியவகை, விரிவு.

ததல் - நிலை.

ததாகதன் - புத்தன்.

ததாகாரம் - அநர்க்கரூபம், விஸ்தாரம்.

ததி-ஓர்பிசின், கிரகம், தத்துவம், தயிர், திரை, பருவம், பொழுது.

ததீசி - ஒரு முனிவர்.

ததும்பல் - அசைதல், தளும்பு தல், நிறைதல், பெருகுதல், வழிதல்.

ததைதல் - மிடைதல், வெளிப் படாது நெருங்கி நிற்றல்.

தத்தம் - ஈகை, சுவீகாரம்.

தத்தரம் - நடுக்கம், விரைவு.

தத்தல் - தவளை, தாண்டல், பாய்தல்.

தத்திகாரம் - பொய்.

தத்தியம் - மெய்.

தத்துவக்கட்டளை - ஓர் நூல்.

தத்துவத்திரயம் - மூவகைதத்து வம்; அஃது - ஆத்மதத்துவம், சிவதத்துவம், வித்யாதத்துவம்.

தத்துவப்பிரகாசம் / தத்துவவிளக்கம் } ஓர் சைவநூல், உண்மைவிளக்கம்.

தத்துவம்-அதிகாரம், இயற்கை, உண்மை தத்துவநூல், பிரு துவி முதலிய கருவிகள்.

தத்துவவாதம் - தத்துவமே— உண்மையே கடவுள் என்னும் சமயம்.

தத்துவன் - அதிகாரி, அரசன், அருகன், உண்மையுள்ளோன், உருத்திரன், கடவுள், பிரமன், விஷ்ணு.

தத்துவாசமம் - அங்காதிபாதம்.

தத்துவாதீதன் - கடவுள்.

தத்தை - கிளி, முன் பிறந்தாள்.

தநம் - சந்தணம், மனம்.

தநயன் - மகன்.

தநுச்சாயை - சரீரநிழல்.

தநுத்திராணம் - கவசம்.

தந்தக்காரி - வாதமடக்கி.

தந்தசடம் - எலுமிச்சை, விளா மரம்.

தந்தசூகம் - பாம்பு.

தந்ததாவனம் - பல்துலக்கல்.

தந்தபலை - திப்பிலி.

தந்தபீஜம் - மாதுளை.

தந்தம் - பல், யானைக்கொம்பு.

தந்தாவளம் - யானை.

தந்தி - ஆண்யானை, நெய்வோன், பாம்பு.

தந்திமுகன் - விநாயகன்.

தந்திரகலை } ஆகமத்தோர்
தந்திராகமம் } பிரிவு.

தந்திரபாலன் - சேனாபதி.

தந்திரம் - ஆகமநூல், உபாயம், கூட்டம், நூல், படை, யாழி நரம்பு,

தந்திரர் - கந்தருவர்.

தந்திரவுத்தி - நூலுக்குள்ளபதின் மூன்று விகல்பநடையி லொன்று.

தந்திரி - தந்திரக்காரன், படைத் தலைவன், மந்திரி, யாழ்நரம்பி னோசை, யாழ்நரம்பு.

தந்திரை - சோம்பல், நித்திரை.

தந்திவீழுரியோன் - சிவன்.

தந்து - கல்விநூல், பஞ்சினூல்.

தந்துரை - பாயிரம்.

தந்துவாயர் - நெய்வோர்.

தந்தை - தகப்பன்.

தபசி - தவத்தோன்.

தபசு - தவம்.

தபதியர் - கம்மாளர், தச்சர்.

தபம் - தவம், மாசிமாதம், வெப்பம்.

தபனம் - தாகம், மனத்துயர், வெப்பம்.

தபனன் - சூரியன், நெருப்பு.

தபுதல் - கெடுதல், சாதல்.

தபுதாரம் - ஊடிய தலைவியைத் தலைவன் காதலித்திருத்தல்.

தபோதனர் - முனிவர்.

தபோலோகம் - மேலேழுலகத் தொன்று.

தப்பட்டை - ஓர் பறை.

தப்பு - ஓர் பறை, குற்றம், தப் பென்னேவல், பொய்.

தப்புதல் - சப்பளித்தல், சீலை தப்புதல், தவறுதல், பிழைத் தல், விலகுதல்.

தமா - இருள், தாமசகுணம்.

தமப்பிரபை - ஏழுநரகத் தொன்று.

தமம் - இராகு, இருள், கீழ்ப் படுதல், சேறு, தன்னையடக் கல், துக்கம், பாவம், புரச் சரணதண்டம், மனவிருள், மாயை.

தமயந்தி - நளராசன் மனைவி.

தமயன் - தமையன்.

தமரகம் - உடுக்கு, வங்கம்.

தமரத்தை - ஓர் மரம்.

தமரம்-அரக்கு, ஈயம், பேரொலி.

தமரல் - பெரிதொலித்தல்.

தமருகம் - உடுக்கை.

தமரோசை - கிலுகிலுப்பை.

தமர்-உறவோர், தம்மவர், மூடர். (பிங்)

தமனகம் - மருக்கொழுந்து.

தமனகன் - ஓர் நரியின் பெயர், (பஞ்)

தமனி - வன்னிமரம்.

தமனியம் - பொன்.

தமனியன் - இரணியன், சனி, பிரமன்.

தமன் - இராகு, கடவுள், கிருட்டி ணன், சந்திரன், தம்மவன்.

தமாலம் - இலை, இரவு, பச்சிலை மரம், பட்டயம், மூங்கிற்றோல்.

தமி-ஒப்பின்மை, தனிமை, தாக் கின்மை, உதவியின்மை.

தமிசு - வேங்கைமரம்.

தமியம் - கள்.

தமியன் - எளியன், தனியன்.

தமிழோர் - தமிழ்ப்புலவர்.

தமிழ் - இனிமை, ஓர் பாடை, நீர்மை.

தமிழ்நாடன் - பாண்டியன்.

தமிழ்மொழியாக்கம் - தமிழ்ச் சொல்லமைதி.

தமிழ்வாணர் - தமிழ்ப்புலவர்.

தமிழ்வேதம்-குறள், திருமந்திரம், திருவாசகம், தேவாரம், நாலாயிரப்பிரபந்தம்..

தமுக்கு - ஓர்பறை.

தமையம் - அரிதாரம்.

தமையன் - அண்ணன்.

தம் - அசைச்சொல், கொடை, சாரியை, தற்காத்தல், நன் முகூர்த்தம், பங்கிடுதல், புண் ணியம்.

தம்பம் - கவசம், சங்கீதம், தூண், நிலை, பற்றுக்கோடு, பாவம், யானைத்தறி, வஞ்சம்.

தம்பலம் - இந்திரகோபம், நிற வகை, வெற்றிலைச்சாரம்.

தம்பலை - நிலவிலந்தை.

தம்பல் - சேறு, தம்பலம்.

தம்பனம் - அசைவற நிறுத்தல்.

தம்பி - தம்பியென்னேவல், பின் பிறந்தான்.

தம்பித்தல் - தடுத்தல், நிறுத்தல், வாயுமுதலிய வடக்கல்.

தம்மவன் - சுற்றத்தான்.

தம்மனை - தாய்.

தம்மிலம் - மயிர்முடி.

தடக்கம் - அசைவு, பிரபை.

தயங்கல் - அசைதல், ஒளிசெய்தல், திகைத்தல்.

தயாவிருத்தி - கிருபை மிகுதல், தயாவிருத்தி பதினொன்று; அவை—கல்வியயிற்றல், துயர் தீர்த்தல், தண்டத்தினீக்கல், ஐயந்தீர்த்தல், பிறர்குணத்து அழுக்காறின்றிப் பொருத்தல், பிறரால் செய்யப்படுந் தீமை மறந்து நன்மை நினைத்தல், பிறர்க்குவேண்டி தெய்வம்வழிபடல், இவை உயிர்க்கேழுபகாரம், உணவு, பரமை, உடை, இடம், அடிமைகாத்தல், சிறை நோய் மூன்றுந்தீர்த்தல், பிணமடக்கல், இவை உடற்கு எழுபகாரம், பிறர்க்கு பொருள் வரவை உவத்தல், செல்வம் பொருத்தல், பிறர் கருமத்திற்கு உடன்படல், தீமைக் கஞ்சல், பிறர் கருமம் முடிக்க விரைதல், பிறர்ஐயந்தீர்த்தல், நன்மை கடைபிடித்தல், பிறர் துயர்க்கிரங்கல்.

தயாளம் - கிருபை.

தயாளன் - கிருபையுடையோன்.

தயாளு - கிருபாலு.

தயிதம் - பிரியவஸ்து.

தயிதை - மனைவி.

தயினியம் - எளிமை, தைனியம்.

தயை - கிருபை.

தரகு - ஓரளவு, தரவு.

தரக்கு (கூடிய)புலி, புலிக்குடத்தி.

தரங்கம் - கலக்கம், நீர்த்திரை.

தரங்கிணி - ஆறு, ஓரிராகம்.

தரங்கு - ஈட்டிநுனி, தங்கல், வழி.

தரணம் - அரிசி, இமயம், சூரியன், தரித்தல், தாண்டல்.

தரணி - சூரியன், பூமி, மலை.

தரணீதரன் - அரசன் ஆமை, திருமால்.

தரம் - அச்சம், அரக்கு, கூட்டம், குண்டு, சங்கு, சமானம், பக்குவம், பருத்திப்பொதி, மலை, முறை, வகை, வலி.

தரல் - தருதல், தாராய் என்னு முற்று.

தரவு - கலிப்பாவினோருறுப்பு, தலைவன் கட்டளை, பிடரி.

தரளம் - அசைவு, திரட்சி, முத்து.

தரனை - கஞ்சி, கள்.

தரன் - அட்டவசுக்களிலொருவன்.

தரா - ஓர் கசப்புக்கீரை, சங்கு, தரா, பூசநாள், பூமி.

தராங்கம் - மலை.

தராசு - துலாக்கோல், துலாராசி, பரணிநாள்.

தராதரம் - இனம், தரம், திறம், மலை.

தராதலம் - பூமி.

தராபதி - அரசன்.

தரிசனம் - அறிவு, கண், கனவு, கண்ணாடி, காட்சி, மனக்காட்சி.

தரிசனவேதி - தாழ்ந்தலோகங்களை பொன்னாக்குமுறை.

தரிசனாவரணீயம் - எண், குற்றத்தொன்று, அஃது—காட்சி மறைப்பு.

தரிசனீயம் } அழகுள்ளது,
தரிசியம் } தோன்றுவது.

தரிசித்தல் - காணல், ஞானக்கண்ணால் காணல்.

தரிஞ்சகம் - அன்றில்.

தரித்தல் - அணிதல், சுமத்தல், தங்கல்.

தரித்திரம் - வறுமை.

தரித்திரீ - பூமி, வறியன்.

தரிப்பு - தரித்தல்.

தரியலர் } பகைவர்.
தரியலார் }

தரு - மரப்பொது.

தருக்கசிந்தாமணி - ஓர் நூல்.

தருக்கம் - நியாயம், பொருள், தருக்கவித்தை, திருட்டாந்தரம்.

தருக்கல் - அகங்கரித்தல், களித்தல்.

தருக்கு - அஹங்காரம், களிப்பு, தருக்கென்றேவல்.

தருசம் - ஊனம், பெருமை, பொறுமை.

தருணம் - ஆமணக்கு, இளமை, எண்ணம், சமயம்.

தருணி - மங்கைப்பருவத்தாள்.

தருதல் - உண்டாக்கல், கொடுத்தல்.

தருப்பகன் - மன்மதன்.

தருப்பசயனம் - ஓர் தலம், தருப் பைப்பாய், தருப்பையிற் படுக்கை.

தருப்பணம் - இன்ப நிறைவுறச் செய்தல், ஓர் தாளம், கண் ணடி, மந்திரநீரிறைக்கை.

தருப்பை - குசம்.

தருமகே(க்ஷே)த்திரம் - குருக் கேத்திரம்.

தருமக்கிழவர் - வைசியர்பொது.

தருமதேவதை - அம்பாலிகை, நந்தி.

தருமநாள் - பரணிநாள்.

தருமநூல் - தருமசாத்திரம்.

தருமபுரம் - யமனுடைய பட்ட ணம்.

தருமம் - அம்பு, அறம், உபநிட தம், ஒப்பு, சுத்தம், தொழில், நல்லொழுக்கம் நியாயப்பிர மாணம், நீதி, யாகாதிதருமம், வேதம்.

தருமராசன் - அருகன், தருமன், பாண்டுமக்களில் மூத்தோன், புத்தன்.

தருவி - சட்டுவம்.

தரை - கர்ப்பாசயம், நரம்பு, பூமி, மூலை.

தர்க்கம் - தருக்கம்.

தர்ப்பகன் - மன்மதன்.

தர்ப்பம் - கர்வம், கஸ்தூரி.

தலத்தாது - நிலப்பனை.

தலம் - ஆழம், இடம், இலை, உலகின் பொது, உள்ளங்கால், கருவியுறை, கலப்பு, காடு, கீழ், குவியல், கைகொட்டல், துவாரம், நிமித்தம், பனை மரம், பாதி, பிளப்பு, பூமி, விரித்தகை.

தலன் - தலம்.

தலாகவம் - போர்க்களம்.

தலை - அதிகாரம், ஆகாயம், ஆதி, இடம், தலை, தலைமை, திசை' பெருமை.

தலைக்கடை - முதல் பிரதாள வாயில்.

தலைக்குடி - முதற்குடி.

தலைக்குறை - கவந்தம், சொல் லின்முதல் குறைதல்.

தலைக்கூடுதல் - ஒன்றித்தல்.

தலைக்கோலம் - தலையணி.

தலைசாய்தல் - நாணித்தல், வணங்குதல்.

தலைச்சீரா - தலையணியுங்கவசம்.

தலைச்சுருளி - பெருமருந்து.

தலைச்செய்தல் - பலன்படல், வாழ்ந்து தழைத்தல்.

தலைதட்டுதல் - பறைவெட்டுதல்.

தலைதாழ்தல் - நாணித்தல் வணங்கல்.

தலைத்திராணம் - தலைச்சீரா.

தலைத்தூக்கம் - அமைவு, தலை தாழ்தல், நாணித்தல்.

தலைநாள் - அச்விநீநாள்.

தலைபோடம் - பொடுதலை.

தலைப்படல்-எதிர்த்தல், தொடங்கல், வளர்தல், வாழ்தல்.

தலைப்பாடு - கூடுதல், வளர்ச்சி.

தலைப்பெய்தல் - கூட்டல்.

தலைப்பு - காரியமுடிவு, நுதி, விடுதலைப்பு.

தலைமகள் - தலைவி.

தலைமகன் - அதிகாரி, புருடன், பெருமையிற் சிறந்தோன், முதற்புத்திரன்.

தலைமடக்கு - ஆதிமடக்கு.

தலைமை - முதன்மை.

தலையணை - உபாதானம்.

தலையல் - நீந்துபுனல், புதுப்புனல், வரவு, மழை பெய்து விடுதல்.

தலையாகுமோனை - அடிமோனைத் தொடை.

தலையாகெதுகை - அடிதோறும் முதற்சீரின் முதலெழுத் தொழிய மற்றவை யொத்திருத்தல்.

தலையாயார் - பெரியோர்.

தலையுவா - அமாவாசை.

தலைவன் - அண்ணன், அரசன், எப்பொருட்குமிறைவன், குரு, புருடன், மூத்தோன்.

தலைவி - எப்பொருட்குமிறைவி, மனைவி.

தலைவிரித்தான் - சாரணை, செருப்படி.

தல்லி - தாய்.

தவ - குன்றல், மிகுதி.

தவக்கம் - தடை, தாகம், தேவை, வாட்டம், விருப்பம்.

தவசி - தவம்.

தவசி - ஓர் பூடு, முருங்கை.

தவத்தர் - தீ, முனிவர், வெப்பம்.

தவம் - தவசி, வில்.

தவர்-தவமொன்னேவல், முனிவர்.

தவர்தல் - சிர்தல், தப்புதல்.

தவலல் - குறைதல், கெடுதல்.

தவலோகம் - மேமேலுலகி லொன்று.

தவல் - குறைதல்.

தவளம் - கர்ப்பூரம், சங்கபாஷாணம், வெண்மிளகு, வெண்மை.

தவளாங்கம் - வெள்ளைமேனி.

தவளை - தவனை, மண்டூகம்.

தவளோற்பலம் - வெள்ளாம்பல்.

தவறல் - கடத்தல், குறைதல், சாதல், தப்புதல்.

தவறு - குற்றம், தப்பு, தவறென் னேவல்.

தவறுதல் - அழிதல், சாதல், தப் புதல், வழுவுதல்.

தவனகம் - மருக்கொழுந்து.

தவனம் - ஆசை, தாகம்.

தவனன் - சூரியன், நெருப்பு.

தவன் - எத்தன், புருடன், தவசி.

தவாநிலை - தவறாநிலை, வழுவா நிலை.

தவாவினை - தவறாச்செயல்,மலை, முத்தி.

தவிசு - தடுக்கு, பாய், மெத்தை.

தவிடு - தாகப்படல், தவிடு.

தவித்தல் - அரிசுசியின்றுகள், இளைத்தல்.

தவித்திரம் - மான்றோலினாற் செய்த விசிறி.

தவிர்தல் - ஒழிதல்.

தவிர்த்தல் - ஒழிவித்தல், வற்று தல், விலகுதல்.

தவிர்ப்பு-ஒழிவு, தடை, விலக்கு-

தவில் - ஓர் பறை.

தவுசெலம் - முருங்கை.

தவுரிதகம் - குதிரையின் ஐந்து கதியொன்று.

தவ்வி - அகப்பை, சட்டுவம்.

தவ்வை - அக்காள், செவிலித் தாய், மூதேவி.

தழங்கல் - ஒலித்தல்.

தழலல் - அழலல்.

தழல் - கவண், கார்த்திகைநாள், கிளிகடிகோல், தழலென்னே வல், தீ.

தழற்சி - அழற்சி.

தழாத்தொடர் - உருபும்பயனிலை யுந்தழுவாதுபுணரும்புணர்ச்சி.

தழால் - தழுவல்.

தழிஞ்சி - சாய்ந்தார் மேற்பட ாமை.

தழீஇந்தழீஇமெனல் - ஈரடுக் கொலிக்குறிப்பு.

தழுதணை - படர்தாமரை.

தழுதாமை - வாதமடக்கி.

தழுதாழை - ஓர் மரம், அஃது, தசமூலத்தொன்று.

தழும்பு - காயம், குற்றம், நாத் தழும்பு, மறு.

தழுவணை - அணைக்குந்தலையணி கடலட்டை, சாய்மானமான மெத்தை,

தழுவல் - தழுவுதல்.

தழுவுதல் - எற்றுக்கொன்ளுதல் கட்டியணைத்தல், கலத்தல்.

தழை - இலை, தழையென்னே வல், தளிர், பீலிக்குடை, மயிற் றோகை.

தழைக்கை } தளிர்த்தல்.
தழைதல் } தளிர்த்தல்.

தழைத்தல் - செழித்தல், தளிர்த்தல், வாழ்தல்.

தளதளெனல் - இளக்கக்குறிப்பு, ஒளிக்குறிப்பு.

தளப்பம் - தளப்பற்றுமரம், தளர்வு.

தளம் - இலை, உப்பரிகை, கப்பலின் தட்டு, கூட்டம், சாடி, சார்து, தடிப்பு, நிலத்தின்றளம், படை, பூவிதழ்.

தளம்பல் - அசைதல், ததும்பல், நடுங்கல், நிலைகுலைதல், முட்டுப்படல்.

தளர்ச்சி } சோம்பல், சோர்வு,
தளர்தல் } மெலிவு, வருத்தம்.

தளவம் } முல்லைக்கொடி.
தளவு }

தளி - குளிர், கோயில், மழைத்துளி, விளக்குத்தண்டு.

தளிகை - உண்கலம், புற்கைக்கட்டி.

தளிமம் - அழகு, கட்டில், திண்ணை, மக்கட்படுக்கை, மெத்தை, வாள், வீடுகட்டு நிலம்.

தளிரடி - மெல்லடி, பெண்.

தளிரியல் - பெண்.

தளிர் - தழை, தளிரென்னேவல்.

தளிர்த்தல் - குளிர்த்தல்.

தளுக்கிடுதல் - அழுத்தமாகுதல், மினுக்குதல்.

தளுக்கு - ஒளி, தளுக்கென்னேவல், மினுக்கு, மூக்குத்தி.

தளை - ஆண்மயிர், கட்டு, கால்விலங்கு, காற்சங்கிலி, காற்தம்பு, தளையென்னேவல், பாசம், பந்தம், யாப்புறுப்பெட்டினொன்று.

தளைதட்டல் - தளைதவறல்.

தளைதல் - பிணித்தல்.

தளைப்படுதல் - தறைப்படல்.

தளைப்பொருத்தம் - செய்யுட்டளையினிணக்கம்.

தள்ளல் - தள்ளல், பொய், வியங்கோண்முற்று.

தள்ளாடல் - அசைதல்.

தறி - கட்டுத்தறி, தறியென்னேவல், ஆண், நெய்வார்கருவி, முளை, வெட்டு.

தறிகை-உளி, கோடரி, தறி,மழு.

தறித்தல் - வெட்டல்.

தறுகணாளர் - படைவீரர்.

தறுகண் } அஞ்சாமை, குரூ
தறுகண்மை } ரம், வீரம்.

தறுதல் தடைப்படல், தவறுதல்.

தறை - ஆணியின் சடை, தரை.

தற்காலம் - தற்சமயம்.

தற்காலசுத்தபுடம் - குறித்த காலத்துக் கிரகணங்களிற்கும் நிலையைச் சரியாயறியுஞ் சுத்தகணிதம்.

தற்காலமத்திமம் - குறித்த காலத்துக் கிரணங்கணிற்கு நிலையைப் பொதுவாக வறியு மத்திம கணிதம்.

தற்காவல் - கற்பு நிறை, தற் காப்பு.

தற்காத்தல் - இரட்சித்தல், தன்னைக் காத்தல், பாதுகாத்தல்.

தற்காப்பு - பாதுகாப்பு.

தற்கிழமை, ஒற்றுமையாயுரியது.

தற்குணம் - விசேஷகுணம்.

தற்குறிப்பேற்றம் - ஓரலங்காரம்.

தற்சமம் - வடமொழிக்கும் தமிழ் மொழிக்கும் பொதுச்சொல் லால்வருவது.

தற்சனி - சுட்டுவிரல்.

தற்சாட்சி - மனச்சாட்சி.

தற்சிவம் - ஈசுவரன்.

தற்சுட்டு- தன்னைக்குறிப்பித்தல்.

தற்செயல் - தானுகநிகழ்வது.

தற்செல்வம் - வலி.

தற்பதம் - கடவுள்.

தற்பம் - அகந்தை, மேனிலை, வஞ்சனை, மக்கட் படுக்கை, மனைவி, மெத்தை.

தற்பரன் - கடவுள், சிவன்.

தற்பவம் - ஆரியசிறப்பெழுத்தா னும் பொதுவுஞ் சிறப்புமாகிய இரண்டெழுத்தானுந் தமிழ் சிறந்துவருவது.

தற்பாடி - வானம்பாடி.

தற்புருடம் - சிவனைம்முகத் தொன்று.

தற்போதம் - தன்னையுங்கடவு ளையுமறியு மறிவு, ஈசுவரன இயற்கையறிவு.

தனகு - உள்ளக் களிப்பு.

தனஞ்சயன் - அருச்சுனன், உப வாயுக்கள் ஐந்திலொன்று, அஃது — உயிர்போகினும் போகாதுடலை வீக்கித் தலை கிழித்தகலும், தீ.

தனதன் - ஈகையாளன், குபேரன்.

தனபதி - குபேரன்.

தனம்-எண்ணிலோரடையாளம், சம்பத்து, தன்மை, பசுக் கன்று, பொன், முலை.

தனயன் - புத்திரன்.

தனலக்குமி } இலக்குமி.
தனலட்சுமி }

தனவைசியர் - செட்டிமார்கள்.

தனவையாதம் - தறுகாஞ்சொறி.

தனுது - தனது.

தனி - ஒப்பின்மை, ஒற்றை, கலப் பின்மை, சுத்தம், தனிமை, தனியென்னேவல்.

தனிகம் } கொத்தமல்லி.
தனிகா }

தனிக்காப்பு - ஒரேபாட்டி லடங்கிய காப்பு.

தனிக்குறில்-தனிக்குற்றெழுத்து

தனிக்கோலான் - ஏகாதிபதி. கடவுள்.

தனிச்சொல் - தனிச்சீர், தனி மொழி, வெண்பா.

தனிட்டை - அவிட்டநாள்.

தனிதம் - முழக்கம்.

தனித்தல் - உதவியற்றிருத்தல். தனிமை.

தனிநிலை - ஆய்தவெழுத்து.

தனிப்பாடு - முத்தகம், அஃது— ஒன்றன்பேரிற் சொன்ன ஒற்றைக்கவி.

தனிமுதல் - கடவுள்.

தனிமை - உவமையின்றை,ஏகாந்தம், தனிப்பு, பிரிவு.

தனிமொழி - தனியே நிற்குஞ் சொல்.

தனிவலிப்பெருமாள் - குப்பைமேனி.

தனிவீடு - மோக்ஷம்.

தனே - அளவு.

தனு - அத்தி, உடல், கசியபன் மனைவி, சிறுமை, தனுவிராசி, தக்கன் மகள், வில்.

தனுசர் - அசுரர்.

தனுசன் - மகன்.

தனுசாரி - இந்திரன், திருமால்.

தனுத்திரம் - போர்க்கவசம்.

தனுர்வேதம் - உபவேதம் நான்கி னொன்று.

தனேசன் - குபேரன்.

தனை - அளவு. எண்.

தன் - தான், அசைச்சொல்.

தன்பொருட்டனுமானம் - பிறர் பொருட்டனுமானம்.

தன்மம் - அறம். தருமம்.

தன்மேம்பாட்டுரை - ஓரலங் காரம்.

தன்மாத்திகாயம் - புண்ணிய பாவசரீரம்.

தன்மாத்திரை - பூதங்களினுதி.

தன்மை - ஓரலங்காரம். குணம், சுபாவம், நிலைபரம் யான் முதலிய தன்மைப்பெயர், மாதிரி, மூவிடத் தொன்று.

தன்மைச்சொல் - சொல்வோன் றன்னைக் குறிக்குஞ் சொல்.

தன்மைப்பன்மை - தன்மைப் பெயரில் அநேகம்.

தன்மைப்பன்மை வினைமுற்று - தன்னோடு சேர்ந்த பலர்பால் முற்றுவினை.

தன்மைப்பொருள்- தன்மையிடப் பொருள்.

தன்வந்திரி - சிவன், சூரியன், தேவர் மருத்துவன்.

தன்வினை - எழுவாய்க் கருத்தாவின் புடைபெயர்ச்சியாய் நிகழுந் தொழில்.

தன்னமை-இணக்கம், ஒத்தாசை, சினேகம், தாழ்மை.

தன்னம் - அற்பம், சிறுமை, பசுவின் கன்று, மான்கன்று.

தன்னியம் - தனது, திரவியம், முலைப்பால்.

தன்னியாசி - ஓரிராகம்.

தன்னிரை மீட்டல் - எண்வகை வெற்றியிலொன்று.

தன்னிலை - சுபாவநிலை.

தன்னினி - வேங்கைமரம்.

தன்னை - இரண்டாம் வேற்றுமையுருபுடைய படர்க்கை யொருமை விரவுப்பெயர், தாய், தமையன், தமக்கை.

## தா

தா-அழிவு, ஓரெழுத்து, குற்றம், கேடு, தாண்டுதல், தாவென்னேவல், பகை, பாய்தல், பிரம்மன், வருத்தம், வலி.

தாகம் - ஆசை, உணவு, எரிவு, எருது, தூண், நீர்வேட்கை, அஃது — உயிர் வேதனையி லொன்று.

தாக்கணங்கு - இலக்குமி.

தாக்கம் - அதைப்பு, கனப்பு, வீக்கம்.

தாக்கல் - எதிர்த்தல், பாய்தல்.

தாக்கு - அடி, அதிர்ச்சி, உரம், கனம், தாக்கென்னேவல், பெருக்கு, போர், வலி.

தாக்குதல் - அடித்தல், எண்கூட்டிப் பெருக்கல், எதிர்த்தல், கனத்தல், தள்ளுதல், தாழுதல், பாய்தல், முட்டுண்ணல்.

தாங்கல் - காத்தல், குளம், சுமத்தல்.

தாங்கி - ஆதாரம், பூணுகக் கட்டுவது.

தாசநந்தினி - வியாசன்றாய்.

தாசபாலனம் - தயாவீருத்தி பதினான்கிலொன்று.

தாசரதி - இராமன்.

தாசன்-அடிமை, ஊழியக்காரன், தவல்கேட்போன், ஞானி, சூத்திரன், வலையன்.

தாசி - அடிமைப்பெண், பரணிநாள், மேகவன்னப்பூவுள மருதோன்றிமரம்.

தாசு - இரண்டரை நாழிகைக் கொண்ட நேரம், சூதாடு கருவி, நாழிகைவட்டம்.

தாசேரகம் - ஒட்டகம்.

தாடகை - ஓரரக்கி.

தாடங்கம் - காதணி, தோடு.

தாடனம் - அடித்தல்.

தாடாளன் - முயற்சியுள்ளோன்.

தாடி-மாடு முதலியவற்றின்கழுத்தாரம், மோவாய், மோவாய் மயிர்.

தாடிமஞ்சம் - சத்திக்கொடி.

தாடிமம் - சிற்றேலம், தாது மாதுளை.

தாட்சயம் - விவேகம்.

தாட்சாயணம் - பொன், பொன்னாபரணம்.

தாட்சிண்ணியம்-இணக்கம், இரக்கம் தாழ்மை.

தாட்டாந்தம் - திருட்டாந்தப் பட்டது.

தாட்படை - கோழி.

தாணித்தல் - தறைதல், தாளித்தல், துப்பாக்கியில் மருந்திடுதல், பலப்படுத்தல்.

தாணு-குறுந்தறி, தவன், தூண், நிலை, நிலைபெறுதல், மலை. வெற்றி.

தாண்டகம் - இருபத்தாறெழுத்தின் மிக்க வெழுத்தானடி கொண்டு வரும்பா.

தாண்டல் - ஆடல், கெலித்தல். தாண்டுதல், கடத்தல்.

தாண்டவம் - கூத்து, தவன் கூத்து, திருக்கூத்து.

தாண்டவராயன் } தவன்.
தாண்டவன் }

தாண்டி - நடனநூல்.

தாண்டுறல் - ஆடுதல், கடத்தல், பாய்தல், வெல்லுதல்.

தாதகி - ஆத்திமரம்.

தாதன் - அடிமை, தாசன், தொண்டன்.

தாதா - ஈகையாளன், தகப்பன், பிரமன்.

தாதான்மியம் - ஒற்றுமை.

தாதி - அடியவள் செவிலித்தாய்.

தாது - இரசமாதியேழு, ஏலம், ஓர் வருடம், கந்தகம் கடுக்காய், காவிக்கல், தாது மாதளை, நரம்பு, பாஷாணம், பூந்தாது, பொன்னாதியேழு, மண்ணாதி யைந்து, விளைதாது.

தாதுமாதளை - பூமாதளை.

தாதுவாதம்- கலைஞானமறுபத்து நான்கினொன்று.

தாதை - தகப்பன், பிரமன்.

தாதைதாதை - பாட்டன்.

தாத்திரம்-கூன்வாள், கோடாலி.

தாத்திரி, - நெல்லி, பூமி, மாதா.

தாத்துரு - பன்னிரண்டாதித்தரிலொருவன்.

தாதி - ஓர் நதி, ஓர் மரம், கொத்துமல்லி, நிதானம், வாசஸ்தானம்.

தாந்தவம் - நூற்றல், நெய்குதல்.

தாந்திரிகம் - ஓர் நோய், தந்திரத்திற்கடுத்தது, நியாயத்திற்குரியது.

தாபகம்-தூக்கம், நிலைநிறுத்தல். வெப்பம், வைத்தல்.

தாபதநிலை - கைம்மை நிலை, தவவொழுக்கம்.

தாபதம் - முனிவரிருக்கும்வாசம்.

தாபதர் - சடைமுடியர், சமண முனிவர், முனிவர்.

தாபத்திரயம்-மூவகைத்துன்பம்; அஃது — தெய்விகம், ஆன்மிகம், பௌதிகம்.

தாபநீயம் - உபநிடதத்தொன்று.

தாபம் - காடு, தாகம், துக்கம், துன்பம், வெப்பம்.

தாபரம் - ஆதாரம், உடல், கோயில், தஞ்சம், துணை, நிலைத்திணைப் பொருள், பூமி.

தாபரன் - கடவுள்.

தாபிஞ்சம் - ஆமணக்கு தமாலம், பச்சிலை மரம்.

தாபிதம் - சூடு, தாபித்தல்.

தாப்பிசை.
தாப்பிசைப்பொருள்கோள் } பொருள்கோளெட்டிளென்று.

தாப்பு - ஊஞ்சல், தாம்பு என்பதின் விகாரம்.

தாமணி - தாம்பு, கயிறு.

தாமதம் - தாமதித்தல், முக்குணத்தொன்று.

தாமநிதி - சூரியன்.

தாமம் - அஞ்சத்தக்கது, அணை கயிறு, இடம், உடல், ஒழுங்கு, ஒளி, கிரணம், கீர்த்தி, கொன்றைமரம், சுகம், தாமணி, தீங்கு, நகரம், பிரபை, பிறப்பு, புள்ளினதாரம், பூ, பூமாலை, பெருமை, போர்க்களம், மகத்துவம், மணி, வடம், மலை, முடியுறுப்பு, மூவாறு கோவை மணியுள்ளமாதரிடையணி, வீடு.

தாமரசம் - செம்பு, தாமரை, பொன்.

தாமரம் - நீர், நெய்.

தாமரைக்கண்ணன் - விட்டுணு.

தாமரைச்சத்துரு-ஓர்பாஷாணம்.

தாமரைநண்பன்
தாமரைநாயகன் } சூரியன்.

தாமரையாசனன் - பிரமன்.

தாமரையாசனி
தாமரையாள் } இலக்குமி.

தாமரையான் - பிரமன்.

தாமரைவாசி - அரிதாரம், ஓர் பாஷாணம்.

தாமலகி - நிலநெல்லி.

தாமிரபருணி - ஓர்யாறு, மேற்றிசையானைக்குப் பெண்யானை.

தாமிரம் - செம்பு.

தாமிரபீசம் - கொள்.

தாமோதரன் - ஆமை, திருமால்.

தாம் - அசைச்சொல், சாரியை.

தாம்பு - கயிறு, தாமணிக்கயிறு.

தாம்பூலம் - வெற்றிலை.

தாம்பூலவல்லி
தாம்பூலி } வெற்றிலை, வெற்றிலைக்கொடி.

தாயகம் - ஈகையுடைமை, பிறந்தகம்.

தாயத்தார்-ஞாதிகள், தாயாதிகள்.

தாயம் - உடைத்தல், உபகாரம், உரித்து, சூதாடுகருவி, சமய வாய்ப்பு, சுற்றம், தந்தை வழிச்சுற்றம், துன்பம், நட்டம், பங்கு.

தாயவிபாகம் - உரிமைப்பொருள் பிரித்தல்.

தாயுமானார் } ஓரடியார், செவ்
தாயுமானவர் } வந்தியீசர்.

தாய் - அன்னை, அரசன்றேவி, ஊட்டுத்தாய், மாதா, மூதற் றாம், முதன்மை.

தாரகம் - ஆதாரம், உச்சவிசை, ஓங்காரம், பிரணவம், வெள்ளி.

தாரகன்-குழந்தை தாங்குவோன், மகன்.

தாரகாகணம் - நட்சத்திரக் கூட் டம்.

தாரகாபதி - சந்திரன்.

தாரகை - கண்மணி, விண்மீன்.

தாரகைமாலை - ஓர் பிரபந்தம்.

தாரண - ஓர் வருடம்.

தாரணம் - அட்டாங்கயோகத் தொன்று, உறுதி, தரித்தல், தெப்பம், நிலை.

தாரணி - பூமி.

தாரணை - அட்டாங்கயோகத் தொன்று, அதிவாசம், உறுதி, கடன், கட்டளை, கிரமம், சரி நிலை, ஞாபகம், தரித்தல், நிலை, புலனடக்கல்.

தாரம்-அரிதாரம், அரும்பண்டம், இங்குலிகம், ஓங்காரம், தேவ தாரம், நா, பச்சைப் பாம்பி னஞ்சு, பாதரஸம், பிரணவம், மனைவி, மூக்காற் பிறக்கு மிசை, வல்லிசை, வீணைநரம்பி லொன்று, வெண்கலம், வெள்ளி.

தாரா-ஓர்புள், குருகு, விண்மீன்.

தாராகணம்-விண்மீன், கூட்டம்.

தாராதரம் - மேகம்.

தாராபதம் - வானம்.

தாராபதி - சந்திரன், வியாழன்.

தாராளம் - இஷ்டம், உதாரம், கொடை, தைரியம், பொலிவு, மிகுதி, விலாசம்.

தாரி - அரிதாரம், உடையோன், குணம், தரிப்பவன், வழி.

தாரு - பித்தளை, மரக்கொம்பு, மரப்பொது.

தாருகவிநாசனி } காளி.
தாருகற்செற்றாள் }

தாருகற்செற்றோன் } குமரன்.
தாருகாரி }

தாருகன் - ஓரசுரன்.

தாருகாரி - குமரன்.

தாருகாவனம் - ஓர் வனம்.

தாருணம் - அச்சம், பயங்கரம்.

தாருண்யம் - இளம்பருவம்.

தாரை - அபிஷேகம், ஒப்பு, ஒழுங்கு, கண், கண்மணி, காளம், கீர்த்தி, குதிரைநடை, கூர்மை, கொடிப்படை, சந்ததி, சிறுசன்னம், சீலை, சுக்கிரீவன் மனைவி, தத்தம்பண்ணுநீர், திகிரி, திரள், தேவகுரு, நா, நேரோடல், படையின் முன்னணி, பண்டியுருள், பாய்தல், மலைச்சாரல், மழை, மனைவி, வலி, வழி, விண்மீன், வியாழன்.

தார் - கிண்கிணிமாலை, கொடிப்படை, படை, படைவகுப்பு, பூ, பூவரும்பு, மாலை.

தார்க்கிகன் - தருக்கசாஸ்திரி.

தாலகி - கள்.

தார்க்கியன் - கருடன்.

தாலகேதனன் } பீஷ்மன்
தாலத்வசன் } பலராமன்.

தாலமேழுடையான் - அக்கினி பகவான்.

தாலம்- உண்கலம், கூந்தற்பனை, தட்டம், தாலம்ப பாஷாணம், தேன், நா, பனை, பூமி, யானைச் செவி.

தாலம்பபாஷாணம் - ஓர் பாஷாணம்.

தாலவட்டம் - பூமி, யானைச் செவி, யானைவால், விசிறி.

தாலவிருந்தம் - பேராலவட்டம், விசிறி.

தாலவ்யம் - அண்ணத்தாற் பிறக்குமெழுத்து.

தாலாலம் - பழிமொழி.

தாலி - மங்கலநாண்.

தாலு - அண்ணம், நா.

தால் - தாலாட்டு, பிள்ளைக்கவி யுறுப்பினொன்று.

தாவடம் - இருப்பிடம், உருத்திர மணிமாலை.

தாவடி - பிரயாணம், போர்.

தாவட்டம் - ஒர்கல், சிற்ப நூலி னொன்று.

தாவந்தம் - இக்கட்டு, நரகம்.

தாவம் - காடு, காட்டுத்தீ, மருத நிலத்தூர், வெப்பம்.

தாவரம்-அசரம், இடம், இட்டம் உடல், உதவி, எழு பிறப்பி னொன்று, நிலை, பூமி, மரப் பொது, மலை, வின்னாண்.

தாவல் - தாண்டல், பாய்தல், பரத்தல்.

தாவளம் - இருப்பிடம், கடை. தாங்கல், பொதிகாரா, மருத நிலத்தூர்.

தாவளி - கம்பளி.

தாவனம் - அசைவு, சுத்திசெய் தல், தாபனம்.

தாவு-இளைப்பாருமிடம், குதிரை நடை, தாவென்னேவல், பகை, பற்றுக்கோடு, வருத்தம், வலி.

தாவுதல் - அழிதல், எட்டிப்பிடித்தல், தாண்டல், பரத்தல்.

தாழி - அரிதாரம் குடம், சாடி, சிவதை, பரணிநாள்.

தாழிசை - பாவினத்தொன்று.

தாழை - தாழைமரம், தென்னமரம்.

தாழ் - சுவர்ப்புறத்து நீண்டவுத்திரம், தாழ்க்கோல், தாழென்னேவல், நீளம்.

தாழ்தல் - அமிழ்ந்துதல், ஆசை, ஆசைப்பெருக்கம், குறைதல், சரிதல், தங்கல், வணங்கல்.

தாழ்த்தல்-அடக்கம் பண்ணுதல், இருத்தல், கீழ்ப்படுத்தல், குறைத்தல், தாழ்த்துதல், புதைத்தல், மந்தப்படுதல்.

தாழ்வடம் - முத்துக்கோவை முதலியன.

தாழ்வாரம் - வீட்டிறப்பு.

தாழ்வு-ஈனம், கீழ்மை, குறைவு, தவறு, பள்ளம்.

தாளகம்
தாளக்கம் } அரிதாரம்.

தாளம் - ஓர் வாச்சியம், இலயை, சுதி, கலைஞானமறுபத்து நான்கினென்று, பனை, பொன்னரிதாரம்.

தாளாண்மை - ஊக்கம், முயற்சி.

தாளாளர் - முயற்சியுடையோர், வைசியர் பொது.

தாவரன் -- கடவுள்.

தாளி - அனுடநாள், ஓர்செடி, தாளியென்னேவல், பனைமரம்.

தாளிசம் - ஓர் செடி.

தாளிதம் - தாளிப்பு.

தாள் - அடி, அருவி, ஆதி, ஒட்டு, கதவுறுதாள், கால், சரணம், முயற்சி, நெல்முதலியவற்றின் ருள், விற்குதை.

தாறு - அங்குசம், அளவு, இருப்புமுள், ஈந்து கமுகு வாழையிவற்றின் குலை, நூற்குழி, வில்லின்குதை.

தாறுகன்னி - வெள்ளைக்காக்கணம்.

தாற்பரியம் - எண்ணம், கருத்து, கொள்கை, நோக்கம்.

தாற்பரியவுரை - கருத்துரை.

தாற்றுக்கதிர் - கொத்தாய்க்காய்க்குங்கதிர்.

தாற்றுக்கோல் - துறட்டி, முட்கோல்.

தாற்றுதல் - தரித்தல், புடைத்தாற்றிக் கழித்தல்.

தாற்றுப்பூ - கொத்தாய்நிற்கும்பூ.

தானம் - அடித்தல், அவத்தை, இடம், இராகம், ஈகை, உயிர்நிலை, கொடை, துண்டித்தல், தேவலோகம், யானை, யானைமதம், வலி.

தானவண்ணம் - சுரவிகற்பப் பாட்டு.

தானவம்-மிருது.

தானவர் - அசுரர்.

தானவன் - அசுரன்.

தானவாரி - விட்டுணு.

தானுதிபதி - படைத்தலைவன்.

தானுபதி - தூதன்.

தானி - இருப்பிடம், தானத்தி லுள்ளது, பண்டகசாலை.

தானிகம் - கொத்துமல்லி.

தானியம் - பண்டம்.

தானியாகுபெயர் - ஓர் பொருளின் பெயர், அது இருக்குமிடத்துக்காவது.

தானு - காற்று, கொடையாளன், வெற்றியாளன்.

தானை - ஆயுதப்பொது, தூசு, படை.

தானைத்தலைவன் - படைத்தலைவன்.

தானைத்தறுகணாளர் - படைவீரர்.

தானைமாலை - ஆசிரியப்பா, ஓர் பிரபந்தம்,

தான் - தேற்றச்சொல், அசைச்சொல், படர்க்கை யொருமைப் பொதுப்பெயர்,தாதான்மியம்.

தான்றி . தான்றிமரம்.

## தி

தி - ஒரெழுத்து.

திகசம் - ஓமம்.

திகந்தம் - திக்கறுதி.

திகம்பரம் - நிருவாணம்.

திகம்பரர் - சமணமுனிவர்.

திகம்பரன்-அருகன், சிவன், நிருவாணி.

திகம்பரி - பார்வதி.

திகரம் - அவா, இளைப்பு, ஓரெழுத்து, சோர்வு, முட்டுத்தொய்வு.

திகழல் - ஒளிசெய்தல்.

திகழ் - ஒளி, திகழென்னேவல்.

திகழ்ச்சி, திகழ்தல் - ஒளி,தோற்றம்,விளக்கம்.

திகணு - கொடிவேலி.

திகிரி - உருளை, சக்கராயுதம், தேர், மலை, மூங்கில், வட்டம்.

திகிரிகை - சக்கிரம்.

திகிரிக்கல்-கோரோசனை, சக்கரவாளகிரி.

திகில் - திடுக்காட்டம், பயம்.

திகு - தாளக்குறிப்பு.

திகை - திகையென்னேவல், திசை, தேமல்.

திகைத்தல் - நடுநடுங்கல், பிரமித்தல், மயங்கல்.

திக்கயம்-அட்டயானை, அவை—ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், குஞ்சரம், புட்பதந்தம், சார்வபௌமம், சுப்ரதீபம்.

திக்காரம் - தள்ளல், நிந்தை.

திக்கு - திசை. பேச்சுத்தடக்கு.

திக்குப்பாலகர் - எட்டுத்திசையுங்காப்போர், அவர்—இந்திரன், அக்கினி, இயமன், நிருருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன்.

திக்குமுக்கு - மூச்சுமுட்டு.

திக்குறு - புனமுறுக்கு.

திங்கட்குடையோன்- மன்மதன்.

திங்களுள். - மிருகசீரிடம்.

திங்கள் - சந்திரன், மாதம்.

திசாயம் - குங்கிலியம்.

திசை-ஏழனுருபு, திக்கு, நிலை, நோக்கு.

திசைச்சொல் } திசைமொழி } கொடுந்தமிழ் மொழியாகியும், அந்நிய மொழியாகியும் வருவது.

திசைமுகன் - பிரமன்.

திடம் - உறுதி, மெய், வலி.

திடர் } திடல் } திட்டை, மேடு.

திடர்ச்சுண்டி } திடற்சுண்டி } வறட் சுண்டி.

திடீரெனல் - ஒலிக்குறிப்பு, சீக்கிரக்குறிப்பு.

திடுக்கம் - அச்சம், துணிக்கம்.

திடுக்கிடுதல் - அச்சத்தால் மனமசைதல், பயத்தாலுடல் கம்பித்தல்.

திடுதிடெனல் - ஈடுக்கொரலிக்குறிப்பு, விரைவுக்குறிப்பு.

திட்கல் - அச்சக்குறிப்பு.

திட்டம் - உறுதி, ஒப்புரவு, கட்டளை, கணிசம், சரி, செவ்வை, திறம், நிலைவரம், பூரணம்.

திட்டல் - சபித்தல், வைதல்.

திட்டனம் - இலுப்பை.

திட்டி-கண், சந்தோஷம், ஞானம், தினை, நுழைவாயில், பார்வை.

திட்டிக்கல் } திட்டிமணி } அஞ்சனக்கல்.

திட்டித்தம்பம்-கண்கட்டுவித்தை.

திட்டு - கணையச்சுவர், சபிப்பு, சிறுதிடல், திட்டென்னேவல், மேடு.

திட்டுதல் - சயித்தல்.

திட்டை - உரல், கண், திடர், திண்ணை, மேடு.

திட்பம்-காலநுட்பம், சொல்வலி, பொருள்வலி, திண்மை, நிசம்.

திணி - திணியென்னேவல், திண்மை.

திணிகம் - போர்.

திணிதல் - திண்மையாயிருதல்.

திணித்தல் - அடைத்தல், துறத்தல்.

திணுக்கம் - திணுங்கல், நெருக்கம்.

திணுங்கல் - நெருங்கல்.

திணை - அஃறிணை, அகத்திணை, இடம், உயர்திணை, ஐந்து நிலம்—குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல்; ஒழுக்கம், குடி, குலம், புறத்திணை, பூமி, பெருந்திணை.

திணைப்பெயர் - குறிஞ்சி முதலிய நிலங் காரணமாய் வரும் பெயர்.

திணைமயக்கம் - ஐந்திணையுமாறி வருவது, பலநிலத்தோரைக் கலந்துரைத்தல்.

திணைவழு - உயர்திணை யெழுவாய்க் கிழிதிணை விகுதியும், இழிதிணை யெழுவாய்க் குயர்திணை விகுதியுமேற்றிப் பேசுவது.

திண் - பலம், வலி.

திண்கல் - சுக்கான்கல்.

திண்டகம் - கிலுகிலுப்பை.

திண்டி - ஓரசுரன், தம்பட்டம், பசலைக்கொடி, யானை.

திண்டிமம் - தம்பட்டம்.

திண்டிரல் - அதிவீரம்.

திண்டு - வளைந்த மெத்தை.

திண்டோன் - திண்புயம்.

திண்ணகம் - செம்மறிக்கடா, தட்டார்கருவியி னொன்று, துருவாட்டேறு.

திண்ணம் - மெய், வலி.

திண்ணன் - பலவான், வேடன்.

திண்ணியன் - வலியுடையோன்.

திண்ணெனல் - தந்திநாதம்.

திண்ணை - வேதிகை.

திண்மை - உறுதி, எண்வகை யூறினொன்று, திண்ணம்,

திதத்தாபகம் } தாக்கிமீளல்,
திதித்தாபகம் } நிலைப்படுத்தல்.

திதம் - அக்கினி, உறுதி, நிலை.

திதலை } தேமல்.
திதனி }

திதளம் - மாமரம்.

திதி - இருப்பு, காசியபபிரமனின் மனைவி, காத்தல், சங்கை, சந்திரனாள், திதியென்னேவல், நிலை, நிலைபெறுதல், பாக்கியம்,

திதித்தல் - நிலைபெறுதல்.

திதிசுதர் } அசுரர்.
திதிமைந்தர் }

திதிட்சை - பொறுமை.

திதீக்கை } தடேதகநிட்டை.
திதீட்சை }

தித்தகம் - மலைவேம்பு.

தித்தம் - அக்கினி, எண்ணெய், கசப்பு, நிலவேம்பு, மலைவேம்பு, வாசனை.

தித்தா - தாளக்குறிப்பு, பீதரோகிணி, வட்டத்திருப்பி.

தித்தி - ஒருதுகுழல், ஓர் பணை, குரவம், சதி, தித்திப்பு, தித்தியென்னேவல், தின்னற்குரியன, பேரீந்து, வேள்விக்குண்டம்.

தித்திரம் - அரத்தை.

தித்திரி - ஓர் கவுதாரி, ஓர்குடி, கிச்சிலிக்குருவி.

தித்திரு
தித்திருச்சி } நாணல்.

தித்திடம்
திந்திருணி } புளியமரம்.

திப்பி - கோது.

திப்பியம் - ஓமம், விளக்கம்.

திப்பிலி - அலைவு, திப்பிலி.

திமி - குத்தல், கடல், நூறு யோசனை நீளமுள்ள மீன்.

திமிங்கிலகிலம் - திமிங்கிலத்தை விழுங்குமீன்.

திமிங்கிலம் - யானையைவிழுங்கு மீன்.

திமிசம்
திமிசு } வேங்கைமரம.

திமிதிமி - திமிங்கிலம்.

திமிதிமியெனல் - ஈரடுக்கொலிக் குறிப்பு, காளக்குறிப்பு, விரைவுக் குறிப்பு.

திமிரம் - இருள், குருடு, நரகம், பாரம், விறைப்பு.

திமிராரி - சூரியன்.

திமிர்தம் - ஒலி.

திமிர்தல் - பூசுதல், வளர்தல்.

திமிர்ப்பூச்சி - வயிற்றுப்புழு.

திமிலம் - பேரொலி, யானைமீன்.

திமிலர் - நெய்தனிலமாக்கள்.

திமிலிடுதல்-ஒலித்தல்,நெருக்கல்.

திமிலை - பம்பைமேளம்.

திமில்-எருத்துத்திமில், தோணி, மரக்கலம், வேங்கைமரம்.

திமிறல்-துலுக்குதல், தேய்த்தல், பறித்தல், மீறுதல், வளர்தல்.

திமைத்தல் - இளப்புதல்.

தியக்கம்
தியக்கு } அசைவு, கலக்கம், சோர்வு.

தியங்கல் - சோரல்.

தியசம் - மரமஞ்சள்.

தியர்தி - திராய்.

தியாகம் - உதாரம், கைவிடல்; கொடை, துறத்தல்.

தியாகராயர்
தியாகர் } சிவன்.

தியாகி - கொடையாளன்.

தியாச்சியம் - விலக்கு,ஒவ்வொரு நட்சத்திரத்திலுஞ் சுபகாரியங்களுக்கு விலக்கப்பட்டநேரம்.

தியாமம் - நான்முகப்புள்.

தியானசமாதி - யோகநிலையிரண்டு.

தியானம் - அட்டயோகத் தொன்று, அனுட்டானம், சிந்திப்பு, நினைவு.

தியோதம் - பிரகாசம், வெயில்.

திரகமூலகம் - முடக்கொத்தான்.

திரகத்தாரு - கிலப்பனை.

திரக்கம் - கொன்றை.

திரக்காரம் - நிந்தை.

திரங்கல் - திரைதல், மிளகு.

திரச்சினமுகம் - நாணத்தால் தலையாட்டுமுகம்.

திரடம் - வெண்ணொச்சி.

திரட்சி - உண்டை, கூட்டம், திரண்டதன்மை, முத்து.

திரட்டல் - கூட்டல்.

திரட்டு - இருது, சேர்ப்பு, கூட்டம், திரட்டென்னேவல், திரளை, முழுமை.

திரட்டுக்கோவை - ஓர் கோவை.

திரட்டுதல்-உருட்டுதல்,சேர்த்தல்.

திரணபதி - வாழை.

திரணம் - துரும்பு, புல்.

திரணி - ஓர் செடி.

திரணை - கம்பி, திரண்டது, திரளை.

திரண்டகொடிச்சி - புற்றும்பழம்.

திரந்திகம் - திப்பிலிமூலம்.

திரமம் - சாதிலிங்கம்.

திரமாதம் - ஆவணி, கார்த்திகை, மாசி, வைகாசி.

திரமிடம் - தமிழ்.

திரம் - உறுதி, திராசி, நிலை, பெலன்.

திரயோதசி- பதின்மூன்றுந்திதி.

திராசி - இடபம், கும்பம், சிங்கம், விருச்சிகம்.

திரலடி - ஏலம்.

திரவணம் - பாய்தல், போதல், வெப்பம்.

திரவம் - சாரம், நீர்முதலியவற்றி னெகிழ்ச்சி, பொசிதல்.

திரவாதி - காட்டாமணக்கு.

திரவிடம் - திரமிடம்.

திரவியம் - ஓர்மருந்து, நிதி, பாக்கியம், பித்தளை, பொருள், பொன், மூலபதம்.

திரளல் - திரட்சி.

திரள் - உண்டை, குழியம், கூட்டம்,திரளென்னேவல்,திரளை, படை.

திராசம் - அச்சம்.

திராட்சம் - கொடிமுந்திரிகை.

திராமரம் - பவளமல்லிகை.

திராமிடம் - திரமிடம்.

திராய் - ஓர் பூண்டு.

திராவகம் - செய்நீர்.

திராவகநீறு - வெடியுப்புச் சுண்ணம்.

திராவிடம் - ஓர்தேசம், தமிழ்.

திரி - திரிசீலை, திரியென்னே வல், மூன்று, விளக்குத்திரி.

திரிகளம் - யானை நெருஞ்சில்.

திரிகடி - இந்திரன் சங்கு.

திரிகடுகம் } ஓர் நூல், மூன்று
திரிகடுகு } காரம், அஃது — சுக்கு, திப்பிலி, மிளகு, முச் சொல்லலங்காரம்.

திரிகண்டகம் - நெருஞ்சில்.

திரிகத்தம் - ஓர் தேயம்.

திரிகரணம் - முப்பொறி, மனம், மெய், வாக்கு.

திரிகாலம் - முக்காலம், காலை, நண்பகல், மாலை.

திரிகாலோசிதம் - தருப்பை.

திருகுணம் - முக்குணம், ஸத்து வம், ரஜஸ், தமஸ்.

திரிகூடம் - ஓர்மலை.

திரிகை - இடக்கைமேளம், எந் திரம், குலாலசக்கிரம், திரிதல்.

திரிகோணம் - முக்கோணம்.

திரிகோணமிதி - முக்கோண சாத்திரம்.

திரிசங்கு - ஓரரசன்.

திரிசங்குமண்டலம் - ஓர் நட்சத் திரமண்டலம்.

திரிசாரம் - எவச்சாரம், சத்தி சாரம், நவச்சாரம், மூவகை யுப்பு.

திரிசூலம் - முத்தலைவேல்.

திரிசொல் - ஒருபொருள்குறித்த பல சொல்லாகியும், பலபொ ருள் குறித்த ஒரு சொல்லாகி யும் அரிதாகக் கற்றோரறி கின்ற பொருளனவாய் வரு வது, ஒருபொருட் பல பெயர், பலபொருளொரு பெயர், அரும்பதம், உவமைச் சொல், விகாரப்பட்டசொல்.

திரிச்சிரமம் - முக்காலானுட்டா னம்.

திரிதண்டசந்நியாசி - வைஷ்ணவ சந்நியாசி.

திரிதண்டி - திரிதண்டசந்நியாசி, கரணமூன்று மடக்கினோன்.

திரிதரல் - சுழலல், திரிதல், மீளல்.

திரிதராட்டிரன்மைந்தன் - துரி யோதனன்.

திரிதல் - உலாவல், கெடுதல், சுழலல், கடத்தல்.

திரிதியம் - செவ்வள்ளி.

திரிதியை - மூன்றும்திதி.

திரிதேகம் - மூவகையுடல்.

திரிநேத்திரன் - சிவன், முக்கண் ணன்.

திரிபங்கி - மிறைக்கவியி னொன்று.

திரிபதாகை - பரதவுறுப்புக்களி லொன்று.

திரிபலம் } கடுக்காய், தான்றிக்
திரிபலை } காய், நெல்லிக்காய்.

திரிபாகி - ஓர் மிறைக்கவி.

திரிபு - வினையெச்சம், வேறுபாடு.

திரிபுக்காட்சி-ஒன்றை வேறொன்றாய்க் காணுதல்.

திரிபுசம் - முக்கோணவடிவம்.

திரிபுடி - முக்குணம், ஞாதுரு, ஞானம், ஞேயம்.

திரிபுடை - ஓர் தாளம்.

திரிபுரசுந்தரி - பார்வதி.

திரிபுரதகனன் - சிவன்.

திரிபுரமல்லிகை - ஓர் மல்லிகை.

திரிபுரமெரித்தான் - சிவன், நொச்சி, மாவிலங்கு.

திரிபுரம் - முப்புரம்.

திரிபுராந்தகன் - சிவன்.

திரிபுரி - சாறடை.

திரிபுவனம் - மூவுலகு.

திரிப்பு - மாற்றுதல், முறுக்கு.

திருமூர்த்தி - மும்மூர்த்தி.

திருமூலம் - சிறுதேக்கு.

திரியம்பகன் - அரன், அருகன்

திரியாமை - இரவு, நீலக்கல், யமுனையாறு.

திரிலிங்கம் - காலஹஸ்தி, ணத்தி ஞென்று, முப்பால்.

திரிலோகம் - மூவுலகம், பூமி, அந்தரம், சுவர்க்கம்.

திரிலோகாதிபதி - இந்திரன்.

திரிலோகி - விஷ்ணு.

திரிவர்க்கம் - அகவியல் மூன்று; அஃது — அசுத்தம், அறியாமை, சுத்தம்; அரசியல் மூன்று; அஃது—ஆதாயம், நட்டம், மத்திமம்; இயல்பாய் விரும்புவது; அஃது - கடமை, செல்வம், பெண்போகம்.

திரிவேணி } கங்கை,
திரிவேணிசங்கமம். } யமுனை, ஸரஸ்வதீ இம்மூன்றும் கூடுமிடம்.

திரு - அழகு, இலக்குமி, செல்வம், தெய்விகம், மங்கலமொழியினொன்று, மேன்மை, யானைப்பாகன் தட்டுமோசை.

திருகல் - முறுக்கல், வளைத்தல்.

திருகு - கள்ளம், திருகென்னேவல், முறுக்கு, வஞ்சனை.

திருகுதாழை - ஓர் தாழை.

திருக்கடைக்காப்பு - ஓர் பதிகம், கோவிற்கதவு சாத்தல், இவ்வியப்பிரபந்தத்தின் முடிவு.

திருக்கடையூர் - ஓர் சிவத்தலம்.

திருக்கழுக்குன்றம் - ஓர் சிவத்தலம்.

திருக்காளத்தி - ஓர் சிவத்தலம்.

திருக்கு - கண், குற்றம், முறுக்கு, வஞ்சனை.

திருக்கூட்டம் - சிவனடியார்கூட்டம்.

திருக்கை - ஓர்மீன்.

திருக்கோலம் - திருவேடம், துருவமண்டலம், தேவலோகம்.

திருசியம் - கண்ணுக்குத் தோன்றுவது.

திருச்செந்தூர் } ஓர் சுப்பிரமணியத்தலம்.
திருச்சிரலைவாய் }

திருடம் - இரும்பு, தத்துவம், பெலன்.

திருடல் - களவு.

திருடன் - கள்ளன்.

திருட்டம் - இட்டம், (பார்க்கப்பட்டது) தெளிவு.

திருட்டி - அறிவு, கண், பார்வை, விஷம்.

திருட்டு - அணுப்பு, களவு.

திருதம் - தரித்தல்.

திருதி - உறுதி, ஓர்யோகம், துணை, சந்தோஷம், திருப்தி.

திருத்தம் - ஒப்புரவு, ஒழுங்கு, திருந்தல்.

திருத்தம் - திருந்தல்.

திருத்தல் - திருந்தச்செய்தல்.

திருநாமச்செடி - ஓர் பூண்டு.

திருநாமத்துத்தி - ஓர் துத்தி.

திருநாளைப்போவார் - சிவனடியார் அறுபத்து மூவரிலொருவர்.

திருநாள் - உற்சவநாள்.

திருநீலகண்டன் - சிவனடியாரிலொருவன்.

திருநீறு - விபூதி.

திருநீற்றுப்பச்சை } உருத்திரச்சடைப்பூடு.
திருநீற்றுப்பத்திரி }

திருந்தகைமை - மேன்மை.

திருந்தலர் } பகைவர்.
திருந்தார் }

திருந்துதல் - செய்துமுடித்தல், திருத்தமாதல், திருந்தல், தேறுதல்.

திருப்பணி - கோவில்வேலை, தெய்விகத்தொண்டு.

திருப்பதி - வடமலை.

திருப்பரங்குன்று - ஓர் சுப்பிரமணியஸ்தலம்.

திருப்புதல் - திரும்பச் செய்தல், மாறவைத்தல், மீட்குதல்.

திருப்பூட்டுதல் - மங்கலியந்தரித்தல்.

திருமகண்மைந்தன் - மன்மதன்.

திருமகள் - இலக்குமி.

திருமயிலை - ஓர் ஸ்தலம்.

திருமரம் - அரசமரம்.

திருமலர் - தாமரை.

திருமலை - கயிலாயமலை, திருப்பதி.

திருமறுமார்பன் - அருகன்.

திருமாலுந்தி - தாமரை.

திருமால் - விஷ்ணு.

திருமால்புதல்வன் - மன்மதன்.

திருமாநகரம் - வைகுந்தம்.

திருமுகம் - கடவுள் ஸந்நிதானம், சிரீமுகம், நிருபம், பெரியோர் சமுகம்.

திருமுருகாற்றுப்படை-ஓர் இயற் பாராட்டுச்செய்யுள்.

திருமுறை - தமிழ் வேதவகுப்பு.

திருமுற்றம் - குதிரைவையாளி வீதி, கோயிற்சந்நிதானம்.

திருமேனி - குப்பைமேனி, திவ்விய தேகம்.

திரும்பல் - திரும்புதல், மீளல்.

திருவடி - திவ்வியபாதம்.

திருவட்டி - கள்ளி.

திருவணை - ஸேது.

திருவண்ணமலை - அருணசலம்.

திருவருட்பயன் - ஓர் நூல்.

திருவலகு - கோவில் முதலிய விளக்கும் துடைப்பம்.

திருவள்ளுவர் - ஓர்நூல், குறளாசிரியர்.

திருவாசகம் - திருவாக்கு, மாணிக்கவாசகர் செய்தருளிய திருமுறை.

திருவாதிரை - ஆதிரைநாள்.

திருவாய்மொழி-ஆழ்வார்பாடல். தெய்வவாக்கு, பெரியோரது சொல்.

திருவாவினன்குடி - பழனி.

திருவாளன் - செல்வன்.

திருவானைக்கா - ஓர் ஸ்தலம்.

திருவாலி-கள்வன், கைம்பெண், வறியன்.

திருவிளையாடல் - ஓர் புராணம், தெய்வவிளையாட்டு.

திருவுந்தியார் - திருவாசகத்தோருறுப்பு, திருவாசகம்.

திருவுரு - விக்கிரகம்.

திருவுளம் - திவ்யசித்தம்.

திருவுறுப்பு - நுதல்மேலணி.

திருவேங்கடம் - திருப்பதி.

திருவேரகம் - ஸ்வாமிமலை.

திருவொற்றியூர் - ஓர் சிவஸ்தலம்.

திருவோணம் - ஓணம்.

திருவோலக்கம்-மகாதிவ்ய சபை.

திரேக்காணம் - இராசியை மூன்றாய்ப் பகிருதல்.

திரேதம் - ஓர்யுகம், திரேதாயுகம்.

திரேதாக்கினி - முத்தீ.

திரை - அலை, இடுதிரை, கடல், திரைச்சீலை, திரைதல், திரையென்னேவல், புனற்றிரை, யாறு.

திரைத்தல் - திரைக்குதல்.

திரையல் - சுருங்கல், வெற்றிலை.

திரையன் - தொண்டைமான், நெய்தநிலத்தலைவன்.

திரைராசிகம்- முத்தொகைவினா.

திரோதம் } அறிவை மயக்கு
திரோதயம் } தல்.

திரோதானம் - அதரிசனம், மறைப்பு.

திரோபாவம் - ஐந்து தொழில் களிலொன்று.

திலகம் - கலித்துறை, சிந்தூரம், சுட்டி, பொட்டு, மஞ்சாடி மரம், மேன்மை.

திலட்சாரம் - கருந்திலாலவணம்.

திலதம் - சுட்டி, நெற்றித்திலதம், பொட்டு.

திலம் - எள், மஞ்சாடி மரம்.

திலவம் - விளாம்பட்டை.

திலீபன் - ஓரரசன்.

திலோதம் - எள்ளுநீர்.

தில் - அசைச்சொல், காலம், ஒழியிசை, விழைவு.

தில்லம் - காடு.

தில்லானா - ஓர்சந்தக்குறிப்பு, தாளக்குறிப்பு.

தில்லை - ஓர் மரம், சிதம்பரம்.

தில்லையம்பலம் - சிற்றம்பலம்.

தில்லைவனம் - சிதம்பரம்.

திவசம் - நாள்.

திவண்டல் - துவளல்.

திவம்-ஆகாயம், காடு, தோற்றம், நாள், பகல், மோக்கம், விளக்கம்.

திவரம் - நாடு.

திவலை - சிதறுந்துளி, மழை, மழைத்துளி.

திவவு - படிக்கட்டு, வீணைவலிக் கட்டு.

திவளல் - துவளல், மெலிதல்.

திவறல் - சாதல்.

திவா - பகல்.

திவாகரம் - ஓர் நிகண்டு, காலம், சூரியகாந்தப்பூ.

திவாகரன்-ஸூரியன், திவாகர நிகண்டு செய்தவன்.

திவாகீர்த்தி - ஆந்தை, சண்டாளன், நாவிதன்.

திவாமானம் - பகல்.

திவார்த்தம் - பகலிற்பாதி, மத்தியானம்.

திவேச்சுரன் - பன்னிரண்டு ஆதித்தர்களில் ஒருவன்.

திவோதாசன் - காசியரசன்.

திவ்வியம் - ஆணை, இனிமையானது, ஓர்வகைச் சந்தனம், கிராம்பு, தெய்விகமானது, மேன்மையானது.

திளைத்தல் - அழுந்துதல், அநுபவித்தல், நிறைதல், நெருங்கல்' பெருகுதல்.

திறத்தல் - திறக்குதல், வலுத்தல், வழிவெட்டிவிடுதல், விரித்தல், விளக்கல்.

திறம்-உசிதம், காரணம், குணம், குறைநரம்புள்ளவீணை, கூறுபாடு, தத்துவம், தன்மை, திறமை, பக்கம், பாக்கியம், மேன்மை, வலி.

திறம்பல் - மாறுபடல்.

திறலோன் - திண்ணியன்.

திறல் - தைரியம், பகை, போர், வலி.

திறவு - திறத்தல், வழி.

திறள் - கடன், வரலாறு.

திறனில்யாழ் - செய்தல் யாழ்த்திறம்.

திறன் - காரணம், குணம், கூறுபாடு.

திறை - அரசிறை.

திறுதிறுப்பு - அச்சக்குறிப்பு.

திறைகொள்ளுதல் - திறைவாருதல், வெல்லுதல்.

திறையளத்தல்-இறைகொடுத்தல்.

தினகரன் - சூரியன், திவாகரன்.

தினகவி - அரசர்க்குப் புகழ்ச்சியாயந்திசந்திசொல்லுங் கவி, ஓர் புலவன்.

தினமணி - சூரியன்.

தினம் - நாள், பகல்.

தினவிருத்தி - நாடோறும், நாள்வேலை, நித்தம்.

தினவு - சொறி.

திஞர்தம் - மாலைப்பொழுது.

தினை - ஓர் பயிர், ஓர் தானியம், சாமை, சிறுமை.

தினைப்புனம் - தினைவிளையுபுலம்.

தின்றல் - புசித்தல், மெல்லுதல்.

## தீ

தீ - அறிவு, இனிமை, ஓரெழுத்து தித்திப்பு, தீமை, தீயென்னேவல், நரகம், நெருப்பு, பஞ்சபூதத்தொன்று.

தீகன் - சந்திரன்.

தீக்கஞ்சி - ஆரதிக்கருப்பூரம்.

தீக்கணம் - அட்டகணத்தினென்று, நேரசை நடுவும் நிரையசையிருபாலும் நிற்பன.

தீக்கதிக்கும்பச்சை-நாகப்பச்சை.

தீக்கதிர் - உலையாணிக்கோல், சூரியன்.

தீக்கருமம் - ஈமக்கிரியை, துற்கிரியை.

தீக்கல் - தீத்தட்டிக்கல்.

தீக்குணர் - கீழ்மக்கள்.

தீக்குருவி - தழல்விழுங்கி.

தீக்குவெறுங்குகை-சவர்க்காரம்.

தீக்கூர்மை-இந்துப்பு,திலாசாரம்.

தீக்கை, தீட்சை - விரதநியமம்.

தீக்கையோன் - அரன், ஆசான், தீட்சை பெற்றவன்.

தீக்கோள் - தூர்க்கிரகம்.

தீங்கிரை - தீயோர்.

தீங்கு - இனிமை,குற்றம், தீமை, கேடு.

தீச்சலம் - கடல்நுரை.

தீச்சொல் - சாபம், பழிச்சொல்.

தீட்சணம் - ஆயுதம், இரும்பு, உக்கிரம், உப்பு, உறைப்பு, கூர்மை, கொள்ளைநோய், கோபம், சீக்கிரம், நஞ்சு, போர், மரணம், வெப்பம்.

தீட்சதன் - சீடன், தீட்சைபெற்றவன்.

தீட்டல் - எழுதல், கட்டல், சித்திரமெழுதல்.

தீட்டுக்கோல் - எழுதுகோல்.

தீட்டு - அழுக்கு. ஆசௌசம், எழுதுதல், சூதகம், தீட்டென்னேவல், மகளிர் சூதகம்.

தீட்டுதல் - அழுத்துதல், எழுதுதல், கட்டுதல், கூராக்கல், சாதித்தல், சித்தரித்தல், மினுக்குதல்.

தீட்பு - இழிவு, கீழ்மை.

தீண்டல் - தொடல்.

தீண்டியம் - பவழக்குறிஞ்சி.

தீதல் - கருகுதல்.

தீது - குற்றம், தீமை.

தீதை - அறிவு, கன்னி.

தீத்தம் - சிவாகமத்தொன்று, பிரகாசம், பெருங்காயம், பொன்.

தீத்தாங்கி- தீ மறைக்கும்பலகை.

தீத்தி - அழகு, சரகதி, பிரகாசம், வெண்கலம்.

தீத்திரள் - ஊழித்தீ, சுவாலைக் கூட்டம்.

தீத்தீண்டல் - ஓர் சடங்கு.

தீபகம் - ஓரலங்காரம், மஞ்சள், விளக்கு.

தீபகார்தி - வைரக்கல்.

தீபக்கொடிச்சி - ஆரதிகருப்பூரம்

தீபமத்திகை - விளக்குத்தண்டு.

தீபம் - சோதிநாள், விளக்கு, தீவகம், தீவு.

தீபவதி - யாறு.

தீபவராடி - வராடித்திறத்தி ஞென்று.

தீபனம் - ஆகாரம், பசி, பிரகாசம், மஞ்சள்.

தீபாவளி - தீபாவளிப்பண்டிகை, விளக்குகளின் வரிசை.

தீபிகை - விளக்கு.

தீபம் - நெருப்பு.

தீப்படுதல் - அழிதல், எரிச்சலடைதல், எரிந்துபோதல்.

தீமான் - பண்டிதன், புத்திமான், வியாழன்.

தீமுகம் - உலைமுகம்.

தீமுறுகல் - ஓர் பாஷாணம்

தீம் - இனிமை, தித்திப்பு.

தீம்பு - கீழ்மை, பொல்லாங்கு.

தீமை - பொல்லாங்கு.

தீம்பர் - கீழ்மக்கள்.

தீம்புகை - வாசனைப்புகை.

தீயகம் - நரகம்.

தீயம் - தித்திப்பு.

தீயர், தீயோர் - கீழ்மக்கள், வேடர், மூடர்.

தீயனி - காய்.

தீயாக்கிரை - பொன்னுங்காணி.

தீயெச்சம் - அவியாநெருப்பு.

தீரம் - கரை, சிறுவரம்பு, தைரியம், வலி.

தீர்க்கசந்தி - வடமொழிச்சந்தி.

தீர்க்கம் - அந்தரம், ஆறுமேழாமிராசிகள், திட்டம், தெளிவு, நிச்சயம், நீளம், நெட்டுயிரடையாளம், நெட்டுயிரெழுத்து, பூரணம்.

தீர்தல் - எழுதல், செல்லுதல், நடத்தல், நீளம், முடிதல், விடுதல்.

தீர்த்தகரர், தீர்த்தங்கரர் - சமணமுனிவர்.

தீர்த்தம் - திருவிழா, தீநீர்.

தீர்த்தர் - கடவுளர், பரிசுத்தர்.

தீர்த்தல் - நீங்கல், முடித்தல், விடுதல்.

தீர்த்தன் - அருகன், உபாத்தியாயன், குரு, சிவன்.

தீர்த்திகை - யாறு.

தீர்ப்பு - தீர்த்தல். நியமம், நிவிருத்தி, முடிபு.

தீர்வை - இறை, கிரி, சுங்கம்.

தீவகம் - விளக்கு, ஓர் அலங்காரம், அது—முதனிலைத்தீவகம், இடை நிலைத்தீவகம், கடைநிலைத்தீவகம் என மூவகையாகும்.

தீவலஞ்செய்தல் - அக்கினியைப்பிரதட்சிணஞ் செய்தல்.

தீவி - புலி.

தீவிகை - தீபிகை.

தீவிரம் - சடுதி, சூரியகிரணம், நரகம், பெருங்கோபம், மூர்க்கம்.

தீவிரங்கும்வயிரம் - மீனம்பர்.

தீவினி - காய்.

தீவினை - பாவம்.

தீவு - இடைக்குறை, சுவை, தீவாந்தரம், தூரதேசம்.

தீவேட்டல் - யாகஞ் செய்தல், மணமுடித்தல்.

தீவேள்வி - கலியாணம்.

தீழ்ப்பு - கீழ்மை, தீட்டு.

தீற்றுதல் - ஊட்டுதல், சுத்தம் பண்ணுதல், சுவர் முதலிய மெழுகுதல்.

தீனம்-இட்டம், எளிமை, வறுமை.

தீனர் - இரப்போர், கிம்பர்,

தீனன் - தரித்திரர்.

## து

து - அனுபவம், ஓரெழுத்து, சோமானம், இருதிணை முப்பாலொருமைத்தன்மை விகுதி, துவ்வென்னேவல், பிரிவு.

துகளிதம் - தூள்.

துகன் - குற்றம், பராகம், புழுதி.

துகிரிகை - சாந்து, சித்திரம்.

துகிர் - பவளம்.

துகிலிகை - எழுதுகோல், சித்திரம்.

துகில் - சீலை, விருதுக்கொடி.

துகினம் - சந்திரகிரணம், பனி.

துகைத்தல் - இடித்தல், உழக்கல், நலங்கல், வருத்தல், வருந்துதல்.

துக்கம் - கிலேசம், குற்றம், துன்பம், நரகம், நோ.

துக்கிதன் - துன்புறவோன்.

துங்கபத்திரை - ஓர் யாறு.

துங்கம் - உயர்ச்சி, நுனி, பரிசுத்தம், பெருமை, மந்தோச்சம், மலை, வெற்றி.

துங்கன் - உயர்ந்தோன்.

துசகம் - மாதளை.

துசம் - இருபிறப்புள்ளன, உமி, குங்கிலியம், கொடி, தவிடு, துவசம், பல்.

துச்சம் - அற்பம், கீழ்மை, கொம்மட்டி, பதர், பொய், வெறுமை.

துச்சுவனன் - இந்திரன்.

துச்சன் - அற்பன், கீழ்மகன்.

துச்சாதனன் } துரியோதனன்
துச்சாசனன் } தம்பி.

துச்சி - அனுபவம், பரீட்சை, புசிப்பு, பூநீறு.

துச்சில் - ஒதுக்கிடம், சரீரம், கூட்டு, தங்குமிடம்.

துஞ்சல் - உறங்கல், சாதல், சோம்பல், நிலைபெறுதல், வாடுதல்.

துஞ்சுதல்-உறங்கல், சாதல், துஞ்சல், நித்திரைசெய்தல்.

துடக்கறுப்பான் - கொத்தான் கொடி, முடக்கொற்றான்.

துடக்கு - கட்டு, சிக்கு, மகளிர் சூதகம்.

துடங்கு - துடங்கென்னேவல், துலங்குமரம்.

துடர்ச்சி - தொடர்ச்சி, வரிசை.

துடவை - உழவுகொல்லை, பூந் தோட்டம்.

துடி - அகில், இசங்கு, உடுக்கை, உதடு, எலம், காலநுட்பம், குமர னுடல், குறிஞ்சி நிலப்பறை, கூதாளிச்செடி, ஸப்தகன்னி கைகளாடல், துடியென்னே வல், பாலைநிலப்பறை, மேன் மை, வலி.

துடித்தல் - அசைதல், அதிகப் படுதல், உருக்கங் கொள்ளல், குதித்தல், துள்ளுதல், பதறல், மின்னல்.

துடியடி - யானைக்கன்று.

துடியாஞ்சி - இசங்கு.

துடுக்கு - குறும்பு, தீக்குணம், விரைவு.

துடுப்பு - அகப்பை, துடுப்பு.

துடுமெனல் - ஒலிக்குறிப்பு.

துடுவை - நெய்த்துடுப்பு.

துடை - சுவர்ப்புறத்து நீண்ட வுத்திரம், துடையென்னே வல், தொடை.

துடைத்தல் - அழித்தல், சீய்த் தல், தள்ளுதல், துடைக்கு தல், நாசம்பண்ணுதல், விட்டு விடுதல், வீழ்த்தல்.

துடைப்பம் - வாருகோல்.

துடைவாசி - விஷமூங்கில்.

துட்கல், துட்கெனல் } அச்சக்குறிப்பு.

துட்டர் - தீயர்.

துட்டவி - ஓர் செடி.

துட்டன் - தீயன், தேன்.

துட்டு - தீமை, பணத்தின்விகிதம்.

துட்டுவம் - அற்பம்.

துட்டை - வசவி.

துணங்கறல் - இருள், திருவிழா.

துணங்கை - இருகையு முடக்கிப் பழுப்புடை யொற்றியாடல், கூத்து, திருவிழா.

துணர்-பூ, பூங்கொத்து, பூந்தாது.

துணர்த்தல் - முகைத்தல்.

துணவு - சீக்கிரம், நுணு.

துணி - ஒளி, சோதிநாள், துணி யென்னேவல், துணிவு, துண்டு, தூக்கங்கள், தெளிவு, தேரிடக் கியம்.

துணிதல் - தீர்மானித்தல், தெளி தல், நிச்சயித்தல்.

துணித்தல்-அறுத்தல், வெட்டல்.

துணிநர் - அரிதிற்கொள்ளுவார்.

துணிபு - தீர்ப்பு, தெளிவு.

துணிபொருள் - நிசப்பொருள்.

துணிவு-திடன், துண்டு, தெளிவு, தீர்ப்பு, நம்பிக்கை, நோக்கம், வெட்டு.

துணிவுரை - சந்தேகப்பட நின்ற விடத்து இதற்கு இதுவே பொருளெனத் துணிந்தெழு தும் உரை, விருத்தியுரை.

துணுக்கம்-அச்சம், உள்ளோசை.

துணுக்கெனல் - அச்சக்குறிப்பு.

துணை-அளவு,ஆயுதமுனை, இணை, உதவி, ஒப்பு, சகாயம், சல்லியம், சோடு.

துணைக்கருவி - உபகருவி.

துணைக்காரணம் - உபகரணம்.

துணைமை - உதவி.

துணைவர் - மந்திரிகள்.

துணைவன் - உதவிக்காரன், கடவுள், சகோதரன், தலைவன், தோழன், மந்திரி.

துணைவி - சகோதரி, தோழி, மனைவி.

துணைவு - விரைவு.

துண்டம் - கைவாய்க்கால், சாரைப்பாம்பு, துணி, துண்டித்தல், முகம், மூக்கு, பறவை மூக்கு, யானைத்துதிக்கை.

துண்டி-கழி, கொப்பூழ், துண்டு, துண்டு நிலம்.

துண்டித்தல் - அறுத்தல், தறித்தல், வெட்டல்.

துண்டிவிநாயகன்-காசிக்கணபதி.

துண்டீரன் - ஓரரசன்.

துண்டீரபுரம் - காஞ்சீபுரம்.

துண்ணெனல் - அச்சக் குறிப்பு, விரைவுக்குறிப்பு.

துதமுகம் - பரதவுறுப்புக்களுளொன்று, அஃது—வேண்டாமைக்கு வலமிடந் தலையாட்டல்.

துதம் - அசைவு.

துதி - துதித்தல், துதியென்னேவல், தோத்திரம்.

துதித்தல் - வழுத்தல்.

துதியம் - சவரிலோத்திரம்.

துதியை - இரண்டாந்திதி.

துதை - நெருக்கம்.

துதைதல் - நெருங்கல், மிகுதல்.

துதைத்தல் - நெருக்கல்.

துத்தநா - முயற்புல்.

துத்தபாஷாணம்-ஓர்பாஷாணம்.

துத்தம் - ஏழிசையினொன்று, கண்மருந்து, சமனிசை, நாண்முகப்புல், நாய், நாவினாற் பிறக்குமிசை,பால், யாழினோர் நரம்பு, வயிறு.

துத்தல்-அநுபவித்தல்,புசித்தல்.

துத்தன் - கபடன், தப்பிலி.

துத்தி - உண்டற்குரியன, ஓர் செடி, தேமல், பாம்பின் படப்பொறி.

துத்து - கம்பளி, தப்பிதம் பொய், வஞ்சனை.

துத்தூரம் - ஊமத்தை.

துந் - நதி, பறவைமுட்டை.

துந்தகடம் - கோதுமைநொய்.

துந்துபி - ஓர்வருடம், பேரிகை.

துந்துமாரி - முதலெழு வள்ளலி லொருவர்.

துந்துமி - ஓரசுரன், ஓர் வருஷம், பறையின் பொது, பேரிகை.

துப்பகம் - நெய்.

துப்பரவு - முழுமை, மேன்மை.

துப்பல் - உமிழ்நீர், துப்புதல்.

துப்பிரசம் - கருஞ்சொண்டி.

துப்பு - அரக்கு, அறிவு, அநுபவம், ஆயுதப்பொது, உணவு, கறை,குற்றம், சகாயம்,சாமர்த்தியம், சிவப்பு, சுத்தம், சோதித்தல், துணை, துணைக்காரணம், துப்பென்னேவல்,நெய், பகை, பவளம், பானம், பொலிவு, மிகுதி, மேன்மை, வலி.

துப்புரவாக்கல் -சுத்தஞ்செய்தல்.

துப்புரவு - அலங்காரம், ஐம்பொறிநுகர்தல், ஒப்புரவு, ஒழுங்கு, சுத்தம்.

துமானம் - ஆபரணப்பெட்டி.

துமி - சிறுதிவலை, துமியென்னேவல், மழைத்துளி.

துமிதம் - நீர்த்துளி.

துமிதல்-வெட்டுண்ணல், தொலைதல்.

துமித்தல் - அறுத்தல், வெட்டல்.

தும் - தன்மைப்பன்மை விகுதி.

தும்பகா - தும்பை, தும்பரம், தும்பராஷ்டகம்,பேரரத்தை.

தும்பம் - வீணைக்காய்.

தும்பரம் - அத்தி,

தும்பராட்டகம் - பேரரத்தை.

தும்பன் - தீயன்.

தும்பி - கருவண்டு, கொத்தான், சுரை, யானைவண்டிஞண், வண்டு.

தும்பிலி - ஓர் மரம்.

தும்பு-கயிறு, குறைவு,சிம்பு, நார்.

தும்புரு - ஓர் கந்தருவன். (நாரதன் நண்பன்) வீணை, வீணைப் பயிற்சியுள்ளவன்.

தும்பை - ஓர் செடி, கறவைப்பசு, கூட்டம், பொருதல், போர், வென்றோர்க்கு மாலை, வெற்றிலை.

தும்பைமாலை - ஓர் பிரபந்தம், போர்வென்றோர்க்கு மாலை.

தும்மிட்டி - ஓர் செடி.

தும்மர் - உயிர்ப்பு, தும்முதல், விடுதல், வியங்கோண்முற்று.

தும்மு - கொசுகு, தும்மல், தும்மென்னேவல்.

துயக்கல் - தளர்த்தல்.

துயக்கு - சோர்வு, தளர்ச்சி.

துயங்கல் - தளர்தல்.

துயரம் - கிலேசம், துன்பம்.

துயரி - யாழ்நரம்பு.

துயருறுவோன் - தரித்திரன்.

துயர் - கிலேசம், துன்பம்.
துயலல் - அசைதல்.
துயவு - அறிவின்றிரிபு.
துயிலல் - நித்திரை செய்தல்.
துயிலாதார், துயிலார் - தேவர்.
துயிலிடம் - மக்கட்படுக்கை.
துயிலெடை - நித்திரையினின் றெழுப்புதல்.
துயிலெடைநிலை - ஓர்பிரபந்தம்.
துயில் - துயிலென்னேவல், நித்திரை.
துயில்கூரல் - நித்திரைசெய்தல்.
துயிறல் - நித்திரைசெய்தல்.
துயிற்றல்-நித்திரை செய்வித்தல்.
துயிலி - தொய்யில்.
துய் - அறிவின்றிரிபு, உணவு, துய்யென்னேவல், நூற்கும் பஞ்சிற்றொடர் நுனி.
துய்த்தல் - அனுபவித்தல், ஐம்பொறி நுகர்தல், நூனூற்றல், புசித்தல்.
துய்யனையிரவியாக்கி - பவளப்புற்றுப் பாஷாணம்.
துய்யவன் - சுத்தன், வெள்ளி மணல்.
துய்யாள் - அழகுள்ளவள், சுத்தமுடையாள், ஸரஸ்வதி.
துரககதி - குதிரைப்பாய்ச்சல், குதிரைநடை.
துரகதமூலம் - நீர்முள்ளி.
துரகதம், துரகம் - குதிரை, குதிரைப்பற்பாஷாணம், மனம்.
துரங்கம் - குதிரை, மனம்.
துரத்தல்-அகற்றல், செலுத்தல்.
துரந்தரம் - பொதியெருது, வல்லபம்.
துரந்தரன் - பாரந்தாங்குவோன், வல்லோன்.
துரபிமானம் - வீண்பெருமை.
துரம் - சுமை, பாரம், பொறுப்பு.
துரவு - கிணறு, தூது.
துராசை - வீணாசை.
துராபம் - பெறுதற்கரியது.
துராரோகம் - பனை. பேரீந்து.
துராலேபம் - சிறுகாஞ்சொறி.
துரால் - செற்றை, துரும்பு, துன்பம்.
துரி - எழுதுகோல், நூற்பாத் திருத்தும் படைமயிர்.
துரிசி - குற்றம், துருசி, துன்பம்.
துரிசு - குற்றம். துன்பம்,
துரிஞ்சில்-உசிலமரம்,வௌவால்.
துரிதம் - ஓர் தாளம், கலக்கம், காலதசப்பிரமாணத்தொன்று, அஃது துடியிரண்டு கொண்டது, கேடு, சீக்கிரம், துன்பம், பாவம்.
துரியம் - சுத்தநிலை, சுமத்தல், நான்காமவத்தை, பரமாத்மா, பொதியெருது.

துரியர் - சுத்தர்.

துரியாதீதம்-ஆன்மாக்கள் மிகத் தூய்மையாய் நிற்கும் நிலை.

துரியோதனன் - ஸுயோதனன்.

துரீ - பாவாற்றி.

துருக்கம் - ஒடுக்க வழி, கஸ்தூரி, கஸ்தூரிமிருகம், கலக்கம், காடு, குங்குமமரம், சேரற்கரிய விடம், மலைமேற்கோட்டை, மான்.

துருக்கு - மிலேச்ச ஜாதி.

துருசு - களிப்பு, சீக்கிரம்.

துருத்தி - ஆட்டிடைக்குறை, ஊதுந்துருத்தி, நீர்த்துருத்தி.

துருபதன் - துரோபதையின் தந்தை.

துருபவருணீ - காட்டாமணக்கு.

துருமம் - கற்பகம், மரப்பொது, மனக்கலக்கம்

துருமோற்பலம் - கோங்குமரம்.

துரும்பு - திரணம்.

துருவண்ணம் - வெள்ளி.

துருவமண்டலம் - துருவபதம்.

துருவம் - அசையாநிலை, உபாயம், எழு தாளத்தொன்று, கிரஹ புடம், துருவ நட்சத்திரம், நிச்சயம், நித்தியயோகத் தொன்று, நிலைபேறு, பூச்சக்கரத்தில் முனை, வட்டத்தின் முனை.

துருவல் - கடைதல், துளைத்தல், தேடல்.

துருவன் - உத்தானபாதன் மகன், அஷ்டவஸுக்களிலொருவன், துருவநக்ஷத்திரம்.

துருவாசன் - ஓர் ரிஷி.

துருவாடு - ஓராடு.

துருவாட்டி - சிற்றேலம்.

துருவாதி - காட்டாமணக்கு.

துருவை - செம்மறியாடு.

துருளக்கம் - குங்கிலியம்.

துரைச்சி - உலோகநிமிளை.

துரோகம் - கலக்கம், குற்றம், கொடும்பாவம், தப்பிதம்.

துரோணம் - எண்காற்புள், எழு மேகங்களிலொன்று, ஓர் பரம், காக்கை, தனுவிராசி, தும்பைச் செடி, பதக்கு, வில்.

துரோணாசாரியன், துரோணன் - ஓர் வில்லாசிரியன், அச்வத்தாமன் தந்தை, குருகுலத்தரசர்குரு.

துரோபதை - பஞ்ச கன்னிகைகளிலொருவள், அவள் பாண்டவர் மனைவி.

துர் - கெட்ட.

துர்க்கந்தம் - தீயவாசனை.

துர்க்கம் - மலைமேற் கோட்டை,

துர்க்கை - கொற்றவை, பூரநட்சத்திரம்.

துர்த்தூரம் - ஊமத்தை.

துர்ப்பரிகம் - சிறு காஞ்சொறி.

துர்லபம் - அருமை, கிடைக்கத் தகாதது.

துர்வர்ணம் - வெள்ளி.

துலக்கல் - விளக்கல்.

துலங்கல் - ஒளிசெய்தல்.

துலம் - கனம், கோரை, நிறை, நீர்முள்ளி.

துலவம் - பஞ்சு.

துலா-ஏற்றமரம், கைமரம், நிகர், நிறைகோல்.

துலாகோடி - ஓர்நிறை, காலணியினொன்று, பத்துக்கோடி.

துலாம்-ஏற்றவுறுப்பு, ஓர்இராசி, ஓர்நிறை.

துலாயனம் - துலாராசியில் சூரியன் வருங்காலம்.

துவிதம் - அசைவு, ஒப்பு, நிறுக்கப்பட்டது.

துலுக்கு - அசைவு, ஓர் பாஷை.

துலை - ஒப்பு, கனம், துலாராசி, நிறை, நீரிறைக்குந்துலை, நூறு பலம்.

துலோயம் - கருஞ்சுண்டி.

துல்லபம் - அருமை.

துல்லம் - பேரொலி.

துல்லியபக்கம் - உவமை.

துல்லியயோகிதாலங்காரம் - ஒப்புமை கூட்டவணி.

துவக்கல் -ஆரம்பித்தல், கட்டல், தொடங்கல்.

துவக்கு-உடல்,சங்கிலி,சம்பந்தம், துவக்கென்னேவல், தோல், பிணக்கு.

துவங்கிசம்-கேடு,சேதம், நட்டம்.

துவசம் - அடையாளம், கொடி, விருதுக்கொடி.

துவசர் - கள்விற்போர்.

துவசல் - தொடிசு.

துவசாரோஹணம் - கொடியேற்றம்.

துவட்சி - அசைவு, பலவீனம், வரட்சி.

துவட்டல் - துடைத்தல், துவட்டுதல், வியங்கோள்முற்று.

துவட்டர் - கம்மாளர், தச்சர்.

துவட்டாநாள் - சித்திரைநாள்.

துவந்துவம் - இரண்டு, ஒன்றைத் தொடர்ந்தது.

துவம் - அசையாநிலை, சத்துவம்.

துவரம் - துவர்ப்பு.

துவரை - ஓர் பயறு, துவாரகை.

துவர் - சிவப்பு, துவர்ப்பு, பகை, பவளம், விறகு.

துவர்க்காய் – பாக்கு.

துவர்ச்சிகை - கடுக்காய்ப் பிஞ்சு.

துவர்தல் - திமிர்தல், தெளிதல்.

துவர்த்தல் - துவர்ப்புக்கொள்ளுதல், பூசுதல்.

துவர்ப்பு - அறுசுவையினொன்று.

துவலல் - துவறல்.

துவலை - துளி, மழை, மழைத் தூவல்.

நிகர்தல் - உவமித்தல், பொருதல்.

நிகர்ப்பு - ஒப்பு, போர்.

நிகர்வம் - தாழ்மை, நூறுபங்கு கொண்ட ஓர் கால அளவு.

நிகர்வு - ஒப்பு.

நிகலம் - தோண்மேல்.

நிகழ்காலம் - நடக்கின்றகாலம், வர்த்தமானகாலம்.

நிகழ்காலவினையெச்சம் - அகர விகுதிபெற்று இடைநிலையோடு கூடாதுதானே நிகழ்காலம் காட்டி நிற்குஞ்சொல்.

நிகழ்சரம் - பறக்குமம்பு.

நிகழ்ச்சி - ஒளி, சம்பவம், வர்த்தமானம்.

நிகழ்தல் - ஒளிசெய்தல் சொல்லல், நடத்தல், நிறைவேறல்.

நிகழ்த்துதல் - சொல்லல், நடப்பித்தல்.

நிகழ்பல்ல - நிகழ் காலமல்லாத இரண்டு காலம்.

நிகழ்வினைவிலக்கு- ஓரலங்காரம்.

நிகளம் - கால்விலங்கு, சங்கிலி, யானைச்சங்கிலி.

நிகாசம் - உவமை.

நிகாதம் - சொல், வஞ்சனை.

நிகாதன் - வஞ்சனையாளன்.

நிகாயம் - இலக்கு, கூட்டம், மருதஞ்சார்ந்தவூர், வாசஸ்தலம், வீடு.

நிகாரணம் - காரணமற்றது, கொலை.

நிகாரணன்-கொலை செய்வோன்.

நிகாரம் - அவசங்கை, இறைத்தல், உயர்த்துதல், தப்பிதம், தூற்றுதல், பனி, விரோதம், விழுங்குதல்.

நிகிதம் - படை.

நிகிருதி - தரித்திரம், நிந்தை, பொல்லாங்கு.

நிகிலம் - எல்லாம்.

நிகு - அறியுங்கருவி.

நிகுஞ்சம்-குகை, சிற்றில், புதர்வீடு.

நிகுட்டம் - தொனி.

நிகுஞ்சகம் - ஓரளவு, ஓர்மரம்.

நிகும்பம் - நேர்வாளம்.

நிகும்பன் - கும்பகர்ணன் மகன்.

நிகும்பலை - இந்திரசித்து யாகம் செய்த விடம்.

நிகுரும்பம் - சமூகம்.

நிகூடம் - ஆழம், மறைவு.

நிகேதனம் - தேவர்கோவில், மருதஞ்சார்ந்தவூர், வீடு.

நிக்கிரகஸ்தானம் - தர்க்கத்தில் எதிரியைச் சயிக்குநிலை.

நிக்கிரகம் - எல்லை, கட்டுதல், குற்றப்படுத்தல், கொலை, தண்டனை, தோல்வி, நாசம், வெறுப்பு.

நிக்குவணம் - வீணை முதலியவற்றின் தொனி.

நிக்குரோத்தம்-காட்டாமணக்கு.

நிசங்கம்-அம்புக்கட்டு, இணக்கம்.

நிசமம் - நியமம்.

நிசமனம் - கேள்வி, பார்வை.

நிசம் - உண்மை, சொந்தம்,நாணயம், நித்தியம், மெய்.

நிசா - இரவு, இராத்திரி.

நிசாகசம் - வெள்ளாம்பல்.

நிசாகம் - மஞ்சள்.

நிசாகரன் - சந்திரன், சேவல்.

நிசாசரம் - இரவினடமாடுவன, கூகை, பாம்பு.

நிசாசரர் - அஸுரர், இராக்கதர், கள்வர்.

நிசாசரி - அரக்கி, கூகை, வேசி.

நிசாதனம்-இடம், கொலை, மெய், வீடு.

நிசாதன் - கீழ்மகன்.

நிசாந்தம் - விடியற்காலம், வீடு.

நிசாபதி - கற்பூரம், சந்திரன்.

நிசாபுட்பம் - இரவலரும்பூ, உறைந்தபனி, செவ்வாம்பல், பனி, வெள்ளாம்பல்.

நிசாமணி - சந்திரன், மின்மினி.

நிசாமனம் - கேள்வி, நிழல், பார்வை.

நிசாரணன் - கொலைசெய்வோன்.

நிசாரம் - சாரமற்றது, வருத்தம்.

நிசார்த்தம் - பாதிராத்திரி, மெய்.

நிசானம் - ஓர் கட்பறை.

நிசி-இரா,இருள்,பொன், மஞ்சள்.

நிசிசரர் - அஸுரர், இராக்கதர்.

நிசிதம் - இகழ்ச்சி, இரும்பு, கூர்மை, தீட்டப்பட்டது.

நிசீதம் - அர்த்தசாமம், அற்பம், இரவு, கூர்மை.

நிசீதினி - இரவு.

நிசும்பம் } கொலை.
நிசும்பனம் }

நிசுலகம் - மார்க்கவசம்.

நிசுலம்-அலரி, கவசம், துப்பட்டி.

நிசுவாசம் - சைவாகம மிருபத்தெட்டினொன்று, மூச்சுவிடுதல்.

நிசுனம் - நீர்க்கடம்பு.

நிசூதநம் - அழித்தல்.

நிசோலகம் - மார்ச்சட்டை.

நிச்சம் - நித்தம்.

நிசோலனம் - தரிசனம்.

நிச்சயம் - உறுதி, தீர்ப்பு, நியமம், மெய்.

நிச்சயார்த்தம் - மெய்ப்பொருள்.

நிச்சலம் - அசைவின்மை,உறுதி, நித்தம்.

நிச்சலன் - கடவுள், அசைவற்றவன்.

நிச்சித்தம் - மனோலயம், விகாரமின்மை.

நிச்சிந்தன் - அருகன், எண்ண மற்றவன், கடவுள்.

நிச்சியம் - வெள்ளுள்ளி.

நிச்சுவசனம் - கோபம், பெருமூச்சுவிடுதல், மூர்க்கங்கொள்ளல்.

நிச்சுவாசம் - சுவாசவொடுக்கம்.

நிஸ்தாரம் - ஈடேறல்.

நிடதம் - அஷ்டபருவதத்தொன்று, ஓர்தேசம்.

நிடாலம் - நெற்றி.

நிடுதம் - உமிழ்தல்.

நிடேதம் - கொலை.

நிடேதனன் - கொலைகாரன்.

நிடேதம் - ஒழிவு, தடை, வழு, விலக்கு.

நிட்கபடம் - கவடின்மை.

நிட்கம்-இன்மைப்பொருட்டுமோருபசருக்கம், ஓர்பறை, பலம், பொன், மார்பணி, வராகனிடை.

நிட்களங்கம் - சுத்தம்.

நிட்களம் - உருவின்மை.

நிட்காமியம் - விருப்பின்மை.

நிட்காரணம் - காரணமின்மை.

நிட்கிராமம் - கூத்திஞேர்விகற்பம்.

நிட்குடி - ஏலம்.

நிட்சேபம் - அடைவு, துடைத்தல், புதையல், விடுதல்.

நிட்டூரம் - இடையூறு, கொடுமை.

நிட்டை - அழிவு, இக்கட்டு, உறுதி, சரித்திரமுடிவு, சாதகம், நம்பிக்கை, நன்னடை, நிலைபரம், மனமசைவற்றிருத்தல், முடிவு, வாழ்நாள்.

நிட்பத்தி - பிறப்பு, முடிவு.

நிட்பலம் - அவம், பயனின்மை.

நிணத்தல் - கொழுத்தல், முடைதல்.

நிண்ணயம் - உறுதி, தருக்கமுடிவு, தீர்ப்பு, நிச்சயம், நியமம், முறை.

நிதம் - நஞ்சு, நித்தியம்.

நிதம்பம் - கடிதடதம், கரை, கற்பரிபாஷாணம், தோள், மலைப்பக்கம்.

நிதரிசனம் - உதாஹரணம், கட்டளை, காட்சியணி, காணப்படாமை, திருட்டாந்தம், வகை.

நிதலம் - கீழேழுலகத்தொன்று.

நிதனம் - அழிவு, சாவு, தரித்திரம், தோற்றப்படாமை, பிறந்தநாளுக்கேழாவதுநாள், மரணம்.

நிதாகம் - முதிர்வேனிற் காலம், வெப்பம், வெயர்வு.

நிதாந்தம் - மிகவும், மேன்மை, விடியற் காலம்.

நிதானம் - ஆதிகாரணம், கடவுண்மணிக்கும் நவமணிக்கும் பொது, சமம், சரி, சுத்தம், சமுத்திரை, நிச்சயம், நேர்மை, பசுக்கட்டுங்கயிறு, படை, பிரமாணம், பொன், மதிப்பு, முடிவு, மெய், வைத்திய நூலிலொன்று.

நிதானன் - கடவுள்.

நிதானித்தல் - நிச்சயித்தல், மதித்தல்.

நிதி - ஆபரணத்திற்றொங்கணி, கடவுண்மணிக்கும் நவமணிக்கும் பொது, சமுத்திரம், திரவியம், நிறைவு, பொக்கிஷம், பொன்.

நிதிக்கிழவன்
நிதிக்கோன்
நிதிபதி
நிதியோன் } குபேரன்.

நிதிப்பொதி - கிழிக்கட்டு.

நிதியம் - கடவுண்மணி, திரவியம், பஞ்சலோகப்பொது, மணிப்பொது.

நிதுவனம் - கலத்தல், சந்தோஷம், விளையாட்டு.

நிதேசம் - கட்டளை, சமீபம், வார்த்தை.

நித்தம் - எப்பொழுதும், நித்தியாக்கினி.

நித்தாங்கம் - அலையின்மை.

நித்தன் - அருகன், ஆத்துமா, கடவுள், சிவன்.

நித்திகம் - ஓர்செடி.

நித்தியம் - அழியாமை, எப்பொழுதும், சமுத்திரம், நாடோறும், மோட்சம்.

நித்தியயோகம் - தினயோகம். அவை—அதிகண்டம், அரிடணம், ஆயுஷ்மான், ஐந்திரம், கண்டம், சாத்தியம், சித்தம், சித்தி, சிவம், சுகர்மம், சுபம், சுப்ரம், சூலம், சோபனம், சௌபாக்கியம், திருதி, துருவம், பரிகம், பிரமம், பிரீதி, வச்சிரம், வரியான், விட்கம்பம், விதிபாதம், வியாகாதம், விருத்தி, வைதிருதி.

நித்தியவிதி - ஓமகுண்டம், நித்தியகருமம்.

நித்தியவிநோதம் - அருகன், முக்குடையிலொன்று.

நித்தியன் - கடவுள்.

நித்திலம் - முத்து.

நிநதம்
நிநாதம் } ஒலி.

நிந்தாத்துதி - இகழ்தல் போற்புகழ்தல்.

நிந்திதம் - நிந்தனை.

நிந்தித்தல் - இகழ்தல்.

நிந்தை - இகழ்ச்சி.

நிபந்தம் - கடமை, சலமறிப்பு, யாப்பு.

நிபம் - உவமை, கடம்பு, காரணம், கோள், வஞ்சனை.

நிபந்தனம் - கட்டுதல், கட்டுப் படுதல், காரணம், பல நூல் களிலிருந்து திரட்டின புத்த கம், வீணையின் வாரக்கட்டு.

நிபாதம் - இறக்கம், மரணம், வழு, விடுதல்.

நிபாலனம் - பார்வை, வழு, விழுத்தல்.

நிபிடம் - நெருக்கம்.

நிபுணர் - அறிஞர், மிகவல்லோர்.

நிபுணன் - அறிஞன், புதன், மிக வல்லோன்.

நிப்பரம் - தீவிரம், பாரமின்மை.

நிமம் - பிடர்.

நிமலம் - அழுக்கின்மை.

நிமலன் - கடவுள்.

நிமி - சூரியகுலத்தோரரசன்.

நிமிடம் - காலநுட்பம்.

நிமித்தகாரணம் - மூலகாரணம்.

நிமித்தசூடாமணி-ஓர் சமண நூல்.

நிமித்ததானம் - தென்புலத்தார்க் குச் செய்யுஞ் சடங்கு.

நிமித்தம் - அடையாளம், கார ணம், சகுனம், பொருட்டு.

நிமித்தர் - வருங்காரியஞ்சொல் வோர்.

நிமித்திகன் - குறிசொல்வோன், புரோகிதன்.

நிமிர்தல் - உயர்ச்சி, ஓடல். சோறு, நெருங்குதல், வளர்தல்,

நிமிளை - அம்பரை, கூட்டுக்கல்.

நிமீலனம்-கண்ணிமைப்பு, சிமிட்டு தல், மரணம்.

நிம்பத்தாரோன் - பாண்டியன்.

நிம்பம் - வேம்பு.

நியக்குரோதம்-அகலம், ஆலமரம்.

நியதம் - அடக்கம், உறுதி, நிசம்.

நியதி-ஊழ், செய்கடன், சத்துவம்.

நியதுதல் - விடுதல்.

நியதேந்திரியன் - இந்திரியங் களை யடக்குவோன்.

நியமச்சிலேடை - ஓர் சிலேடை.

நியமம் - அட்டயோகத்தொன்று, இடம், கடைவீதி, செய்கடன், தெரு, தேவர் கோயில், நிச்ச யம், நெடுந்தெரு, நேர்த்தி, மருத நிலத்தூர், முறைமை, விதி.

நியமனம் - கற்பனை.

நியமிதம் - ஏற்பாடு.

நியமித்தல் - பிறப்பித்தல்.

நியர்ப்புதம் - பதினாயிரங்கோடி.

நியாசம் - கிரியை, துறவு, நிய திக்கை, யோகஞ் செய்தல், விடுதல், வேம்பு, வைப்பு.

நியாதம் - தின்றல், வேம்பு.

நியாயம் - இடம், தருக்கம், நீதி, நையாயிகம்.

நியுதம் - இலட்சம், நூறாயிரம்.

நியுத்தன் - ஒன்றிற்கேற்பட்டவன், மனக்கலிந்தவன்.

நியோகம் - கட்டளை, தத்துவம், நிச்சயம், நியமம்.

நிரங்குசம் - அடங்காமை.

நிரங்குசன் - கடவுள்.

நிரசனம் - அழித்தல், எதிரிடை, தள்ளுதல், பட்டினி, வாந்தித்தல்.

நிரஞ்சனம் - நிறைவு, மாசின்மை.

நிரஞ்சனன் - அருகன், கடவுள், வியாபி.

நிரஞ்சனி - இலக்குமி, பார்வதி.

நிரட்சம் - மத்தியரேகை.

நிரந்தம் - இடங்கழிமை.

நிரந்தரம் - இடமின்மை, எப்போழ்தும், குரங்கு, நெருக்கம், மந்தி, மறை, வெளி.

நிரந்தரன் - கடவுள்.

நிரப்பு - குறைபாடு, தரித்திரம், நிரப்பென்னேவல், நிறைவு, மடிமை.

நிரப்போர்-இரப்போர், எளியோர்.

நிரம்பரன் - அருகன், கடவுள், சிவன், திகம்பரன்.

நிரம்பல் - நிறைதல், வியங்கோண்முற்று.

நிரம்பழகியர் - ஓர் நூலாசிரியர். (சேதுப்புராணம் இயற்றியவர்.)

நிரம்பாமென்சொல் - மழலைச்சொல்.

நிரயம் - நரகம்.

நிரல் - ஒழுங்கு.

நிரவல் - நிரவுதல்.

நிரனிறை - ஓர் அலங்காரம், நிரையாக நிறுத்தல்.

நிராகம் - உடலின்மை.

நிராகரணம் - மறுத்தல்.

நிராகாரம் - அரூபம், ஆகாயம், உணவின்மை, மோக்கம்.

நிராகாரன் - கடவுள்.

நிராகிருதி - தள்ளுதல், வடிவின்மை.

நிராகுலம் - அமைதி, வருத்தமின்மை.

நிராசம் - நம்பிக்கையின்மை, விடுதல்.

நிராசனம் - இருப்பின்மை.

நிராதரம் - ஆசையின்மை, ஆதரவின்மை.

நிராமயம் - நோயின்மை, பன்றி.

நிராமயன் - கடவுள், நோயிலான்.

நிராயுதன் - அருகன், ஆயுதமில்லாதவன்.

நிரார்த்தகம் - அற்பம்.

நிராலம்பன் - கடவுள்.

நிரியாணசக்கரம்-மரணசக்கரம்.

நிரியாணதிசை - மரணதிசை.

நிரியாணம் - சாவு, பிறவிநீங்கல், யானைக்கடைக்கண்.

நிரீட்சணம் - பார்வை.

நிருணமன் - அருகன், கடவுள்.

நிருதர் - இராக்கதர்.

நிருதி - தென்மேற்றிசைப்பாலன், முதலெழு வள்ளலிலொருவன்.

நிருதிதிசை - தென்மேற்கு.

நிருத்தமாது - நாடகக்கணிகை.

நிருத்தம் - கூத்து, அஃது—கலைஞானமறுபத்து நான்கி னொன்று, பஞ்சகிருத்தியத் தொன்று, வேதாங்கத் தொன்று.

நிருத்தர் - கூத்தர்.

நிருபதி - அரசன்.

நிருபம் - கட்டளை, காகிதம், தீர்வை, நியமம்.

நிருபமம் - உவமையின்மை.

நிருபாதி - உபாதியின்மை.

நிருபாதிகம் - நிர்விகற்பம்.

நிருபாதானம் - துணைக்காரணமின்மை.

நிருமதம் - மதமொழிந்தயானை.

நிருமலம் - மாசின்மை.

நிருமலன் - அரன், அருகன், கடவுள், சிவன்.

நிருமாணம் - நிருமித்தல்.

நிருமாலியம் - பூசித்துக்கழித்த பொருள்.

நிருமிதம்
நிருமித்தல் } நிருமாணம்.

நிருமூடம்
நிர்மூடம்
நின்மூடம் } மிக்கவறிவின்மை.

நிருவாகம் - உண்மை, சீர், செவ்வை, நிலைமை, பராமரிப்பு, பொறுப்பு.

நிருவாணதீட்சை - சிவதீட்சை மூன்றிலொன்று.

நிருவாணம் - அம்மணம், தண்மை, மோக்கம்.

நிருவாணி - அருகன், உடையில்லான், சிவன்.

நிருவிடம் - ஓர் பூண்டு.

நிரூடபசுபந்தம் - யாகநிருபத்தொன்றினொன்று.

நிரூபணம் - ஆராய்கை, பார்வை.

நிரூபம் - உருவின்மை.

நிரூபன் - கடவுள்.

நிரூபித்தல் - ஆராய்தல், நிதானித்தல்.

நிரை - ஓரசை, ஒழுங்கு, நிரையென்னேவல், பசுக்கூட்டம், பசுப்பொது, படைமுன்னணி, படைவகுப்பு.

நிரைகவர்தல் - பகைவர் பசுக்களைக்கொண்டு போதல்.

நிரைதல் - ஒழுங்கு, நிரவுதல் வரிசையாதல்.

நிரைத்தல் - ஒலித்தல், ஒழுங்காய் நிறுத்தல், நிரல்பட வைத்தல்.

நிரைமீட்சி - பகைவர் கவர்ந்த பசுக்கூட்டங்களை மீட்டல்.

நிரையசை - குறிலிணைந்துங் குறி னெடிலிணைந்துங் குறிலிணை யொற்றடுத்தும் குறினெடி லொற்றடுத்து வருமசை.

நிரையம் - நிரயம்.

நிரையொன்றாசிரியத்தளை - நிரை யசையிணைந்து வருமாசிரியத் தளை.

நிரோட்டம் - இதழுறாவெழுத் துடைக்கவி.

நிரோதம் - அழிவு, ஆணவமலம், தடை, வெறுப்பு.

நிர்க்குணன் - கடவுள்.

நிர்க்குண்டி - வெண்ணொச்சி.

நிர்ப்பீசதீட்சை - ஓர் வகைத் தீட்சை.

நிர்ப்புதம் - பதினாயிரங்கோடி.

நிர்வாபனம் - கொலை, தானம் கொடுத்தல்.

நிர்விகாரி - கடவுள்.

நிர்விவாரம் - யானைக்காதினடி.

நிலக்கடம்பு - ஓர்பூடு.

நிலக்கடலை - ஓர் கடலை.

நிலக்கணம் - அட்டகணத்தி னொன்று, மூன்றுநிரையசை யடுத்து வருஞ்சொல்.

நிலக்காளான் - ஓர் காளான்.

நிலக்குமிழ் - ஓர்செடி.

நிலக்குழி - எழுத்து வடிவு.

நிலக்கூந்தல் - எலிச்செவி.

நிலக்கொட்டை - ஓர்செடி.

நிலச்சுருங்கி - தொட்டாற்சுருங்கி.

நிலத்தாமரை - ஓர்செடி.

நிலத்துத்தி - ஓர் பூண்டு.

நிலத்துளசி - ஓர் துளசி.

நிலநெல்லி - ஓர் நெல்லி.

நிலப்பனை - ஓர்பூண்டு.

நிலப்பாகல் - ஓர் பாகல்.

நிலப்பாலை - ஓர்பாலை.

நிலப்பிளப்பு - கமர்.

நிலமகள் - பூமிதேவி.

நிலமகன் - செவ்வாய்.

நிலமயக்கம் - திணைமயக்கம்.

நிலம் - இடம், இலக்கு, குறிஞ்சி, நெய்தல், பாலை, பூமி, மருதம், முல்லை.

நிலம்பி - கொசுகு.

நிலயம் - இருப்பிடம், கூத்து, தேவர்கோயில், பூமி, மருத நிலத்தூர்.

நிலவலயம் - பூமி.

நிலவல் / நிலாவல் - ஒளிசெய்தல், பரவல், வழங்கல்.

நிலவாகை - நில ஆவிரை.

நிலவாழை - ஓர்பூடு.

நிலவிளா } ஓர்விளா.
நிலவிளாத்தி

நிலவீரியம் - பூநீறு.

நிலவு - ஒளி, சந்திரன், நிலவென்னேவல்.

நிலவுமரி - ஓர்பூடு.

நிலவேம்பு - ஓர்பூண்டு.

நிலவேர் - பூநாகம்.

நிலா - ஒளி.

நிலாக்கொழுந்து - இளம்பிறை.

நிலாமணி - சந்திரகாந்தம்.

நிலாமண்டபம் - நிலாமுற்றம்.

நிலாமுகி } சகோரம்.
நிலாமுகிப்புள்

நிலாமுற்றம் - வீட்டின் மேலுலாவும் வெளி.

நிலை - ஆதனம், ஆபரணத்திற்றொங்கணி, இடம், உலகம், கதவுநிலை, குணம், நிலையென்னேவல், நிற்குநிலை, நிலை, பூமி, பொழுது, முறைமை, யுத்த நிலை, (பைசாசம், மண்டலம், ஆலீடம், பிரத்தியாலீடம், சமபாதம்.)

நிலைக்கல் - ஆட்டுக்கல்.

நிலைகளப்போலி - ஒரெழுத்து நின்ற விடத்து அதற்கீடாய் வந்து நிற்குமெழுத்து.

நிலைக்களம் - இருப்பிடம்.

நிலைத்தல் - நிலைபெறுதல், நிலைப்படுத்தல்.

நிலைபெறுத்தல் - காத்தல்.

நிலைபெறுத்துகை - நிதத்தாபகம்.

நிலைபேறு - அசையாமை, உறுதி, தூண், நிச்சயம், மானம், மோக்கம்.

நிலைப்பு - உறுதி, திரங்கொள்ளுதல், தொடர்ந்தேற்றி, நிலை, மாறாமை, முயற்சி.

நிலைமண்டிலவாசிரியப்பா - ஓராசிரியப்பா.

நிலைமை - இயல்பு, உறுதி, குணம், மெய்.

நிலைமொழி - வருமொழிக்கு முதன்மொழி.

நிலையகம் - மனை.

நிலையம் - இருப்பிடம், நிலயம், பூமி.

நிலையழிவு - தோல்வி.

நிலையியற்பொருள் - அசைவில்லாதது.

நிவகம் - கூட்டம், திரள்.

நிவத்தல் - உயர்த்தல்.

நிவப்பு - உயர்ச்சி, எழுச்சி.

நிவர்தல் - ஓங்கல்.

நிவறல் - அணுக்கம், மொய்த்தல்.

நிவாசம் - இருப்பிடம்.

நிவாதகவசர் - தோயமாபுரத்தசுரர்.

நிவாரணம் - நீங்கல், விடுத்தல்.

நிவாரம் - தடை.

நிவிர்த்தன் - துறவி.

நிவிர்த்ததாளம் - நவதாளத் தொன்று.

நிவிர்த்தி - ஒழிப்பு, துறவு.

நிவேசம் - பிரவேசம், வீடு.

நிவேசனம் - ஊர், வீடு.

நிவேதனம் - ஒப்புவித்தல், சொல்லல், நைவேத்தியம்.

நிழவல் - சாயை தோன்றல், நிழல்செய்தல்.

நிழலி - காற்று.

நிழல் - அருள், ஒளி, குளிர்ச்சி, சாயை, செல்வம், நிழலென்னேவல், நீதி, நோய்.

நிழற்றல் - ஆதரித்தல், நிழல் செய்தல், நுண்மை, மென்சொல்.

நிறம் - ஒளி, குணம், மார்பு, வண்ணம்.

நிறுத்தல் - கொடாமை, நிலைப்படுத்தல், நிறுக்குதல்.

நிறுப்பான் - துலா, துலாவிராசி.

நிறுவல் - நிறுத்தல், நிலைபெறுத்தல்.

நிறை - அழிவின்மை, ஆடூஉக் குணம் நான்கினொன்று, இசை, உறுதிப்பாடு, தைரியம், துலாவிராசி, நியாயம், நிறையென்னேவல், நிறைவு, நீர்ச்சால், நூறுபலம், மாட்சிமை, முறையினிலைமை, வரையறை.

நிறைசெல்வன் - குபேரன்.

நிறைதல் } நிறைவு, பெருகுதல்.
நிறைந்திடல் }

நிறைதருதுறு - சீந்தில்.

நிறைமொழியாளர் - சான்றோர்.

நிறைவு - நிறைதல், மாட்சிமை.

நிற்றல் - அடங்கல், ஒழிதல், தரித்தல், நிலைநிற்குதல், நிற்குதல்.

நினதம் } ஒலி.
நினுதம் }

நினைதல் - நினைக்குதல்.

நினைத்தல் - ஆலோசித்தல், எண்ணல், தியானித்தல், மனதிற் கொள்ளல்.

நினைவு - எண்ணம், கருத்து, நினைப்பு, நோக்கம்.

நின் - உனது.

நின்மலன் - கடவுள், சுத்தன்.

நின்மலாவத்தை - மேலாலவத்தை அவை—நின்மலசாக்கிரம், நின்மல சொப்பனம், நின்மல சுழுத்தி, நின்மலதுரியம், நின்மல துரியாதீதம்.

நின்று - அசைச்சொல்.

நின்றுசிணுங்கி - சிறியாரணங்கை.

நின்றுபயனின்மை - நூற்குற்றம் பத்தினொன்று.

நின்றுபோதல் - அற்றுப்போதல், தரித்துப்போதல்.

நின்றும் - ஐந்தாம் வேற்றுமையி னீக்கவுருபுகளிலொன்று.

# நீ

நீ - ஓரெழுத்து, நீயென்னேவல், முன்னிலை ஒருமைச்சுட்டு.

நீகம் - தவளை, மேகம்.

நீகாசம் - உவமை, ஒப்பு.

நீகாமன் - நீகான்.

நீகாரம் - பனி.

நீகான் - மீகாமன்.

நீக்கப்பொருள் - ஐந்தாம் வேற்றுமை பொருகளினொன்று.

நீக்கம் - நீக்கல், நீளம், பிரிவு.

நீக்கல் - அகற்றல், கொல்லல், நீளல், மாறுபாடு, மாற்றல்.

நீங்கல்-இட்டம்,நீங்குதல்,பிரிதல், புறம்பு, போகல், மாறல்.

நீசக்கிரகம் - உச்சத்திற்கேழாமிடம்.

நீசத்தனம் - இழிதன்மை.

நீசத்தானம் - உச்சத்திற்கேழாமிடம்.

நீசம் - ஈனம், கொடுமை.

நீசர் - கீழ்மக்கள்.

நீடல் - நீளல்.

நீடாணம் - கறி.

நீடு - நீளம், நீளென்னேவல், நெடும்பொழுது.

நீடிதல் - தாண்டல், நீளல்.

நீடிநினைந்திரங்கல் - அகப்பொருட்டுறையினொன்று.

நீடுழி - ஊழி காலம்.

நீட்சி - நீளம், விசாலம்.

நீட்டலளவையாகுபெயர் - அளவையாகுபெயர் நான்கு வகையினொன்று.

நீட்டல் - ஈதல், நீட்டுதல்.

நீட்டல்மானம் - நீட்டலளவை.

நீட்டித்தல் - தாமதித்தல், நெடுதல், நெடும்பொழுது, முடித்தல்.

நீட்டு - நீட்டென்னேவல், நீலம், நெடும்பொழுது.

நீட்டுதல் - ஈதல், தாமதப்படுத்தல், நாட்போதல், நீளச்செய்தல்.

நீட்டுப்போக்கு - அகல நீளம், செல்வ முதலியவற்றின் விசாலம், திராணி, நெடுமை, வலிமை.

நீணெறி - நீண்ட வழி.

நீண்டோன் - விஷ்ணு.

நீதம் - நன்னெறி, நீதி.

நீதி - நன்னெறி, நியாயம், முறைமை, மெய்.

நீதிநூலன் - அருகன்.

நீதிநெறிவிளக்கம் - ஓர் நீதிநூல்.

நீதிபரன் - கடவுள்.

நீதியறிந்தோர் - மந்திரிகள்.

நீதிவழு - நியாயத்தப்பு.

நீத்தம்-தண்ணீர்விட்டான், வெள்ளம்.

நீத்தல் - ஒழுக்கம், துறவு, நீங்கல், பிரிதல்.

நீத்தவன் - அருகன்.

நீத்து - நீந்துபுனல்.

நீத்தோர் - முனிவர்.

நீந்தல் - கடத்தல், நீரினீந்தல்.

நீபம்-உத்திராட்டாதிநாள், கடப்பமரம், வெண்கடம்பு.

நீப்பு - துறவு, பிரிவு.

நீமம் - ஒளி.

நீம்பல் - வெடியுப்பு.

நீர - குணத்தையுடையன.

நீரடிமுத்து - நீரெட்டிமுத்து.

நீரம் - நீர்.

நீரரமகளிர்-நீரில்வாழுந் தெய்வப்பெண்கள்.

நீரலரி - ஓரலரி.

நீராரை - ஓராரை.

நீராழி - கடல்.

நீரிலாநிலம் - பாலைநிலம்.

நீருடும்பு - ஓர்வகை முசலி.

நீருமரி - ஓர்பூடு.

நீரெட்டிமுத்து - நீரடிமுத்து.

நீரொட்டி - நீராரை.

நீரோருகம் - தாமரை.

நீர் - கடல், குணம், சாறு, தண்மை, நீரென்னேவல், நீவிர், புனல், நீர், பஞ்சபூதத்தொன்று, பூராடநாள், முன்னிலைப் பெயர்.

நீர்க்கடம்பு - ஓர் கடம்பு.

நீர்க்கணம் - அட்டகணத்தொன்று.

நீர்க்கமலி - அல்லி.

நீர்க்காகம்<br>நீர்க்காக்கை } ஓர் காகம்.

நீர்க்காசம் - இளைநோய்.

நீர்க்காவி - கருங்குவளை.

நீர்க்கிராம்பு - ஓர் பூண்டு.

நீர்க்கீழ்<br>நீர்த்தானம் } உதயத்திற்கு நான்காமிடம்.

நீர்க்குண்டி - வெண்ணொச்சி.

நீர்க்குளிரி - ஓர் செடி.

நீர்க்குறிஞ்சா - ஓர் குறிஞ்சா.

நீர்க்கொழுந்து - நீர்முகம்.

நீர்க்கோழி - ஓர் நீர்வாழ்பறவை.

நீர்ச்சங்கு - ஓர் செடி.

நீர்ச்சின்னி - ஓர்செடி.

நீர்ச்சுண்டி - ஓர்சுண்டி, வறட்சுண்டி.

நீர்ச்செம்பை - ஓர்மரம்.

நீர்ச்சேம்பு - ஓர் செடி.

நீர்த்தானம் - நீர்க்கீழ்.

நீர்த்திவலை - நீர்த்துளி.

நீர்நாய் - நாய் மீன்.

நீர்நாள் - பூராடநாள்.
நீர்நிலை - குளம்.
நீர்நொச்சி - ஓர்நொச்சி.
நீர்பெய்கலன் - கமண்டலம்.
நீர்ப்பகண்டை - ஓர் பூடு.
நீர்ப்பஞ்சு - கடற்காளான்.
நீர்ப்பனை - புல்லாமணக்கு.
நீர்ப்பாசி - ஓர் பாஷாணம்.
நீர்ப்பூலா } ஓர்பூல்.
நீரீப்பூல் } ஓர்பூல்.
நீர்மீட்டான் } தண்ணீர் விட்டான்.
நீர்விட்டான் } தண்ணீர் விட்டான்.
நீர்முள்ளி - ஓர்முள்ளி, முள்ளி.
நீர்மேனெருப்பு - கல்லுருவி.
நீர்மை - ஒப்புரவை, குணம்.
நீர்வஞ்சி - ஓர்வகைப்பிரம்பு.
நீர்வல்லி - வெற்றிலைக்கொடி.
நீர்வள்ளி - நீர்விட்டான், நீர்வல்லி.
நீர்வாத்து - ஓர்வாத்து.
நீர்வேட்கை - நீர்த்தாகம்.
நீலகண்டன் - சிவன்.
நீலகாசம் } ஓர் நேத்திரரோகம்.
நீலமணிகாசம் } ஓர் நேத்திரரோகம்.
நீலகிரி - அட்டபருவதத்தொன்று, அத்தமிக்குமலை.
நீலக்காவி - அவுரி.
நீலந்தர் - இராகம் பாடுவோர்.
நீலபாஷாணம் - ஓர் வைப்புப் பாஷாணம்.
நீலமணி - கண்ணிற்கருமணி, நீலரத்தினம், மரகதமணி.
நீலமேனியன் - நீலவண்ணன்.
நீலம் - இருள், கருங்குவளை, கறுப்பு, காற்று, துருசு, நஞ்சு, நீல நிறம், நீலமணி, பனை.
நீலவண்ணன் - விட்டுணு.
நீலன் - ஓரரசன், ஓர் வானரப் படைத்தலைவன், சனி.
நீலாஞ்சனம் - கல்லீயம், துருசி.
நீலாம்பரன் - பலபத்திரன்.
நீலாம்பரி - ஓரிராகம்.
நீலி - அவுரி, கருநொச்சி, கறுப்பு, காளி, துர்க்கை, பார்வதி, மேகவண்ணப்பூவுள்ளமருதோன்றி மரம்.
நீலோற்பலம் - கருங்குவளை.
நீல் - காற்று, நீலம், வாதம்.
நீவரம் - சேறு, நீர், வியாபாரம்.
நீவல் - தடவல், துடைத்தல்.
நீவாரம் - வனநெல், செந்தினை, நாடு.
நீவான் - மீகாமன்.
நீவி - கொய்சகம், சீலை.
நீவியம் - சீலை.
நீவுதல் - தடவுதல், தட்டுதல், துடைத்தல், பூசுதல்.

நீழல் - ஒளி, நிழல், நோய்.

நீளம் - தூரம், நெடுமை.

நீளல் - ஓடல், தூரம்.

நீளிடை - சேய்மை.

நீள் - உயர்ச்சி, ஒளி, நீளென்னேவல்.

நீறணிந்தோன் - சிவன்.

நீறு - சாம்பர், சுண்ணம், திருநீறு, துகள், நீறென்னேவல், பராகம், புழுதி விபூதி.

## நு

நு - ஆயுதப்பொது, ஓரெழுத்து, ஐயம், சங்கை, விறுவென் பவைகளைக் காட்டுமோருபசருக்கம், தியானம், தோணி, நிந்தை, நேரம், புகழ்.

நுகம் - நுகத்தடி.

நுகர்ச்சி - அநுபவம், உண்டல்.

நுகர்தல் - அநுபவித்தல், புசித்தல், விழுங்கல்.

நுகைவு - இளக்கம், தணிவு, தளர்வு, ம்ருது.

நுங்கல் - விழுங்கல்.

நுங்கு - பனநுங்கு.

நுங்கை - உன்றங்கை.

நுசுப்பு - இடை.

நுடங்கல் - அணுகல், ஆடல், துவளல், முடங்கல்.

நுட்பம் - ஓரலங்காரம், காலநுட்பம், நுண்மை, பொருள் நுணுக்கம்.

நுணக்கம் - நுணங்கல்.

நுணங்கல் - துவளல், நுண்மை, முடங்கல், மெலிதல்.

நுணங்கு - தேமல், நுணங்கென்னேவல், நுண்மை.

நுணலை - ஓர்மீன், தவளை.

நுணல் - தவளையினோர்பேதம்.

நுணவு - தணக்கமரம், நுணாமரம்.

நுணவை - நுணவு.

நுணா - நுணாமரம்.

நுணித்தல் - குணம், நுணுக்கல்.

நுணுக்கம் - கூர்மை, நுண்மை.

நுணுக்கல் - நுண்மையாக்கல்.

நுணுங்கல் - நுண்மை.

நுணுங்கு - நுணுங்கென்னேவல், நுண்மை.

நுண் - அணு, நுண்மை, அளிவு.

நுண்ணறிவு - கூரிய.

நுண்ணிடை - சிற்றிடை, பெண்.

நுண்ணியர் - அறிவுடையோர், பெரியோர், மந்திரிகள்,

நுண்பொடி - புழுதி.

நுண்பொருள் - நுண்ணியபொருள்.

நுண்மை - கூர்மை, நுட்பம், நேர்த்தி.

நுதம் - துதி.

நுதலணி - சுட்டி, நுதற்சுடிகை.

நுதலல் - கருதல், குறித்தல், சொல்லல்.

நுதலியபொருள் - நூலிற்சொல்லிய பொருள்.

நுதல்-சொல், நுதலென்னேவல், நெற்றி, புருவம்.

நுதற்சுடிகை - நுதலணி.

நுதற்கண் - நெற்றிக்கண்.

நுதி - முனை, வணக்கம்.

நுதிவிழுதல் - பஞ்சாங்க வாக்கியத்துக்கு வேண்டிய திருத்தம், பஞ்சாங்க வாக்கியம்.

நுதுத்தல் - அடக்கல், அவித்தல், ஆசையடக்கல்.

நுந்துதல்-தள்ளுதல், தூண்டுதல்.

நுந்தை - உன்றந்தை.

நுபம் - எருக்கு.

நுமன் - உம்மவன்.

நும் - விரவுத்திணை முன்னிலைப் பன்மை, சாரியை, உம்முடைய, எல்லாரும்.

நுரை - குமிழி, நுரை, நுரையென்னேவல், வெண்ணெய்.

நுரைத்தல் - நுரைக்குதல்.

நுவணம் } கல்விநூல், திணைமாவு,
நுவணை } பஞ்சினூல்.

நுவலல் } சொல்லல், பாடஞ்
நுவற்சி } சொல்லலின் வரலாறு.

நுவலாநுவற்சி - ஓரலங்காரம்.

நுவல்-சொல், நுவலென்னேவல்.

நுவற்சி - சொல்லல், நுவலல்.

நுழை - சிறுவாயில், துவாரம், நுண்மை, நுழையென்னேவல், பலகணி.

நுழைத்தல் - நுழைவித்தல்.

நுளம்பு - கொசுகு, மின்மினி.

நுளை - ஈனம்.

நுளைச்சி - நெய்தனிலப்பெண்.

நுளையர் - நெய்தனிலமாக்கள்.

நுனி - நுண்மை, நுனியென்னேவல், முனை.

நுனித்தல் - உற்றுராய்தல், கூர்மை செய்தல்.

நுனை - முனை.

நுன் - உனது.

## நூ

நூ - ஆபரணம், ஓரெழுத்து.

நூக்கல் - நூக்கம், தோதகத்திமரம், நூக்கு, செலுத்தல், தள்ளல், நெய்வார்கருவியிலொன்று.

நூங்கல் - பெருத்தல், மிகுதல்.

நூங்கு - பெருமை, மிகுதி.

நூடி - சிற்றேலம்.

நூதனம் - புதுமை.

நூதனன் - புதியோன்.

நூபம் - இடபராசி, எருக்கு, எருது.

நூபுரம் - காற்சிலம்பு, பாதகிண்கிணி.

நூப்பு - தணிப்பு.

நூரல் - அவிதல், ஆறல், பதனழிதல்.

நூலாசிரியன் - நூலாக்கியோன்.

நூலியாப்பு - நூலமைக்கும்விதம், அஃது—தொகுத்தல், விரித்தல், தொகைவிரி, மொழிபெயர்ப்பு.

நூலுத்தி - தந்திரவுத்தி.

நூலுரையுணர்வோர் - ஒல்லுநர்.

நூலோர் - அறிஞர், அந்தணர், மந்திரிகள்.

நூல் - ஆலோசனை, இழை, எண்ணம், கல்விநூல், முதனூல், வழிநூல், சார்புநூல், நூலென்னேவல்.

நூல்வல்லோர் - கல்விமான்கள், மந்திரிகள்.

நூவு - எள்.

நூழில் - குவித்தல், கொட்டிக்கொத்தான், கொலை, படர்கொடி, யானை.

நூழை - சிறிதுவாரம், நுண்மை.

நூறல் - அழித்தல்.

நூறு - ஓரெண், சதம், நூறென்னேவல்.

நூறை - மலங்குமீன்.

நூற்பயன் - நூலினது பயன், அவை — அறம், பொருள், இன்பம், வீடு.

நூற்பா - அகவல், சூத்திரப்பா.

நூற்புறனடை - நூலின் புறத்திலமைக்குங் காப்புமொழி.

நூற்பொருள் - நூலிற்சொல்லப்படுபொருள்.

நூற்றந்தாதி - ஓர் பிரபந்தம்.

நூற்றல் - நூற்குதல்.

நூற்றீட்சை - சாஸ்திரதீட்சை.

நூனம் - குறைவு, நிச்சயம்.

நூனயம் - கல்விநயம், நூலின்மேன்மை.

நூனாழி - நாடா.

நூன்முகம்-நூற்றுறை, பாயிரம்.

நூன்முடிவு - நூலினது பொருளொக்கம்.

## நெ

நெகல் - கனிதல், நெகிழ்தல்.

நெகிழம் - பாதச்சிலம்பு.

நெகிழ்ச்சி - இளக்கம், தளர்ச்சி.

நெகிழ்தல் - அழுந்தல், அவிழ்தல், இரங்குதல், இளகுதல், உருகுதல், குழைதல், தளரல், நழுவல், நுகைத்தல், பிரிதல், பொசித்தல், மலர்தல்.

நெகிழ்தம் - குழைதல், மலர்தல்.

நெக்குடைதல் - நெகிழ்ந்துருகல்.

நெக்குரோதம் - ஆல்.

நெச்சி - கடுக்காய்.

நெஞ்சகம் - நெஞ்சு.

நெஞ்சறிவிளக்கம் - ஓர் நூல்.

நெஞ்சு - மனம், மார்பு.

நெஞ்சுவிடுதூது - ஓர் பிரபந்தம், சைவசித்தாந்த நூல் பதினன்கி லொன்று.

நெடநெடெனல் - ஈரடுக்கொலிக் குறிப்பு.

நெடி - சிள்வண்டு, நாற்றம்.

நெடித்தல்-பொழுதுநீட்டித்தல்.

நெடியவட்டம் - மரவட்டணம்.

நெடியோன் - துளசி, விட்டுணு.

நெடிலடி - ஐஞ்சீரடி.

நெடிலி - ஓர் கடற்புள்.

நெடிலெதுகை-அடிதோறு நெடி லெழுத்தெதுகையாய்வருவது.

நெடில் - நீளம், நெட்டெழுத்து, மூங்கில்.

நெடுங்கழுத்தன் - ஒட்டகம்.

நெடுங்குரலன் - கழுதை.

நெடுங்கேடு - தீராக்கேடு.

நெடுநீர் - கடல்.

நெடுந்தகை - பெரியோன்.

நெடுந்தகைமை - மேன்மை.

நெடுந்துயில் -சாவு.

நெடுமால் - விட்டுணு.

நெடுமை - நீளம், பெண்மயிர்.

நெடுமொழி - தன்மேம்பாடுரைத் தல், புகழ்ச்சி.

நெடும்பா - ஆடாதொடை.

நெட்டி - நெட்டிச்செடி.

நெட்டிசை - நீண்டொலிக்கு மிசை, விருத்தம்.

நெட்டிலிங்கு - அசோகு.

நெட்டில் - மூங்கில்.

நெட்டு - இணுக்கு, காம்பு, குலை, சீய்த்தல், தள்ளுதல்.

நெட்டுயிர் - நெட்டொலிவுயி ரெழுத்து, அஃது—இரண்டு மாத்திரையொலிப்பது.

நெட்டெழுத்து - கையொப்பம், நெடிலெழுத்து.

நெட்டை - நெடுமை, நெட்டி, முழுவெலும்பு.

நெத்தகர் - ஓர்பூடு.

நெய் - இரத்தம், சித்திரைநாள், நிணம், நெய், நெய்யென்னே வல், நெய்க்கடல், சத்தசமுத் திரத்தொன்று.

நெய்க்குறி - தேரையர் செய்த ஓர் வைத்திய நூல்.

நெய்க்கொட்டான் - பூவந்தி.

நெய்ச்சட்டி-குவளை, செங்கழுநீர்.

நெய்ச்சிட்டி - சிற்றிலைச்செடி.

நெய்ச்சுட்டி - ஓர் கீரை.

நெய்தல் - ஆடை முதலிய நெய் குதல், ஆம்பல், கடலுங் கடல் சார்ந்த இடமும், திணை.

நெய்தற்கருப்பொருள் - நெய்தநிலவினைப்பொருள்.

நெய்தற்குப்பொருள் - நெய்தனிலத்துற்பத்திபொருள்கள், அவை வருணன் முதற் கடலாடலீருயபதினன்கு.

நெய்தற்பதி - நெய்தற்றலைவன், நெய்நிலத்தூர்.

நெய்தற்பறை - சாப்பறை, நெய்தனிலப்பறை.

நெய்தற்றலைவன் - நெய்தனிலத்தலைவன், வருணன்.

நெய்தற்றிறம் - நெய்தற்பண்.

நெய்தற்றெய்வம் - வருணன்.

நெய்தனிலத்தலைவன்-சேர்ப்பன்.

நெய்தனிலத்தியாழ்-விளரியாழ்.

நெய்தனிலத்தினீர் - உவர்நீர்.

நெய்தனிலத்தூர் - பாக்கம்.

நெய்தநிலப்பறவை-கடற்காக்கை.

நெய்தனிலப்பறை - பம்பை.

நெய்தனிலப்பெண் - அளத்தி, நுளைச்சி, பரத்தி.

நெய்தனிலமரம் - அடம்பு, கோங்கு, தாழை, புன்னை, முள்ளி.

நெய்தனிலமாக்கடொழில் - கடலாடல், மீன் உப்புப்படுத்தல்.

நெய்தனிலமாக்கள், நெய்தன்மாக்கள் } அளவர், நுளையர், பரதவர்.

நெய்தனிலமாக்களுணு - விலைக்குப் பெற்றன.

நெய்தன்முதற்பொருள்- கடலுங் கடல்சார்ந்தவிடமும், சிறுபொழுதாய வெற்பாடும், பெரும்பொழுதாறும்.

நெய்தை - பெருமை.

நெய்த்தோர் - இரத்தம்.

நெய்ப்பீர்க்கு - நுரைப்பீர்க்கு.

நெய்யரி - பன்னடை.

நெய்யல் - நெய்தல்.

நெய்வார் - நெசவுகாரர்.

நெரிதரல் - ஓடல், சாய்தல்.

நெரிதல் - சாய்தல்.

நெரித்தல் - நெரியச்செய்தல்.

நெரிநெட்டி, நெரிநெட்டிக்கோரை } சம்பம் புல்.

நெரிமீட்டான் - ஓர் பூண்டு.

நெரிவு - நெரிதல்.

நெருக்கடி - இக்கட்டு, கடுமை, பலவந்தம், வருத்தம்.

நெருக்கம் - இடைஞ்சல், இடைவிடாமை, ஒடுக்கம், கிட்டுமானம், நெருங்கல்.

நெருக்கல் - நெருக்குதல்.

நெருங்கல் - உறுதிச்சொல், கொல்லல், செறிவு.

நெருஞ்சில் - ஓர் முட்பூண்டு.

நெருடல் - இழைமுதலிய நெருடல், உறுதித்தடவல், வஞ்சித்தல்.

நெருநல் - முன்னை நாள்.

நெருப்பு - தீ.

நெருப்புக்கண் - சிவனது நெற்றிக்கண்.

நெருப்புக்கல் - தீத்தட்டிக்கல்.

நெருப்புறுவிறகு - நெருப்புக் கட்டை.

நெரேலெனல் - ஒலிக்குறிப்பு.

நெல் - ஓர் பயிர்.

நெல்லி - செல்லிமரம்.

நெளி - கைவிரலணி, நெளி யென்னேவல்.

நெளித்தல் - நெளிதல்.

நெளிர் } பேசலாவெழு
நெளிர்தல் } மொலி.

நெறநெறெனல் - ஈரடுக்கொலிக் குறிப்பு.

நெறி - ஒழுங்கு, கற்பு, சன்மார்க் கம், செவ்வை, நீதி, நெறி யென்னேவல், வழி.

நெறித்தல் - செவ்வே நிற்றல்.

நெறியிலார் - கீழ்மக்கள்.

நெற்றி - நுதல், படைவகுப்பு.

நெற்றித்தலம் } நெற்றி.
நெற்றியந்தலம் }

நெற்று - பழமுதிர்ச்சி.

நென்னல் - முன்னை நாள்.

## நே

நே - ஓரெழுத்து, நேயம்.

நேசகன் - வண்ணான்.

நேசம் - நேயம்.

நேசசன் - அன்பன்.

நேடல் - தேடல், விரும்பல்.

நேத்திரசம் - கண்ணீர்.

நேத்திரம் - கண், பட்டுச்சீலை.

நேத்திராஞ்சனம் - கண்மருந்து.

நேபாலிகை - ஓர் பாஷாணம்.

நேபாளம் - ஓர்தேசம்.

நேமம் - அணுப்பு, சாயங்காலம், நியமம், நேரம், பங்கு, பிளப்பு, முறை, மேல், வேர், வேலி.

நேமி - ஓர்புள், கடல், சக்கரம், தேருருளை, பூமி, மூங்கில், வட் டம்.

நேமிநாதம் - ஓரிலக்கணநூல்.

நேமிநாதன் - அருகன், கடவுள், விட்டுணு.

நேமிப்புள் - சக்கரவாகப்புள்.

நேமியான் } விட்டுணு.
நேமியோன் }

நேமிவல்லவன் - அரசன், கடவுள்.

நேயம் - அன்பு, உறவு, எண்ணெய், நன்மை, நெய், நிலப்பனை.

நேர - உவமைச்சொல்.

நேரசை - குற்றெழுத்தேனும் நெட்டெழுத்தேனும் தனித்தும் ஒற்றடுத்தும் வருவது.

நேரசைக்கலித்துறை - நேரசையாய்த் தொடங்கும் கலித்துறை.

நேரடி - அளவடி.

நேரம் - காலம்.

நேரலர், நேரார் - பகைவர்.

நேரி - ஓர்மலை.

நேரிசம் - எறிபடை.

நேரிசைக்கலிப்பா - கலிப்பாவினோர்பேதம்.

நேரிசைச் சிந்தியல் வெண்பா - மூன்றடியாகி நேரிசை வெண்பாப்போல விரண்டாமடியினிறுதி தனிச்சொற் பெற்று வருவது.

நேரிசையாசிரியப்பா - ஈற்றயலடி மூச்சீராக மற்றையடியெல்லா நாற்சீராக வருவது.

நேரிசையொத்தாழிசைக்கலிப்பா - ஓர்வகைக் கலிப்பா அஃது— தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகமென்னும், நான்குறுப்புக்கொண்டுவருவது.

நேரிசைவெண்பா - வெண்பாவிலோர்வகை.

நேரியன், நேரிவெற்பன், நேரிறை - சோழன்.

நேரேடம், நேரேடு - காவன்மரம்.

நேரொன்றாசிரியத்தளை - நேரும் நேரும் ஒன்றுசிரியத்தளை.

நேர் - உடன்பாடு, உவமை, செவ்வை, நீளம், நுட்பம், நேரசை, நேரென்னேவல், பாதி.

நேர்தல் - ஈதல், உடன் படல், எதிர்த்தல், கிட்டல், பொருதல், வேண்டல்.

நேர்த்தார் - சிநேகிதர்.

நேர்பாடு - நீளம்.

நேர்பு - எழுச்சி, நீளம்.

நேர்மை - இணக்கம், செவ்வை, நிதானம், நுண்மை.

நேர்வளம் - செவ்வழி யாழ்த்திறம், பாலையாழ்த்திறம்.

நேர்வாளம் - ஓர் மரம்.

நேர்வான் - சித்திரைநாள்.

## நை

நை - இகழ்ச்சிக்குறிப்பு, ஓரெழுத்து, நையென்னேவல்.

நைசிகம் - ஓர் மருந்து, காக்கை, நசியம்.

நைடதம் - ஓர் காவியம், நிடதம்.

நைதல் - இரங்குதல், கெடுதல், தளர்தல், வாடல்.

நைதிகை - முல்லைக்கொடி.

நைஞெனல் - இரக்கக் குறிப்பு, மெலிவின் குறிப்பு.

நைத்திகம் - நித்தியத்துவம்.

நைமிசம் } ஓராரணியம்.
நைமிசாரணியம் }

நைமித்தியம் - விசேடாராதனை.

நையாயிகம் - ஓர் மதம்.

நையாயிகன் - நையாயிகசமயி.

நைருதி - நிருதிதிசை.

நைவளம் - குறிஞ்சியாழ்த்திறம்.

நைவு - நைதல்.

நைவேத்தனம் - நிவேதனம்.

நைவேத்தியம் - காணிக்கை.

## நொ

நொ-ஓரெழுத்து துன்பம், நொவ்வென்னேவல், நோய்.

நொசிவு - நுண்மை, வருத்தம்.

நொச்சி - ஓர் செடி, சிற்றூர், நொச்சிமாலை (தன்னரண்காப்பார்க்குமாலை), மதில்.

நொச்சிமாலை - ஓர் பிரபந்தம், நொச்சி.

நொடி - காலநுட்பம், சொல், நொடியென்னேவல்.

நொடித்தல் - சொல்லல், நொடிக்குதல்.

நொடை - விலை, விற்றல்.

நொண்டல் - நொண்டுதல், முகத்தல், விழுங்கல்.

நொண்டி-ஓர் நாடகவகை, கான்முடவன், பொய்க்கால்.

நொதி - பெருஞ்சேறு.

நொதுத்தல் - அவித்தல்.

நொதுமலர் - அயலோர்.

நொதுமல் - அயல்.

நொய் - மெய்மை.

நொய்தல் - நுண்மை.

நொய்தெனல் - சீக்கிரக்குறிப்பு.

நொய்மை-உருக்கம், எண்வகையூறிஞென்று, எளிமை, கேடு, தளர்வு, நொய்வு, மிருது, வறுமை.

நொய்யசொல் - நிந்தை.

நொய்யெனல் - நுண்மையின் குறிப்பு.

நொய்வு - நொய்மை.

நொலை } அப்பவர்க்கம்.
நொலையல் }

நொவ்வு - தளர்வு, பொய்மை வருத்தம்.

நொள்கல்-அச்சக்குறிப்பு, முகத்தல்.

நொள்ளல் - கொசுகு, நுளம்பு.

நொள்ளை - குருடு, நாகரவண்டு.

நொறில் - அடக்கம், விரைவு.

நொறுங்கு - நொய்மை, நொறுங்கென்னேவல்.

நொறுங்குதல் - நொய்தாதல்.

நொன்னை - சரசம்.

## நோ

நோ - ஓரெழுத்து, நோதல், நோவென்னேவல்.

நோக்கம்-அருமை, அழகு, உயர்ச்சி, கண்பார்வை, விருப்பம்.

நோக்கர் - கழைக்கூத்தர்.

நோக்கல் - காணல், காத்தல், கருத்துச் செலுத்தல்.

நோக்கு - அழகு, கண், நோக்கென்னேவல்.

நோண்டல் - கிண்டல், தோண்டல், மூகத்தல்.

நோதல் - துக்கித்தல், துன்புறல், நோயுறல், வறுமை.

நோயெச்சம் - நோய்க்குறை.

நோய் - துன்பம், வருத்தம், வியாதி.

நோய்முகன் - சனி.

நோலாமை - தவமின்மை, பொறையின்மை.

நோவு - நோய்.

நோழிகை - நூலிற்பந்து.

நோற்பு-தவம்,நோற்றல்,பொறுத்தல்.

நோற்றல் - தவஞ்செய்தல், பொறுத்தல்.

நோனமை - தவமின்மை, நோலாமை, பொருமை.

நோனர் - தவமிலார், பகைவர்.

நோன்பு - உபவாசம், தவம்.

நோன்மை - தவம், பெருமை, பொறுமை, வலி.

நோன்றல் - தள்ளல், நிலை நிறுத்தல், பொறுத்தல்.

நோன்ருள் - வலியகால்.

## ப

ப - ஓரெழுத்து, ஒருமாவின்குறி, காற்று, சாபம்,பெரும் காற்று.

பஃருழிசைக்கொச்சகக்கலிப்பா- பல தாழிசைகளோடு மற்றை யுருப்புகளையும்பெற்றுவருவது.

பஃருழிசைவெண்பா-ஓர் வெண்பா.

பஃறி-இரேவதி,ஓடம்,மரக்கலம்.

பஃறுளி - குமரியாற்றிற்குத் தெற்கேயுள்ள தோராறு.

பஃறொடைவெண்பா-ஓர் வெண்பா.

பகடக்காரன் - அதட்டி, எத்தன், தந்திரி, வெளிவேஷக்காரன்.

பகடம் - சிலம்பம், தந்திரம், வெருட்டு, வெளிவேஷம்.

பகடு - ஆண்யானை, இடபம், எருமைக்கடா, ஓடம், தெப்பம்,பெருமை, பொதியெருது.

பகடை - அதிர்ஷ்டம், சூதாயங்களிலொன்று.

பகட்டு - அதட்டு, தந்திரம்,பகட்டென்னேவல், பார்வை, மினுக்கம், வெருட்டு, வெளிவேஷம்.

பகண்டை - இலுகிலுப்பை, சிவற் பக்ஷி.

பகபகெனல் - ஈரொலிக்குறிப்பு.

பகம் - அவாவின்மை, அழகு, ஈச்சுரத்தன்மை, கீர்த்தி, செல் வம், ஞானம் வீரியமாதி யறு குணம், கொக்கு, பெண்குறி, மகத்துவம், முக்தி.

பகரம்-அலங்காரம், ஓரெழுத்து, சிறப்பு, மினுக்கம்.

பகர்ச்சி - சொல்.

பகர்தல் - சொல்லல், விற்றல்.

பகர்வு - பகர்தல்.

பகலவன் - சூரியன், பரணிநாள்.

பகலோன் - பகலவன்.

பகல் - ஒளி, சூரியன், தினம், நடு, நாள், நுகத்திலாணி, பகுத்தல், பிரிதல், பிளத்தல். மத்தியானம், மூர்த்தம்.

பகல்மானம் - பகனாழிகை.

பகவதி-தருமதேவதை, துர்க்கை, பார்வதி.

பகவதிநாள் - பூரநாள்.

பகவற்கீதை - மகாபாரதத்தி னோர்பாகம்.

பகவற்பத்தன் - தேவபத்தன்.

பகவன் - அயன், அரன், அரி, அருகன், கடவுள், குரு, புத்தன்.

பகவான் - கடவுள், துவாத சாதித்தரிலொருவன், சித்திரை.

பகவு - துண்டு, பங்கு, பிளப்பு, வெடியுப்பு.

பகழி - அம்பிற்குதை, அம்பு.

பகன் - ஓரசுரன், துவாதசாதித் தரிலொருவன்.

பகன்றை - இலுகிலுப்பை, சீலே தை, சீந்தில்.

பகாசுரவைரி - வீமன்.

பகாப்பதம் - பகுப்பிற் பயன் படாப்பதம்.

பகாப்பொருள் - கடவுள்.

பகாரி - கண்ணன், வீமன்.

பகாலம் - கபாலம்.

பகிடி - பரிகாசம்.

பகிரண்டம் - பேரண்டம்.

பகிர் - பகிரென்னேவல், பகுப்பு, பங்கு, வெடியுப்பு.

பகிர்தல் - பங்கிடல், பிளத்தல்.

பகினி - உடன் பிறந்தாள்.

பகீரதன் - சூரியகுலத்தரசரி லொருவன்.

பகீரதி - கங்கை.

பகு - பகுவென்னேவல், பலது, வெகு.

பகுதி - இயல்பு, குடியிறை, பகுத் தல், பகுபதத்தோருறுப்பு, பங்கு, படை, பிரிவு, பிரகிருதி.

பகுத்தல் - ஈதல், தறித்தல், பங் கிடல், வெட்டல்.

பகுத்தறிதல் - பிரித்தறிதல்,மனநியாயமறிதல்.

பகுத்தறிவு - மனநியாயம்,நன்மை தீமை, தெளியுமறிவு.

பகுபதம் - பகுதி விகுதி முதலிய வுறுப்பினானியன்றபதம். அஃது இருவகை பெயர்ப்பகுதம், வினைப்பகுபதம்.

பகுபதவுறுப்பு - பகுபதத்தின் உறுப்பு—(பகுதி,விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி விகாரம்).

பகுப்பு - பகுதி, பகுத்தல்,விரிவு.

பகுவாய் - அகன்றவாய், பிளா.

பகுளசத்தமி - கிருட்டிண பக்கச் சத்தமி.

பகுளம் - கிருட்டிண பக்கம்.

பகை - பகை, பகையென்னேவல், விரோதம்.

பகைஞர்-சத்துருக்கள், பகைவர்.

பகைத்தல் - பகைகொள்ளல், முரணல்.

பகைத்தானம் - ஆறுமிடம், கிரக நிலையைந்தினொன்று.

பகைத்தொடை-முரண்டொடை

பகைநிலைகவர்தல் - பகைவரது காலிகளைக்கோடல், அஃது—எண்வகை வெற்றியினொன்று.

பகைப்பு- பகைத்தல், விரோதம்.

பகைமுன்னெதிருன்றல் - பகைவர்க்கு முன்னெதிர்த்தல், அஃது—எண்வகை வெற்றியினொன்று.

பகைமேற்செல்லல் - மாற்றுரைப் பொரப்போதல்,இஃது—எண்வகை வெற்றியினொன்று.

பகைமை - விரோதம்.

பகையகம் - போர்க்களம்.

பகோளம் - வானவட்டம்.

பக்கணம் - உண்டல், ஊர், பண்டம்விற்குமிடம், வேடர், வீதி.

பக்கம் - அருகு, இடம், இறகு, கோட்பாடு, சமீபம், நட்பு.

பக்கரசம் - மது.

பக்கரை - அங்கவடி, சேணம்.

பக்கர் - சுற்றத்தார்.

பக்கி-பக்கியென்னேவல்,பறவை

பக்கித்தல் - உண்டல், புசித்தல்.

பக்குவம் - அமைதல், ஆத்ம பரிபாகம், பருவம், முதிர்வு.

பக்குவர் - மூவகைப் பக்குவமுடையோர் (கருமகாண்டிகர், ஞானகாண்டிகர், பத்திகாண்டிகர்.)

பக்குவாசயம் - அன்னாசயம்.

பக்குவாத்மா - பரிபாகி.

பங்கசம் - பங்கயம்.

பங்கசாதம் - தாமரை.

பங்கம் - அசைவு, அச்சம், ஈனம் எத்து, அலை, குழைசேறு, குளம், குற்றம், துண்டு, தூசு, தோல்வி, நீர்ப்பாய்ச்சல், நோய், பந்தயம், பயம், பழுது, பிளப்பு, பின்னம், புழுதி, முடம், வத்திரம், வெட்கம், வேறுபாடு.

பங்கம்பாலை } ஆடுதின்னப்
பங்கம்பாளை } பாலை.

பங்கயத்தவன் - பிரமன்.

பங்கயம் - தாமரை.

பங்கயன் - சூரியன், பிரமன்.

பங்கயாசனன் - பிரமன்.

பங்கி - ஆண்மயிர், கஞ்சாமயிர், பிரிவு, புறமயிர்.

பங்கு - கூட்டு, கூறு, சனி, பாதி, முடம், முடவன்.

பங்குசம் - தலைக்கோலம்.

பங்குனன் - அருச்சுனன், பங்குனி.

பங்குனி - உத்திரநாள், ஓர் மாதம்.

பங்கூரம் - மரமஞ்சள்.

பங்கேருகம் - தாமரை.

பசத்தல் - துன்பத்தானிறம் வேறுபடல், பசுகையாதல், மங்கல்.

பசப்பல் - பசப்புதல்.

பசப்பு - ஈரடிப்பிடிப்பு, ஏய்ப்பு, சாரம், பசலை, பச்சைநிறம், பொன்மை, மயப்பு.

பசமந்திரம் - மரமஞ்சள்.

பசலை - தேமல், பசப்பு.

பசளை - எரு முதலிய வுரம், ஓர் கீரை.

பசனம் - சங்கோசை, சமைத்தல், சிற்றின்பம், வணக்கம்.

பசனை - சேவை.

பசி - அக்கினி உதரக்கனல், பசியென்னேவல்.

பசித்தல் - உதரக்கனலெழும்பல்.

பசிரி } ஓர் கீரை.
பயிரி }

பசு - இடப இராசி, உயிர், எருது, பசு, யாகத்துக்குரியவாடு, (ஆன்மா).

பசுகரணம் - ஆத்மகரணம்.

பசுக்காவலர் - வைசியரில் ஒரு வகையர் (இடையர்).

பசுங்கதிர் - இளங்கதிர், சந்திரன்.

பசுங்கதிர்த்தே - சந்திரன்.

பசுங்கரந்தை - ஓர் கரந்தை.

பசுங்கொத்தான் - ஓர் கொத்தான்.

பசுதருமம் - கைமைப்புணர்ச்சி, பரதாரப்புணர்ச்சி, பொதுமக்கடன்மை, மனுநீதிவழு, மிருகநடை.

பசுத்துவம் - ஆத்துமதத்துவம், மிருகத்தனம்.

பசுநரம்பு - பச்சைநிறநரம்பு.

பசுநா - பிராய்மரம், வில்வம்.

பசுந்து-அழகு, நேர்த்தி, பசுமை, மேன்மை.

பசுந்தக்காளி - ஓர் தக்காளி.

பசுபதி - அஷ்டமூர்த்திகளி லொருவன், சிவன்.

பசுபந்தம் - ஓர் யாகம்.

பசுபாசம் - மூலமலம்.

பசுபாலனம் - பசுக்காத்தல்.

பசுபாலன் - கோபாலன்.

பசுபாவம்-ஆத்மவியல்பு, உயிர்க் குச்செய்யும் பாவம்.

பசுமுன்னை - ஓர் முன்னை.

பசுமை - ஈரம், உண்மை, குளிர் மை, சாரம், சிறப்பு, செல்வம், செல்வி, பச்சை,பொன்னிறம், மெய்.

பசும்பிடி - பச்சிலை மரம்.

பசும்புல் - பச்சைப்புல், பயிர்.

பசை - அன்பு, ஆசை, இலாபம், ஈரம், ஒட்டும்பசை, குழைவு, சாரம், செந்தளிப்பு, தளைவு, பசையென்னேவல், பற்று, விருப்பம்.

பசைதல் - அன்புகொள்ளல்,ஒட் டுதல், சாரமுடைத்தாதல், பசையாக்கல், பிசைதல்.

பசைந்தார் - சிநேகிதர்.

பசையற்றவன் - அமித்திரன், வறியன், வன்கண்ணன்.

பசைவு - அன்பு, நட்பு, பிசைதல்.

பச்சிமம் - நெற்றி, பின், மேற்கு.

பச்சிலை - ஓர்மரம், பசும்பிடி.

பச்சை - அவியாதது, இளமை, இன்பம், ஈரம், ஓர் நிறம், ஓர் புதர், தோல், பசுமை, புதன், மரகதம், மிகுதிக்குறிப்புச் சொல், மூலபலவருக்கம், வாசனை, விஷ்ணு.

பச்சைச்சடையன் - வயிரவன்.

பஞ்ச - ஐந்து.

பஞ்சகதி - துரககதியைந்து, அவை—மயூரகதி, மல்லகதி, வானரகதி, விடபகதி, வியாக் கிரகதி.

பஞ்சகந்தம் - வாசனைப்பொரு ளைந்து, அவை—இலவங்கம், ஏலம், கருப்பூரம், சாதிக்காய், தக்கோலம்.

பஞ்சகம் - ஐந்தின் கூட்டம், யுத்தகளம்.

பஞ்சகம்மாளர் - ஐவகைக்கம்மா ளர், அவர்—கன்னர், கொல்லர், சிற்பர், தச்சர், தட்டார்.

பஞ்சகலை-ஐவகைக்கலை, அவை— சாந்தி,சாந்தியாதீதம்,நிவிர்த்தி, பிரதிஷ்டை, வித்தை, (தத் துவம்).

பஞ்சகவ்வியம் - கோமயம், கோமூத்திரம், தயிர், நெய், பால், என்பன.

பஞ்சகன்னிகள் - ஐந்து கன்னிகைப்பெண்கள்; அவர்—அகலியை, சீதை, தாரை, துரோபதை, மந்தோதரி.

பஞ்சகாலம் - கருப்புக்காலம்.

பஞ்சகாவியம் - ஐவகைக்காப்பியம், அவை—குண்டலகேசி, சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி.

பஞ்சகிருத்தியம் - பிரபஞ்சத்தொழிலைந்து, அவை—ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோபாவம், அனுக்கிரகம்.

பஞ்சகுத்தம் - ஆமை.

பஞ்சகோசம் - அன்னமுதலியவைந்தினுலாயகூடு, அவை—அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம்.

பஞ்சகோலம் - சித்திரமூலம், சுக்கு, செவ்வியம், திப்பிலி, திப்பிலிமூலம்.

பஞ்சக்கருவி - ஐந்துவகைச்சத்தக்கருவி, அவை—கஞ்சம், கண்டம், துளை, தோல், நரம்பு இவற்றாலாயது, அன்றியும் ஐந்து பொறி, அவை—கண், செவி, மூக்கு, மெய், வாய்.

பஞ்சசத்தி - இச்சாசத்தி, கிரியாசத்தி, சிற்சத்தி, ஞானசத்தி, பராசத்தி.

பஞ்சசயனம் - ஐந்தாலாயமெத்தை, அவை—அன்னத்தூவி, இலவம்பஞ்சு, செம்பஞ்சு, மயிற்றூவி மெத்தை, வெண்பஞ்சு.

பஞ்சசரன் - மன்மதன்.

பஞ்சசாகம் - முன்கை.

பஞ்சசாயகன் - மன்மதன்.

பஞ்சசிகை - சௌளம்பண்ணுதுவிடுமைந்திடம், அவை-தலையுச்சி, கண்புருவம், முழங்கை முதல் கை வரையும்.

பஞ்சசீலம் - கொல்லாமை, கள்ளுண்ணாமை, பொய்யாமை, கள்ளாமை, காமமின்மை.

பஞ்சசுத்தி - ஐவகைச்சுத்தி, அவை-ஆத்மசுத்தி, இலிங்கசுத்தி, திரவிய சுத்தி, பூதசுத்தி, மந்திரசுத்தி.

பஞ்சணை - பஞ்சாலாயமெத்தை.

பஞ்சதசி - பூரணை, ஓர்வேதாந்த நூல்.

பஞ்சபட்சி - எழுத்துப்பொருத்தமறியுமைந்து பட்சி, அவை-வல்லூறு, ஆந்தை, காகம், கோழி, மயில் அவைகட்கு முறையே எழுத்து, அ, இ, உ, எ, ஒ; ஓர் சாத்திரம், வைப்புப்பாஷாணம் முப்பத்திரண்டினொன்று.

பஞ்சபல்லவம் - அருச்சனைக்கேற்ற ஐந்து பத்திரம், அவை-ஆத்தி, மா, முட்கிளுவை, முல்லை, வில்வம்.

பஞ்சபாணம் - மன்மதாத்திரமைந்து, அவை-அசோகு, முல்லை, வனசம், சூதம், நீலம், அவை முறையேதைக்குமிடம், உச்சி, நெற்றி, நெஞ்சு, முலை, குய்யம்.

பஞ்சபாணன் - மன்மதன்.

பஞ்சபாணி - பார்வதி.

பஞ்சபாரதீயம் - நாரதர் செய்த இசைத்தமிழ் நூல்.

பஞ்சமகதி - மோக்கம்.

பஞ்சமம் - அழகு, ஐந்து, ஓர் பண், சத்தசுரத்தொன்று, சமர்த்து.

பஞ்சமலம் - ஐந்துமலம்.

பஞ்சமி - ஐந்தாந்திதி (அவிட்ட முதலைந்து நாள்.)

பஞ்சமூலம் - (தசமூலம்) சிறு பஞ்சமூலம்: கண்டங்கத்தரி வேர், சிறுவழுதுணைவேர், சிறுமல்லிவேர், பெருமல்லி வேர், நெருஞ்சிவேர். பெரும் பஞ்சமூலம்: வில்வ வேர், பெருங்குமிழ், தழுதாழை, பாதிரிவேர், வாகை.

பஞ்சம் - ஐந்து, கருப்பு, விழுதல்.

பஞ்சரத்தினம் - ஐவகை நிதி: சுகந்தி, பொன், மரகதம், மாணிக்கம், முத்து, ஓர் பிரபந்தம்.

பஞ்சரம் - இடம், உடல், கழுகு, கூடு, செருந்திமரம், பன்னுங் கூடு, மட்கலம் வளையுங்கூடம்.

பஞ்சரித்தல் - உபசாரமாய்ப் பேசல், குதலைபேசல், கெஞ்சிக்கேட்டல், விரிவாய்ப்பேசல்.

பஞ்சலட்சணம் - இலக்கணமைந்து, அவை—எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி, புராணவுறுப்பைந்து, அவை—சரிதைத்தலைவர் வமிசம், பிரபஞ்சத்தோற்றம், பிரபஞ்சநாசம், மனுக்களரசாட்சி, மனுவமிச வரலாறு.

பஞ்சலோகம் - ஐந்துலோகம், அவை-இரும்பு, ஈயம், செம்பு, பொன், வெள்ளி.

பஞ்சவடி - ஓர் தலம்.

பஞ்சவர் - பாண்டு மக்கள்.

பஞ்சவர்துாதன் - கண்ணன்.

பஞ்சவன்னம் - ஐந்துவன்னம், அவை-கருமை, செம்மை, பச்சை, மஞ்சள், வெண்மை.

பஞ்சவன் - பாண்டியன்.

பஞ்சவாசம் - ஐவகைவாசம், அவை—இலவங்கம், ஏலம், கருப்பூரம், சாதிக்காய், தக்கோலம்.

பஞ்சவிடயம் - ஐந்துபொறியினலறியப்படுவன, அவை—இரசம், உருபம், கந்தம், சத்தம், பரிசம்.

பஞ்சனம் - அழித்தல்.

பஞ்சாங்கம் - ஆமை, குதிரை, சோதிடத்திற்குரிய வைந் துறுப்பு, அவை—திதி, நட்சத்திரம், வாரம், யோகம், கரணம்.

பஞ்சானநம் - சிங்கம்.

பஞ்சானனன் - சிவன்.

பஞ்சாய் - கோரை.

பஞ்சி - தூறு, பஞ்சு.

பஞ்சிகம் - தாளி.

பஞ்சிதம் - விண்மீன்.

பஞ்சு - சீலை, தூறு, நூற்கும் பஞ்சு, பருத்தி.

பஞ்சுரம் - ஓர்பண், குறிஞ்சி யாழ்த்திறம், பாலைநிலத்திராகம்.

பஞ்சூகம் - பெருமை.

பஞ்சை - எளிமை, தரித்திரன்.

படகம் - இரணபேரி, கலகம், கவரிமா, கோல், தம்பட்டம், திரைச்சீலை, பரண், விஷ்ணு கரந்தை.

படகாரன்-ஓவியன், நெய்வோன்.

படகு - தெப்பம்.

படக்குப்படெனல் - அச்சக் குறிப்பு, அடித்தல், ஈரடுக் கொலிக் குறிப்பு.

படங்கு - கூடாரம், சலாகை, பெருங்கோடி, பெருவரிச்சல், மெய்போற் பேசுதல், மேற்கட்டி, பதங்கம்.

படபடப்பு - துடிதுடிப்பு, விரைதல்.

படப்பம் - மருங்கிலூர் சூழ்பதி.

படப்பை - ஆவின்கொட்டில், கொல்லை, நாடு, மருதநிலத்தூர்.

படமஞ்சரி - ஓரிராகம்.

படம் - எழுதும்படம், காற் ரோட்டி, சீலை, திரைச்சீலை, பாம்பின் படம், யானைமுக படாம், விருதுக்கொடி.

படர் - இழிமக்கள், ஏவல் செய்வோர், கருத்து, செலவு, துகிற்கொடி, துன்பம், துன்புறவோர், நடை, நினைப்பு, நோவு, பகை, படரென்னேவல், படைவீரர், மேடு, வருத்தம், வழி.

படர்க்கை - மூன்றுமிடம்.

படர்ச்சி - நடை, பரப்பு, பரவுதல்.

படர்தல் - அகலம் நடத்தல், நினைத்தல், பரவுதல், விரிதல்.

படலம் - அடுக்கு, அதிகரிப்பு, இரத்தினக்குற்றம், இலக்கியச் செய்யுட் கூறுபாடு, கூட்டம், திரை, திலகம், நேத்திரபடலம், பரிவாரம், படல், மூடி.

படலிகை - இளைப்பு, கைமணி, படலம், பூந்தட்டு, பெரும் பீர்க்கு, வட்டம், வட்டவடிவு.

படலை - கட்டுக்கதவு, கோத்த மாலை, தார்மணி, பிறந்தவடிவு, பரந்த வாய்ப்பறை, பூமாலை, வெளிக்கதவு.

படல் - அகப்படுதல், அத்தமித்தல், உண்டாதல், ஒன்றுடனே தோய்தல், கெடுதல், சாதல், தட்டி, தெறித்தல், படுதல், பதிதல், புலனிலேறுதல், பூத்தல், முட்டுதல்.

படவாசம் - கூடாரம்.

படிவை - செருப்படி.

படனம் - படித்தல், மனப்பாடம், வாசித்தல்.

படன் - இழிகுலன், படைவீரன்.

படாப்பழி - பெரும்பழி.

படாரெனல் - ஒலிக்குறிப்பு.

படி - ஒப்பு, ஓரளவு, குணம், குதிரையங்கபடி, சம்பளம், சோபானம், தரம், தாழ்வாரம், நாழி, நிறையறிபடி, நீர்நிலை, நூறு பலங்கொண்டநிறை, பகை, படியென்னேவல், பூமி, வாயிற்படி, விதம்.

படிகட்டுதல் - இடைகட்டுதல், படிகொடுத்தல்.

படிகம்-கூத்து, பளிங்கு, பிச்சை, வெள்ளிலோத்திரம்.

படிகர் - வாயிலார்.

படிசம் - தூண்டில்.

படிதல் - அமருதல், அமைதல், கலத்தல், குளித்தல், கூத்து, திருந்தல்.

படித்தரம். கட்டளை, நிபந்தனை.

படித்தல் - சொல்லுதல், பழகுதல், வாசித்தல்.

படித்திரம் - சூட்டிரைச்சி.

படிப்பனை - சமர்த்து, படிப்பு, போதனை.

படிப்பினை - படிப்பளவு, வங்கமணல்.

படிப்பு - அறிவு, கல்வி, சொல்லல், பழக்கம், புத்தி, வாசனை, வாசிப்பு.

படிமதாளம்-நவதாளத்தொன்று.

படிமம்-கண்ணாடி, சுத்தம், பாவை, வெண்மை, வெறியாட்டு.

படிமானம் - கீழ்படிதல், தகுதி, திருத்தம், விலை குறைதல்.

படிமை - தவவேடம்.

படிவம் - உடலுருவம், உடல், சித்திரரூபம், நோன்பு, வடிவு.

படிவு - அடங்குகை, அழுந்துகை, கீழ்ப்படிவு, குளித்தல், தாங்குதல், தாழ்தல், வணக்கம், வடிவு.

படிறர் - திருடர், தூர்த்தர், பொய்யர், வஞ்சகர்.

படிறு - களவு, பொய், வஞ்சகம்.

படீரம் - உதரம், உயரம், சந்தனம், சிவப்பு, வயல், வாதம்.

படு - உப்பு, குலை, கள், குளம், கூர்மை, கொத்து, சம்பத்து, நன்மை, நீர் நிலை, படுவென்னேவல், மரக்குலை, மிகுதிக்குறிப்பு, வெப்பம்.

படுகர் - இழிந்தேறும்வழி, குளம், பள்ளம், மருதநிலம், வயல்.

படுகை - ஆற்றங்கரையடுத்த வயல்.

படுக்கை - அடிப்பட்டடை, படுத்தல், பல்லணம், மக்கட்படுக்கை, விலங்கின் படுக்கை.

படுதல் - அகப்படுதல், அத்தமித்தல், இல்லாமை, உண்டாதல், ஒலி, சகித்தல், சாதல், படுந்தன்மை, பதித்தல், புலப்படுதல், பூத்தல், முட்டுதல்.

படுத்தல் - அகப்படுதல், கொலைசெய்தல், சயனித்தல், சயனிப்பித்தல், செய்தல், செறித்தல்.

படுநிலம் - பாலைநிலம், மயானம், யுத்தபூமி.

படுவன் - ஓர் சிலந்தி, ஓர் போய், ஓர் பூண்டு.

படுவான் - அழிவான், மேற்றிசை.

படை - அடுக்கு, ஆயுதம், கலப்பை, கல்லணை, செதிள், தானை, இஃது - அரசியலிரெண்டு, திரள், நித்திரை, நிரை, படையென்னேவல், போர், போர்ப்படை, மெத்தை.

படைக்கலம் - ஆயுதப்பொது.

படைச்சால் - உழவுசால்.

படைத்தலைவன் - சேனாதிபதி.

படைத்தல் - உடைத்தாதல், சிருட்டித்தல், சோறு முதலியவுண்கலத்திடுதல்.

படைத்துணை - போர்க்குதவி, போர்த்துணைவன்.

படைபயிற்றல்-சிலம்பம்பழக்கல்.

படைப்பு-சம்பாத்தியம், சிருட்டி, சிருட்டிக்கப்பட்டது.

படையன் - அடித்தல், அடிமை.

படையிறங்குதல் - பாளையம் போடுதல்.

படையுறப்பு - படையணி.

படையுறை - ஆயுதவுறை.

படையெடுத்தல்-சேனையெழுதல்

படைவீடு - ஆயுதசாலை. தேவாலயம், பாசறை.

படோலம் - யானைக்கட்டுத்தறி, முள்ளு வெள்ளரி.

படோலி - நிலவு.

படோலிகை - புடல்.

படோல் - பேய்ப்புடல்.

பட்சம் - உருக்கம், செட்டை, தரம், நேசம், பக்கம், பதினைந்து நாட்கொண்டது, மீனம்பர், வகுப்பு.

பட்டகம் - பண்டசாலை, புழுக்கொல்லிச்செடி.

பட்டங்கட்டி - கைக்கோளரிற்றலைவன், நெய்த நிலமக்களிற்றலைவன், பட்டவத்தனன்.

பட்டஞ்சூடுதல் - அபிஷேகமடைதல், பட்டமணிதல்.

பட்டடை - அடைகல், கழுத்தணி, குவியல், தலை தாங்கி, தாங்கு பலகை, தாபரம், தானிய உறை, நரம்புகளின் இளி.

பட்டம் - ஆயுதம், எழுதும்படி செய்ததகடு, கடுதாசிப்பட்டம், கவரிமா, குளம், சதுக்கம், சீலை, தீர்க்கம், நாற்காலி, நெற்றிப்பட்டம், பட்டினம், பரிசை, மனிதர் படுக்கை, வழி, வாள், விலங்கின்படுக்கை, பட்டப்பேர்

பட்டயம் - பிரசித்தப்பத்திரிகை, வாள்.

பட்டாங்கு - ஊழ், சித்திரச்சேலை, பரிகாசம், மெய்.

பட்டாபிஷேகம் - பட்டந்தரித்தல், முடிசூட்டுதல்.

பட்டாரகர் - கடவுள், குருக்கள்.

பட்டாரகன் - அரசன், அருகன், கடவுள், குரு, சூரியன்.

பட்டி - அட்டவணை, ஆட்டுக்கிடை, இடம், ஓர் செடி, ஓர் சிகிச்சை, களவு, கள்வன், சிற்றூர், சீலை, தெப்பம், நாய், நெகிழ்ச்சி, படலி, பலகறை, பிள்ளை, மந்தை, வாலையென்னுமோர் கருவி, விக்கிரமாதித்தன் மந்திரி, வெற்றிலைச்சுருள், வேசி.

பட்டிகை - அரைநாண், சீலை, சீந்தில், செவ்வந்தி, தெப்பம், தோணி, முலைக்கச்சு.

பட்டிடை - நந்தியாவட்டை.

பட்டிமை - களவு, வஞ்சம்.

பட்டினம்-ஊர், நெய்த நிலத்தூர்.

பட்டு - உல்லாசம், சிற்றூர், பட்டுச்சீலை, மடிப்பு.

பட்டை - மரத்தோல்.

பணாமணி - நாகமணி.

பணம் - காசு, கிரகம், சூதாடுதல், திரவியம், பருமை, பாம்பின் படம், பாம்பு, பொற்காசு, வியாபாரச் சரக்கு.

பணயம் - அடகு, பணம், பொருத்தம் பணம்.

பணவம் - தம்பட்டம்.

பணவிடை - வராகனிலொன்பதிலொருபங்கு.

பணவை - அட்டாலை, ஓரளவு, கழுகு, தாங்கு பலகை, பரண்.

பணாடவி - ஆதிசேடன்.

பணி - ஆபரணம், ஈகை, எருமை, ஏவல், கட்டளை, செய்கை, சொல், தொண்டு, தொழில், தோற் கருவி, பட்டாடை, பணியென்னேவல், பாம்பு, வார்த்தை, வேலை.

பணிக்கம் - திருத்தம்.

பணிக்கன் - உபாத்தியாயன்.

பணிக்கு - ஆசான்வேலை, பணிக்கை.

பணிச்சக்கரம் - வித்திடும் தினக் குறிப்புச் சக்கரம்.

பணிதல் - இறங்கல், உண்டடல், குறைதல், தாழ்தல், வணங்கல், வளைதல்.

பணித்தல் - ஈதல், ஏவுதல், கட்டளையிடல், குறைத்தல், கொடுத்தல், சொல்லல், தாழ்த்தல்.

பணிப்பெண் - குற்றேவற்காரி.

பணிமொழி - பணிந்தவார்த்தை.

பணியல் - வணங்கல்.

பணியார் - பகைவர்.

பணியிறுக்கு-தண்ணீர்விட்டான்

பணிலம் - சங்கு, வலம்புரிச் சங்கு, வார்த்தை.

பணிவு - தாழ்வு, பதுங்குகை, வணக்கம்.

பணை - அரசமரம், குதிரைப் பந்தி, பணையென்னேவல், பருமை, பழைப்பொது, பிழைத்தல், பெருமை, மரக்கொம்பு, மருதநிலப்பறை, மருதநிலம், முரசு, மூங்கில், வயல், விலங்கின் படுக்கை.

பணைத்தல் - கிளைத்தல், பருத்தல், பிழைத்தல்.

பணைத்திராய் - ஓர் பூண்டு.

பணையம் - பணயம்.

பண் - அமைவு, இசைப்பாட்டு, ஊழியம், குதிரைக்கல்லணை, சீர், செவ்வை, தகுதி, நிந்தை, நிறை நரம்புள்ள வீணை, நீர் நிலை, படுகுழி, பண்ணென்னேவல், பாய்மரக்கயிறு, மகளிர் கூட்டம்.

பண்கொடி - பிரம்பு.

பண்செய்தல் - பணிவிடை செய்தல், பண படுத்தல்.

பண்டகேந்திரம் - ஓர் கணிதம்.

பண்டசாலை - அணிகலன் முதலியவைக்கும் வீடு, களஞ்சியம்.

பண்டமாற்று - விற்பனவு.

பண்டம் - உணவுப்பொருள், கலைஞானம், தானியம், பண்ணிகாரம், பொருள், பொன், மெய்யறிவு, வயிறு.

பண்டர் - பாட்டிழ் மக்கள்.

பண்டனம் - போர்.

பண்டாகி - கத்தரி.

பண்டாரம் - பலபண்டம், பொக்கசம்.

பண்டி - உரோகணிநாள், பண்டி, வயிறு.

பண்டிதன் - சுக்கிரன், புதன், புலவன், வைத்தியன்.

பண்டிலன் - ஆதன்.

பண்டு - பழமை.

பண்டுகம் - அசமதாகம், செவ்வகத்தி.

பண்டை - கல்வி, ஞானம், பண்டு.

பண்டையர்
பண்டையோர் } முன்னோர்.

பண்ணல் - செய்தல்.

பண்ணவர் - கடவுளர், குருமார், திண்ணியர், தேவர், பாடகர், முனிவர்.

பண்ணவன் - அருகன், ஆசிரியன், கடவுள், குரு, திண்ணியன், தேவன், பாடகன்.

பண்ணிகாரம்
பண்ணியங்கூலம் } பலபண்டம்.

பண்ணியம் - அப்பவர்க்கம், பலபண்டம், விலைப்பொருள்.

பண்ணுவர் - குதிரைப்பாகர், யானைப்பாகர்.

பண்ணுறுத்தல் - சீர்ப்படுத்தல், வாகனங்களை ஆயத்தம் பண்ணல்.

பண்ணை - ஓர் கீரை, குளம், சமுசாரம், தோப்பு, நீர்நிலை, படகு, மனை, மகளீர் கூட்டம், மகளிர் விளையாட்டு, மரக்கலம், மருதநிலம், வயல், விலங்கின்படுக்கை விலங்கின்மேற் சேணம், விவசாயம்.

பண்படல் - செவ்விதாதல்.

பண்படி - பண்புப்பகுதி.

பண்படுதல் - அமைதல், உதவுதல், ஏவல் செய்தல், சீர்திருந்தல், சொற்படி செய்தல்.

பண்பாகுபெயர் - பண்பினாலாய ஆக்கப்பெயர்.

பண்பி - பண்பையுடைய பொருள் நிலை.

பண்பிற்பகாநிலைப்பதம் - சொல் நிலையால் பகுபதங்கள் ஆயினும் பகுதி ஆய பண்புப்பொருளின்றும் வேறு பொருள் பகுப்படாத பதம்.

பண்பு - அளவு, குணத்தோடு குணிக்குண்டாகும் ஒற்றுமை நயம், தகுதி, வண்ணம், வடிவு விதம், சுவை முதலியவை பற்றி வருவது, ஐம்பொறிகளால் உணரப்படுவது.

பண்புத்தற்கிழமை - குணசம்பந்தப்பொருள்.

பண்புத்தொகை - ஆகிய முதலி பண்புருவு தொக்கி நிற்பவை.

பண்புப்பெயர் - உரிப்பெயர்.

பண்புமறிநிலை - ஓரலங்காரம்.

பண்புரிச்சொல் - பொறிகளாலறியப்படுங்குணம்.

பண்புரைப்பார் - தூதர்.

பண்புவமை - ஒன்றின் பண்பை மற்றொன்றிற் கொப்பிடுவது.

பண்மை - தகுதி.

பதகம் - பறவை.

பதகன் - கீழ்மகன், பாதகன்.

பதகை - திரிபதகை.

பதக்கம்-பதக்கம், மாதரணிவடம்.

பதக்கு - இரண்டு மரக்கால் கொண்ட ஓர் அளவை.

பதங்கமம் - பறவைப்பொது, விட்டில்.

பதங்கம் - திராவகம், பறவைப் பொது, பாதரசம், விட்டில்.

பதங்கன் - சூரியன்.

பதங்கு - ஓட்டு வரிசை, குழி, பிளவு.

பதசம் - பறவை.

பதச்சேதம் - சொற் பிரிப்பு.

பதடி - பதர்.

பதணம்-மதிலுண்மேடை, மதில்.

பதநியாசம்-ஓர்பூடு, காலடி, நடை.

பதபஞ்சனம் - சொல்லிலக்கணம், சொற் பிரிவு.

பதபதெனல் - ஈரக்கொலிக் குறிப்பு.

பதபாதம் - காலடி.

பதப்பால் - மதிலுறுப்பு.

பதப்புணர்ச்சி - சொல்லொடு சொல் கூடுதல், நிலைமொழி வருமொழிகள் புணரும் புணர்ச்சி.

பதப்பேறு - பதமுத்திபெறல்.

பதப்பொருட்காட்சியணி - ஓரலங்காரம்.

பதப்பொருத்தம் - சொற்பொருத்தம்.

பதப்பொருள்-பதவுரை, அஃது-உரையிலக்கணமைந்தினென்று.

பதமம் - சந்திரன், பறவை, விட்டிற் பறவை.

பதமுடித்தல் - பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரமெனு மாறையும் கொண்டு மொழிகளைப் பிரித்துக்காட்டல்.

பதமை - அமைதி, இணக்கம், தாழ்மை, பிருது, மெத்தனவு, மெல்லோசை.

பதமுத்தி - ஞானம், பதார்த்த முத்தி, பதவிமுத்தி.

பதம் - அடையாளம், அழகு, அறுகு, ஆடை, இடம், இன்பம், ஈரம், உண்டல், எழுத்தாறுயபதம், ஒளி, ஓர்மொழியிற் பிரகிருதியாய் நிற்பது, கால், காலம், குழைவு, கூர்மை, கொக்கு, சிந்து, சொல், சோறு, தின்றல், தெரு, நாழிகை, பக்குவம், பதவி, பாவிரேருறுப்பு, பூரட்டாதி, பொருள், பொழுது, முயற்சி, வரிசை, வழி, வேஷம்.

பதரி - இலந்தை.

பதர் - அற்பம், பலனற்றது.

பதலை - சிறுமலை, தாழி, தோணி, மத்தளம், மரக்கலம், மலை, வாயகன்றபறை.

பதவி - கடவுளர் பதவி— சாலோகம், சாமீப்யம், சாரூபயம், சாயுச்சியம், இடம், உலம், ஒழுங்கு, கதி, செல்வம், நிலை, நிலைபரம், முத்திவழி.

பதவியகுணம் - மெத்தெனவு.

பதவியடைதல் - கதியடைதல், பாதமடைதல்.

பதவியது - சாதுவானது, மிருதுவானது.

பதவியல் - நன்னூலிலோரியல், பதப்புணர்ச்சி யிலக்கணம்.

பதவுரை - சொற்றோறும் பொருளுரைத்தல்.

பதவை - வழி.

பதறல் - தளம்புதல், திடுக்கிடல், நடுங்கல், வரைதல்.

பதனகேந்திரம் - கிரகவிட்சேப கேந்திரம், உதயத்திலிருந்து நாலாம் எழாம் பத்தாமிடம்.

பதனம் - இறக்கம், இறக்குதல், களைதல், தாழ்தல், பத்திரம், பாவம், பேணல், போதல், வியோமாட்சரேகை, விழுதல்.

பதனழிதல் - ஊழ்த்தல்.

பதன் - பக்குவம், பதம்.

பதாகன் - அரசன்.

பதாகினி - படை.

பதாகை - அடையாளம், அதிட்டம், கூத்திலோர்விகற்பம், விருதுக்கொடி.

பதாசனம் - பாதபீடிகை.

பதாதி - அமைதியின்மை, காலாள், படை, படையிலோர் தொகை.

பதாரம் - காலிற்றுகள், தெப்பம்.

பதார்த்தசாரம் - ஓர்வைத்தியநூல்.

பதார்த்தசிந்தாமணி - ஓர் வைத்தியநூல்.

பதார்த்தம் - கறி, பதப்பொருள், பாக்கியம், பொருள்.

பதி - அரசன், இடம், ஊர், எப்பொருட்குமிறைவன், குரு, கொழுநன், சிவன், தலைவன், நகரம், பதித்தல், பதியென்னேவல், பதிவு, பூமி, மருதநிவத்தார், மூத்தோன், வீடு, வேர்.

பதிகம் - பத்துச்செய்யுளான்முற்றுப்பெற்ற செய்யுள், பாசி, பாயிரம்.

பதிகன் - காலாள், வழிச்செல்வோன்.

பதிக்கினி - கணவனைக்கொல்லி.

பதிசேவை - புருஷனுக்குக் கீழ்படிதல்.

பதிச்சம் - வாலுளுவை.

பதிஞானம் - சிவஞானம்.

பதிதம் - கூத்திஞேர்விகற்பம், தவறு.

பதிதல் - அழுந்துதல், ஊன்றல், எழுத்துப்பதிதல், ஒடுங்குதல், கீழ்ப்படிதல், தங்குதல், தாழ்தல், பணிதல், பள்ளமாதல்.

பதிதன் - குலஞ்சமய முதலிய வொழுக்கத்திற்றுறந்தோன்.

பதித்தல் - புதைத்தல்.

பதித்திரி - உலேத்துருத்தி.

பதிநூல் - கடவுளது தன்மையை விளக்கு நூல்.

பதிபக்தி - நாயகவிசுவாசம்.

பதிபடை - பதிவிருக்குஞ்சேனே.

பதிப்பிரஞ்ஞன் - வழியறிந்தோன்.

பதிப்பிராணே, பதிவிரதை - கற்புடையாள், பத்தினி.

பதியம் - பதிக்கப்பட்ட நாற்று, பத்துச்செய்யுளான் முடியும் பிரபந்தம், பாசி, பாசிப்பூடு.

பதிரன் - செவிடன்.

பதிவு - குனிவு, சாய்வு, பதிதல்.

பதிற்றந்தாதி - ஓர் பிரபந்தம்.

பதிற்றுப்பத்து - எட்டுத்தொகையுள் நான்காவது நூல்.

பதுக்கை - சிறு திட்டை, சிறு தூறு, பாறை.

பதுங்கல் - ஒளித்தல்.

பதுமகோசம் - கரலட்சணமிருபத்து மூன்றிஞென்று, அஃது—ஐந்து விரல்களும் மேனேக்க விற்போல் வளேத்துக் காட்டுவது.

பதுமக்காழ் - தாமரைவிதை.

பதுமநாபன் - விட்டுணு.

பதுமநிதி - தாமரையுருவாய்க் கிடக்கும் பொன், அஃது— இந்திரனிருவகை நிதிகளி லொன்று, குபேரன் நவநிதிகளினுமொன்று.

பதுமபந்து - சூரியன், தேனீ.

பதுமம் - அட்டாதசபுராணத்தொன்று, ஈயம், கோடாகோடி, சோதிநாள், தாமரை, முடியுறுப்பு, யோகி நிலேயிஞென்று.

பதுமயோனி - பிரமன்.

பதுமராகம் - செம்பு, நவமணியிலொன்று.

பதுமரேகை - கைரேகையிலொன்று.

பதுமஞர் - ஒருரையாசிரியர், (நாலடியார்)

பதுமன் - அட்டநாகத்தொன்று, பிரமன்.

பதுமினி - நால்வகைப்பெண்களில் முதலவள்.

பதுமை - இலக்குமி, பதிமை.

பதைத்தல் - அச்சக்குறிப்பு.

பதோதகம் - நடையினீர் பருகல், பாததீர்த்தம்.

பத்தகேசரி - கருப்பூரம்.

பத்ததி - ஒழுங்கு, கருமங்களை விதிக்கிற வொருநூல், சொற் பயன், வழி.

பத்தம் - உணு, உண்மை, கட்டு, நன்றியறிகை.

பத்தல் - நீரிறைக்கும் பத்தல், யாழிறுெருறுப்பு.

பத்தன் - அன்புடையோன், தொண்டன்.

பத்தா - புருடன்.

பத்தி - அடைப்பு, அன்பு, ஆராதனை, ஒழுக்கம், ஒழுங்கு, தூணிணிடை, வெளி, தொண்டு, நடை, நம்பிக்கை, நிரை, பங்கு, பதாதி, பாத்தி, முறைமை, வரிசை, வழிபாடு, விசுவாசம்.

பத்திகாண்டிதர் - மூவகைப்பக்குவரிலொருவகுப்பார்.

பத்தியம் - ஆந்திரமாரியமிவற்றின் செய்யுள், இணக்கம், இதம், கடுமரம், தமிழ், பாடல், போசனம், மருந்திற்கிசைந்த புசிப்பு.

பத்திரம் - அம்பு, அழகு, இலை, இறகு, உடைவாள், மலை, முடிபுறுப்பு.

பத்திரவாகன் - சீட்டோலை கொண்டு போவோன்.

பத்திரன் - சிவன், வீரபத்திரன்.

பத்திராசனம் - சிங்காசனம்.

பத்திரி - அம்பு, இலை, காளி, குதிரை, பறவை.

பத்திரை - இரண்டாம் எழாம் பன்னிரண்டாந்திதி, காளி, நற்பசு, மஞ்சள்.

பத்திரைகேள்வன் - வீரபத்திரன்.

பத்திரோதகம் - இலைமேற்றங்கு நீர்.

பத்தினி - கற்புடையாள்.

பத்து - ஓரெண்.

பந்தகம் - பந்தனை.

பந்தம் - அழகு, உண்டை, உறவு ஏற்பாடு, கட்டு, கயிறு, கொண்டை, கைவிளக்கு, தளை, இஃது — யாப்புறுப்பெட்டி ஞென்று, திரட்சி, தீக்கொளுத்தும் பந்து, தொடர், பெருந்துருத்தி, மதில், மயிர்முடி, முடிச்சு, முறை, விலங்கு.

பந்தர் - ஓர் நகர், பந்தல், பாசத்துக்குள்ளானவர்கள், நிழல்.

பந்தனம் - அரைஞாண், கட்டல், கட்டு, காவல் செய்தல்.

பந்தனலயம் - சிறைச்சாலை.

பந்தனை - பந்தித்தல், மகள்.

பந்தன் - சீர்பந்த பாஷாணம்.

பந்தி - ஒழுங்கு, ஓர்பண், கீர்த்தி, குதிரை, யானை நிற்குஞ்சாலை, கூட்டம், சபை, பந்தியென்னேவல்.

பந்தித்தல் - பிணித்தல்.

பந்து - உறவு, சுற்றம், திரட்சி, திரிகை, மட்டத் துருபதி, விளையாடும் பந்து.

பந்தரம் - அழகு.

பந்துவராளி - ஓரிராகம்.

பப்பரப்புளி - தொதி, பெருக்க மரம்.

பப்பரம் - ஓர்தேசம், பதினெண் பாடையிலொன்று, பருப்பம்.

பப்பரவாகனன் - அருச்சுனன் குமாரன்.

பப்பு - ஒப்பு, பரப்பு.

பப்புவர் - புகழ்வோர்.

பமரம் - பிரமரம், போரொலி, வண்டு.

பம் - கிரகம், விண்மீன்.

பம்பரம் - மந்தரமலை, விளையாடுங்கருவி.

பம்பல் - ஆரவாரித்தல், எழுச்சி, நெருங்கல், பரவல், பொலிதல்,

பம்பை - ஓர் நதி, ஓர்வாத்தியம், முல்லை நிலப்பறை.

பம்மல் - செம்முதல், பொருத்திக்கட்டுகை, மந்தாரம், மந்திப்பு, மூடுதல்.

பயங்கரம் - அச்சம், பயப்படுதல்.

பயசு - நீர், பால்.

பயத்தல் - உண்டாதல், கிடைத்தல், பெறுதல்.

பயந்தாள் - தாய்.

பயப்படல் - அஞ்சல்.

பயப்பு - கிருபை, நிறம், பசப்பு.

பயம் - அச்சம், அமிர்தம், குளம், சுதை, நீர், பயன், பால், மன்னர் விழைச்சி.

பயம்பு - பள்ளம், யானைபடுங்குழி.

பயல் - பையல்—பையன்.

பயறு - சித்திரைநாள், பயறு.

பயனிலான் - வேசி.

பயனிலை - பயன்முடிவு, பொருண் முடிபு.

பயனிலசொல்லல் - நால்வகை யிழிசொல் லொன்று, கோள், பொய்மொழி, கடுஞ்சொல்.

பயனுரைத்தல் - உரைசொல்லுதல்.

பயனுவமம் } ஒருவமாலங்
பயனுவமை } காரம்.

பயன் - அகலம், இலாபம், சொல்லுரை, நீர், பலன், பால்.

பயானகம்-அச்சம், இராகு, சுவை ஒன்பதினொன்று, புலி.

பயிக்கம் - பிச்சை.

பயிர் - இடும்பயிர், பயில், பறவைக்குரல், விலங்கொலி.

பயிர்த்தல்-பேசலாவெழுமொலி.

பயிர்ப்பு - அசுத்தம், அருவருப்பு, மகடூஉக்குணநான்கிெலொன்று.

பயிலல் - சொல்லுதல், படித்தல்.

பயில் - சைகை, சொல், பயிலென்னேவல், பாதி.

பயிறல் - ஒலித்தல், கூடுதல், சொல்லுதல், பேசலாலெழு மொலி.

பயிற்றுதல் - படிப்பித்தல்.

பயினி - இணக்கம், கூடல்.

பயின் - உட்படுகுருத்து, பிசின்.

பயோததி - கடல், பாற்கடல்.

பயோதரப்பத்து - ஓர்பிரபந்தம்.

பயோதரம் - கடல்,முலை,மேகம்.

பர - திவ்விய, பிற, முன், மேலான, வளமுள்ள, விரோதமான, வேறு.

பரகதி - முத்தி.

பரகாயப்பிரவேசம் - கூடுவிட்டுக் கூடுபாய்தல்.

பரகிதபுடம் - பரகித சாஸ்திரத்தாற் கணித்தறிந்த கிரகநிலை.

பரகிதமூலச்சா - திரிகோண மீதியிலுள்ள சாவாக்கியங்கள்.

பரகிதம் - ஓர் சோதிடநூல்.

பரகுடிலம் - பிரணவ மந்திரம்.

பரசமயம் } புறச்சமயம்.
பரமதம் }

பரசு - கோடரி, பரசென்னேவல், மழு.

பரசுகோததி-பிரமானந்தசாகரம்

பரசுசூரியன் - பரிவேடம்.

பரசுதல் - துதித்தல்.

பரசுபாணி - பரசுராமன், சிவன், விநாயகன்.

பரசுராமன்-சமதக்கினிமைந்தன், திருமாலவதாரத்தொருவன்.

பரஞ்சுடர் } கடவுள்.
பரஞ்சோதி }

பரடு - கரடு.

பரணம் - ஆதரவு, கவசம், காப்பாற்றுதல்,சம்பளம்,தாங்குதல், பட்டுச்சீலை, பரணி, பாரம்.

பரணர் - ஓர் சங்கப்புலவர்.

பரணி - அடுப்பு, அணிகலச்செப்பு, ஆயிரம்யானைகொன்ற தலைவனைப் பாடும் பிரபந்தம், எரி மதகு, ஓர்நாள், கூத்து.

பரண் - பரண்.

பரதகண்டம் } நவகண்டத்
பரதவருடம் } தொன்று.

பரதம் - ஓரெண், கூத்து, பாத நூல், பரதகண்டம்.

பரதர் - செட்டிகள், துரியோதனன் குலத்தோர், நெய்தனிலமாக்கள்.

பரதவர் - நெய்தநிலமக்கள்.

பரதன் - இராமன்தம்பி, சந்திர குலத்தோரரசன்,பரதமுனிர்ந்தோன்,பரதநூல் செய்தோன்.

பரதாக்கிரஜன் - இராமன்.

பரதி - கூத்தாடிச்சி.

பரதிருஅனயோகம் - பிறர்செய்யுந்தீமையை மறந்து நன்றிசெயல்.

பரத்தர் - தூர்த்தர்.

பரத்தல் - பரவுதல்.

பரத்தி - நெய்தநிலப்பெண், பரவப்பெண்.

பரத்தியானம் - தேவதியானம்

பரத்திரி
பரத்தை } வேசி.

பரத்துவம் - கடவுட்டன்மை, வித்தியாசம்.

பரத்துவாசன் - கரிக்குருவி, சத்த விருடிகளிலொருவன், துரோணாசாரியன் றந்தை.

பரத்தையிற்பிரிவு - தலைமகன் பரத்தையிடத்துப் பிரிதல்.

பரநியாசம் - பற்றொழித்தல்.

பரந்தவட்டம் - கைம்மணி.

பரந்தவட்டிகை - சேமக்கலம்.

பரந்தாமம் - பரஞ்சோதி.

பரபட்சம் - எதிர்ப்பட்சம், விரோதம்.

பரபதம் - மேன்மை, மோட்சம்.

பரபிருதம் - காக்கை, குயில்.

பரபுட்டம் - குயில், தூர்த்தன்.

பரபுட்டை - வேசி.

பரபோகம் - பேரின்பம்.

பரப்பிரமம் - பிரமம்.

பரப்பு - அகலம், கடல், பரத்தல், பரப்பென்னேவல், மிகுதி, வி'சாலம், வீதி.

பரப்புதல் - பரப்பச்செய்தல், பரவுதல்.

பரமகதி - முத்தி.

பரமக்கியானம் - பரமஞானம்.

பரமசமாதி
பரமசாந்தி } யோகநிலை.

பரமசாயுச்சியம் - கடவுளோடு ஐக்கியமாதல்.

பரமசுந்தரி - தருமதேவதை.

பரமசைதன்னியம் - ஈச்வரன்.

பரமபதம் - வைகுந்தம்.

பரமம் - கடவுள், சிவன், பரமன் பிரமம்.

பரமாகாயம் - வெருவெளி.

பரமாத்துமா - கடவுள்.

பரமாத்மம் - கிரகமண்டல நாடி மண்டலங்களாலாகும் கோணம்.

பரமார்த்தம் - ஞானார்த்தம், மேலான பொருள்.

பரமானந்தம் - ஞானானந்தம், பிரம்மம், பேரின்பம்.

பரமேச்சுரன் - கடவுள், சிவன், விட்டுணு.

பரமேட்டி - அயன், அரன், அரி, அருகன்.

பரம் - அத்திமரம், உடல், கடவுள், கவசம், கேடகம், குதிரைக்கல்லணை, செயல், தனிமை, பழமை, பாரம், மிகுதி, முற்றத்துறத்தல், முன்பு, மோக்கம்.

பரம்பரம் - முறைமை, வமிசம்.

பரம்பு - கழனிதிருத்தும்பலகை, வரம்பு, விசாலம்.

பரம்புதல் - பெருகுதல், விசரவித்தல்.

பரர் - அந்நியர், பகைவர்.

பரல் - பருக்கைக்கல், விதை.

பரவசம் - தன்வசமற்றிருத்தல், பிரமாணத்தோடு பண்ணும் வாக்கு, பிரமை, மிகுகளிப்பு, மூர்ச்சை.

பரவல் - சொல்லுதல், பரத்தல், புகழ்தல், வணங்கல்.

பரவுதல் - சொல்லல், துதித்தல், பரப்பிச் செப்பம்பண்ணுதல், பரப்புதல், வணங்கல், விரிதல்.

பரவை - இலக்குமிகூத்து, கடல், சுந்தரர் மனைவி, திடல், நீர்ப்பரப்பு பிரபலம், வழக்கு.

பரன் - கடவுள், சிவன், விட்டுணு.

பராகம் - ஓர் வாசனைத்தூள், கிரகணம், கீர்த்தி, சந்தனம், தூளி, பூந்தாது, மகரந்தம்.

பராகாயம் - பரவெளி.

பராக்கிரமம் - வலிமை, வீரம்.

பராக்கு - அசட்டை, நோக்கம், பொழுது கழித்தல், விளையாட்டு, வேறுபுலனுயிருத்தல்.

பராங்கதன் - சிவன்.

பராங்க்வம் - சமுத்திரம்.

பராசத்தி - சிற்சத்தி.

பராசயம் . தோல்வி.

பராசரம் - அட்டாதசவுபபுராணத்தொன்று, அட்டாதச தருமநூலிலொன்று.

பராசரியம் - சிற்பநூன் முப்பத்திரண்டிஞென்று.

பராசரன் - வியாசன்றந்தை.

பராசனம் - கொலை.

பராசனன் - கொலைசெய்வோன்.

பராடம் - பாலைநிலம்.

பராதாரம் - காக்கை.

பராதீனம் - பிறர்சார்பிலிருக்கை.

பராத்தம் - பரார்த்தம்.

பராபரம் - கடவுள், சிவம், நன்மை, தீமை, நடுத்தரம், முன்பின்.

பராபவ - ஓராண்டு.

பராபவம் - அபசாரம், தோல்வி.

பராமரிசம் - நன்கு விசாரித்தறிகை, பகுத்தறிவு.

பராமரித்தல் - ஆதரித்தல், ஆராய்தல், நடத்தல், பத்திரப்படுத்தல், வளர்த்தல், விசாரித்தல்.

பராமுகம் - அசட்டை, கவனிப்பின்மை, பின்னோக்கிய முகம்.

பராயணம் - அறுசமயத்தொரு வகுப்பு, இராசிமண்டலம், பகுதி, பற்று, விருப்பு, வேதாத்தியயனம்.

பராயணன்- குறிக்கொள்வோன், வேதாத்தியயனர்.

பராயணி - கன்னன்.

பராயத்தம் - பிறரதீனம்.

பராரை - உள்ளோசை, பருமரத்தடி.

பரார்த்தசங்கை - அனந்தமாலிகை.

பரார்த்தம் - ஆயிரங்கோடி, ஓரெண், பிரமகற்பத்தரை.

பரார்த்தவனுமானம் - பிறர்பொருட்டாமனுமானம்.

பராவல் - பரவல்.

பராவிருத்தமுகம் - ஓர்பரதவுறுப்பு, அஃது—வேண்டாமைக்கு முகந்திருப்பல்.

பரானுகூலி - பிறர்க்குதவுவோன், விபசாரி.

பரான்னம் - பிறரிடத்தில்வாங்கியுண்ணுமன்னம்.

பரி - அச்விநீ, அடையாளம், அலங்காரம், அன்பு, உண்மை, உயர்ச்சி, உள்ளக்களிப்பு, கருமை, தாழ்த்தல், குதிரை, சுமை, செல்வம், துக்கம், துன்பம், நெருக்கிடை, பங்கு, பரியென்னேவல், பருத்தி, பாதுகாத்தல், பெருமை, மிகுதி, முடிவு, வணக்கம், வருத்தம், வழி, விசாலம், விரிவு, விரைவு.

பரிகட்டகம் - ஓர்வகைக்கோடரி.

பரிகதம் - அறிவு, ஆதாயம், தடை, மறதி, விசாரணை.

பரிகதை - தரித்திரம்.

பரிகம் - அகழ், அழித்தல், இருப்புத்தண்டு, கதவிற்றாள், கிழங்கு, நித்தியயோகத்தொன்று, நீர்ச்சாடி, மதிலுண்மேடை, மதில், வளைதடி, வெளிக்கதவு.

பரிகம்பம் - பயங்கரம்.

பரிகரணம் } பிடித்தல்,
பரிகரமாணம் } விடுதல்.

பரிகரம் - இடைக்கட்டு, தீர்ப்பு, துவக்கம், படுக்கை, பரிவாரம்.

பரிகரித்தல் - காத்தல், பத்தியம் பண்ணல், பிராயச்சித்தம் செய்தல், மாற்றல், வைத்தியம்பண்ணுதல்.

பரிகரிப்பு - குணமாக்கல், வகை செய்தல், விலக்கல்.

பரிகருத்தனம் - சூன்றல்.

பரிகருமம் - அலங்கரிப்பு, சுத்தி.

பரிகலச்சேடம் - உச்சிட்டம், மகாத்துமாக்களின் விசேடம்.

பரிகலத்தார் - பரிவாரசனம்.

பரிகலம் - சேனை, பரிவாரப்பேய், பரிவாரம், மகாத்துமாக்களுண்ணும் பாத்திரம்.

பரிகாலிதம்-உருகுதல், பாய்தல்.

பரிகற்பனம் - உணவு முதலிய தேடல்.

பரிகாசப்பட்டன் - பரிகாசக்காரன்.

பரிகாசப்போர் - பகிடிச்சண்டை.

பரிகாசம் - பகிடி, நிந்தனை, மிகு நகை.

பரிகாதம்-ஆயுதம், கொல்லுதல்.

பரிகாதநம்-கதாயுதம்,பெருந்தடி.

பரிகாரம் - அவசங்கை, சூழ்தல், பரிகரித்தல், பிராயச்சித்தம். பெண்மயிர்,மிருதி,வைத்தியம்.

பரிகாரி - வைத்தியன்.

பரிகிருசம் - மெலிவு.

பரிகீர்த்தனம் - சொல்லுதல், புகழ்தல்.

பரிகை - அகழ், அன்பு, உருக்கம், மதிலுண்மேடை.

பரிக்கந்தி - அமுக்கிராக்கிழங்கு.

பரிக்காரம் - அலங்காரம், துலக்கம்.

பரிக்காரர் - குதிரைக்காரர், யானைக்காரர்.

பரிக்கிரகம் - அழிவு, ஆனை, இணக்கம், ஏற்றுக்கொள்ளுதல், நிலைபேறு, பிற்படை, மனையாள், மூலம்.

பரிக்கிரகித்தல்-கைக்கொள்ளல்.

பரிக்கிரமம் - அலைந்து திரிதல், சுற்றுதல்,போதல்,விளையாட்டு.

பரிக்கிரயம் - சூழல், மீட்பு.

பரிக்கிராகம் - பலிபீடம்.

பரிக்கிரியை - வேலியடைத்தல்.

பரிக்கை - பரீட்சை.

பரிசைக்குன்று - நாகப்பச்சை.

பரிசணித்தல் - மிருதுவாய்ப் பேசுதல்.

பரிசதன்மாத்திரை - பரிசவுணர் வின்மூலம்.

பரிசதீட்சை - ஓர் தீட்சை, அஃது—பிரளயாகலர்க்குப் பரிசத்தினுல் மலமறுத்தல்.

பரிசத்தலன் - கூட்டாளி.

பரிசம் - கற்பாஷாணம், தொடல், தொடுதலை யறியு மறிவு; இஃது--பஞ்சபுலனிலொன்று, மணவாளன், பெண்ணின் பிதா மாதாவுக்குக் கொடுக்கும் வெகுமானம்.

பரிசயம் - ஐக்கம், பரிசனை, பழக்கம்.

பரிசரம்-அகலம்,மரணம், முறை.

பரிசரன் - காவற்காரன், தோழன், படைத்தலைவன்.

பரிசருப்பம் - சூழ்தல்.

பரிசனம் - உறவு, ஏவல் செய்வோர், சூழ்வோர், தொடுதல், பரிசிப்பு.

பரிசனவேதி - இழிந்தலோகங்களைப் பொன்னுக்கு மருந்து.

பரிசனன் - காற்று.

பரிசனை - பழக்கம்.

பரிசாதனம் - செய்து முடித்தல், தீர்மானம்.

பரிசாரகம் - ஏவல் வேலை.

பரிசாரகன் - ஏவல்செய்வோன், கூடப்போகிறவன்.

பரிசாரம் - பரிவாரம், பெண் மயிர்.

பரிசாரிகை - ஏவல்செய்பவள்.

பரிசித்தல் } தீண்டல், பழகுதல்.
பரிசிப்பு }

பரிசிரமம் - பிரயாசம், வருத்தம்.

பரிசியம் - கூட்டம்.

பரிசிலாளர் - இரப்போர்.

பரிசில் - ஈகை, வெகுமதி.

பரிசு - ஈகை, சங்கை மண்பு, பயணச்சனம்.

பரிசுகேடு - சங்கையீனம்.

பரிசுத்தம் - முழுதுஞ்சுத்தம், முழுமை.

பரிசுத்தவான் } சுத்தமுள்ளோன்.
பரிசுத்தன் }

பரிசுத்தாவி - சுத்தமான ஆவி.

பரிசுத்தி - பரிசுத்தம், முற்றுக.

பரிசுத்தை - சுத்தமுள்ளவன்.

பரிசை - கேடகம்.

பரிச்சதம் - போர்வை, மூடி.

பரிச்சித்து - அருச்சுனன் பௌத்திரன்.

பரிச்சேதம் - இலக்கியச்செய்யுட் கூறுபாடு, எல்லை, துண்டிப்பு, பிரிவு, மாற்று, முற்றும், பரிச்சேதம்:--காலபரிச்சேதம்,தேசபரிச்சேதம்,வஸ்துபரிச்சேதம்.

பரிஞ்சு - வாட்பிடி.

பரிட்டினகம்-பட்சிவட்டமிடுதல்.

பரிணமித்தல் - வேறுபடல்.

பரிணயம் - கலியாணம்.

பரிணாமசரீரம் - ஒன்று திரிந்துண்டான தேகம்.

பரிணாமம் - வேறுபாடு, விகாரம்.

பரிதல் - அறுத்தல், அன்பு, அன்போடுபேசல், இரங்கல், ஒடிதல், தறித்தல், வெட்டல்.

பரிதாபி - ஓர் வருடம்.

பரிதி - ஒளி, சக்கராயுதம், சூரியன், சூரியசந்திரரைச் சூழ்ந்தோன்றும் வட்டம், தேருருளை, யூபஸ்தம்பம், வட்டம்.

பரித்தல் - காத்தல், சுமத்தல், தரித்தல், தாங்குதல், தூபரித்தல்.

பரித்தியாகம் - முற்றும் விடல்.

பரித்தியாகி - சந்நியாசி.

பரிபவம் - அவசங்கை, துறந்தோன், இகழத்தகு பொருள், இழிவு, எளிமை, தோல்வி, வியாகுலம்.

பரிபாகம் - பக்குவம், முதிர்வு.

பரிபாகி - முத்தியடையும் பக்குவன்.

பரிபாடல் - தலைச்சங்கப்புலவர் செய்தபரிபா டலென்னும்நூல்.

பரிபாடை - குழூஉக்குறி, சங்கேதம்.

பரிபாலனம் - அருளுதல், ஆளுகை, காவல், சமாளித்தல், தற்காத்தல்.

பரிபுரம் - காற்சிலம்பு, பாதகிண்கிணி.

பரிபூரணன் - சிவன்.

பரிபூரணி - இலக்குமி, பார்வதி.

பரிப்பு - சுமை.

பரிமண்டலம் - உண்டை.

பரிமந்தம் - அற்புதம், மந்தம்.

பரிமளகந்தி - வியாசன்றாய்.

பரிமளம் - சந்தோஷம், சம்போகம், மிகுமணம்.

பரிமாணம் - அளபு.

பரிமா - குதிரை.

பரிமாவடிப்போர் - குதிரைப்பாகர்.

பரிமாறுதல் - உட்கொள்ளுதல், ஊடாடுதல்.

பரிமாற்றம் - ஊடாட்டம், கலப்பு, நடமாடுதல், புணர்ச்சி.

பரிமிதம் - அளவு பட்டது, ஒரெல்லைக்குட்டுப்பட்டது.

பரிமுகம் - அச்சுவினி நாள், கணைக்கால்.

பரிமேயம் - அளவுபட்டது, பரிமிதம்.

பரிமேலழகர் - குறளுரையாசிரியர்.

பரியகம் - காற்சரி, கைச்சரி, பாதகிண்கிணி.

பரியங்கம் - கட்டில், மக்கட்படுக்கை.

பரியந்தம் - எல்லை, முடிவு, வரைக்கும்.

பரியயம் - அசட்டை, எதிரிடை, ஒழுங்கின்மை, படுக்கை.

பரியவசானம் - முடிவு.

பரியவத்தை - எதிரிடை.

பரியவம் - பலர்சொல்லுநெறி.

பரியாயசந்தேகம் - அற்பசந்தேகம்.

பரியாத்தி - காத்தல், சம்பாதித்தல், சம்மதம், தகுதி, திருத்தி, பகுத்தறிதல் விலக்குதல்.

பரியாயச்சொல் - ஒருபொருள் குறித்த மறுசொல், பலமுறை.

பரியாயம் - ஒழுங்கு, ஒன்றற்குரியன, ஓரலங்காரம், சமயம், சுபாயம், செய்யப்படுபொருள், மாதிரி, முகவுரை.

பரியாலோசனம் - கருத்துக்கூர்ந்து யோசித்தல்.

பரியாணம் - சேணம்.

பரியாளம் - பரிவாரம்.

பரிவட்டம் - சீலை, தலையிற் கட்டுஞ்சீலை, நெய்வோர்கருவியிலொன்று, விக்கிரகத்திஞுடை.

பரிவயம்- அரிசி, நெடுநாள் கூடியிருத்தல், யௌவனம்.

பரிவருத்தனை - ஓரலங்காரம், பண்டமாற்று.

பரிவாகிதமுகம் - மதத்தாற்றலையை ஒருபுறஞ் சாயத்துச் சிறிதாய்ச்சுற்றி யாட்டல்.

பரிவாதம் - குற்றச்சாட்டு, பழிச்சொல், வீணை வியக்கும் வில்.

பரிவாரம் - அணி செய்வோர், உறை, படை, பரிசனம்.

பரிவிருத்தி- ஓரலங்காரம், இருகசார வாக்கியம் கிரக வட்டம், சுற்றுதல்,முடிவு, முழுவட்டம்.

பரிவு - அன்பு, இன்பம், சுகம், துன்பம், பக்குவம்.

பரிவேடம் - சூரிய சந்திரரைச் சூழத்தோன்று வட்டம், சுற்றளவு, சூழ்தல்.

பரிவேதனம் - ஆராய்வு, சம்பாத்தியம், மிகு உபத்திரவம்,விவாகம்.

பரீகம்-நித்தியயோகத்தொன்று.

பரீட்சணம் - சோதனை.

பரீட்சித்தல் - ஆராய்தல், பழகுதல்.

பரீட்சை - அப்பியாசம்,ஆராய்வு, பழக்கம்.

பரீட்டி - ஆயத்தம், ஆராய்வு, ஊழியம்.

பரீதாவி - ஓராண்டு.

பரீவாதம் - கடிந்து கொள்ளல், வீணைவாசித்தல்.

பரீவாரம் - பரிவாரம், வாளுறை.

பரு - கடல், கணு, குரு, சிலந்திநோய், பருமை, பருவென்னேவல்.

பருகல் - உண்டல், குடித்தல், நுகருதல்.

பருகுதல் - நுககருதல், பருகல், புசித்தல்.

பருக்கை - உருண்டை, சோறு, பருக்கைக்கல், பளிங்கு.

பருணிதர் - பரிணிதர், புலவர்.

பருத்தல் - பருமையாதல்.

பருத்தி - ஓர்செடி.

பருந்தலை - பெரியதலை, பெருமையிற் சிறந்தோர், மேட்டிமைகாரர்.

பருந்தின்வீழ்வு - சூத்திர நிலை நான்கிளுென்று, அஃது — ஓரிடத்துச் சூத்திரம் பின்னேரிடத்துச்சூத்திரத்தை அவாவி நிற்பது.

பருந்து - ஓர் பறவை.

பருப்பதம் - மலை.

பருப்பம் - அளவு, பருத்தல், பருமை.

பருப்பதி - பார்வதி.

பருப்பு - அதிகப்படல், பருத்தல் பருப்பு.

பருப்பொருள் - நுண்மையற்ற பொருள், பரும்படியான பொருள்.

பருமம் - அங்கி, கவசம், குதிரைக் கல்லணை, மூவாறு கோவை, மணியணி.

பருமித்தல் - அலங்கரித்தல், எக் களித்தல், சிரமஞ் செய்தல்.

பருவகம் - முழந்தாள்.

பருவகாலம் - உரியகாலம், பக் குவகாலம்.

பருவசந்தி - உவாக்கடையும் பிர தமை முதலும் பொருந்துஞ் சமயம்.

பருவதம் - மலை.

பருவதவர்த்தினி - உமையவள்.

பருவதாசயம் - மேகம்.

பருவதாசிரயம் - சரபபட்சி.

பருவநாடி - அமாவாசி, பௌர் ணமி காலங்கள்.

பருவமாதல் - இருதுவாதல், தகுதியாதல்.

பருவமுயற்சி - தகுகாலமுயற்சி.

பருவம் - அமாவாசியை, இருது, இளமை, உயர்ச்சி, ஏது, கணு, காலம், தகும் வயது, நாற் கூறு, பகுதி, பக்குவம், பருவ காலம், பிரமாணம், பூரணை, பொழுது, பௌர்ணமி, முனி, வயது.

பருவயோனி - கரும்பு.

பருவரல் - அருவருத்தல், துன் பம், வருந்தல்.

பரூஉ - மருமை, பறித்தல்.

பரை - ஐந்துமரக்கால்கொண்ட ஓரளவு.

பரோட்சஞானம் - சத்தாவத் தையினென்று, அது—பிரம மொன்றுண்டென்று கேட்டறி தல்.

பரோட்சம் - அதிரிசியமானவை, இறந்தகாலம், புலப்படாமை.

பரோபகாரம் - பிறர்க்குபகாரம்.

பர்க்கம் - ஒளி, பிரபை, வீரியம்.

பர்க்கன் - சிவன், சூரியன், பிர மன், விட்டுணு.

பர்ணசாலை - இருடியர் ஆச்சிர மம், தழைகளால் வேயந்த குடில்.

பர்ப்பாடகம்
பர்ப்படாகப் } ஓர் பூடு.

பர்வம் - கொப்பூழ், பொன்.

பர்வதம் - பருவதம்.

பல - அனேகம்.

பலகணி - சாளரவாயில், திட்டி வாயில்.

பலகண்டன் - உப்பரவன், மண் வேலை செய்வோன்.

பலகம் - அடுக்கு, கேடகம்.

பலகரை - கவடி.

பலகாரம் - பலபண்டம், யானை மேற்றவிசு,

பலகை - கேடகம், நெற்றி யெலும்பு, பலகை.

பலசந்தமாலை - ஓர் பிரபந்தம்.

பலசிரேட்டம் - மாமரம்.

பலசூதனன் - இந்திரன்.

பலட்சயம் - பலவீனம்.

பலண்டுறுகம் - ஓர் பாஷாணம்.

பலதுறை-நானாபேதம், பலவழி.

பலதிரட்டு - பலபாடலினுமெடுத் துச்சேர்த்திருப்பது.

பலதேன் - பலபத்திரன், வாயு.

பலபூரம் - மாதுளை.

பலபெயர்த்திரிசொல் - ஒரு பொருள் குறித்த பலபெயர்.

பலபை - அயனத்தில் மத்தியான வேளையில் குறித்த சங்கின் சாயை.

பலபொருளுவமை - ஒரு பொருட்குப் பலவுவமையையெடுத் துக்காட்டுவது.

பலபொருளொருசொல் - பல வர்த்தங்கொள்ளுமொரு சொல்.

பலமுறை - நானாவிதம், பலதரம்.

பலமூலசாகாசனர் - முனிவர்.

பலம் - அம்பலகு, ஆகாயம், ஆயுத நுனி, இலை, காய், கிழங்கு, கேடகம், கொழு, சாதிக்காய், சுரூபம், செல் வாக்கு, தாது, தொகை, நியி ஷம், நிறைகல், நிறையளவி னொன்று, நெற்றிப்படை, பயன், பருப்பம், பழம், பிரித் துக்கொண்டபேறு, பெலன், பொன், மகளிர் சூதகம், மாதிரி, மாமிசம், வட்டத்தின் பரப்பு, வெட்பாலை.

பலம்பழம் - செங்கொட்டை.

பலர் - சபை, பல்லார்.

பலர்க்கம் - கதுப்பு.

பலர்பால் - உயர்திணைப்பன்மை.

பல்லம் - சேறு, பிண்ணாக்கு, மாமிசம்.

பலவகைத்தாது - சத்ததாது.

பலவழித்தோன்மல் - மருமகள்.

பலவறிசொல் - அஃறிணைப்பன் மைச்சொல்.

பலவிதம் - நானாவிதம்.

பலவினீட்டம் - பலபொருட் கூட்டம்.

பலவினைத்திரிசொல் - ஒருவினை குறித்த பல சொல்லால் வரும் வினைச்சொல்.

பலவின்கூட்டத்தற்கிழமை - பல வின்ஞெற்றுமை.

பலவின்பால் - அஃறிணைப் பன்மைப்பால்.

பலவு - பலாமரம்.

பலன் - இலாபம், ஈரவெங்காயம், ஓரிராக்கதன், காய்,பழம், பலதேவன், வினைப்பயன்.

பலா - சிற்றுமுட்டி, பலவு.

பலாகம் - கொக்கு.

பலாசம் - இலை, பச்சைநிறம், பரசு, முருக்கு.

பலாசனம் - கிளி.

பலாசி - மரப்பொது.

பலாசு - இலை, பச்சைநிறம், புனமுருக்கு, முருக்கு.

பலாண்டு - ஈரவெங்காயம்.

பலாந்தம் - ஒருகாற் காய்த்துப் படுமரம், மூங்கில்.

பலாபலம் - நயநட்டம்,மிகுபலன்.

பலாபாகம் - செய்யுள் நடை நான்கினொன்று.

பலாபேக்ஷை - பயன் விருப்பம்.

பலாயனம் - தோற்றுப்புயுங்காட்டுதல், நிலைகுலைதல், புறங்காட்டுகை, போதல்.

பலாரி - இந்திரன்.

பலாலம் - வைக்கோல்.

பலி - உடற்றிரை, காகம், காய்த்திருந்தமரம், சாம்பல், சோறு, நீறு, பலியிடப்படுவது, பலிச்சக்கிரவர்த்தி, பிச்சை, பூசை, விண்ணோருணவு.

பலிகம் - சுவர், நீர்க்குடம், பளிங்கு, பிச்சைப்பாத்திரம்.

பலிதம் - கனியுள்ளது, சேறு, பலிப்பது,மயிர்நரை,வெம்மை.

பலிதை - கிழவி.

பலித்தம் - இலாபம்.

பலித்தல் - செழுத்து வளர்தல், நயப்படல், வாய்த்தல்.

பலிப்புட்டம் - காக்கை.

பலிமுகம் - குரங்கு.

பலியம் - தளிர், பூ.

பலியயனம் - சேணம்.

பலினம் } காய்த்திருக்கும் மரம்,
பலினி } கோங்குமரம், ஞாழல்.

பலீ - எருது, ஒட்டகம், கடா, கோழை, பன்றி.

பலேந்திரன் - பலவான்.

பலோதயம் - ஆதரீயம், சந்தோஷம், பலம், மோக்கம்.

பலோற்பத்தி - மாமரம்.

பல் - ஆயுதக் கருக்கு, நங்கூரநாக்கு, பல, பல்லு.

பல்கல் - பெருகல், வெகுநாள்.

பல்கணி - பலகணி.

பல்காயனார் - ஓரிலக்கண வாசிரியர்.

பல்லகம் - கரடி.

பல்லணம் - குதிரைக்கல்லணை.

பல்லதி - ஓரிராகம்.

பல்லம் - அம்பு, ஓரெண், கரடி, குதிரைக்கல்லணை, சேரான் மரம்.

பல்லவதாரம் - மரக்கொம்பு.

பல்லவம் - இலை, ஓர் தேயம், கிளை, கொப்பு, கையணி, சாயம், தளிர், பதத்திறேறுருறுப்பு, விசாலித்தல்.

பல்லவர் - கீழ்மக்கள், தூர்த்தர், பலர்.

பல்லவி - பல்லவம்.

பல்லவை - இழிவான பொருள், கீழ்மை, பல பொருள்.

பல்லாண்டு - பல வருஷம், வாழ்த்து.

பல்லாதகி - சேங்கொட்டைமரம்.

பல்லார் / பல்லோர் } பலர்.

பல்லி - இடம், இடையரூர், ஒருமெம்பு, கெவுளி, சிற்றூர்.

பல்லிக்கை - சேரான்கொட்டை, பல்லி.

பல்லிப்பூடு - கொல்லைப்பல்லி.

பல்லியம் - சங்கீதம், வாத்தியப் பொது.

பல்லுறுசெங்களை - குதிரைப் பற்பாஷாணம்.

பல்லூகம் - கரடி, பெருவாகை.

பல்வலம் - குளம், வாவி.

பவ - ஓராண்டு.

பவணந்தி - ஓர் நூலாசிரியர்.

பவணை - கழுகு.

பவநாசம் - பாவவிநாசம்.

பவநாசன் - கடவுள்.

பவபூதி-ஐசுவரியம்,ஓர்கவி,சிவன்

பவமானன் - காற்று.

பவம் - அழிவு, இருத்தல், உலகம், காற்று, சதுப்புநிலம், சம்பாத்தியம், சாணி, சிங்கக்கரணம், சுத்தம், தூர்த்தல், நிலைபரம், பலன், பாவம், பிறப்பு, மேன்மை.

பவர்-கவர்,நெருங்குகை,மூடுகை.

பவர்க்கம் - நரகம்.

பவவீதி-முடிவு,முற்றத்துறத்தல்.

பவழம் - பவளம்.

பவளக்காலி - ஓர்புள்.

பவளக்குறிஞ்சி - தீண்டியம்.

பவளக்கொடிமாலை - ஓர் நூல்.

பவளச்சோளம் - செஞ்சோளம்.

பவளநெடுங்குஞ்சியோன் - வயிரவன்.

பவளப்புற்றுப்சாஷாணம் - ஓர் பாஷாணம்.

பவளப்பூண்டு - ஓர் பூண்டு.

பவளப்பூலா / பவளப்பூல் } ஓர்வகைப்பூலா.

பவளமல்லிகை - ஓர்வகை மல்லிகை.

பவளமஞ்சேசிலை - ஓர் சரக்கு.

பவளம் - நவரத்தினத்தொன்று.

பவளவங்காரவாச்சி - ஓர்பூடு.

பவனசக்கரம் - இராசிமண்டலம்.

பவனம் - அரமனை, இடம், இராசிப்பொது, ஊர், காற்று, கொழித்தல், தானியந்தூற்றல், தூய்மை, தேவலோகம், நாகலோகம், பாவனை, பூமி, பூனை, வீடு.

பவனன் - காற்று.

பவனாசனம் - பாம்பு.

பவனாத்துமசன் - அக்கினி, அனுமான், வீமன்.

பவனி - உலாப்போதல்.

பவனிக்காதல் - ஓர் பிரபந்தம்.

பவனோதரம் - உள் வீடு.

பவன் - சிவன்.

பவாகை - சுழல்காற்று.

பவாயனை - கங்கை.

பவானி - பார்வதி.

பவி - வச்சிராயுதம்.

பவிகம் - சிலாக்கியம்.

பவிடியம் - எதிர்காலம், செல்வம், பவிடிய புராணம்.

பவித்திரம் - தூய்மை.

பவித்திராரோபணம் - பூனூலணிதல்.

பவித்திரி - தருப்பை.

பவுண்டரம் - வீமன் கையிற் சங்கு.

பவுண்டரிகம் - ஓர் யாகம்.

பவுரி - கூத்தின்விகற்பம்.

பவோற்பவன் - உருத்திரர் பதினொருவரி லொருவன்.

பவ்வம் - கடல், நீர்க்குமிழி, நுரை, பௌர்ணமி, மரக்கணு.

பழகல் - பழகுதல்.

பழகுதல் - இணக்கமாதல், ஊடாடுதல், கற்குதல், பயிலல், வழங்குதல்.

பழக்கம் - அறிமுகம், சாதுத்துவம், பயிற்சி, பரிசனை, வழக்கம்.

பழங்கணாளர் - துன்புறுவோர்.

பழங்கண் - இளைப்பு, ஒலி, துன்பம், பழுது, பயனின்மை, மெலிவு.

பழங்குடி - தொன்மரவு, ஆதிகாலத்தேறியகுடி.

பழஞ்சொல் - முதுசொல்.

பழமலை - விருத்தகிரி.

பழமை - தொன்மை.

பழமொழி - ஓர் நீதிநூல், முதுசொல்.

பழம் - கனி, பலன், முதிர்ந்தது.

பழம்பஞ்சுரம் - ஓர்பண்.

பழம்பாசி - ஓர்பூடு.

பழம்பொருள்-கடவுள், புதையல்.

பழவடியார் - வழித்தொண்டர்.

பழவினை - ஊழ்வினை.

பழனம் - மருதநிலம், வயல்.

பழனி - திருவாவினன்குடி யென்னும் திருப்பதி.

பழி - குற்றம், சலஞ்சாதித்தல், நிந்தை, பழியென்னேவல், பொய், பொல்லாங்கு.

பழிகூறல் - தூற்றுதல்.

பழிச்சல் - துதித்தல்.

பழிச்சொல் } நிந்தை, புறங்
பழிமொழி } கூறல்.

பழிதீர்த்தல் - குற்றநீங்கல், சமாதானமாதல், பொல்லாங்கு தீர்தல்.

பழிதூறல் - புறங்கூறல்.

பழிதேடுதல் - பொல்லாங்கு செய்தல்.

பழித்தல் - நிந்தித்தல்.

பழிப்பன - பழிக்கப்படுவன.

பழிப்பு - நிந்தை, பழி.

பழு - ஏணிப்பழு, பழுவென்னேவல், விலா.

பழுது - குற்றம், பொய்.

பழுகை - கயிறு.

பழுத்தல் - முதிர்தல்.

பழுப்பு - அரிதாரம், இலை முதலிய முதிர்தல்.

பழுமரம் - ஆலமரம்.

பழுவம் - காடு.

பழையர் - கள்விற்போர், தொல்லோர்.

பளகம் - பவளம், மலை.

பளகு - குற்றம்.

பளபளெனல் - ஒளிக்குறிப்பு.

பளிக்கறை - பளிங்குமண்டபம்.

பளிங்கு - கண்ணாடி, சுக்கிரன், தோணிக்கயிறு, படிகம்.

பளிதம் - ஓரெண், கருப்பூரம்.

பளீரெனல் - ஒளிக்குறிப்பு.

பளு - பாரம்.

பளுவு - பாரம்.

பள்ளம் - ஆழம், குழி, தாழ்ந்த நிலம்.

பள்ளி - அறச்சாலை, அறை, இடைச்சேரி, ஓர்சாதி, கல்லூரி, சிற்றூர், தேவர்கோயில், நித்திரை, பள்ளிக்கூடம், மக்கட்படுக்கை, மருதநிலத்தூர், முனிவர் வாசம்.

பள்ளிகொண்டபெருமாள் - விட்டுணு.

பள்ளியெழுச்சி - ஓர் பிரபந்தம், துயிலெழுப்புகை.

பள்ளு - ஓர்சாதி, பள்ளுப்பாட்டு.

பள்ளை - ஆடு, வெள்ளாடு.

பறங்கிப்பாஷாணம் - ஓர் பாஷாணம்.

பறட்டை - சடைவு, செழிப்பற்றது, தழைவற்றது, வளர்ச்சியற்றது.

பறத்தல் - பறக்குதல்.

பறந்தலை-சுடுகாடு, போர்க்களம்.

பறப்பன்-தேள், விருச்சிகவிராசி.

பறம்பர் - தோல்வினைஞர்.

பறம்பு - மலை, முலை.

பறவை - அவிட்டநாள், சிறகுள்ளன, புள், புள்ளிறகு.

பறவைவேந்தன் - கருடன்.

பறழ் - அணில், குரங்காதிகோட்டில் வாழ் விலங்கு, ஆடு, கீரி, நரி, நாய், பன்றி, புலி, பூனை, மான் முதலியவற்றின் குட்டி, பருப்பு.

பறளிகை
பறளை } குறடு, பற்றிரும்பு.

பறி - பறித்தல், பறியென்னேவல், பொன், மீன்படுக்குங் கருவி, மீன் பெய்யுங்கருவி.

பறிகொடுத்தல் - அழியக்கொடுத்தல், களவுகொடுத்தல்.

பறிக்கல் - இட்டக்கல்.

பறிதலையர் - சமணரிஞோர்வகுப்பார்.

பறிதல் - பறிகுதல், வெளிப்படல்.

பறித்தல் - களைதல், கள்ளல்.

பறியவிடுதல் - தப்பவிடுதல், நெகிழவிடுதல்.

பறிவு - ஒட்டுகை, பறியல்.

பறிவை-சீந்தில்,நந்தியா வட்டம்.

பறுகு - சிறுதூறு, பறட்டை.

பறுணி - கொள்ளு, சீந்தில், பெருங்குமிழ்,பெருங்குரும்பை.

பறை - இறகு, ஓரளவு, சொல், பறையென்னேவல்,வாத்தியம்.

பறைதல் - சொல்லல், தேய்தல்.

பற்குனன் - அர்ச்சுனன்.

பற்குனி - உத்திரநாள், பங்குனி.

பற்சர் - பகைவர்.

பற்சனம்-நிந்தை.

பற்படகம்
பற்படாகம்
பற்பாடகம் } ஓர் மருந்துப்பூடு.

பற்பணம்-ஓர் பலம்.

பற்பநாபன் - பதுமநாபன்.

பற்பமாமுனி - முனிவர் முப்பத்தொருவரி லொருவர்.

பற்பம் - அட்டாதச புராணத்தொன்று, தாமரை, தாள், நீறு, பதுமம், விபூதி.

பற்பராகம் - பதுமராகம்.

பற்பல - பலபல.

பற்றலர் - பகைவர்.

பற்றல் - ஆசைப்பெருக்கம், குறித்தல், தொடர்தல், பிடித்தல்.

பற்றறுதல் - அன்புகெடுதல், பாசபந்தம்விடல், முழுதுமற்றுப்போதல்.

பற்றற்றார் }
பற்றற்றோர் } முனிவர்.

பற்றாக்கை - அம்புத்திரளைக் கட்டுங்கயிறு, கட்டுங்கயிறு.

பற்றாசு - இருகுறணேரிசை வெண்பாவிற்கிடை வருவது. உலோகங்களைப் பொருத்த விடையிடுந்துண்டு.

பற்றாதது - அலட்சியமானது, போதாதது.

பற்றார் - பகைவர்.

பற்றிலி - துறந்தோன்.

பற்றினர்-உறவோர், சினேகிதர்.

பற்று - அறவிட்டது, அன்பு, ஆசை, இசைவு, உலோகங்களைப்பொருத்தும் கூட்டு, சம்பந்தம், சிற்றார், சேர்வை, தொடர்ச்சி, பசை, பற்றென்னேவல், பிடி, பொத்து, மண்டி, வாரப்பாடல்.

பற்றுக்கால் - தாவரம்.

பற்றுக்கோடு - தஞ்சம், பற்றுக்கோல்.

பற்றுக்கோல் - பற்றுக்கோடு.

பற்றுதல் - அன்பு, ஊன்றிப் பிடித்தல், தீப்பற்றுதல், நம்பிக்கை, பிடித்துக்கொள்ளுதல், பொருந்துதல், வாங்குதல்.

பற்றுவிடு - பாசம் விடல்.

பற்றை - சிறுதூறு, செங்காந்தள்.

பனசம் - பலாமரம்.

பனசை - ஓர் பாம்பு, பனையூர்.

பனந்தாமன் - பனந்தாரான்.

பனந்தாரான் - சேரன், பலபத்திரன்.

பனம்பாரனார் - அகத்தியர் மாணாக்கர்பன்னிருவரிலொருவர்.

பனம்பாரனார்சூத்திரம் - ஓரிலக்கணநூல்.

பனி - அச்சம், இக்கட்டு, குளிர், துக்கம், துன்பம், நடுக்கம், பயம்,பனி, பனியென்னேவல்.

பனிக்கதிர் - சந்திரன்.

பனிச்சை - காட்டத்தி, மயிர்ச்சுருள்.

பனிதாங்கி - ஓர் பூடு.

பனித்தல் - சொரிதல், தூறல், நடுங்கல், வருந்துதல், விடாமழை பெய்தல்.

பனிப்பகை - சூரியன்.

பனிப்பு - அச்சம், நடுக்கம்.

பனிமலை - இமயமலை.

பனிமொழி - குளிர்ந்தசொல், பெண்.

பனுவலாட்டி - சரச்சுவதி.

பனுவல்-ஆகமம், கல்வி, சொல், நூல், பஞ்சினூல், புலமை.

பனை - அனுடநாள், ஓர் மரம்.

பனைக்கொடியோன் - பலபத்திரன், வீமென்.

பனைசை - பனசை.

பனைமீன் - யானைமீன்.

பனையூர் - ஒரூர்.

பன் - ஓர் நாணல், பத்தின் சிதைவு, பன்மை.

பன்மணிமாலை - ஓர் பிரபந்தம்.

பன்மை - பலவற்றின்றன்மை.

பன்மைப்பால் - பலவின்பால்.

பன்மைப்பொதுப்பெயர் - இருதிணைப் பொதுப் பன்மைப் பெயர்.

பன்மொழித்தொகைத்தொடர் - பலமொழி தொடர்ந்து நிற்குந் தொகைநிலை.

பன்றி - ஓர் கொடுந்தமிழ் நாடு, வராகம்.

பன்றிக்கொவ்வை - ஓர்கொவ்வை.

பன்றித்தகரை - ஓர் தகரை.

பன்றிப்புல் - ஓர்புல்.

பன்னகம் - பாம்பு.

பன்னகவயிரி - கருடன்.

பன்னகாசனன் - கருடன், விஷ்ணு.

பன்னகாபரணன் - சிவன்.

பன்னம் - இலை, ஓலை முதலியவற்றாற் பின்னும்வேலை, பத்திரி, பலாசு, வெற்றிலை.

பன்னல் - சொல்லுதல், தேர்தல் நெருங்கல், பருத்தி.

பன்னாங்குழி - பதினான்குகுழியுள்ள வோர் விளையாட்டுத்தட்டு.

பன்னாசனம் - இலையுணவு, புற்பாய், முகில்.

பன்னாடை - நெய்யரி.

பன்னான்கு - பதினான்கு.

பன்னி - சணல், மனைவி.

பன்னிருபடலம் - அகஸ்தியர் மாணாக்கர் செய்தவோர் புறப்பொருணூல்.

பன்னு - வரி.

பன்னை - ஓர் செடி, கருப்பூரம், குடன்.

## பா

பா - அழகு, ஒரெழுத்து, கடிகாரவூசி, காத்தல், கிழங்குப்பா, சுத்தம், நிழல், நெசவுபா, பஞ்சிநூல், பரப்பு, பாவுதல், பாட்டு, பாவென்னேவல், பிரபை, வெண்பா முதலியவைந்துபா; அஃது—இரண்டு முதலியவடிகளானாக்கப்பட்ட பிரபந்தம்.

பாககம் - பிரிக்குந்தொகை.

பாகசம் - ஓர்வகை யுப்பு, சூலம்.

பாகசாஸநன் - இந்திரன்.

பாகசன் - ஓரிராக்கதன்.

பாகசாஸநி } அருச்சுனன், இந்
பாகசாதனி } திரன்மகன், சயந்தன்.

பாகசாதனன் - இந்திரன்.

பாகசாலை - மடைப்பள்ளி.

பாகண்டன் - வெளி வேஷக்காரன்.

பாகதம் - எல்லாநாட்டு மேலோர் மொழி, பிராகிருதம்.

பாகதாரி - சமையற்காரன்.

பாகதானம் - மடைப்பள்ளி.

பாகபாண்டம் - சமையற் பாத்திரம்.

பாகபுடி - குயவன் சூளை.

பாகப்படுதல் - சமைக்கப்படுதல், பக்குவப்படல், பதப்படுதல்.

பாகம் - அச்சம், ஆக்கை, ஓர் கணிதம், ஓர் பிசாசம், சபித்தல், சமைத்தல், செய்யுள் நடை, தேசபயம், நரைமயிர், நான்குமுழங்கொண்ட வளவு, பக்கம், பக்குவம், பங்கு, பாகை, பாதி, பாத்திரம், பிச்சை, புயம்.

பாகம்பண்ணுதல் - சமைத்தல், பருத்தல், பக்குவப்படுத்தல்.

பாகர் - யானை, குதிரை முதவியவற்றை நடத்துவோர்.

பாகலம் - குதிரை, யானைநோய்.

பாகலன் - உன்மத்தன்.

பாகல் - ஓர்கொடி, பலா, வெட்பாவட்டை, காரவல்லி.

பாகவதம் - பதினெண்புராணங்களுள் ஒன்று.

பாகவதர் - விட்டுணுசமயத்தவர்.

பாகவிரோதி }
பாகவைரி } இந்திரன்.
பாகசூதனன் }

பாகனம் - ஓர் வருடம்.

பாகன் - சங்கம் வாங்கி, நடத்துவோன், புதன்.

பாகாரம் - பங்கிடுதல், பிரிவு, கணக்கு.

பாகாரி - இந்திரன், வெண்பொன்.

பாகி - நாய், பக்குவன்.

பாகிடுதல் - பங்கிடுதல்.

பாகிநேயன் - மருமகன்.

பாகியம் - புறம்பானது.

பாகியேந்திரியம் - புறவுறுப்பு.

பாகீடு - பங்கீடு.

பாகீரதி - கங்கை.

பாகு - கரை, கற்கண்டு, குழம்பு, சத்தி, சருக்கரை, தலைப்பாகு, பங்கு, பரணிநாள், பாகன், பாக்கு, பால், பிச்சை, புயம்.

பாகுடம் - அரசிறை.

பாகுபடுதல் - பகுக்கப்படுதல்.

பாகுபாடு - பகுப்பு.

பாகுரி - இலக்கணி.

பாகுலம் கார்த்திகை மாதம்.

பாகுவன் - படையன்.

பாகை - தலைப்பா, பகுதி, வட்டத்தின் முந்நூற்றறுபதி லொருபங்கு.

பாகோடன் - சூரியன்.

பாக்கம் - ஊர்ப்பொது, நெய்தனிலத்தூர், மருதநிலத்தூர்.

பாக்கல்
பாக்கல்லு } பாவுகல்.

பாக்கன் - பூனை.

பாக்கானால் - பாவினால்.

பாக்கி - நிலுவை.

பாக்கியசாலி-அதிட்டமுள்ளவன்.

பாக்கியத்தானம் - சென்மத்துக்கு ஒன்பதாமிடம்.

பாக்கியம் - அதிட்டம், கஷாயம், சித்தி, செல்வம், தனம், பேறு.

பாக்கியலட்சுமி - அட்டலக்குமியி னொன்று; இஃது—செல்வந் தருவது.

பாக்கியவதி - செல்வி.

பாக்கு - எதிர்காலவிடைச்சொல், கமுகு, துவர்க்காய்.

பாக்குக்கட்டுதல்-ஓர்விளையாட்டு.

பாக்குச்சாரம் - பாக்குச்சாறு, பாக்குவெற்றிலைத்தம்பலம்.

பாக்குப்பறித்தல் - மணமுடிக்க வருமணவாளனது சயஞ்சோதித்தல்.

பாக்குப்பை - அடைப்பை.

பாக்குவெட்டி - பாக்குச்சீவுங் கருவி.

பாக்குவெற்றிலைப்பை - அடைப்பை.

பாங்கம் - பலண்டுறுபாஷாணம்.

பாங்கர் - இடம், தோழர், பக்கம்.

பாங்கன் - தோழன்.

பாங்கி - தோழி.

பாங்கு - அழகு, இடம், இணக்கம், உரிமை, தகைமை, பக்கம், மாதிரி, முறை.

பாங்குபண்ணல் - சிறப்பித்தல்.

பாங்குமம் - கருஞ்சீரகம்.

பாசகத்திரி - சமயற்காரி.

பாசகம் - சூதாடுகருவி, மடைத்தொழில், மூலாக்கினி.

பாசகாரன் - காலன், நமன், வருணன், விநாயகன்.

பாசகர் - மடையர்.

பாசகன் - அக்கினி, சமையற்காரன்.

பாசகுசுமம் - இலவங்கம்.

பாசக்கட்டு - பிரபஞ்சக்கட்டு.

பாசக்கயிறு - பாசம்.

பாசங்களினீங்கல் - நிருமலமாதல், இது—சிவனெண்குணத்தொன்று.

பாசஞானம் - உலகஞானம்.

பாசடம் - வெற்றிலை.

பாசடை - பச்சிலை.

சண்டத்துறை - சமயக்கட்டி பாணிலை.

பாசண்டர் - சமயிகள்.

பாசதரன் - காலன், நமன், வருணன், விநாயகன்.

பாசம் - அழகு, அன்பு, இருள், ஊசித்துளை, ஓரளவைப் பிரமாணம், ஓர் படைக்கலம், கட்டு, கண்ணி, கயிறு, கவசம், கற்பாஷணம், சிவனாயுதம், சீரகம், சுற்றம், நமனாயுதம், நூல்.

பாசவைராக்கியம் - பந்தம் வெறுத்தல்.

பாசறை - துன்பம், பகை மேற்சென்றோருறைவிடம்.

பாசறைமுல்லை - ஓர் நூல் அஃது—பாசறைத்தலை மகன் றலைவியை நினைத்தல்.

பாசனம் - உண்கலம், உறவு, மட்கலம்.

பாசன்-இயமன்,சீவன், வருணன்.

பாசாங்குசன் } விநாயகன்.
பாசாங்குசதரன்

பாசி - கரியமணி முதலியன, சடைச்சி, நாய், நீர்ப்பாசி, நெட்டி, வருணன்.

பாசிதம் - ஈவு, பிரித்தானது.

பாசிலை - பச்சிலை.

பாசு - தைரியம், பசுமை, பச்சை, மூங்கில்.

பாசுபதம் - உட்சமயமாறினொன்று, பசுபதிபாணம்.

பாசுபதர் - சிவசமயத்தோர்.

பாசுபதாத்திரம் - சிவனத்திரம்.

பாசுரம் - ஞானப்பாட்டு, வசனம், வாசகநடை, வேய்ங்குழலோசை.

பாச்சல் - எழுச்சி.

பாஞ்சசன்னியம் - ஒடு, சலஞ்சலமென்னுஞ் சங்காயிரஞ்சூழ்ந்த சங்கு, விஷ்ணுவின் சங்கு.

பாஞ்சராத்திரம் - புறச்சமயமாறினொன்று.

பாஞ்சாலம் - ஓர்தேயம்.

பாஞ்சாலி - துரோபதி.

பாடகம் - ஓர் நீட்டலளவை, காலணியிலொன்று.

பாடகன் - பாடுவோன், புகழ் பாடுவோன்.

பாடணம் - பேச்சு.

பாடபம் - சமர்த்து, பாடவம்.

பாடம் - இடையர்வீதி, தெரு, பஞ்சமகாயக்ஙியம், பாடம், வேத பாடம்.

பாடம்போற்றல் - கேட்டபாடத்தைப் பலகாற் சிந்தித்தல்.

பாடலம் - இளஞ்சிவப்பு, குதிரை, சேரன் குதிரை, பாதிரி மரம்.

பாடலி - கள், பாடலம்.

பாடல் - சங்கீதம், செய்யுள், பாடுதல்.

பாடவம் - களிப்பு, வடவாமுகம்.

பாடவன் } மிதுனவிராசி.
பாடவை }

பாடனம் - ஒத்துப்பாடல், போதித்தல்.

பாடன்மகடூ - பாணர்மகள்.

பாடாணதாரகம் } கல்லுளி.
பாடாணதாரணம் }

பாடாணமுத்தி - கற்போற்கிடக்கு முத்தி.

பாடாணம் } கல், நச்சுச்சரக்கு,
பாஷாணம் } பிறவிப்பாஷாணம்.

பாடாண்டிணை - புறப்பொருட் டிணையினொன்று.

பாடி - ஊர், ஓரிராகம், கவசம், சேரி, நகரம், நாடு, படை, முல்லை நிலத்தூர்.

பாடிதம் } பேச்சு.
பாஷிதம் }

பாடியம் - உரை.

பாடீரம் } ஓர் கிழங்கு, சந்தனம்,
பாடீரம் } துத்தநாகம், முகில், மூங்கிலரிசி, வாதம்.

பாடிலம் - நாடு,

பாடிவீடு - பகைமேற்சென்றோருறைவிடம்.

பாடினி - பாடுவள்.

பாடு - அத்தமனம், இடம், உதயத்துக் கேழாமிடம், ஏழாம் வேற்றுமை யுருபு, ஓசை, குணம், கேடு, பக்கம், படுதல், பாடென்னேவல், பெருமை.

பாடை - ஆசுந்தி, சொல்.

பாட்சிகன் - குருவிவேட்டுவன்.

பாட்டகம் - வைசூரி.

பாட்டம் - அச்சம், மழை, பலகாரம், பாட்டாசாரியம்.

பாட்டன் - மூதாதை.

பாட்டி - பாடுவள், பெண்பன்றி, பெண்ணாய், பெண்ணரி முதலிய ஒரு சார்விலங்கின் பெண் பொது.

பாட்டியல் - ஓர் நூல், கணம், நயம், தேசிகம், செய்யுளிலக் கணம்.

பாட்டு - இசைப்பா, செய்யுள்.

பாட்டுடைத்தலைவன் } கவி
பாட்டுநாயகன் } யுடைத் தலைவன்.

பாட்பம் - கண்ணீர்.

பாணகோசரம் - சரகதி.

பாணம் - அம்பு, பட்டு, மழை வண்ணக்குறிஞ்சி, வாணம்.

பாணர் - தையற்காரர், புகழ்ந்து பாடுவோர்.

பாணி - இசைப்பாட்டு, ஊர்சூழ் சோலை, கள், காலம், கூத்து, கை, சங்கீதம், சொல், தாமதம், நீர், பலபண்டம், பாகு.

பாணிக்கிரகணம் - கலியாணம்.

பாணித்தல்-பொழுது நீட்டித்தல்.

பாணினி - ஓரிலக்கண நூலாசிரியன்.

பாணினியம் } ஓர் வடமொழி
பாணினீயம் } யிலக்கணம்.

பாண் - இசைப்பாட்டு, கள்.

பாண்செயல் - பாடல்.

பாண்டம் - உடல், பாத்திரப் பொது, மட்கலம்.

பாண்டரங்கம் - சிவன் கூத்து.

பாண்டரங்கன் - சிவன்.

பாண்டரம் - வெண்மை.

பாண்டவர் - பாண்டுபுத்திரர், பஞ்சபாண்டவர்.

பாண்டவர்முன்பிறந்தோன் - கன்னன்.

பாண்டி - ஓர்தேயம், ஓர் பண், ஓர் விளையாட்டு, பன்னாங் குழிப்பலகை, வாகை மரம்.

பாண்டிகன் - பள்ளியெழுச்சி பாடுவோன், வைதாளிகன்.

பாண்டித்தியம் - கல்வித்திறம்.

பாண்டியம் } பாண்டியன்
பாண்டிமண்டலம் } தேயம்.

பாண்டியன் - பாண்டிதேயத் தரசன்.

பாண்டில் - அகல், இடபவிராசி, எருது, கட்டில், கைத்தாளம், நாடு, பண்டி, மூங்கில், வட்டம், வாகைமரம்.

பாண்டு - ஓர்நோய், குருகுலத் தரசருளொருவன், வெண்மை.

பாண்டுமைந்தர் - தருமராசன் முதலேலவர்.

பாண்டுரம் - ஓர்நோய், வெண்மை.

பாண்மகள் - பாடுவள்.

பாதகடகம் - பாடகம்.

பாதகம் - பாவம்.

பாதகர் - கீழ்மக்கள்.

பாதக்காப்பு - செருப்பு.

பாதசன் - சூத்திரன்.

பாதசாகை - கால்விரல்.

பாதசாபலியம் - பாததாடனம்.

பாதசாரம் - கிரகநடை.

பாதசாரி - காலாள்.

பாதசாலம் - காலணிப்பொது.

பாததாடனம் - உதை.

பாததீட்சை - திருவடித்தீட்சை.

பாதபம் - மரப்பொது.

பாதபரிசம் - சிதாங்கபாஷாணம்.

பாதப்பிரகாரம் - பாததாடனம்.

பாதப்பிரட்சாளனம் - கால் கழுவுகை.

பாதப்பிரதாரணம் - பாதரட்சை.

பாதமயக்கு - அடிமயக்கு.

பாதம் - இராகு; கால், கிரணம், சம்பவித்தல், சரிதை முதலியநிலை, செய்யுட்களினடி, திடர், நாலினொன்று, நீர்பங்கு, மரவேர், வட்டத்தினான்கினொன்று, வைகறை.

பாதரசம் - இரதம்,

பாதரட்சணம் } தொடுதோல்,
பாதரட்சை } மிதியடி.

பாதரதம் - இரதம், காலாட்படை, தொடுதோல்.

பாதராயணன் - வாதராயணன், வியாசன்.

பாதரோகணம் - அரசமரம்.

பாதலத்தம்பி - நிலக்காளான்.

பாதலம் - கமர், கிடங்கு, குகை, சூரியனிற்குமிராசிக்கு நாலாமிராசி, நரகம், பாதாளம்.

பாதலவாழ்நர் - நரகர்.

பாதவம் - தோப்பு, பாதபடி, மரப்பொது, மரம், மலை.

பாதனம் - இழிதல், துக்கத்தாற்றலைசாய்த்தல், விழுதல்.

பாதாளபேதி - காடி.

பாதாளமூலம் } ஆடுதின்னாப்
பாதாளமூலி } பாளை, கறையான், கோரைக்கிழங்கு, சிறுநெருஞ்சில், சீந்திற்கொடி.

பாதாளம் - கீழுலகம், தாழ்வு, நரகம், பிலம்.

பாதாளலோகம் - கீழுலகம்.

பாதி - அரைவாசி, கணவன், கூறு, தலைவன், பங்கு.

பாதிகம் - சம்பளம்.

பாதிச்சாமம் - பாதியிரா.

பாதிடுதல் - நெருக்கல், பங்கிடுதல், பாதுகாத்தல்.

பாதித்தல் - கூறுசெய்தல்.

பாதிமதி - அர்த்தசந்திரன்.

பாதிரம் - மலையாத்தி.

பாதிரி - பாதிரிமரம்; அதுதசமூலத்தொன்று, மூங்கில்.

பாதிரிவிநாயகன் - பழனிவிநாயகன்.

பாதிலி - வலை.

பாதீடு - காத்தல், செறித்தல், பங்கிடுதல்.

பாது - காவல், சூரியன், பங்கு.

பாதுகம் - செங்குத்து, தொடுதோல், மிதியடி.

பாதுகன் - நடைவல்லோன், விழுமியல்புள்ளவன்.

பாதுகாத்தல் - உதவிசெய்தல், காத்தல்.

பாதுகாப்பு - காவல்.

பாதுகாவலன் - காவல் செய்வோன்.

பாதுகிருது - சக்கிலியன்.

பாதுகை - பாதுகம், சிறுசெருப்படை.

பாதேயம் - கட்டுச்சோறு, கன்னியிராசி.

பாதை - அடிப்பாடு, மரக்கலம், மிதவை, முறை, வழிவகை.

பாதோசம் - தாமரை.

பாதோதகம் - கால் கழுநீர், வழியருகிற்றண்ணீர்.

பாதோதம் - தாமரை, முகில்.

பாத்தல்-கொடுத்தல், பங்கிடுதல்.

பாத்தி - சிறுசெய், பங்கு, பயிரிடு மேடை, வீடு.

பாத்திபம்-புருமுட்டிப்பூடு, பூமி.

பாத்திபன் - அரசன்.

பாத்தியம் - உரிமை, சம்பந்தம், பகுக்கப்பட்டது, பங்கு, பாதமலம்பக் கொடுக்குநீர், பாதமலம்புதல்; இது பூசையியல்பினொன்று.

பாத்தியல் - தண்ணீர்விட்டான்.

பாத்தியன் - உரியவன், பிணைகாரன்.

பாத்திரச்சுரை - ஓர் சுரை.

பாத்திரடீரம் - காகம், நீநாரை, பாத்திரம்.

பாத்திரபதம் - இரேவதி, உத்திரட்டாதி, புரட்டாசிமாசம்.

பாத்திரபாலம் - சுக்கிரன்.

பாத்திரமாதுரன் - கற்புடையாள் மகன்.

பாத்திரம் - இரப்போர் கலம், இலை, உடல், உண்கலம், எண்சேர்கொண்டது, கட்டளை, தகுதி, புரட்டாதி, மந்திரி, வாய்க்கால்.

பாத்திரவாளி } தகுதிவான்.
பாத்திரவான் }

பாத்திராதீரம் - அக்கினி.

பாத்தில் - வீடு.

பாத்து - கஞ்சி, சோறு, நான்கு, பங்கு, பாதி.

பாத்துதல் - பங்கிடுதல்.

பாத்துப்புலு - நாற்பது.

பாத்துமகற்பம்-பிரமனது ஆயுட்காலத்தில் முற்பாதி, வராஹ கற்பமென்பதுமிதுவே.

பாநாள் - அத்தசாமம், பாதிநாள், மத்தியானம்.

பாநிலம் - பாநபாத்திரம்.

பாநியாமலகம் - நெல்லியினோர் பேதம்.

பாநுமதி - விக்கிரமார்க்கன் மனைவி.

பாநேமி - சூரியன்.

பாந்தம் - அடியாறு, ஒழுங்கு, பகரவீறு.

பாந்தல் - பதுங்கல்.

பாந்தவம் } அடியாறு, பந்துத்துவம்.
பாந்தவியம் }

பாந்தள் - பாம்பு.

பாந்தன் - வழிச்செல்வோன்.
பாந்து-அலை, பாந்தென்னேவல்.
பாந்துதல்-பதுங்குதல், மறைதல்.
பாந்தை - அளை, பொள்ளல்.
பாபகம் - பாவம்.
பாபகிரகம் - இராகு, சனி, செவ்வாய்.
பாபக்கிநம் - எள்.
பாபத்தி - வேட்டை.
பாபகிரதி - பொல்லாங்கு.
பாபமார்க்கம் - பாவவழி.
பாபமூர்த்திகள் - வேடர்.
பாபம் - குற்றம், பாவம்.
பாபயோனி - பாவப்பிறப்பு.
பாபரஹிதன் - பாவமற்றவன்.
பாபரோகம் - ஊழ்நோய், கொப்புளிப்பான்.
பாபரோகி - தொழுநோயாளி.
பாபர்த்தி - பாபத்தி.
பாபவியாக்கியானம்-பாப சங்கீர்த்தனம்,
பாபவிமோசனம் - பாவநாசம்.
பாபாத்துமா - பாவி.
பாபநுதி - பாபநிவிர்த்தி.
பாபி - பாவி.
பாபிவிட்டம் - கோழிப்பூடு.
பாபிஷ்டன்-பாவஞ் செய்வோன்.
பாப்பாச்சி - ஓர்வகைத்தொடுதோல்.
பாப்பு - பாத்தல், பிராமணசாதி.
பாமகள் - சரச்சுவதி.
பாமக்கினம் - கந்தகம்.
பாமடந்தை - பாமகள்.
பாமதம் - வாலுளுவை.
பாமநன் - சிரங்குபிடித்தவன்.
பாமம் - கோபம், தினவு, நுரை, பரப்பு, பிரபை.
பாமரம் - அறிவின்மை, இழிமை.
பாமரர் - அரசற்குத்துணைவர், அறிவீனர்.
பாமரன் - அறிவீனன், கீழ்மகன்
பாமன் - சூரியன், மைத்துனன்.
பாமாரி - கந்தகம்.
பாமாலை - ஒருவன் கீர்த்தியைப் புகழ்ந்துதொடுத்தபா.
பாமினி - பெண்.
பாமுதல்வி - சரச்சுவதி.
பாமை-அகங்காரி, காமி, சிரங்கு.
பாம்பரணை - ஓரரணை.
பாம்பாட்டம் - சோவி.
பாம்பாட்டல் - தொந்தரை பண்ணல், பாம்பையாடச்செய்தல்.
பாம்பாட்டி - அரவாட்டுவோன், கௌசிகன்.
பாம்பாட்டிசித்தர் - ஓர் சித்தர்.
பாம்பு - அரவு, ஆயிலியநாள், கரை, வரம்பு.
பாம்புகண்டசித்தன் - கரடி.

பாம்புகொல்லி - ஓர் பூண்டு.

பாம்புக்கல் - பாம்பின் விஷத்தை யிழுக்கும் கல்.

பாம்புக்கண்ணி - சங்கங்குப்பி.

பாம்புக்குத்தச்சன் - கறையான், செல்.

பாம்புதின்னி - முண்ணுயகி.

பாம்புமொச்சை - ஓர்பூண்டு.

பாம்புரி - அகழி, பாம்புச்சட்டை.

பாம்புவிரல் - நடுவிரல்.

பாம்போடுவடலி - நெடுமட்டை வடலி.

பாயசம் - பால், பாற்சோறு, பாற்சோற்றிச்செடி.

பாயமுகம் - வடவாக்கினி.

பாயம் - நீர், புணர்ச்சியைக் கருதுங் கருத்து, விருப்பமானது.

பாயல் - மக்கட்படுக்கை.

பாயிகன் - காலாள்.

பாயிரம் - பொழிப்புரை, முகவுரை, வரலாறு.

பாயிழுத்தல் - தோணியிற்பாய் தூக்கிவிடல்.

பாயு } குதம், அது—கருமேந்திரிய மைந்தினென்று.
பாயுரு }

பாயெடுத்தல் - பாயிழுத்தல்.

பாய் - களப்பாய் முதலியன, கூறைப்பாய், பாயல், பாயென்னேவல்.

பாய்க்கோரை - ஓர்புல்.

பாய்ச்சல் - கீழ்ப்படியாமை, பாய்தல்.

பாய்ச்சல்காட்டுதல் - பாயும்படி ஏவுதல்.

பாய்ச்சல்விடுதல் - குதிரை முதலியவற்றைப் பாயவிடல்.

பாய்ச்சான்போடுதல் - இருவர் கூடி யோருலக்கையை மாறியோச்சல்.

பாய்ச்சி } சொக்கட்டான் முதலியவற்றின் கவறு.
பாய்ச்சிக்கை }

பாய்ச்சு - பாய்ச்சென்னேவல், பிளாச்சு.

பாய்ச்சுதல் - உட்செலுத்துதல், பாயச்செய்தல்.

பாய்ச்சுலக்கை - பாய்ச்சானுலக்கை.

பாய்ச்சுவலை - ஓர்வலை.

பாய்ச்சை - தத்துப்பூச்சி.

பாய்தல் - உருவுதல், ஓடல், குதித்தல், தாண்டல், நீர்முதலிய பாய்தல், பரம்புதல், பறக்குதல், பறிதல், மூட்டல்.

பாய்தூக்கல் - கப்பற்பாயெடுத்தல்.

பாய்த்தல் - பாயச்செய்தல்.

பாய்த்து - பாய்ச்சல், பாய்த்தென்னேவல்.

பாய்த்துதல் - பாய்ச்சுதல்.

பாய்மரம் - கப்பல் முதலியவற்றின் பாய்தூக்குமரம்.

பாய்மா - குதிரை, புலி.

பாய்மாறுதல் - தோணியிற்பாயை மறுபுறமாக்கிவிடல்.

பாய்வலித்தல் - கப்பற்பாயிழுத்தல்.

பாய்விரி - பசிரி.

பார்கஸ்பத்தியம் - தருமநூல் பதினெட்டினொன்று.

பாரகம் - கடக்குதல், திரைச்சீலை, தோணி, நீந்தல், பூமி.

பாரகர் - கரைபிடித்தவர், தாங்குவோர்.

பாரங்கதன் - கல்வியிற் கரைகண்டவன்.

பாரங்கு - காட்டுப்பருத்தி, சிறுதேக்கு, பாரத்துவாசி.

பாரசவம் - ஆயுதப்பொது.

பாரசவன் - பார்ப்பானுக்குச் சூத்திரச்சி பெற்ற பிள்ளை, வேசிபிள்ளை.

பாரசிகை - பருந்து.

பாரசீகம் பாரசீகதேசம், பாரசீகதேயத்திற் குதிரை.

பாரசுவதன் - மழுவேந்தி.

பாரசுவயம் - பொன்.

பாரச்சுமை - வலுச்சுமை.

பாரஞ்சுமத்தல் - பாரமேற்றுதல்.

பாரணம், பாரணை - உண்டல், உபவாசமிருந்துண்ணல், திருத்திசெய்தல், முகில்.

பாரதகண்டம் - நவகண்டத்தொன்று.

பாரதந்திரியம் - பராதீனம்.

பாரதம்-இரதம், ஐந்தாம்வேதம், பாரத வருடம், பாதரசம், பாரதவமிசத்தரசர்கள் சரித்திரம்; இது—இதிகாசமெனப்படும்.

பாரதர் - குருகுலவேந்தர்.

பாரதவருடம் - பரதகண்டம்.

பாரதன் - குருகுலவேந்தரிலொருவன், கூத்தாடி, தீ.

பாரதாரிகன் - விபசாரன்.

பாரதாரியம் - விபசாரம்.

பாரதி - சரச்சுவதி, சொல், மரக்கலம், பைரவி.

பாரதிகொழுநன் - பிரமன்.

பாரதிதீபம் - ஓர் நிகண்டு.

பாரதிபூசை - சரசுவதி பூசை.

பாரதியாங்கம் - சுடலை.

பாரதூரம் - மிகப்பெரிது, வெகுதூரத்தது.

பாரதேசிகன் - அன்னியன், பரதேசி.

பாரத்துவாசம் - எலும்பு, கரிக்குருவி, காடை, வலியான்.

பாரத்துவாசன் - அகத்தியன், துரோணாசாரியன்.

பாரத்துவாசி - துரோணாசாரி.

பாரபட்சம் - ஓரவாரம்.

பாரபத்தியக்காரன் - அதிகாரி, உத்தியோகத்தன்.

பாரபத்தியம் - அதிகாரம், மேல் விசாரணை.

பாரப்படுதல் - பாரமாதல்.

பாரப்படுத்துதல் - பருப்பித்தல், பாரமாக்குதல்.

பாரப்பழி - மிகு குற்றம்.

பாரமார்த்திகன் - பரமார்த்த யுக்தன்.

பாரமிதம் - மேலானது.

பாரம் - இரதம், ஓர் விளையாட்டு, கடமை, கரைப்பொது, கவசம், கனம், காவுதடி, குதிரைச் சேணம், சுமை, துலாயிருபத் தெட்டுக்கொண்டது; அஃது இரண்டாயிரம் பலங்கொண்டது, தோணி, நிறை, நீர்க்கரை, பருத்திப்பூ, பூமி, பொறுப்பு, பொறுமை, முடிவு, வரம்பு.

பாரம்பரம், பாரம்பரியம், பாரம்பரை - ஐதிகம், கிரமங் கிரமமாய் வருவது, வழி வழியாய் வருவது.

பாரம்பரைநியாயம் - கிரமங்கிரமமாய் வருமுறைமை.

பாரவதம் - புறாப்பொது.

பாரவம் - வின்னாண்.

பாரவாகனம் - சுமையெடுக்கும் யானம்.

பாரவாகனன் - காக்காரன்.

பாரவி - இவர் கிராதார்ஜுனீயம் செய்தவொரு ஸம்ஸ்கிருதகவி.

பாரவிருதம் - உபகாரம், பலி.

பாரன் - பிருதுசேநன்புத்திரன்; இவன் மகன் நீபன்.

பாராசரம் - ஒருபபுராணம்.

பாராசரி - சுக்கிரன், வியாசன்.

பாராட்டல் - மெச்சுதல், தூறல்.

பாராட்டு - கொண்டாட்டம், பாராட்டென்னேவல், புகழ்ச்சி.

பாராட்டுந்தாய்-ஐவகைத்தாயரி லொருத்தி.

பாராயணம் - கடந்துபோதல், நியமமாகப் படித்தல், முற்றுற முடித்தல்.

பாராயணி - சரச்சுவதி.

பாராயணிகன் - கற்போன்.

பாராருகம் - மலை.

பாராவதம் - கருங்காலி, கரும்புறா, குரங்கு, புறாப்பொது, மலை.

பாராவளையம் - வளைதடி.

பாராவாரம் - கடல், கடற்கரை, கரை, சமுத்திரம்.

பாராவாரீணன் - இருபக்கஞ் சாய்ந்தவன்.

பாரி - இராக்காவல், ஓரளவு, கடையெழுவள்ளலிலொருவன், கட்டில், கள்குடிக்கும் பாத்திரம், கோட்டம், சிங்கம், சிறங்கைநீர், நல்லாடை, பாரியென்னேவல், பூந்தாது, பூமி, பெரியோன், மனைவி, யானைகட்டுங்கயிறு.

பாரிகன் - காக்காரன்.

பாரிகாரிகன் - மாலைக்காரன்.

பாரிகாரியம்-கடையம்,பிடித்தல்.

பாரிக்கை - பாரிப்பு.

பாரிசநோ - ஓர் நோய்.

பாரிசம் - ஓர்மலை, திசை, பக்கம்.

பாரிசவாயு - ஓர் நோய்.

பாரிசாதம் - ஐந்தருவி லொன்று, பவளமல்லிகை.

பாரிசேடம் - ஒழிபளவை.

பாரிஷதன் - பார்ப்போன்.

பாரிடம் - பூதகணம், பூமி.

பாரித்தல் - உண்டாக்கல், தோற்றல், பரப்பல்.

பாரியை - பாரி.

பாரை - கடப்பாரை.

பார் - உரோகிணிநாள், தேரின் பரப்பு, பாரென்னேவல், பூமி.

பார்க்கவம் - அட்டாதசபுராணத்தொன்று.

பார்க்கவன் - சுக்கிரன்.

பார்க்கவி - இலக்குமி, சிறுதேக்கு.

பார்த்தல் - காணல், வணங்கல்.

பார்த்தன் - அருச்சுனன், கார்த்தவீரியன்.

பார்த்திவம் - பூமி.

பார்த்திவன் - அரசன்.

பார்த்திப - ஓராண்டு.

பார்ப்பதி - பார்வதி.

பார்ப்பதிகொழுநன் - சிவன்.

பார்ப்பு - கோட்டில் வாழ்விலங்கின் பிள்ளை, தவழ்சாதியின் பிள்ளை, பறவைக்குஞ்சு, மான்கன்று.

பார்மகன்சாரி - பச்சைக்கருப்பூரம்.

பார்மிசையோன் - புத்தன்.

பார்வணம் - ஒவ்வொரு பருவத்திலும் செய்யும் கருமம்.

பார்வதி - பார்ப்பதி.

பார்வல் - பார்ப்பு.

பார்வை - கண், மதிப்பு.

பாலகன் } குழந்தை, பையன், காப்போன்.
பாலன்

பாலடை - ஓர் செடி.

பாலம் - ஆற்றுப்பாலம், நெற்றி, பூமி, மரக்கொம்பு, மழு.

பாலரசம் - பொன்னிறம்.

பாலர் - இடையர், பிள்ளைகள்.

பாலலீலை-குழந்தை விளையாட்டு.

பாலலோசனன் - நெற்றிக்கண்ணன்.

பாலவம் - கரணம் பதினொன்றினொன்று.

பாலவரை - ஓரவரை.

பாலனம் - பாதுகாப்பு.

பாலனன் - காப்போன்.

பாலி - ஆலமரம், ஓர் பாஷை, கள், பாலியென்னேவல்.

பாலிகை - ஆயுதத்தின் கூர், உதடு, படைவாளின்முட்டி, பெண், முளைதெளிக்கும்பாலிகை, வட்டம்.

பாலித்தல் - ஈதல், காத்தல்.

பாலியம் - இளமை, குழந்தைப் பருவம்.

பாலுகம் - கருப்பூரம்.

பாலை - ஓர்நிலம், ஓர்மரம், ஓர் வகைப்பாடல், கலவியிற் பிரிதல், சிவந்தி, பாலைப்பண், புனர்பூச நாள், பொருள் வயிற் பிரிதல், மிருகசீரிடநாள், வெம்மை.

பாலைக்கருப்பொருள் - பாலைத் தெய்வம்: (துர்க்கை), பாலைக் குடி (வேடர்), பாலைத்தலைவன் (காளை) பாலை நிலத்தூர் (குறும்பு), பாலைநீர், பாலைப் பண், (பஞ்சரம்), பாலைப்பறை, (துடி), பாலைப்புள், (புரு பருந்து, கழுகு) பாலைப்பூ, (பூளை, பாலை, கள்ளி) பாலை மரம் (குரா, மரா) பாலை நிலை மாக்கள்தொழில் (கொள்ளையாடல்), பாலைமாக்களுண், பாலையாழ், பாலைவிலங்கு.

பாலைக்கிழத்தி - துர்க்கை.

பால் - இடம், உரிமை, ஊழ், எழனுருபு, ஐம்பால், குணம், பக்கம், பங்கு, பாதி, பால், வெண்மை.

பால்முடங்கி - ஓர் பூடு.

பாவகம் - இயல்பு, உள்ளன்பு வெளியிடல், கருத்து, கொலை, தோற்றம்.

பாவகன் - அக்கினிதேவன், சொரூபி, தூய்மைசெய்வோன், நெருப்பு.

பாவகி - முருகன்.

பாவசேடம் - ஊழின்மீதி.

பாவட்சயம் - பாவநாசம்.

பாவட்டை - ஓர் செடி.

பாவமூர்த்திகள் - வேடர்.

பாவயோனி - பாவப்பிறப்பு.

பாவலர் - கவிகள், புலவர்.

பாவல் - பாதகுறடு.

பாவனம் - தூய்மை, தூய்மை செய்வது.

பாவனாதீதம் - மனதிற்கெட்டாதது.

பாவனை - எண்ணம், தியானம், பாவனுருபம்.

பாவாணர் - புலவர்.

பாவாபாவம் - உண்மையின்மை.

பாவார்த்தம் - பதப்பொருள்.

பாவி - தீயோன், பாவியென்னேவல்.

பாவிகம் - இறப்பெதிர்வை நிகழ்வெனக்கூறு மலங்காரம்.

பாவிதம் - கலப்பு, கூட்டு, சம்மதம், பேறு.

பாவினம் - பாக்களின்வகை.

பாவுதல் - தாண்டல், நடுதல், பரப்புதல், விரித்தல்.

பாவை - சித்திரப்பாவை, பதிமை, பெண், மதில்.

பாவோடுதல் - இழையோடுதடி, பாவோடுதல்.

பாழி - அகலம், உரை, ஊர், குகை, சயனம், தேவர்கோயில், பகைவரூர், பெருமை, மருதநிலத்தூர், முனிவர் வாசம், வலி, விலங்கின் படுக்கை.

பாழ் - சூனியம், பாழென்னேவல், பாழ்த்தல்.

பாழ்வெளி - அந்தரவெளி.

பாளி - அடையாளம், பாசறை.

பாளிதம் - கண்டசருக்கரை, கருப்பூரம், சோறு, பட்டுச்சீலை பாற்சோறு.

பாளை - கமுகு, தெங்கு, பனை முதலியவற்றின் பாளை, பதர், பாலப் பருவத்திற்கு மூன் பருவம்.

பாளையம் - குறுநில மன்னரூர், படை, பாசறை.

பாறல் - அடிப்பறிதல், இடபவிராசி, எருது, ஓடல், பொதியெருது, பொருதல், நீங்கல்.

பாறு - பருந்து, பாறென்னேவல், மரக்கலம்.

பாறை - திட்டை.

பாற்கடற்பிறந்தாள் - இலக்குமி.

பாற்கரன் - சூரியன்.

பாற்குனம் - பங்குனிமாதம்.

பாற்குனி - உத்திரநாள்.

பாற்கொவ்வை - ஓர் கொவ்வை.

பாற்சோற்றி - ஓர் பூண்டு.

பாற்பீர்க்கு - வெண்பீர்க்கு.

பாற்று - உரியது.

பாற்றுத்தம் - வெண்டுத்தம்.

பானகியார்-சமையல் செய்வோர்.

பானம் - கள் குடித்தல், நீர்த்த உணவு, பருகுவன.

பானல் - கடல், கருங்குவளை, கள் மருத நிலம், வயல், வெற்றிலை.

பானு - பாதிநாள்.

பானி - படை, பருகுவோன்.

பானீயம் - நீர், பருகுவன.

பானு - அரசன், அழகு, அழகுடையான், எசமான், ஒளி, கிரணம், சிற்பநூன் முப்பத்திரண்டிலொன்று, சூரியன்.

பானுமைந்தன் - கன்னன், சனி, சுக்கிரீவன், யமன்.

பானுவாசரம்-ஞாயிற்றுக்கிழமை

பானே - மிடா.

பான் - எதிர்கால விடைச்சொல்.

பான்மை - குணம், தகுதியுடைமை, தன்மை, பங்கு.

## பி

பி - அழகு, ஓரெழுத்து.

பிகபந்து - மாமரம்.

பிகம் - குயில்.

பிகலி - முள்ளி.

பிகு - பிகுவு, பெலன்.

பிகுதல் - வலிதாக்குதல்.

பிகுவு - இறுக்கம், பெருமை.

பிகுவேற்றுமை - இறுக்கல், பிளிதல், வில் வளைத்தல்.

பிக்கு - ஒவ்வாமை, கலக்கம், சிக்கு, பிசகு.

பிங்கதிருட்டி - சிங்கம்.

பிங்கம் - இளங்கன்று, பொன்மை கலந்த சிவப்பு.

பிங்கலந்தை - ஓர் நிகண்டு.

பிங்கலம் - அரிதாரநிறம், ஆந்தை, கிரி, நவநிதியிலொன்று, குரங்கு, பிங்கலந்தை, பித்தளை, பொன், பொன்மை நிறம், வடக்கு.

பிங்கலன் - ஓர் நிகண்டாசிரியன், குபேரன், சிவன், சூரியன், தீ.

பிங்கலை - ஆந்தை, சூரியசரம், தசநாடியிலொன்று, தென்றிசையானைக்குப்பெண்யானை.

பிங்களை - ஓராண்டு.

பிங்களம் - களிம்பு, வஞ்சகம்.

பிங்களை - தென்றிசை யானைக்குப் பெண்யானை, மக்களாயுளின் முப்பருவத்தொன்று.

பிசகு - ஒவ்வாமை, தடை, தப்பிதம்.

பிசகுதல் - தவறுதல், பிசகுபடல், விலகுதல்.

பிசங்கம் - பொன்மை கலந்த சிவப்பு.

பிசண்டம் } வயிறு, விலங்கின்
பிசிண்டம் } முதுகு.

பிசம் - இறகு, தாமரைத்தண்டு.

பிசனம் - செஞ்சந்தனம்.

பிசி - அரும்பொருள், சோறு, நுண்பொருள், பொய்.

பிசிதம் - ஊன், நீர், வேம்பு.

பிசிதாசனர் - இராக்கதர்.

பிசிர் - தூவல்.

பிசினம் - கோட்சொல்லல்.

பிசினன் - கோளன்.

பிசின் - சாம்பிராணி. நீர்வஞ்சி, பஞ்சினூல், பிசின், வெட்டுக் குருத்து.

பிசு - இரண்டு துலாங் கொண்டது, பருத்தி.

பிசுகம் - உத்தாமணி.

பிசுமந்தம் - பிசிதம், வேம்பு.

பிசுனம் - உலோபம்.

பிசுனன் - உலோபன், கோளன், பொய்யன்.

பிச்சடம் - ஈயம், துத்தநாகம்.

பிச்சம் - ஆண்மயிர், இறகு, பீலிக் குஞ்சம், வெண்குடை.

பிச்சர் - பித்தர், மருளர்.

பிச்சாசரன் - இரப்போர்.

பிச்சாடனம் - இரப்பு.

பிச்சாபாத்திரம்-இரப்போர்கலம்.

பிச்சி - ஓர்கொடி, கொம்மட்டி, சிறு சண்பகம், முல்லை.

பிச்சு - பித்து.

பிச்சை - இரப்பு, ஐயம், ஒழுங்கு, சோற்றுருண்டை, யாக்கு, வாழை, வரிசை.

பிஞ்சகம்
பிஞ்சம் } இறகு, கொலை.

பிஞ்சகன் - கொலைசெய்வோன், சிவன்.

பிஞ்சரம் - அரிதாரம், கருமை கலந்த சிவப்பு, பொன்.

பிஞ்சு - இளங்காய், முற்றாமை.

பிஞ்ஞகம் - தலைக்கோலம்.

பிஞ்ஞகன் - சிவன்.

பிடகம் - நூல், பிச்சை, புத்தாகமம், பெட்டி.

பிடகன் - புத்தன், வைத்தியன்.

பிடகாரி - விடவைத்தியன்.

பிடர்
பிடர்த்தலை } பிடரி, புறங்கழுத்து.

பிடவம் - பின்புறம், முதுகு.

பிடவு - ஓர் செடி.

பிடாரச்சொல் - வைத்தியச் சொல்.

பிடாரம் - ஓர் வைத்தியவகராதி.

பிடாரி - காளி.

பிடி - ஏலம், கரமுட்டி. கால் விரல் கொண்ட அளவு, கைப்பிடி, நம்பிக்கை, பற்றுகை, பிடியென்னேவல், பெண் கவரி, பெண்ணொட்டகம், பெண்யானை.

பிடிகம் - பிள்ளைக்கைவளை.

பிடிதம் - பிச்சை.

பிடித்தல் - கட்டல், சார்தல், பற்றல்.

பிடியல் - சீலை, நல்லாடை.

பிடுக்கு - பனம்பூ, பீசம்.

பிடுங்கல் - பறித்தல், வியங்கோண் முற்று, பிடுங்கு.

பிடை - மூசை.

பிட்டம் - கடிப்பிரதேசம், சிற்றுண்டி.

பிட்டு - பிட்டம், தினைமா.

பிணக்கம் - பிணங்கல்.

பிணக்கல் - பின்னல்.

பிணக்காடு - சுடுகாடு, யுத்தகளம்.

பிணக்கு - சண்டை, நெருக்கம், பிணக்கென்னேவல்.

பிணங்கல் - குழம்புதல், தெற்றுதல், நெருங்கல், பின்னல், மாறுபடல், வெறுத்தல்.

பிணம் - பிசாசம், பிரேதம்.

பிணம்வீழ்களம் - சுடுகாடு.

பிணர் - கோங்கு, சருச்சரை வடிவு, சமமில்லா வடிவு.

பிணவு - நாய், பன்றி, புல்வாய் இவற்றின் பெண், பெண் பொது, விலங்கின் பெண் பொது.

பிணி - கட்டு, துன்பம், நோய், பிணியென்னேவல்.

பிணித்தல் - கட்டல்.

பிணிப்பு - கட்டு.

பிணிமுகம் - அன்னம், பறவைப் பொது, மயில்.

பிணியன் - நோயாளன்.

பிணியுழற்றல் - நோயால் வருந்தல்.

பிணை - ஆசை, இணை, உடன்பாடு, ஒட்டகம், கவரி, கழுதை, குதிரை, நாய், பன்றி, புல்வாய், யானை யிவற்றின் பெண்; கட்டு, பிணை யென்னேவல், பூமாலை, வதிட் பொருள், மான்.

பிணைத்தல், பிணைப்பு - இணைத்தல், கட்டல், கலத்தல், தொகுத்தல்.

பிணையல் - பின்னியமாலை, மாலை.

பிணைவு - இணைவுகலப்பு, புணர்ச்சி.

பிண்டகன் - பிண்டமிடுவோன்.

பிண்டச்சூத்திரம் - நூற்பொருட் சூத்திரம்.

பிண்டப்புறநடை - புறனடைத் தொகை.

பிண்டப்பொருள் - தொகுதி, பொழிப்புரை.

பிண்டம் - அன்னத்திரளை, இரும்பு, உடல், உண்டை, கந்த வருக்கம், கருப்பத்திலிருக்கும் பிண்டம், கவளம், கால்வட்டத் திருபத்து நான்கிலொன்று, கூட்டம், சோறு, பிச்சை, பிதிர்கட்கிடும் பிண்டம், மூலபதம், விலா.

பிண்டவுரை - பொழிப்புரை.

பிண்டாண்டம் - உடலுமுலகும்.

பிண்டி - அசோகமரம், குந்திருக்கம், கூட்டம், சில்லினுட் சுருள், தினைமா, பிண்டியென்னேவல், பிண்ணாக்கு, பொருட்கை, புனர்பூசம், மருது, மா.

மகாவீரம் - அர்க்கியபாத்திரம், ஓமாக்கினி, குயில், சிங்கம், வெண்குதிரை.

மகாவீரன் - அக்கினி, கலுழன், விஷ்ணு, வீரன்.

மகானந்தம் - முத்தி.

மகான்னவம் - கடல்.

மகி - பூமி.

மகிகை - மூடுபனி.

மகிடமர்த்தனி - துர்க்கை.

மகிடவாகனன் - யமன்.

மகிடாசூரன் - ஓரஸுரன்.

மகிடி - மெளடி.

மசிதம் - சிவன்சூலம்.

மகிதலம் - பூமி.

மகிந்தகம் - எலி, கீரி.

மகிபதி, மகிபன் } அரசன்.

மகிமா - மகத்துவம், மிகவும் பருத்தல், அஃது—எட்டுச் சித்திகளிலொன்று.

மகிமை - கனம், பெருமை.

மகிலே - பெண், வெறிகாறி.

மகிழ் - ஓர்மரம், களிப்பு, மகிழென்னேவல்.

மகிழ்ச்சி - இன்பம், களிப்பு, சந்தோஷம்.

மகிழ்தல் - களித்தல், சந்தோஷித்தல்.

மகிழ்நன் - கணவன், மருதநிலத்தலைவன்.

மகிழ்வு - இன்பம், களிப்பு, சந்தோஷம்.

மகிளம் - பூவிதழ்.

மகிளித்தல் மக்களித்தல்.

மகினம் - இராச்சியம்.

மகீ - ஓர்யாறு, பசு, பூமி.

மகீசுதன் - செவ்வாய்.

மகீசுதை - சீதை.

மகீதரம் - மலை.

மகீதலம் - பூமி.

மகீபதி - மகீபன், மகிபாலன் } அரசன்.

மகீருகம் - தாவரயோனி.

மகீலதை - நாங்கூழ்.

மகுடபங்கம் - கிரீடாவமானம்.

மகுடம்-சல்லடைக்கொப்பு, சிகாமமிருபத்தெட்டினென்று, மத்தள முதலியவற்றின் விளிம்பு, முடி, முடியுறுப்பு.

மகுடராமக்கிரியம் - ஓர் பண்.

மகுடவர்த்தனன் - முடிதரிக்குமரசன்.

மகுடி - மகிடி.

மகுரம் - கண்ணாடி, தண்டசக்கிரம், பளிங்கு, பூமொட்டு.

மகுலம் - மகிழமரம்.

மகூலம் - மலர்ந்தபூ.

மகேசம் - அப்பிரகம், இந்திரன், சிவன்.

மகேசுவரன் - சிவன்.

மகேசுவரி - பார்வதி.

மகேந்திரகதளி - ஓர் வாழை.

மகேந்திரசாலம் - ஓர் மாயவித்தை, அஃது—கலைஞான மறுபத்து நான்கினொன்று.

மகேந்திரபல்லவன் - ஓர் பல்லவ அரசன்.

மகேந்திரநகரி - அமராவதி.

மகேந்திரம் - ஓர் மலை.

மகேந்திரன் - இந்திரன்.

மகேந்திராணி - இந்திராணி.

மகைசுவரியம் - செல்வம்.

மகோததி - கடல்.

மகோதயம் - ஓர்புண்ணியகாலம், பெருமை, முத்தி, மேன்மை, விடுதல்.

மகோதரம் - பெருவயிறு.

மகோதரன்-இராவணன் மந்திரிகளிலொருவன்.

மகோந்நதம் - பனைமரம், பெரிய பதவி.

மகோபநிடதம் - ஒருபநிடதம்.

மகோற்பலம் - தாமரை.

மகோன்மதம் - மருள்வெறி.

மகௌடதம் - சுக்கு, திப்பிலி, வசம்பு.

மக்கடிதத்தல் - அழித்தல்.

மக்கம் - ஓர் தேசம்.

மக்கல் - உக்குதல்.

மக்களித்தல்-சளுக்குதல், திரும்புதல், புரள்தல்.

மக்கள் - மகார், மனிதர், இவர் எழுவகைப்பிறப்பினொருவர்.

மக்கனம் - கேலி.

மக்கன் - பலவான்.

மக்கி - உக்கன்மாக்கல், ஓர் குளிகை.

மக்கினம்-அமிழ்ந்தல், வெட்கம்.

மக்குதல் - உக்கியழிதல்.

மக்குலம் - சிலாசத்து.

மங்கலகாரியம் - சுபகாரியம்.

மங்கலகௌசிகம் - ஓரிராகம்.

மங்கலச்சொல் - மங்கலமொழி.

மங்கலஸ்நாநம் - மங்கல காரியத்திற்கு முழுகுதல்.

மங்கலபாடகர் - கடிகைமாக்கள், சோபனம் பாடுவோர்.

மங்கலப்பிரதன் - சுபத்தைக் கொடுப்பவன்.

மங்கலப்பிரதை - மஞ்சள்.

மங்கலமொழி - சோபன வார்த்தை, செய்யுட்களின் முதற் கவியின் முதலில் வரும் சுப மொழி, அவை—அமிழ்தம், ஆரணம், உலகம், எழுத்து, கங்கை, கடல், சீர், சொல், திரு, தேர், நிலம், நீர், பரி, பரிதி, புகழ், புனல், பூ, பொன் மணி, மதி, மலை, யானைமுதலியன.

மங்கலம் - கலியாணம், சுபம், சேகரிப்பு, சோபனம், தகனபலி, தருமம், பொலிவு, வாழ்த்து.

மங்கலம்பாடுதல்-சோபனம் பாடுதல்.

மங்கலவள்ளை - ஓர் பிரபந்தம்.

மங்கலவாரம்-செவ்வாய்க்கிழமை

மங்கலன் - செவ்வாய், நாவிதன்.

மங்கலியகம் - சிறுகடலை.

மங்கலியம் - தாலி.

மங்கலை - உமை, கற்புடையாள், சுமங்கலி.

மங்கல் - ஒளியின்மை, கெடுதல், தோற்றக்குறைவு.

மங்கல்லியம் - சந்தம், செவ்வீயம், தயிர், பொன்.

மங்களம் - சுபகாரியம், காரியம், வாழ்த்து.

மங்களாசரணை-மங்கள வழிபாடு, அது—வாழ்த்து, வணக்கம், வஸ்து நிர்தேசம் என மூவகைப்படும்.

மங்குகாலம் - துன்பகாலம், மரணவேளை.

மங்குசனி - முதல்முறை வருஞ்சனி.

மங்குதல் - கெடுதல், தோற்றங்குறைதல், மழுங்குதல்.

மங்குரம் - பளிங்கு.

மங்குல்-ஆகாயம், இரவு, மேகம்.

மங்குளம் - இருள், கலக்கம், மந்தாரம்.

மங்கை - பெண்.

மங்கைபங்கன்
மங்கைபாகன் } சிவன்.

மசகம் - கொசுகு, நீர்த்துருத்தி, மயக்கம், மயிர்.

மசகி - அத்திமரம்.

மசகுதல் - வணங்குதல், மயிர்ந்துதல்.

மசண்டை - கருகுமாலை.

மசமசத்தல் - தினவுகொள்ளல்.

மசமசப்பு - சொறிவு.

மசம் - அளவு, கொசுகு, கோபம், தொனி.

மசனம் - அனர்த்தம், வருந்துதல்.

மசாரகம் - இந்த்ரநீலமணி.

மசாரம் - மரகதம், நீலரத்தினம்.

மசானம் - மயானம்.

மசி - மசியென்னேவல், மை.

மசிதல் - மசிந்துகுழைதல்.

மசிபதம் - தூவல்.

மசியல் - மசிக்கப்பட்டது.

மசிவு - மசிதல்.

மசீலம் - வண்ணார்சேரி.

மசுக்கரம் - மூங்கில்.

மசுரம் - கடலை.

மசுரை
மசூரை } வேசி.

மசூரம் - மூட்டுப்பூச்சி.

மசூரன் - தட்டான்.

மசூரகம் - வட்டத்தலையணை.

மசூரிகம் - சின்னமுத்து.

மச்சகந்தி - வியாசன்றாய்.

மச்சம் - ஓர் தேசம், பதினெண் புராணத்தொன்று, மச்சம், இஃது — திருமாலவதாரத் தொன்று.

மச்சிகை - மோர்.

மச்சு - குற்றம், சுவர்க்குமேல் வெளியடைப்பு, மஞ்சு, மேனிலை.

மச்சேந்திரநாதர் - நவநாதசித்தரி லொருவர்.

மச்சை - உட்சுரம், மீனம்பர், மூளை.

மஞ்சகம் - கட்டில், மேடை.

மஞ்சமண்டபம்-பள்ளிமண்டபம்.

மஞ்சம் - கடல், கட்டில்.

மஞ்சரம் - முத்து.

மஞ்சரி - ஓர் பிரபந்தம், ஓர் மருந்து, தளிர், பூங்கொத்து, பூத்திரள், பூமாலை, முத்து.

மஞ்சரீகம் - மிருதுவான மருக் கொழுந்து.

மஞ்சலன் - விற்காரன்.

மஞ்சள் - அரிசலம்.

மஞ்சனச்சாலை - கானமண்டபம்.

மஞ்சனம் - குளித்தல், முழுகல்.

மஞ்சன் - மகன்.

மஞ்சாடி - இரண்டு குன்றுமணி கொண்ட நிறை, ஓர் மரம்.

மஞ்சி - பேடகம், பேழை.

மஞ்சிகம்-தாளிக்கொடி,பேடகம்.

மஞ்சிகன் - நாவிதன்.

மஞ்சிகை - காதணி, குண்டலம், தாளிக்கொடி, பேழை, வேசி.

மஞ்சிட்டி - ஓர் கொடி.

மஞ்சிபலை - வாழை.

மஞ்சிமம் - அழகு.

மஞ்சிரம் - காலாழி.

மஞ்சிலை - செங்கல்.

மஞ்சு - அழகு, ஆபரணம், இளமை, கட்டில், களஞ்சியம், பனி, முகடு, மேகம், யானை முதுகு, வலி.

மஞ்சுகம் - கொக்கு.

மஞ்சுபாஷிணி - நயவசனி.

மஞ்சுளம் - அழகு.

மஞ்சுட்டை-கோட்டை, பேழை.

மஞ்சூரம் - கடலை.

மஞ்ஞை - மயில்.

மஞ்ஞையூர்தி - கந்தன்.

மடக்கடி - கலக்கம், முடக்கு.

மடக்கம் - அடக்கம், முடக்கு.

மடக்கல் - அடக்கல், வளைத்தல்.

மடக்கு - ஓலங்காரம், ஓர் பாத்திரம், மடக்கென்னேவல், மடங்கடிப்பு, முடக்கு.

மடக்குக்கத்தி - பூச்சாத்தி.

மடக்கொடி - பெண்.

மடங்கடித்தல் - தோற்றோடச் செய்தல், முறியடித்தல்.

மடங்கலர் - பகைவர்.

மடங்கல்-இடி, இயமன், காலன், கீழ்ப்படிதல், சிங்கம், தாழை, மீளல், முடங்கல், யுகமுடிவு, வடவாமுகாக்கினி, வியாதி.

மடங்கற்கொடியோன் - வீமன்.

மடங்கு - அளவு, இழைக்கயிறு, பங்கு, மடங்கென்னேவல், வியாதி.

மடங்குதல் - கீழ்படிதல், மீளல், முடங்கல்.

மடதி - ஆலங்கட்டி.

மடத்தல்-அறியாமையாயிருத்தல்

மடத்தனம் - அறியாமை.

மடநல்லார் - பெண்கள்.

மடநோக்கு - எண்ணமு மச்சமும் கூடிய பார்வை.

மடந்தை - பருவமாகாதபெண், பெண்.

மடப்பம் - ஐந்நூறு கிராமத்திற்குத் தலைக்கிராமம், அரண்மனையிற் பெண்.

மடமடத்தல் } ஈரடுக்கொலிக்
மடமடப்பு } குறிப்பு.

மடமை - அறிவின்மை, இஃது-பெண்கள் நாற்குணத்துமொன்று.

மடம் - அறப்புறம், இரதம், கோயில், சத்திரம், மடமை, முனிவர் வாசம்.

மடலரிதாரம் - ஓரரிதாரம்.

மடலூர்தல் } மடற்குதிரையிவ
மடலேறுதல் } ர்தல், இஃது—அகப்பொருட்டுறையினொன்று.

மடல் - நந்து, கமுகு, தாழை, தெங்கு, பனை, வாழை யிவற்றின் பூமுடி, எற்றமடல், ஓர் பிரபந்தம், ஓலைமடல், காதின் மடல், பூவிதழ், வாழை முதலியவற்றின் மடல்.

மடவரல் } இளம்பெண்.
மடவாள் }

மடவார் - அறிவீனர், பெண்கள்.

மடவை - ஓர்மீன், கடவுமரம்.

மடற்பனை - மடற்கொண்டபனை.

மடற்றுற்றம் - ஓர் துத்தம்.

மடன்-அறியாமை, அறிவிலான், உன்மத்தம்.

மடன்மா - மடற்குதிரை.

மடாதிபதி - மடத்தலைவன்.

மடி - அடங்கல், கேடு, சீலை, சோம்பல், சோறு, தாழை, நோய், பொய், மடங்குதல், மடிந்தது, மடியென்னேவல், முலைமேற்றிரள், வயிறு, வலையினருகு.

மடிக்குதல் - உபாயமாய்ச்செயித்தல், கொல்லுதல், மடக்குதல், முடக்குதல்.

மடிதல் - கெடுதல், சாதல், மடங்குதல்.

மடிபிடி - சண்டை, மடிச்சீலையிற் பிடிக்கும்பிடி.

மடிப்பிணை - வங்கமணல்.

மடிப்பு-மடக்கு, மடித்திருப்பது, மோசம், வஞ்சகம்.

மடிப்புக்காரன்-தீதுசெய்வோன், வஞ்சகன்.

மடிப்பை - அடைப்பை.

மடிமை - சோம்பு.

மடிவிடுதல்-மடிதளர்தல், அது—பசுமுதலியன சினைக்குறிகாட்டல்.

மடிவித்தல் - மடியச்செய்தல்.

மடிவு - கேடு, சாவு, தரித்திரம், மடக்கம், மடிதல்.

மடு - ஆற்றினுட்பள்ளம், குளம், மடுவென்னேவல்.

மடுத்தல் - நிறைத்தல், மடிப்புச் செய்தல், வாய்முதலியவற்றுளுட்கொள்ளல்.

மடை - ஆபரணக்கடைப் பூட்டு, சோறு, துவாரம்,தேவதைகட்குப் படைப்பது, நீர் பாயுமடை, மதகு.

மடைத்தொழிலோன் - சமையற்காரன், இவன் அரசர்க்குறுதிச் சுற்றத்தொருவன்.

மடைத்தொழில்-சமையல்வேலை.

மடைப்பண்டம் - அலங்கார நைவேத்யம்.

மடைப்பள்ளி - அடுக்களை.

மடைமாற்றுதல் - மடைக்கழித்தல்.

மடைமுகம் - ஆற்றுவரம்.

மடைவேலை - சமையல்வேலை, புத்தியற்றவேலை.

மட்கலம் - மண்பாண்டம்.

மட்கல் } அழுக்கேறல், ஒளி
மட்குதல் } மழுங்கல்.

மட்குகை - மண்குகை, மழுங்குதல்.

மட்சம் - குரோதம், சமூகம்.

மட்சிகை - ஈ.

மட்டக்கோல் - மட்டங்கட்டுங் கோல்.

மட்டங்கட்டுதல் - சரியாய் நிறுத்தல், நிதானம் பண்ணல்.

மட்டந்தட்டுதல் - ஒப்புரவு தட்டுதல்.

மட்டம் - அளவு, எல்லை, உத்தேசம், ஒப்புரவு, கரும்பு, நெல், மூங்கில், வாழைமுதலியவற்றின் கன்று; கேடகம், சமம், வாலயானை, வாலக்குதிரை, மூன்றுஞருத்துடையதாளம்.

மட்டம்பிடித்தல் - கப்பித்தல், நிதானம் பண்ணல்.

மட்டறிதல் - அளவறிதல், குறிப் பறிதல்.

மட்டி - ஒழுங்கின்மை, கடன் மட்டி, படைக்கலம், மட்டி யென்னேவல், மதிகேடன்.

மட்டித்தல் - பூசுதல், மட்டுக் கட்டுதல், மண்டலித்தல், முறித்தல்.

மட்டியம் - எழுவகைத்தாளத் தொன்று.

மட்டு - அவதி, அளவு, எல்லை, கள்.

மட்டுமதியம் - அளவு, நிதானம்.

மட்டை - உடற்குறை, ஓர்பாம்பு, கமுகு, தெங்கு, பனை, வாழை யிவற்றின் மட்டை, முட்டாள்.

மணங்கல் - பானை, மிடா.

மணங்கு - ஆட்டுக்குட்டி, இருவாட்சி, ஓர் நிறை.

மணத்தக்காளி - ஓர் செடி.

மணத்தல் - கமழ்தல், கூடல், மோத்தல், வேட்டல்.

மணப்பு - மயப்பு, வாசனை.

மணப்பொருத்தம் - விவாகத்திற் குரிய பொருத்தம் பத்து; அவை—இராசி, இராசித்தலை வர், இரச்சு, கணம், ஸ்திரீதீர்க் கம், தினம், மாகேந்திரம், யோனி, வசியம், வேதை.

மணலி - மருக்கொழுந்து.

மணல் - வெள்ளைமண்

மணல்வாரி - ஓர் நெல், ஓர்புல். மணல் நீக்குங்கருவி.

மணவாட்டி - மனைவி.

மணவாளன் - ஆண்மகன், நாய கன்.

மணவாளி - புதுமணப்பெண், மாப்பிளை.

மணவை - அடுப்பு.

மணற்காளான் - தவளை, மணலி லே முளைக்குங்காளான்.

மணற்கூகை - தவளை.

மணற்கோவை - ஓர் கொவ்வை.

மணுட்டி - மணவாட்டி.

மணுளன் - ஆண்மகன், மணவா ளன்.

மணி - அடிக்குழமணி, அழகு, ஆட் டின் களகம்பளம், இரண்டரை நாழிகைகொண்டநேரம், உருத் திராக்கம், எறிமணி, ஓசை, கண் விழி, கறுப்பு, சங்கு முதலிய வற்றாலாயமணி, தாமரைக் கொட்டை, துளசி, நவமணிப் பொது, நன்மை, நீர்க்கவசம், நெல்முதலிய தானியம், பருக் கைக்கல், பறவையின் கழுத் தாரம், பெண் குறியினோ ருறுப்பு, பொன்முதலியவற்றா லாயமணி, மருந்துக்கல், முத்து, யானை மணி.

மணிகடம் - உத்தாமணி.

மணிகண்டன் - சிவன்.

மணிகம் - நீர்க்குடம்.

மணிகாசம்-கண்ணேயுளொன்று.
மணிகாரகன்-சாணைபிடிப்போன்
மணிகாரம் - வெண்காரம்.
மணிகூடம் - ஓர் பர்வதம்.
மணிக்கட்டு - புயத்தின்கீழ்.
மணிக்கரம்பு - தக்காளி.
மணிக்கிரீவன் - குபேரன்மக்களி லொருவன்.
மணிக்குடர் - சிறுகுடர்.
மணிக்கூடு - நாழிகைவட்டம்.
மணிக்கோவை - மணிமாலை.
மணிசகம் - சந்திரகாந்தம்.
மணிச்சோதி - ரத்னகாந்தி,வாயு தேவன் வில்.
மணிதம் - மணியோசை.
மணிதனு - வானவில்.
மணிதீபம் - பாற்கடலின்னடுவே யுள்ளவொருதீவு.
மணித்தக்காளி - ஓர் செடி.
மணிநா - மணியினுக்கு.
மணிந்தம் - கைக்குளேச்சு.
மணிபத்திரன் - ஓர் சைனபோத கன்.
மணிபந்தம் - மணிக்கட்டு.
மணிபிடித்தல் - தானியம் பிடித் தல்.
மணிபீஜம் - மாதுளை.
மணிபுரம் - கலிங்கத்திலுள்ள வோர் பட்டணம்.
மணிபுஷ்பகம் - சகாதேவன் சங்கு.
மணிபூரகம்-ஆறுதாரத்தொன்று அஃது—நாபித்தானம்.
மணிபூரம் - இரைக்குடர், கொப் பூழ்.
மணிப்பவம் - இருபது.
மணிப்புளகு-நெய்க்கொட்டான்.
மணிப்புறு - ஓர் புறு.
மணிப்புன்கு - பொன்னுங்காய்.
மணிமந்தம் - இந்துப்பு.
மணிமலை - பொன்மலை.
மணிமாலை - இலக்குமி, ஓர் பிர பந்தம், கழுத்தணிமாலை, தந்த ரேகை, பிரபை, முத்துவடம்.
மணிமேகலை - பஞ்சகாவியத் தொன்று.
மணியகாரன் - விசாரணைகாரன்.
மணியம் - மணியகாரன், வேலை.
மணியாசம் - துலக்கம், மணியா சப்பலகை.
மணியாசி - ஓர் மரம்.
மணியாசிக்கட்டை - சாந்தழுத் தும் பலகை.
மணியீரல் - ஓரீரல்.
மணிராககம் - இங்குலிகம்.
மணிவடம் - அக்கமாலை, இரத் தினமாலை, பாதசாலம், முத்து மாலை, வீரக்கழல்.
மணிவீசம் - மாதுளை.

மணீசகம் - சந்திரகாந்தம்.

மணீவகம் - பூ.

மணை - தருவலகு, பணிமுதலிய முட்டு, பாதபடி, மழுங்கல்.

மணையது - மழுங்கலாயுதம்.

மண் - அணு, ஒப்பனை, கழுவுதல், சுட்டசாந்து, துகள், நிலம், பூமி, மண்ணெனன்னேவல், மலை, மாட்சிமை, முழவின் மார்ச்சனை.

மண்கட்டுதல் - கருக்கட்டுதல்.

மண்கட்டை - உடம்பு, வாணக்குழலி னெதிரடைப்பு.

மண்கனை - ஓர் பறை, வாச்சியப் பொது.

மண்கலம் - ஓடு, மண்பாண்டம்.

மண்கல் - செங்கல், வெண்சுக்கான்கல்.

மண்குகை - நிலவறை, மண்ணாற் செய்த குகை.

மண்சிலை - கற்காவி.

மண்செய்கை - மண்வேலை.

மண்டகம் - ஓர் சிற்றுண்டி, சர்க்கரை போடாதபூரி.

மண்டகாரகம் - சாராயம் வடிப்போன்.

மண்டக்கு - முத்துக்குளிப்பவர்களை யிழுக்குங்கயிறு.

மண்டநம் - அலங்காரம், ஆபரணம்.

மண்டபம் - மாடம்.

மண்டம் - அலங்காரம், ஆமணக்கு, தயிரேடு, தலை, மண்டை.

மண்டயந்தம் - அலங்காரம், சோறு.

மண்டலகம் - சூரியன் வட்டாகாரம், பளிங்கு.

மண்டலநிருத்தம் - ஓர்வகைக் கூத்து, அஃது—சுற்றியாடு நிருத்தம்.

மண்டலநிலை - இருகாலும்பக்கல் வளைய மண்டலித்து நிற்றல்.

மண்டலபுருடன் - சூடாமணி நிகண்டு செய்தவர், சூரியன்.

மண்டலமட்டி - சிற்றிலுப்பை.

மண்டலம் - இயந்திரம், இருகாலும் பக்கல்வளைய நிற்குநிலை, உண்டை, குவியல், சூரியமண்டல முதலியன, தேயம், நகக்குறி, நாடு, நாற்பது நாள் கொண்டது, பூமி, வட்டம்.

மண்டலவந்தாதி - ஈற்றடியிறுதியும் முதலடிமுதலுமொன்றாக வருவது.

மண்டலவிதி - சக்கரங்கீறுவதற்கானவோர்விதி.

மண்டலாகாரம் - வட்டாகாரம்.

மண்டலாதிபதி - ஏகசக்ராதிபதி.

மண்டலார்த்தம்-அர்த்தகோளம், பாதிவிட்டம்.

மண்டலி - ஓரெலி, ஓர்வகைப் பாம்பு, கூட்டம், நாய், பாம்பு, பூமி, பூனை, மண்டலியென் னேவல்.

மண்டலிகன் - இருபதுயோசனை விஸ்தாரமான தேசத்தை யாள்வோன்.

மண்டலித்தல் - வட்டமிடுதல்.

மண்டலீகரணம் - உருட்டல்.

மண்டலேசன் - அரசன், உலகாதிபதி, மண்டலாதிபதி.

மண்டல் - நெருங்கல், மண்டுதல், மிகுதல்.

மண்டி - இருகான்முடக்கி நிற்கு நிலை; கலங்கனீர், களஞ்சியம், கள் முதலியவற்றினடையல்.

மண்டிதம் - அலங்காரம், சிறு கீரை.

மண்டிலம் - குதிரை, நடனம், நாடு, போர், வட்டமாயோடல், வட்டம்.

மண்டு - மண்டல்.

மண்டுகால் - முட்டுக்கால்.

மண்டுதல் - நெருங்கல் மிகக் குடித்தல்.

மண்டூகபன்னி - அழிஞ்சில்.

மண்டூகம் - கீச்சுக்கிட்டம், தவளை.

மண்டை - இரப்போர்கலம், தலையோடு.

மண்டோதகம் - கோலமிடுதல்.

மண்டோதரி - இராவணன் மனைவி.

மண்ணம் - சுண்ணும்பு.

மண்ணரசு - பூவரசமரம்.

மண்ணரியான் - குயவன்.

மண்ணுசை - ஆசை மூன்றி னொன்று.

மண்ணியற்று - மண் பாத்திரம்.

மண்ணிலம் - பூமி.

மண்ணில்வேந்தன் - அரசமரம், முடிதும்பை, வெற்றிலை.

மண்ணிறுதம் - உவர்மண்.

மண்ணீடு - திண்ணை, மாடம், முச்சாந்திட்டவீடு.

மண்ணீட்டாளர் - குயவர், சிற்பாசியர்.

மண்ணீரல் - மண்ணிரலீறல்.

மண்ணீர் - கழுவுநீர்.

மண்ணுதல் - அலங்கரித்தல், கழுவல்.

மண்ணை - அறிவிலான், இளமை, வாலுளுவை.

மண்ணோரம் - பட்சபாதம்.

மண்பாண்டம் - மட்கலம்.

மண்பிடி - மட்பசை.

மண்மலி - மருக்கொழுந்து.

மண்மாரி - புழுதிமழை.

மண்வெட்டி - ஓராயுதம், குயவன்.

மதகந்தை - மஸ்துள்ளது.

மதகமனம் - குழுக்கடா.

மதகயம் - ஆண் யானை.

மதகு - சலதாரை.

மதகுபலகை - நீர்தாங்கு பலகை.

மதக்கம் - ஆகாசம், மயக்கம், வதக்கம்.

மதங்கசம் - யானை.

மதங்கநாதன் - நவநாதசித்தரி லொருவன்.

மதங்கம் - ஓர்பறை, ஓர் மலை, கலம்பகவுறுப்புப் பதினெட்டி னொன்று, முகில், யானை.

மதங்கர் - ஓர்முனி, பாணர்.

மதங்கி - காளி, பதினாறு வயதுப் பெண், பாடிவிச்சி, பார்வதி.

மதசலம் - மதநீர்.

மதசாநம் - அன்னப்பறவை.

மதசாரம் - இலவு.

மதனசலம் - யானை.

மதத்தல்-கொழுத்தல், செருக்கு தல், மயங்குதல், வெறித்தல்.

மதனசரம் - மன்மதபாணம்.

மதநம் - கடைதல்.

மதநலீலை - கலவி.

மதநியை - மல்லிகைக்கொடி.

மதநீர் - மதசலம்.

மதப்பு - கொழுப்பு, செருக்கு, மயக்கு.

மதப்பூ - மராட்டிமொக்கு.

மதமதப்பு - மிகுமதப்பு.

மதமதெனல் - ஈரடுக்கொலிக் குறிப்பு, சுரணை குன்றல், மதமுறல்.

மதமத்தகம் - கஞ்சா.

மதமத்தம்பூ - ஊமத்தை.

மதமத்தன் - மதத்தினால் மயங் கிக்கிடப்பவன்.

மதம் - அறிவு, கருத்து, கன்மதம், கொழுப்பு, சந்தோஷம், சமயம், சம்மதம், செருக்கு, அஃது — உட்பகையாறினொன்று, தாது, நாவிச்சட்டம், நோக்கம், பெருமை, பைத்தியம், போதனை, மதாளிப்பு, மஸ்துள்ளது, மாயையாக்கை, பதினெண்குற்றத்தொன்று யானைமதம், வலி, விகார மெட்டினொன்று, விருப்பம், வெறி.

மதராகன் - சேவல், மன்மதன்.

மதரபன்னி - வட்டத்திருப்பி.

மதர் - ஆச்சல், களிப்பு, செருக்கு, மதாரென்னேவல், மிகுதி.

மதர்த்தல்-களித்தல், செழித்தல்.

மதர்ப்பு - அழகு, ஆசைப்பெருக் கம், இடம், இறுமாப்பு, செழிப்பு, மிகுதி, வலிமை.

மதலிகை - ஆபரணத்தொடக்கு, வடிவு, ஆக்கம்.

மதலை - கொடுங்கை, கொன்றை மரம், சரக்கொன்றை, தூண், மார்க்கவெறி, மதவெற்பு.

மதளை - மழலை.

மதனகேதநம் - மன்மதன் கொடி, மீன்.

மதனசமுத்திரம் - பாற்கடல்.

மதனம் - ஈ, கடைதல், காமம், தேன்மெழுகு, மஸ்து, மருக்காரை, மனக்கலக்கம், மௌனம், வசந்தகாலம்.

மதனன் - காமன்.

மதனுவத்தை - பிரிவு.

மதனை - கள்.

மதனோற்சவம் - வேனில்விழா.

மதன் } அழகு, ஓரசுரன், கலக்
மது } கம், காமன், மாட்சிமை, வலி, வளமை.

மதாசாரம் - சமயவொழுக்கு.

மதாணி - ஆபரணம், பதக்கம்.

மதாநுசாரம் - சமயத்தைக் கைக் கொள்ளுதல்.

மதாரம் - கஸ்தூரி, பன்றி, யானை.

மதாரன் - எத்தன், தூர்த்தன்.

மதாலசை - ஓர் அப்ஸரஸு.

மதாலம் - கொன்றை.

மதார் - மதர்.

மதாலாபி - குயில்.

மதாவளம் - யானை.

மதாளித்தல் - ஓங்கி வளர்தல்.

மதாளிப்பு - செழிப்பு.

மதி - அறிவு, இடைச்சொல், கற்கடகவிராசி, சங்கை, சந்திரன், ஞாபகம், திங்கள், நிதானம், பானபாத்திரம், புத்தி, மதியென்னேவல், மாதம், முன்னிலையசைச்சொல், விருப்பம்.

மதிகம் - மோர்.

மதிகாந்தி - பளிங்கு.

மதிகூர்மை - இந்துப்பு.

மதிகேடு - அறிவின்மை.

மதிக்கணம் - கணமெட்டினொன்று, அது—நிரைநேர் நேரடுத்து வருவது, சந்திரகணம்.

மதிக்கலை - பதினாறு.

மதிக்கல் - சந்திரகாந்தக்கல்.

மதிதம் - மோர்.

மதிதனு - பொன்மணல்.

மதிதாக்னி - கடைந்தெடுத்த நெருப்பு.

மதிதிசை - வடதிசை.

மதித்தல் - எண்ணல், கடைதல், கணித்தல், கருதல், கொழுத்தல், வரையறுத்தல்.

மதிநாள் - மிருகசீருடநாள்.

மதிபதிச்சம் - வாலுளுவை.

மதிப்பகை - இராகு, கேது.

மதிப்பிராந்தி - பிழை, மதிமயக்கம்.

மதிமகன் - புதன்.

மதிமணல் - வெள்ளிமணல்.

மதிமண்டலம்- சந்திரமண்டலம்.

மதிமயக்கம் - புத்திமயக்கம்.

மதிமறு - சந்திரகளங்கம்.

மதியம் - கணிசம், சந்திரன், நடு, மத்தியானம்.

மதியழிவு - அறிவுகேடு.

மதியாணிக்கட்டை - நுகத்தடு வாணி.

மதியிலி - மதகேடன்.

மதியீனம் - புத்தியீனம்.

மதியுணி - இராகு, கேது.

மதிரம் - மது.

மதிராக்ருஹம் - கள்விற்கும் வீடு.

மதிலுண்மேடை - கொத்தளம்.

மதிலுறுப்பு - மதிலின்சித்திரம்.

மதில் - மதின்.

மதில்காத்தல் - புறப்பொருட் டுறைகளிலொன்று, அஃது— பகைவர் மேவிடாமலுப்பரிகை யைச்சூழ்தல்.

மதில்வளைத்தல் - புறப்பொருட் டுறைகளிலொன்று, அஃது— மாற்றூருப்பரிகையைச்சூழ்தல்.

மதிவல்லோர் - மந்திரிமார்.

மதின் - சுற்றுச்சுவர், இஃது— இராசசின்னத்தொன்று.

மது - அசோகு, அதிமதுரம், அமுதம், இருப்பைப்பூத்திரா வகம், உருசி, ஓரரக்கன், கள், சித்திரைமாதம், தேன், நீர், பால், மகரந்தம், மஸ்துள்ளது.

மதுகண்டம் - குயில்.

மதுகந்தம் - இலுப்பைமரம், மகிழமரம்.

மதுகம் - அதிமதுரம், இருப்பை, எட்டிமரம், தரா, தித்திப்பு, துத்தநாகம்.

மதுகரம் - ஆண்வண்டு, கள், தேனீ, பழம், வண்டு.

மதுகரன் - அன்பன்.

மதுகரி - தேனீ,

மதுகாரை - ஓர் மரம்.

மதுகுக்குடிகை - எலுமிச்சை.

மதுகை - வலி, வெற்றி.

மதுகைடபன் - ஓரசுரன்.

மதுகோஷம் - குயில், தேன்கூடு

மதுசகாயன் - காமன்.

மதுசாரதி - மன்மதன்.

மதுசூதனன் - திருமால்.

மதுதூதம் - மாமரம்.

மதுதூலி - கருப்பஞ்சாற்றுப் பாணி.

மதுத்துருமம் - இலுப்பைமரம்.

மதுபதி - யோகினி, காளி.

மதுபம் - கள், வண்டு.

மதுபாணிகை - அவுரி, ஓர் பூடு.

மதுபாயி - வண்டு.

மதுபானம் - சுராபானம்.

மதுபீசம் - மாதுளை.

மதுப்பிரியன் - பலராமன்.

மதுமதனன் - விஷ்ணு.

மதுமத்தை - ஒருமத்தை.

மதுமூலம் - ஓர் கிழங்கு.

மதுரகவி - நாற்கவியினொன்று.

மதுரம் - இனிமை, கரும்பு, சாராயம், சொற்சுவை, பனைப் பொது, முந்திரிகை.

மதுரபாடனம் - கலைஞானமறு பத்து நான்கினொன்று.

மதுரம் - அதிமரம், இனிப்பு, ஓர் கவி, சமனிசை, செஞ்சந் தணம், தித்திப்பு,துத்தநாகம், நஞ்சு, மதுரை, முந்திரிகை, மூளை.

மதுரவசனம் - நயவசனம்.

மதுராலாபை - நாகணவாய்ப்புள்.

மதுரவல்லி - வெற்றிலைக்கொடி.

மதுரித்தல் - உருசித்தல், தித் தித்தல்.

மதுரிபு - விஷ்ணு.

மதுரேசன் - கிருஷ்ணன், பாண் டியன்.

மதுரை - ஓர்தேசம், கள், மதுர வஸ்து.

மதுர்ச்சி - பொன்னிமிளை.

மதுலம் - மஸ்துள்ள பொருள்.

மதுவம் - கள், வண்டு.

மதூகம் - இருப்பை, எட்டிமரம், வண்டு.

மதூலி - அதிமதுரம், மாமரம்.

மதோன்மத்தர் - மிகுகளிப்புடை யோர், மிகுவெறியர்.

மத்குணம் - மூட்டைப்பூச்சி.

மத்தகமூலம் - கழுத்து.

மத்கம்.சென்னி, நெற்றி, பொல் லாநிலம், யானைமத்தகம்.

மத்தகாசம்-கண்ணேயினொன்று.

மத்தகாசி - மேன்மையுடையாள்.

மத்தகாசினீ - உத்தமஸ்திரீ.

மத்தகுணம் - மதகுணம், யானை.

மத்தம் - எருமைக்கடா, களிப்பு, குயில், பூமத்தை, மதம், மத்து, வெறி.

மத்தவாரணம் - அத்தவட்டத் தலையணை, நந்தனவனம், யாக்கு வெற்றிலைத்துவையல், மதயானை, மேல் வீட்டுத்தாழ் வாரம்.

மத்தளம் - ஓர் பறை.

மத்தனம் - கடித்தல், கடைதல், தேய்த்தல்.

மஸ்தன் / மஸ்தான் } புலன்வேறுபட்டிருப் போன், பைத்தியக் காரன்.

மத்தி - நடு.

மத்திகை - குதிரைச்சம்மட்டி, கூடம், பூமாலை, விளக்குத் தண்டு.

மத்தித்தல் தேய்த்தல்.

மத்திமகண்டம் - நவகண்டத் தொன்று.

மத்திமக்கூர்மை - திலாலவணம்.

மத்திமதீபகம் - ஓரலங்காரம்.

மத்திமபட்சம் - நடுத்தரம்.

மத்திமம் - இடை, குறைவு, சமனிசை, இது — மூவிசையி னொன்று, நடு.

மத்திமன் - நடுத்தரமானவன், நடுவுள்ளவன்.

மத்திமை - நடுவிரல், வாக்கு நான்கினொன்று.

மத்தியட்சம் - நடுநியாயம்.

மத்தியதேசம் - குருக்கேத் திரத்திற்குத் தெற்கும், அளக பாதத்திற்குவடக்கும், இமயத் திற்கு மேற்கும், விந்தியத்திற் குக்கிழக்குமாகவுள்ள பூமி.

மத்யஸ்தம் - நடுநிலை நியாயம்.

மத்யஸ்தன் - நடுநியாயக்காரன்.

மத்தியமம் - இடை, சத்தசுருதியி னொன்று, நடுவிரல், மத்தி.

மத்தியமாவதி - ஓரிராகம்.

மத்தியமை - குமரி, நடுவிரல்.

மத்தியம் - இடை, கள், தீழ்ப்பு, நடு, மேற்கு, விபரீதசாதனை.

மத்திரிப்பு - சினம்.

மத்து - ஊமத்தை, தயிர் முதலிய கடையுமத்து.

மத்துவம் - இலகிரி, மத்துவ மதம்.

மத்தேபம் - யானை.

மத்தை - ஊமத்தை, மஸ்துள்ளது.

மந்தகதி - தாமதநடை.

மந்தகாமி - பையநடப்பவன்.

மந்தகேந்திரம் - கிரகநடையி னொன்று.

மந்தசம் - வெண்ணை.

மந்தசானம் - அக்கினி, சீவன், நித்திரை.

மந்ததரம் - சோம்பு.

மந்தநகடி - தயிர்கடைதறி.

மந்தப்படுதல் - அசீரணித்தல், அவிவேகப்படுதல், கூர்மை யற்றுப்போதல்.

மந்தம் - அழித்தல், அற்பம், உலகவழிவு, ஓர் நோய், கடை தல், கண்ணோயினொன்று, கூர் மையின்மை, சோம்பல்,பீழை, மத்து, மெல்லனவு.

மந்தரம் - அறிவின்மை, ஓர்மலை, கீழ்மை, கோட்டை, கோபம், சோம்பு, தடிப்பு, தடை, தயிர் கடைதறி, தேவலோகம், பரு மை, பழம், பளிங்கு, பொக்கி ஷம், மந்தாரம், மாலை, வெண்ணை.

மந்தரன் - ஒற்றன், சோம்பன்.

மந்தரை - விரோசனன் புத்திரி.

மந்தபவோசை - மெல்லிய வோசை, இது—மூவிசையி னென்று.

மந்தனம்-அழித்தல், ஆலோசனை, கடைதல், புகழ், யானைமுக படாம்.

மநதனி - தயிர்கடைதாழி.

மந்தன் - கூர்மையிலான், சனி, நமன்.

மந்தாநம் - புகழ்.

மந்தாகினி - அறுபதாண்டுள்ள வள், கங்கை.

மந்தாசியம் - வெட்கம்.

மந்தாட்சம் - வெட்கம்.

மந்தாரச்சிலை - ஓர் மருந்துக்கல்.

மந்தாரமஞ்சி - சூதபாஷாணம்.

மந்தாரமேரு - தொட்டிப்பாஷா ணம்.

மந்தாரம் - ஐந்தருவினென்று, செம்பரத்தை,பூங்காரம்,மப்பு.

மந்தார்த்தம் - சூரியனதுமையத் திருந்துவேறொரு கிரகத்திற் குள்ள தூரவளவு.

மந்தானம் - மத்து.

மந்தி - குரங்கு, பெண் குரங்கு, பெண்முசு, மந்தியென்னே வல், வண்டு.

மந்திரகூர்மை - இந்துப்பு.

மந்திரசஞ்சீவி - இந்திரகோபம்.

மந்திரசாத்திரம் - கலைஞானமறு பத்து நான்கினொன்று.

மந்திரதாரணை - நவதாரணையி னொன்று.

மந்திரஸ்நாநம் - எழ்வகை ஸ்நா னத்தொன்று.

மந்திரம் - ஆலோசனை, இரகசிய மாகப் பேசுதல், இராசமனை, உள், எண்ணம், ஓர் தேயம், ஒருபநிஷதம், கடல், கள்ளு, குதிரைக்கூட்டம், குதிரைப் பந்தி, கோயில், தாழ்த்திசை, நாப்புடைப்பெய ராதுச்சரித் தல், பொருப்பு, வீடு, வேதம்.

மந்திராலோசனை - இரகசியா லோசனை.

மந்திரி - குபேரன், சுக்கிரன், தந்திரி, தேர்ச்சித்துணைவன், புதன், மந்திரியென்னேவல், வருங்காரியஞ் சொல்வோன், வியாழன்.

மந்திரித்தல் - செபித்தல்.

மந்து - அரசன், செடி, தப்பிதம், மனிதன்.

மந்தையன் - அவிவேகி, கூர்மை யற்றவன்.

மந்தைவெளி - மேய்ச்சனிலம்.

மந்தோச்சம் - கிரகவட்டத்தின் தூரமானமுனை.

மந்தோதரி-இராவணன் மனைவி.

மப்பு - மந்தாரம், மயக்கம்.

மம - அதிட்டம், நீர்.

மமகாரம் - அகந்தை.

மமதை - அகந்தை, தனிமை, பெருமை.

மம்மர் - துன்பம், மயக்கம்.

மயக்கடி - மயக்கம்.

மயக்கமின்மை - அறத்துறுப்பி னொன்று, அஃது—தெளிவு.

மயக்கம் - இணக்கம், உன்மத்தம், இஃது — முக்குணத் தொன்று, கூடுங்கூட்டம், சோம்பு.

மயக்கவணி - ஓரலங்காரம்.

மயக்கவொழிப்பு - அபக்நுதியுரு பகத்தொன்று.

மயக்கு - மயக்கம், மயக்கென் னேவல்.

மயக்குறல் - கலங்குதல்.

மயங்கல் } அறிவுகெடுதல்,
மயங்குதல் } அன்பினமிழ்தல், இணங்கல், கூடல், மதிகலங்கல், வரம்புகடந்து வருதல்.

மயங்கவைத்தல் - இதுவோ அதுவோ எனத்துணியப்படாமற் சொல்லல்.

மயங்கிசைக்கொச்சைக்கலிப்பா - தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகமென்னுமாறுறுப்பு மிக்குங்குறைந்தும் பிறழ்ந்து முறழ்ந்தும் பலவாறு மயங்கி வருவது.

மயடம் - புற்குடிசை.

மயப்பு - சாரம், செல்வமுடைமை, நிறம்.

மயம் - அழகு, ஒட்டை, ஓர் சிற்ப நூல்.

மயர்வு - மயக்கம்.

மயல் - உன்மதமத்தம், செத்தை, பயம், பிசாசம், மந்தம், மயக்கம்.

மயன் - ஓர் தேவதச்சன், கின்னரன், தச்சன், வினைஞன்.

மயானஞானம் - மயானவைராக்கியம்.

மயிந்துதல் - பதுங்குதல்,

மயிரோசனை - ஓர் மருந்து.

மயிர் - உரோமம்.

மயிர்க்குந்தம் - ஓர் மருந்து.

மயிர்க்குழற்சி - உரோமப்புளகிதம், மயிர்க்குழைவு.

மயிர்க்கூச்சு-உரோமப்புளகிதம்.

மயிர்க்கூச்செறிதல்- மயிற்சிலிர்த்தல்.

மயிர்மாணிக்கம் - ஓர்செடி, பசுவுடற்றிரட்சி.

மயிர்முடி - குடுமி.

மயிர்வாரி - சீப்பு.

மயிர்வினை - கத்தரிகை, சௌளம்பண்ணல்.

மயிலடி - மாதர்காலாழியி னொன்று.

மயிலடிக்குருந்து - ஓர் மரம்.

மயிலம் - மயிலிறகு.

மயிலெண்ணெ - ஓர் மருந்தெண்ணெய்.

மயிலெ - இருவாட்சி, கருமை கொண்ட வெள்ளை, மீனவிராசி, மீன்.

மயில் - மயூரம்.

மயில்வாகனன் - குமரன்.

மயிற்குரல் - அகவல்.

மயிற்பிச்சம் - மயிலிறகுக்குடை.

மயிற்பீலி - மயிலிறகு.

மயிற்றுத்தம் - வெண்டுத்தம்.

மயிற்றோகை - மயில்வால்.

மயு - குதிரைமுகம்.

மயூகம்-அழகு, கடிகாரவூசி, நிழல், கிரணம், சுவாலெ, பிரபை.

மயூரகதி - துரககதியைந் தினொன்று.

மயூரகம் - துருசி, மயில்.

மயூரக்கிரீவகம் - துத்தம்.

மயூரம் - மயில்.

மயூராரி - ஓந்தி, பல்லி.

மயேசன் - சிவன்.

மரகதபத்ரி - நீர்ப்பாசி.

மரகதம் - பச்சைநிறம், பச்சைமணி, இது நவமணியொன்று.

மரகதவல்லி - உமை, தருமதேவதை.

மரகதன் - குபேரன்.

மரக்கணு - மரக்கெட்டு.

மரக்கலப்பாய் - கப்பற்பாய்.

மரக்கலம் - கப்பல், தோணி.

மரக்கலன் - மீகாமன்.

மரக்கா - நந்தனவனம்.

மரக்காரை - ஓர் மரம்.

மரக்கால் - ஆயிலியம், உப்பளம், கலத்தின் பன்னிரண்டிலொருபங்கு, அஃது — குறுணி; கொத்து, சோதிநாள், திருமால், துர்க்கைகூத்து, முகந்தளக்குங் கருவியினொன்று, வள்ளம்.

மரக்காளான் - மரத்தில் முளைக்கும் காளான்.

மரக்கொம்பு - மரத்தின்கொம்பு.

மரக்கோல் - தோணியோட்டுங் கம்பு, மோட்டம்பு.

மரச்சிலைக்கல் - கண்டகிச்சிலை.

மரச்செப்பு - மரவை.

மரச்செறிவு-சோலெ, மரப்பொது.

மரணகண்டிகை - ஓர் நூல்.

மரணம் - சாவு, இஃது—மாயையாக்கை பதினெண் குற்றத்தொன்று, பஞ்சபாணவத்தையினொன்று, அஃது—மயக்கமுமாய்தலும்.

மரணயோகம் - நாசயோகம்.

மரதம் - சாவு.

மரதன் - கோவிந்தன், சிவன்.

மரத்தல்-பிரமித்தல், விறைத்தல்.

மரத்தோல் - கீரை.

மரநா - விறைத்தநாக்கு.

மரநாய் - மரத்தில் வாழுநாய்.

மரந்தம் - பூந்தேன்.

மரபு - தன்மை, பழமை, முறைமை, வமிசம், வழி.

மரபுப்பெயர் - தொன்றுதொட்டு வழங்கி வருஞ்சொல்.

மரப்பட்டை - மரத்தோல்.

மரப்பத்தல் - இறைமரம்.

மரப்பொது - சோலை.

மரப்யோர் - மரப்பொந்து.

மரமஞ்சள் - ஓர் மஞ்சள்.

மரமரம் - சருகுமுதலியவற்று லெழுமொலி.

மரமரிவாள் - ஈர்வாள்.

மரல் - அரலை, ஓர் கற்றுழை.

மரவட்டணை-தட்டு,நெடும்பரிசை

மரவட்டை - ஓரட்டை.

மரவணில் - ஓர் அணில்.

மரவண்டு - ஓர்வகைவண்டு.

மரவம் - குங்குமமரம்.

மரவாணி - மரக்கொடுதி.

மரவிடை . பிரயோசந்தருமரம்.

மரவினைஞர் - தச்சர்.

மரவுப்பு - ஒருப்பு.

மரவுரி - ஓர்மரம், நார்ச்சீரை.

மரவெண்ணெ - ஓர் தயிலம்.

மரவை - மரச்செப்பு.

மரவொல்லி - கதம்பையொல்லி.

மரா - அரசமரம், ஆச்சாமரம், வெண்கடம்பு.

மராடம் - ஓர் தேசம்.

மராரம் - பண்டகசாலை.

மராலம் - அன்னம்,கண்ணிமை, குதிரை, தாரா, மாதளை.

மரிச்சல் - பொறுமை, மரீசம்.

மரிசி - புதுவரம்பு வழி.

மரிசிதம் - பொறுமை.

மரித்தல் - சாதல்.

மரியாதம் - ஒழுங்கு, நீதி.

மரியாதை - அமைவித்தநிச்சயம், எல்லை, ஒழுக்கம், கரை, சரிமுறை, வரம்பு.

மரியை - எல்லை, நிச்சயித்த நிபந்தனை, நீதி, பெரியோர்கள்.

மரீசம் - மிளகு.

மரீசி - ஓர் முனிவர், கிரணம், பிசுனன்.

மரீசிகா - கானல்.

மரு - ஓர்பரிமளப்புல், மருவென்னேவல், மலை, வஞெந்தரம், வாசனை.

மருகம் - மான்.

மருகன் - மருமகன்.

மருகி - மருமகள்.

மருகு - மகரவாழை, மருகன்.

மருக்ககம் - சிலம்பி.

மருக்கம்-காற்று, குரங்கு, சரீரம்.

மருக்காரை - ஓர் காரை.

மருக்கொழுந்து-ஓர்வாசனைப்புல்.

மருங்கு - இடம், இடை, ஒழுங்கு, பக்கம்.

மருங்குல் - இடை, பக்கம்.

மருட்டம் - கள்.

மருட்டல் - எத்துதல், மயக்குதல்.

மருட்டி - எத்துதி, கள்.

மருட்டு - எய்ப்பு. மயக்கு.

மருட்டுதல் - எத்துதல், மயக்கல்.

மருட்பா - ஐந்து பாவினொன்று, அஃது—முதற்கண் வெண்பாவும், கடைக்கண்ணகவலுமாய் வருவது.

மருட்பார்வை - வெருண்டபார்வை.

மருண்மா - யானை.

மருதணி
மருதநிலம் } நாடுசார் நிலம்.

மருதநிலவேந்தன் - இந்திரன்.

மருதப்பண் - ஓர் பண்.

மருதப்பறை - ஓர் பறை.

மருதமுதற்பொருள் - பழனமும் பழனஞ்சார்த்தவிடமும், வைகறையென்னுஞ் சிறுபொழுதும், ஆறுபெரும்பொழுதுகளுமாம்.

மருதம் - ஐந்து நிலத்தொன்று, அது—வயலும், வயல்சார்ந்தவிடமும், ஓர்மரம், காற்று, மருதநிலப்பண், வயல்.

மருதயாழ் - ஓர் யாழ்.

மருதாணி - ஓர்பூடு.

மருத்தன் - ஓரரசன், வாயு.

மருத்துவம் - பரிகரிப்பு,வைத்தியம்.

மருத்துவர் - அச்வினிதேவதைகள், வைத்தியர்.

மருந்தம் - தாலம்பபாஷாணம், நஞ்சு.

மருந்து - அமுதம், ஓஷதி, ஔஷதம்.

மருப்பு - இஞ்சி, மரக்கொம்பு, விலங்கின்கொம்பு.

மருமம் - மார்பு.

மருமரம் - இலைமுதலியவற்றூ லெழுமொலி.

மருமான் - மகன், மருமகன், வழித்தோன்றல்.

மருவகம் - இராகு, ஓர் நாரை, புலி, மருக்கொழுந்து.

மருவலர் - பகைவர்.

மருவலர் } அணைதல், கலத்தல்,
மருவதல் } கிட்டல், சருவுதல், தழுவுதல், பொருந்துதல், வருதல்.

மருளல் } அஞ்சல், எழுத்திலா
மருளுதல் } வோசை, பேசலாவெழுமொழி, மயங்குதல், வெருளுதல்.

மருளிந்தம் - ஓர் பண்.

மருளூமத்தை - ஒருமத்தை.

மருள் - உவமையுருபு, உன்மத்தம், ஓர்கிழங்கு, கள், குறிஞ்சி யாழ்த்திறப், பிசாசம், மயக்கம், மருளென்னேவல்.

மருஉ - மருவிவருமொழி, மருஉமொழி, இலக்கண மில்லாமற் சொல்லைக்குறித்துப் பெரியோரால் வழங்குஞ்சொல்.

மரூகம் - மயில்.

மரை - ஓர்மிருகம், தவளை, தாமரை.

மர்த்தலம் - மத்தளம்.

மலகரி - ஓரிராகம்.

மலைக்கடி - கலக்கம்.

மலக்கம் - கலக்கம்.

மலக்கனம் - பொன்னம்பர்.

மலங்கல் - கலங்கல், குளம்.

மலங்கு-ஓர்மீன், மலங்கென்னேவல்.

மலசம் - சிதல்.

மலடன் - பிள்ளையில்லாதவன்.

மலடு - கருவற்றது.

மலத்திரம் - மும்மலம்.

மலபரிபாகம் - பந்தபாச நீங்கிப் பக்குவமடைதல்.

மலமலத்தல் - ஓரொலிக்குறிப்பு.

மலம் - அழுக்கு, இரத்தம், கட்டம், கண் பீளை, கருப்பூரம், கறள், குறும்பி, சலம், தாது, நகம், பந்தம், பாவம், மண்டி, மூக்குச்சளி, மூளை, வேர்வை.

மலயாசலம் - பொதிகை.

மலயோத்பவம் - சந்தனம்.

மலரவன் - பிரமன்.

மலருக்குநாயகன் - கருவண்டு.

மலருதல் - மலர்தல்.

மலரோன் - பிரமன்.

மலர் - அலர், ஒருவாய்பாடு, பூ, மலரென்னேவல், மலர்ச்சியானது.

மலர்ச்சி - அலர்ச்சி, எழுச்சி, களிப்பு, பொலிவு.

மலர்தல் - எதிர்தல், தோன்றல், நிறைதல், விரிதல்.

மலர்தாங்கி - ஓர்கொடி.

மர்த்தாள் - மலர்க்காம்பு.

மலர்த்திரள் - பூங்கொத்து.

மலர்த்தேன்-பூந்தாது, பூந்தேன்.

மலர்வு - மலர்ச்சி.

மலன் - லோபி.

மலாகை - ஆதி, ஆர்த்தை, பெண்யானை.

மலாடு - மலைநாடு, தமிழ்நாடுகளி லொன்று.

மலார் . மலாறு.

மலாவகம் - பிண்ணாக்கு.

மலிதல் - நிறைதல், பெருகல்.

மலினீ - ரஜஸ்வலை.

மலி - நிறைந்த.

மலிவு - நயம், மிகுதி.

மலினமுகம் - அக்கினி, ஆவி, கருங்குரங்கு.

மலினமுகன் - இறந்தோன், தீக் கடவுள், தீயோன், முசு, வண்டு.

மலிமை - கருமை, குற்றம், மாசு, மோர்.

மலீமசம் - அழுக்கு, இரும்பு.

மலை - உவமை, பருப்பதம், மலை யென்னேவல்.

மலைகளிறு - போர்க்களிறு.

மலைக்கரு - சாத்திரவேதி.

மலைக்கற்றாழை - ஓர் கற்றாழை.

மலைக்கால் - ஆட்டுக்கல்.

மலைக்குகை - மலைமுழைஞ்சு.

மலைக்குருவி - சாத்திரவேதி.

மலைக்கொடுமுடி - மலையுச்சி.

மலைசாரி - கிளிஞ்சல்.

மலைச்சக்கரம் - சாலக்கிராமம்.

மலைச்சக்கரவள்ளி - ஓர் வள்ளிக் கொடி.

மலைச்சாரல் - மலையருகு.

மலைதல்-அணிதல் உவமையாதல், எதிர்த்தல், ஒருவழிபடாது நிற்றல், பொருதல், மறுத்தல்.

மலைதாங்கி - ஓர்கொடி.

மலைத்தல்-தடுமாறல், பொருதல்,

மலைத்தொடக்கு - கல்மதம்.

மலைத்தும்பை - ஓர் தும்பை.

மலைத்துவரை - ஓர் துவரை.

மலைநாடன் - சேரன்.

மலைநாடு - சேரநாடு.

மலைநாதம் - கல்மதம், சாத்திர வேதி, வக்கிராந்த பாஷாணம்.

மலைபடுதிரவியம் - மலையிலுண் டாகுந் திரவியம், அது— மிளகு, கோட்டம், அகில், தக் கோலம், குங்குமம்.

மலைப்பச்சை - ஓர் பூடு.

மலைப்பாழி - மலைக்குகை.

மலைப்பாறை - மலைத்திட்டை, மலைப்பக்கம்.

மலைப்பு - கூத்தின் விகற்பம், திகைப்பு, போர், மலைவு.

மலைமகள் - உமை.

மலைமுழை } மலைக்குகை.
மலைமுழைஞ்சு }

மலையக்கால் - தென்றல்.

மலையசம் - சந்தனம், தென்றல், மலையாடு.

மலையடிப்பாடி - குறிஞ்சி நிலக் கிராமம்.

மலையமான் - சேரன்.

மலையம் - இந்திரன்கா, குறிஞ்சி யாழ்த்திறம், தோட்டம், பொதியமலை, மலை, மலையினுச்சி.

மலையரண்-மலையிருலாயகாவல், இது—நான்கரணிலொன்று.

மலையருவி-மலையிலிருந்துவீழ்நீர்.

மலையன் - ஓர்சாமை, கடையெழு வள்ளலிலொருவன், குறிஞ்சி நிலத்தலைவன், சேரன்.

மலையாடு - ஓர்வகை ஆடு.

மலையாரம் - சந்தனம்.

மலையாளம் - ஓர்தேசம்.

மலையாநிலம் - தென்றல்.

மலையிரும்பு - உலோகமணல்.

மலையினுச்சி - மலைமுடி, மாமிச பேதி.

மலையின்முனிவன் - மிளகு.

மலையுருக்கன் - ஓர் வெற்றிலைக் கொடி.

மலைவாசிக்கொம்பு - பன்றிக் கொம்பு.

மலைவாணர்-வேடர், மலைவாழ்நர்.

மலைவீரியம் - அன்னபேதி.

மலைவு - உவமை, போர், மயக்கம், மாறுபாடு.

மலைவேம்பு - ஓர்வேம்பு.

மல்-கூத்திஞேர்விகற்பம், கூத்து, திருமால், பெருகல், வலி, வளமை.

மலரல் - நிறைதல், பெருகல்.

மல்குதல் - நிறைதல்.

மல்லகசாலை - மற்களரி.

மல்லகதி - துரககதியைந்தி லொன்று.

மல்லகை - மல்லிகை.

மல்லகச்செட்டி - மற்பிடிக்குஞ் சாதி.

மல்லசம் - மிளகு.

மல்லதூர்யம் - ஓர் வாத்தியம்.

மல்லநாகம் - இந்திரன்யானை.

மல்லம் - ஓர் பாத்திரம், கதுப்பு, தட்டம், மற்பிடி, யாகமிச்சில்.

மல்லயுத்தம் - மற்பிடி, அது— கலைஞான மறுபத்து நான்கி லொன்று.

மல்லரி - பம்பைமேளம்.

மல்லர் - மற்போர் செய்வோர், வலியோர்.

மல்லல் - செழிப்பு, மிகுதி, வலி, வளமை.

மல்லண் - திண்ணியன், மல்லவலன், வலியோன்.

மல்லாக்குப்பறிதல் - உட்புறம் மேலாதல்.

மல்லாய் - ஓர் பாத்திரம்.

மல்லாரி - ஓரிராகம், பம்பை மேளம்.

மல்லாருதல் - மல்லார்தல்.

மல்லி - மல்லிகை, மிகப்பருத்து ரத்தவன்.

மல்லிகம் - பிரப்பஞ்செடி.

மல்லிகாட்சம்-வெண்கட்குதிரை.

மல்லிகாமோதினி - குண்டுமல்லிகை.

மல்லிகை - ஓர்பாத்திரம், ஓர்பூச்செடி, விளக்குத்தண்டு.

மல்லிபத்திரம் - ஓர் காளான்.

மல்லு - ஓர்கூத்து, ஓர்போர்.

மல்லுக்கட்டுதல் - போராட்டமாடுதல், மல்லுப்பிடித்தல்.

மல்லுப்பிடித்தல் - மற்பிடித்தல்.

மல்லூகம் - புழு.

மல்லை - இரப்போர் கலம், மௌனம், வட்டம்.

மவுடி - முடி.

மவுலி - மௌலி.

மவுனம் - மோனம்.

மழம் - இளமை.

மழலை - நிரம்பாமென்சொல்.

மழவன் - கட்டிளமையோன்.

மழவு - இளமை, குழந்தை.

மழு - எரியெரும்பு, பரசாயுதம்.

மழுக்கம் - கூரின்மை, தோற்றமின்மை, மங்கல்.

மழுக்குதல் - அடித்தல், அரிசிமினுக்குதல், கூர்மை மழுங்கச் செய்தல், தோற்றம்கொள்ளாமற்பண்ணல்.

மழுங்கல் - ஒளிமழுங்கல், ஓர் வகைப்பொன், கூர்கெடுதல், பேர்குறைதல், பொலிவழிதல்.

மழுவன் - அஞ்சாதவன், நகர்காப்போன், பிடித்ததை விடாதவன்.

மழுவெடுத்தல் - பொய்யை நிலையாக்கல்.

மழை - குளிர்ச்சி, நீர், மாரி, மேகம்.

மழைக்கண்ணி - ஓர் பட்சி.

மழைக்காற்று - குளிர்காற்று.

மழைப்புகார் - மழைமுகில்.

மழைவண்ணக்குறிஞ்சி-ஓர்செடி.

மழைவண்ணன் - திருமால்.

மளமளத்தல் - ஈரடுக்கொலிக் குறிப்பு.

மளிகாரம் - வெண்காரம்.

மளிகை - பண்டகசாலை, பல பொருட்கடைவீடு.

மளுக்கெனல் - ஒலிக்குறிப்பு.

மள்ளம் - வலி.

மள்ளர்-உழவர், குறவர், குறிஞ்சி நிலமாக்கள், திண்ணியர், படைவீடு, மறவர்.

மள்ளு - கைமரம்.

மறதி - மறப்பு, அது—தாமத குணத்தொன்று.

மறத்தல் - பொச்சாப்பு.

மறத்தியர்- பாலைநிலப்பெண்கள்.

மறநிலைப்பொருள் - மறத்தாற் கவர்பொருள், பகைவர்பொருள், திறைப்பொருள், சூதில் வெல்பொருள் முதலியன.

மறநிலையறம் - புறப்பொருட்டுறையினொன்று, அஃது—நிரை மீட்டுப்பகைவென்று செஞ்சோற்றுக்கடன் கழியாதாரைத்தண்டித்துக் குறைவுறச் செய்தல்.

மறநிலையின்பம் - அகப்பொருட்டுறையினொன்று, அஃது—இலக்கமெய்தல், ஏறுதழுவன் முதலிய மறத்தகையாற்கன்னியை மணமுடித்தின்புறுதல்.

மறப்பிலி - கடவுள்.

மறப்பு - மறதி.

மறப்புலி - சிங்கம்.

மறமலி - யானை.

மறமறத்தல் - ஈரடுக்கொலிக் குறிப்பு.

மறம் - ஓர்பிரபந்தம், அது—கலம்பகத்திறுப்புமாம், கொலை, கோபம், சினம், நமன், பாவம், பிணக்கு, வலி, வறுமை, வீரம்.

மறம்வைத்தல்-வன்மம் வைத்தல்.

மறலி - நமன், மயக்கம்.

மறல் - எழுச்சி, ஓர் கூத்து, காலன், குற்றம், சாதல், தரித்திரம், நமன், பகை, பிணக்கு, போர், மயக்கம், மறதி.

மறவர் - படைவீரர், பாலைநில மாக்கள், வேடர்.

மறவி-ஈனம், கள், மறதி, மறந்து செய்யுங்குற்றம்.

மருடர் } மகாராஷ்டிரர்.
மருராட்டியர் }

மறி - அழுங்கு, ஆடு, குதிரை, மான் இவற்றின்குட்டி, ஆடு, குதிரை, மானிவற்றின்பெண், மறியென்னேவல், மான், மேடவிராசி.

மறிக்கல் - சுக்கான்கல்.

மறிதரல் - மீளல்.

மறித்தல் - காவற்படுத்தல், தடுத்தல், திருப்புதல், மடக்கல்.

மறிப்பு - தடுப்பு, திருப்பு.

மறியல் - சிறை, தடை.

மறு - குற்றம், மறுவென்னேவல் மற்றை, மாசு.

மறுகல் - மறுகுதல்.

மறுகலித்தல் - மறுதலித்தல்.

மறுகு - தெரு, மறுகென்னேவல்.

மறுகுதல் - சுழலல், புரளுதல், மயங்கல், மனங்குழம்புதல்.

மறுக்கம் - இக்கட்டு, மனக்குழப்பம்.

மறுதலை - எதிரி.

மறுத்தல் - இல்லையெனல், கொடாமை, தவறு, நீக்கல், மறையுழவுதல், வெட்கம்.

மறுப்படுதல் - ஊறடைதல், வசைப்படல்.

மறுப்பு - மறுக்குதல்.

மறுமாடி - மஞ்சுக்கட்டை, மலைப்பிளவு.

மறுமை - மரணத்தின் பின்வருநிலைபரம், வருபிறப்பு.

மறுமைப்பயன் - மரணத்தின் பின்னடைவது.

மறுமொழி - உத்தரம்.

மறுவல், மறுவி } கஸ்தூரிமிருகம்.

மறுவுத்திரம் - பிரதியுத்திரம்.

மறை - அடக்கம், இரகசியம், இரண்டாமுழவு, எதிர்மறுப்பு, ஒலிப்பிடம், கேடகம், சொல், புள்ளி, மந்திரம், மறையென்னேவல், மறைவு, வேதம்.

மறைக்காடு - வேதாரணியம்.

மறைக்கொடியோன் - துரோணசாரியன், பிரமன்.

மறைதல் - ஒலித்தல், தோன்ருமல் போதல்.

மறைத்தலைவி-இலக்குமி, உமை, சரச்சுவதி.

மறைபாடு - மறைவு.

மறைபுகல் - அடைக்கலம்புகுதல்,

மறைபொருள் - உட்பொருள்.

மறைப்பு - மறைத்தல், மறைவு.

மறைப்பொருள் - வேதார்த்தம்.

மறைமுடி - உபநிஷதம், வேதத்துச்சி.

மறைமுடிவு-கடவுள், வேதாந்தம்.

மறையோன் - அந்தணன், பிரமன், வியாழன்.

மறைவு - ஒதுக்கு, தோன்ருமை.

மற்கடப்பிடி - குரங்குப்பிடி.

மற்கடம் - குரங்கு.

மற்கரை - குசை, மலடி.

மற்கொல் - பகை.

மற்போர் - மல்யுத்தம்.

மற்ற - அடுத்த, பிற, மற்றவை, வேறு.

மற்றவர் - ஏனையோர், பிறர், மறுபெயர்.

மற்று - அசைநிலை, பிறிதின் பொருள், வினைமாற்றுப்பொருள், என்பவற்றைத்தருமிடைச்சொல்.

மற்றை, மற்றைய } சுட்டியதற்கினம்.

மற்றையது - மற்றது.

மற்ருென்றுவிரித்தல் - சொல்லத்தொடங்கியது சிறுக மற்ருென்றை இடையிலே விரித்துச்சொல்லுதல்.

மற்றோ - அதிசயவிரக்கச்சொல்.
மனக்கசப்பு - மனவெறுப்பு.
மனக்கசிவு - மனவுருக்கம்.
மனக்கறை - மனக்களங்கம்.
மனக்கிடக்கை - மனவெண்ணம்.
மனக்கிலேசம் - மனத்துயர், மனப்பீடை.
மனக்குவிவு - மனவொருமிப்பு.
மனக்குழப்பம் - ஒருமிப்பின்மை.
மனக்குள்ளம்-தந்திரம்,வஞ்சகம்.
மனக்குறிப்பு-கருத்து, நோக்கம்.
மனக்குறை - பிரியவீனம்.
மனக்கூச்சம் - வெட்கம்.
மனக்கொடுமை - மனப்பொல்லாங்கு.
மனக்கொதி - எரிச்சல், கோபம்.
மனக்கோட்டம் - மனங்கோணல்
மனங்கசிதல் - இரங்கல், மனமுருகல்.
மனங்கரைதல் - துக்கித்தல்,மனமிளகுதல்.
மனங்கு - இருபத்தைந்து திருத்தல்கொண்டது, கைப்படை.
மனங்குவிதல் - மனங்கூம்புதல்.
மனங்கூம்புதல் - மனமடங்கல்.
மனசு - மனது.
மனச்சஞ்சலம் } துக்கம்.
மனச்சடைவு } துக்கம்.
மனச்சாட்சி - பகுத்தறியுமறிவு.
மனச்சார்வு - மனப்பற்று.
மனச்சான்று - மனச்சாட்சி.
மனச்சுத்தம் - இருதயத்தூய்மை.
மனச்சோர்வு - மனவயர்ச்சி.
மனதார - மனப்பூர்வமாக.
மனது - மனம்.
மனத்தழிவு - மனவொடுக்கம்.
மனத்தழுக்கம் - அழுக்காறு.
மனத்தளர்ச்சி - மனமெலிவு.
மனத்தூய்மை - மனச்சுத்தம்.
மனத்தேற்றம் - மனத்திடன்.
மனநசிவு - மனக்குறை.
மனநிலை } மனந்தளம்பாமை.
மனநிறை } மனந்தளம்பாமை.
மனநிறைவு - மனப்பூரணம்.
மனநெரிடு - வஞ்சகம்.
மனநெரிவு - மனக்குறை.
மனநேர்மை-மனதறிந்தவுண்மை.
மனந்தளம்புதல் - மனமசைதல்.
மனந்தளர்தல் - தைரியங்கெடல்.
மனந்தீதல் - எங்குதல், மனம்புழுங்குதல்.
மனந்தெளிதல் - மனந்தேறுதல்.
மனப்படுத்தல்- சம்மதப்படுத்தல்.
மனப்பற்று - சினேகம்.
மனப்பிணக்கு - மனமாறுபாடு.
மனப்பிணி மனோவியாதி.
மனப்பிரமை - மனமயக்கம்.

மனப்பொருத்தம் - மனவொன்றிப்பு.

மனப்பொலிவு - மனத்தாராளம்.

மனமடிவு - மனத்துயரம்.

மனமலர்ச்சி - சந்தோஷம்.

மனமலிநம் - மனவழுக்கு.

மனமிடுக்கு - மனவலி.

மனம்-இந்துப்பு,சிந்தை,—இஃது உட்கரண நான்கினொன்று, முப்பொறியினுமொன்று.

மனவலி - ஊக்கம்.

மனவிகாரம் - மனத்திரிபு.

மனவிழி - இசைப்பாட்டு.

மனவிறப்பு - மனவொடுக்கம்.

மனவு - அக்கு, சங்கு, புடவை, மணிப்பொது.

மனவுறுதி - மனவுச்சாகம்.

மனவெழுச்சி - மனவூக்கம்.

மனனம் - சிந்தித்தல்.

மனுகை - பெண்யானை.

மனுயி - மனுமனைவி.

மனுவு - அரைப்பட்டிகை.

மனிதர் - மானிடர்.

மனு - தருமநூல் பதினெட்டினொன்று, நிதி, மந்திரம், மனுச்சக்கரவர்த்திகள்.

மனுசேந்திரன் - அரசன்.

மனுநீதி - மனுமுறை.

மனுவர் - கொல்லர், மானுடர்.

மனை - பதினறரையேயரைக் காற் குழி கொண்டநிலம், மனைவி, வீடு.

மனைக்கிழத்தி - மனையாட்டி.

மனைத்தாயம் - இல்லொழுக்கத்தின்றிறமை, வீட்டுரிமை.

மனைமாட்சி - இல்லறத்திற்குரிய நற்குண நற்செய்கைகள்.

மனையாட்டி - மனைவி.

மனைவாழ்க்கை - இல்லறம்.

மனைவி - நாயகி.

மனோகரம் - அழகு, இச்சை, சந்தோஷம்.

மனோசங்கற்பம் - மனக்கருத்து.

மனோசன் - மன்மதன்.

மனோசிலை - ஓர் மருந்து, விளைவுப்பாஷாண முப்பத்திரண்டினொன்று.

மனோதைரியம் - மனத்திடன், மனமுயற்சி.

மனோபலம் - தைரியம்.

மனோபவம் - மனதிலேபிறந்தது.

மனோபவன் - மன்மதன்.

மனோபாவம் - மனநிலை, மனவெண்ணம்.

மனோபீஷ்டம் - மனப்பிரியம்.

மனோரஞ்சிதம் - ஓர் புஷ்பம், மனப்பிரியம்.

மனோரதம் - இச்சை, இன்பம், விருப்பம்.

மனோலம் - பரிகாசம்.

மனோலயம் - மனவொடுக்கம்.

மனோலி - மகிழக்காரன், பரிகாசம்.

மனோவிகாரம் - மனச்சஞ்சலம், மனதின்திரிபு.

மனோவியாபாரம் - மனதின் தொழில்.

மனோவிருத்தி - மனதின்வியாபாரம்.

மனோவேகம்-எரிச்சல், மனக்கதி.

மனோற்சாசம் - மனமுயற்சி.

மனோற்பவன் - மன்மதன்.

மனோன்மணி - அப்பிரகம், ஓர் சக்தி.

மனோன்மணித்தாய் - இந்துப்பு.

மன் - அசைச்சொல், அரசன், ஆக்கம், இறந்தகால விடைநிலை, ஒழியிசை, கழிவு, நிலைபேறு, பெருமை, பெரும்பான்மை, மிகுதி.

மன்மகன் - அரசனுடைய குமாரன்.

மன்மதை - மக்கட்பரம்பு.

மன்மத - ஓர் வருஷம்.

மன்மதம் - காமம், விழா.

மன்மதன் - காமன்.

மன்மதாலயம் - மாமரம்.

மன்விருத்தம் - ஆசிரியவிருத்தம்.

மன்ற - அசைச்சொல்.

மன்றகம் - சபை.

மன்றம் - சபை, நிச்சயம், நெடுந்தெரு, பலர்கூடும்வெளி, வாசனை, வெளி.

மன்றல் - கலியாணம், நெடுந்தெரு, வாசனை.

மன்றாடுதல் - இரந்து கேட்டல்.

மன்றாட்டம் . வேண்டுதல்.

மன்று - கனகசபை, சபை, நீதிமன்றம், வெளி.

மன்றுபடுதல் - வெளிப்படல்.

மன்றுளாடி - சிவன்.

மன்னர் - அரசர்.

மன்னர்பின்னோர் - வைசியர்.

மன்னர்மன்னவன் - இராசாதிராசன், துரியோதனன்.

மன்னல் - மன்னுதல்.

மன்னன் - அரசன், உத்திரட்டாதிநாள், எப்பொருட்குமிறைவன்.

மன்னார் - ஒருர், பகைவர்.

மன்னித்தல் - பொறுத்தல்.

மன்னிப்பு - பொறுதி.

மன்னிப்பு-இடைஞ்சல், கோபம், துக்கம், பலி, பெருமை.

மன்னியை - பிடர்நரம்பு, விசைநரம்பு

மன்னிறைதருதல்- வேளாண்மைமாந்தரியல்பினொன்று.

மன்னுடைமன்றம் - இராசசபை.

மன்னுதல் - சேர்தல், நிலைபெறு தல்,

மன்னுமான் - கடவுள்.

மன்னுலகு - தேவலோகம்.

மன்னெச்சி - மனவிதனம்.

மன்னை - தறுப்பு.

மன்னோ - அசைச்சொல்.

## மா

மா - அசைச்சொல், அழகு, அழைத்தல், அளவு, அறிவு, ஆணி, இடித்தமா, இடை, இலக்குமி, எதிர்மறையுபசருக்கம், ஐயவுபசருக்கம், ஓரசைச்சொல், ஓரெண், அஃது — இருபதினொன்று; ஓரெழுத்து ஓர் மரம், கட்டு, கறுப்பு, பன்றி, யானையிவற்றி னொன், சரசுவதி, சீலை, செல்வம், தாய், துகள், நிறம், பரி, பிரபை, பெருமை, மகத்துவம், மரணம், மிகுதி, மென்மை, வண்டு, வயல், வலி, வியங்கோளொடுவருமசைச்சொல், விலங்கின்பொது, வெறுப்பு.

மாகக்கல் - கானக்கல்.

மாகட்டகம் - செந்நாயுருவி.

மாகதர் - துதிபாடுபவர், பாணர், மகததேயத்தார்.

மாகதி - சீனி, திப்பிலி, பிராகிருதபாஷையினோர் பிரிவு, முல்லைக்கொடி.

மாகந்தம் - மாமரம்.

மாகந்தி - நெல்லிமரம்.

மாகம் - ஆகாயம், மகநாள், மாசி மாதம்.

மாகயம் - கௌரிபாஷாணம்.

மாகரி - ஆண்யானை.

மாகாணம் - நாடு.

மாகாணி - ஓரெண், அஃது — பதினாறிலொருபங்கு.

மாகாளன் - அயன்படைத்தலைவன்.

மாகாளி - சத்தமாதிருகைகளிலொருவள்.

மாகினம் - இராச்சியம்.

மாகுலவர் - வேடர்.

மாகேசுவரி -சத்தமாதிருகைகளிலொருவள், பார்வதி.

மாகேந்திரம் - நித்தியயோகத்தொன்று, மணப்பொருத்தம் பத்தினொன்று.

மாகேயம் - பவளம்.

மாகை - பசு.

மாக்கருவி - குதிரைக்கல்லணை.

மாக்கள் - பிள்ளைகள், மனிதர்.

மாங்கல்லியசூத்திரம் - தாலிக்கொடி.

மாசம் - மாதம்.

மாசரம் - கஞ்சிமேலேடு.

மாசலம் - நோய், முதலை.

மாசலன் - கள்வன்.

மாசறல்-குற்றந்தீர்தல், நன்மை.

மாசனம் - பெரியோர்.

மாசாத்தன் - கண்ணகை தந்தை.

மாசாந்தம் - அமாவாசியை.

மாசாலம் - ஓர் மாயவித்தை.

மாசி - இறந்தோர்க்கு மாதந் தோறும் செய்யுமோர் சடங்கு, ஓர் மருந்து, மர்மாதம், புது வரம்பு, மக நாள்.

மாசிகை - பறவை.

மாசிங்கம் - கலங்கொம்பு.

மாசிபத்திரி - ஓர்பூடு.

மாசிரம் - சீக்கிரம்.

மாசு - அழுக்கு, அற்பம், கருமை குற்றம், மழை, மறு, மேகம்.

மாசுணம் - பாம்பு.

மாசேனன் - அருகன், கடவுள், குமரன், திருமால்.

மாசேனை - மிகுதி.

மாசை - பொன்.

மாச்சிலை - மாக்கல்லு.

மாஞ்சி - ஓர் வாசனைப்பண்டம்.

மாஞ்சில் - ஓர் மருந்து.

மாடகம் - வீணை முறுக்காணி.

மாடக்குழி - விளக்குவைக்குஞ் சுவரறை.

மாடப்புறு - ஓர்புறு.

மாடம் - உழுந்து, மண்டபம், மாளிகை.

மாடல் - செய்தல்.

மாடி - அரண்மனை, இக்கட்டு, இரணைப்பல், கோபம், தரித்திரம், குளிர், புடவையோரம்.

மாடியம் - பாதை.

மாடு - அகன்மணி, இடம், இரத்தினம், சீதனம், செல்வம், பக்கம், பசுப்பொது, பொன்.

மாடை - அரைவராகனிடைப் பொன், விரிந்து முன் வளைந் திருத்தல்.

மாட்சி, மாட்சிமை - அழகு, பெருமை.

மாட்டல் - மாட்டுதல்.

மாட்டறைதல் - உறுதியின்கீழ்ப் புறத்தெழுதல்.

மாட்டாங்கோல் - மாடோட்டுங் கோல்.

மாட்டார் - ஏலாதார்.

மாட்டிக்கிடை - பசுத்தொழுவம்.

மாட்டுக்கொட்டில் - பசுக்கொட்டில்.

மாட்டுதல் - இயலுதல், கடாவுதல், கட்டுதல், சம்மதித்தல், செருக்குதல், பூணுதல், மாள்வித்தல்.

மாட்டெறிந்தொழுதல்-ஓர்யுத்தி, அஃது—ஒன்றற்குச்சொல்வப் பட்டவிலக்கணத்தை யதனைப் பெறுதற்குரியமற்றொன்றற்கு மாட்டிச்சொல்லி நடத்தல்.

மாட்டேற்று - புறத்துச்செலுத்துகை.

மாணம் - மாட்சிமை.

மாணல் - நன்மை, மாட்சிமை.

மாணவகம் - கல்வி.

மாணவகன் - அறிவீனன், பிரமசாரி, பிள்ளை, மாணாக்கன்.

மாணவம் - பதினாறு கோர்வையுள்ள முத்தாரம்.

மாணவன் - பிள்ளை, மனிதன்.

மாணாக்கன் - கற்போன்.

மாணாமை - மாட்சிமைப்படாமை

மாணார் - பகைவர்.

மாணி - ஆண்குறி, பிரமசாரி.

மாணிகை - எட்டுப்பலங்கொண்ட நிறை.

மாணிக்கம் - சிவப்புக்கல், செம்மணி, அஃது—நவமணியினொன்று.

மாணிக்கவாசகன் - திருவாதவூரன்.

மாணிபந்தம் - உப்பு.

மாண் - மாட்சிமை, மாணென்னேவல்.

மாண்டல் - மாட்சிமைப்படுதல்.

மாண்டார் - இறந்தோர், பெரியோர்.

மாண்டூக்கியம் - ஒருபநிடதம்.

மாண்பு - அழகு, பெருமை, மாட்சிமை.

மாதங்கம் - அரசு, உத்தியாபரணம், யானை.

மாதங்கர் - சண்டாளர்.

மாதங்கி - காளி, துர்க்கை.

மாதண்டம் - பெரும்பாதை.

மாதநம் - லவங்கம்.

மாதப்பிறப்பு - சூரியனோரிராசியினின்று மற்றோரிராசிக்குச் செல்லுஞ் சமயம்.

மாதம் - கடைதல், கொல்லல், சந்தோஷம், பாதை, பெருமை, மாசம்.

மாதிரி - காளி.

மாதர் - அழகு ஆசை, இசைச்சொல், மகளிர், தலைவியர்.

மாதர்குணச்சலம் - கெந்தகம்.

மாதலி - இந்திரன்சாரதி.

மாதுதவம் - இனிமை, கள், தவம் வசந்தகாலம், வைகாசிமாதம்.

மாதவர் - முனிவர்.

மாதவன் - திருமால், வசந்தன்.

மாதவி - அருச்சுனன்மனைவி, ஓர்கொடி, கண்ணன் மனைவி, கள்ளிளையட்டவெல்லம், குருக்கத்தி, கோவலன் கூத்தி, சீனி, துளசி, துர்க்கை, தூதிகை, நாடகக்கணிகை, வசந்தகால மல்லிகை.

மாதவிகொழுநன் - அருச்சுனன்.

மாதளை - ஓர்மரம்.

மாதளைச்சிலை - மாந்தளிர்க்கல்.

மாதனம் - கராம்பு.

மாதா - தாய், பார்வதி.

மாதாந்தம் - மாதவறுதி.

மாதி - வட்டமாயோடல்.

மாதிகம் - குதிரைமார்க்கம்.

மாதிசை - மகாதிசை.

மாதிபொதி - நெருஞ்சில்.

மாதிரம் - ஆகாயம், திசை, பூமி, மண்டலம், மலை, யானை.

மாதிரி - ஒப்பு, சாயல், விதம்.

மாதிரு - ஆகாயம், இரேவதி, இலக்குமி, பசு, பூமி, மாதா.

மாதிருகை - அரிவரி, கைத்தாய், தேவி, மாதா.

மாது - அசைச்சொல், பெண், விருப்பம்.

மாதுபாகம் - புஷ்பராகம்.

மாதுரம் - மல்லிகை.

மாதுரி - சாராயம்.

மாதுரியம் - மிகுமதுரம்.

மாதுரு - தாய்.

மாதுலுங்கம் - மாதுளை.

மாதுலன் - மாமன்.

மாதேவன் - சிவன்.

மாதொருபாகன் - சிவன்.

மாதோ - அசைச்சொல்.

மாத்தகை - மிகுதகை.

மாத்திரம் - அளவு, தனிமை.

மாத்திரை - அளவு, அற்பம், காதணி, காலநுட்பம், காலவிரைவு, குளிகை, குற்றுயிரெழுத்து, பாக்கியம், மட்டு, மிதம், வரை.

மாத்திரைக்கோல் - அளவைக்கோல்.

மாத்வீகம் - இலப்பைப்பூச்சாராயம்.

மாநவன் - பாலகன், மனிதன்.

மாந்தப்புல் - ஓர்புல்.

மாந்தர் - ஆண்மக்கள், மனிதர்.

மாந்தல் - அவிந்தடங்கல், உள்ளழிதல், குடித்தல், புசித்தல்.

மாந்தளிர்ச்சிலை - கற்காவி.

மாந்தளிர்ப்பச்சை - கொக்குக்கல்.

மாந்தாதுரு - ஓரரசன்.

மாந்தி - மாமரம்.

மாந்தியம் - மந்தமானது.

மாபலன் - காற்று.

மாபலி - மாவலி.

மாபனம் - அளவு, தராசு.

மாபுலி - சிங்கம்.

மாபூதி - சத்தநரகிலொன்று.

மாப்பு - மிகுதி, மீன்றிரள்.

மாமகன் - அம்மான், பிசுனன், மன்மதன்.

மாமணி - மாணிக்கம்.

மாமாத்திரா - வைத்தியர்.

மாமாயை - மகாமாயை.

மாமிசச்சிலை - கார்நிறக்கல்.

மாமிசபேதி - ஓர்பூடு.

மாமுனி - அருகன், நாயுருவி, வசிட்டன்.

மாமூலனார் - ஓர் சங்கப்புலவர்.

மாமேரு - மகாமேரு.

மாமை - அழகு, நிறம்.

மாயம்-அழகு, கறுப்பு, தந்திரம், தீமை, பொய், மாயை, வஞ்சகம்.

மாயயாக்கை - மாயாதேகம்.

மாயரூபம் - மெய்போலத் தோற்றும்பொய்யுருவம்.

மாயவள் - இடாகினி, காளியேவல் செய்பவள், தெய்வப்பெண்.

மாயவன் - திருமால்.

மாயவன்மேனி - நாகப்பச்சை.

மாயவித்தை - தந்திரத்தொழில்.

மாயன் - கரியவன், திருமால்.

மாயாகாரியம் - மாயையிற்றோன்றுவது.

மாயாசக்தி-பஞ்சசக்தியிலொன்று.

மாயாசுதன் - புத்தன்.

மாயாதம் - முதலை.

மாயாதாரகம் - மாயையை முதற்காரணமாகவுடையது.

மாயாதாரணை - நவதாரணையிலொன்று.

மாயாதேவி - புத்தன்றாய்.

மாயாதேவிசுதன் - புத்தன்.

மாயாபஞ்சகம் - மாயையைந்து; அவை—தமம், மாயை, மோகம், அவித்தை, அநிருதம்.

மாயாபாசம் - பந்தமாயை.

மாயாபுரி - சத்தபுரியிலொன்று, பித்தளை, மாயாசரீரம்.

மாயாமலம் - மும்மலத்தொன்று.

மாயாவாதம் - ஓர் சமயம்.

மாயாவி - மாயை செய்வோன்.

மாயாவிநோதம் - மாயை விளையாட்டு.

மாயு - பித்தம்.

மாயூரம் - ஓரூர், மயில்.

மாயை - அறிவு, இந்திரசால முதலியன, இரக்கம், இரதிதேவி, இலக்குமி, காளி, சத்தபுரியிலொன்று, பொய், மாயம், மாயாசக்தி, வஞ்சகம், வித்தியாதத்துவ மேழிலொன்று, அது—மறைப்பு.

மாயோபாதானம் - மாயையையுபாதானமாகவுடையது.

மாயோனாள் - திருவோணம்.

மாயோன் - திருமால்.

மாயோன்மருகன் - குமரன்.

மாய் - ஆச்சா.

மாய்ச்சல் - சாவருத்தம்.

மாய்ச்சி - பாம்புகொல்லி.

மாய்தல் - கெடுதல், சாதல், மடிதல், மலைதல்.

மாய்த்தல் - கெடுத்தல், கொல்லல், மடித்தல், மறைத்தல், வருத்தல்.

மாய்மாலம்-எத்து, பே, மாசாலம்.

மாய்வு - சாவு, மறைவு.

மாரகம் - மரணம், மரணகாரணம், மாரி.

மாரகாகனம் - குயில்.

மாரசயன் - புத்தன்.

மாரணம் - கொலை, மந்திரத்தாற் கொல்லல்.

மாரணவித்தை - சூனியவித்தை.

மாரதம் - நால்வகைரதத்தி னொன்று.

மாரதன் - மகாரதன்.

மாரம் - கோடகசாலை.

மாரன் - மன்மதன்.

மாராயம் - உவகை, வாழ்த்து.

மாரி - ஒட்டுரோகம், கள், சாவு, நீர், பற்பலரிறக்கு நோய், மழை, மேகம், வடுகி.

மாரிநாள் - உத்திரநாள்.

மாரீசம் - அட்டாதச வுபபுராணத்தொன்று.

மாரீசன் - இராவணன் மாமன்.

மாருண்டம் - பாதை, பாம்பு முட்டை.

மாருதம் - காற்று, பிராணவாயு.

மாருதநாதம் - வங்கமணல்.

மாருதவன்னக்கல் - காகச்சிலை.

மாருதவீமன்- ஏகம்பபாஷாணம்.

மாருதி - அனுமான், வீமன்.

மார் - உயர்திணைப் பன்மைப் படர்க்கை விகுதி.

மார்கழி - ஓர்மாதம், மிருகசீருடம்.

மார்க்கசிரம் - மார்கழிமாதம்.

மார்க்கணம் - அம்பு, தேடல்.

மார்க்கணர் - இரப்போர்.

மார்க்கண்டேயம் - அட்டாதசவுபபுராணத்தொன்று.

மார்க்கண்டேயர் - ஓர் முனிவர்.

மார்க்கம் - ஆராய்வு, ஓர்கூத்து, கையாந்தகரை, தாளப்பிரமாணம் பத்திெனொன்று, தெரு, நெடுந்தெரு, மார்கழி மாதம், வழி.

மார்ச்சனம் - துடைப்பு.

மார்ச்சனி - விளக்குமாறு.

மாரச்சனை - முழுவொலி.

மார்ச்சாரகம் - மயில்.

மார்ச்சாரம் - பூனை.

மார்ச்சாலநியாயம் - ஓர் நியாயம்.

மார்ச்சாலம்-கோமேதகம், பூனை.

மார்த்தாண்டம் - அட்டாதசவுப புராணத்தொன்று.

மார்த்தாண்டன் - சூரியன்.

மார்பகம் - நெஞ்சு.

மார்பு - அகலம், நெஞ்சத்தால் வருபெயர்.

மாலதி - சிறுசண்பகம், மல்லிகை, முல்லை.

மாலம் - குங்குமமரம், பேய்.

மாலயற்கரியான் - சிவன்.

மாலர் - கவசம், புலையர், வேடர்.

மாலவன் - புதன்.

மாலி - ஓரரக்கன், மாலைப்பணிந்தவன்.

மாலிகை - நிரல்படநிற்குங் குழூஉ, மாலை.

மாலிமி - இளமைப்பருவத்திற் செய் நட்பு.

மாலியவான் - ஓரரக்கன்.

மாலினி - காளி.

மாலுகம் - வேம்பு.

மாலுக்கிளையான் - துர்க்கை.

மாலுதானம் - கண்குத்திப்பாம்பு.

மாலுந்திவந்தோன் - பிரமன்.

மாலுமி - மீகாமன்.

மாலுறல் - மயங்கல், மாறுகொள நினைத்தல்.

மாலூரம் - வில்வமரம்.

மாலூர்தி - கருடன்.

மாலை-அந்திப்பொழுது, அரசன் மனை, இயல்பு, இரா, ஒழுங்கு, சொல், பூ, பொன், மணி இவற்றினொன்றால் தொடுத்த தொடை, நோய்.

மால் - அருகன், இந்திரன், கருமை, காற்று, சோழன், திருமால், புதன், பெருமை, மயக்கம், மேகம், வேட்கை.

மால்கொடை, மால்முருகு - துளசி.

மால்பு - கண்ணேணி.

மாவகம் - இலுப்பை, காஞ்சிரை.

மாவலர்-குதிரைப்பாகர், யானைப் பாகர்.

மாவலி - ஓர் சக்கரவர்த்தி.

மாவிரதம் - மகாவிரதம்.

மாவிரதியர் - சிவசமயத்தோர் வகையோர்.

மாவிருக்கம் - சதுரக்கள்ளி.

மாவிலந்தம் விடத்தேர்.

மாவிளம் - வில்வமரம்.

மாவீரன் - அதிவீரன்.

மாவுரம் - வலி.

மாவெனல் - அழைத்தல்.

மாழாத்தல் - மயக்கம்.

மாழை - அழகு, அறிவின்மை, உலோகக்கட்டி, ஓலை, திரட்சி, புளிமா, பொன், மாமரம்.

மாழ்கல் - சாதல், மயக்கம், மேவல்.

மாழ்கு - சா, மாழ்கென்னேவல், மிருகசிரிடம்.

மாழ்தல் - சோம்பல், மயக்கம்.

மாள் - முன்னிலையசைச்சொல்.

மாளல்
மாள்தல் } சாதல்.

மாளவகௌளம் - ஓரிசை.

மாளவம் - ஓர்தேசம், ஓரிராகம்.

மாளவி - ஓரிராகம்.

மாளிகை - அரசன்மனே, வீடு.

மாளுதல் - இறத்தல்.

மாறல் - ஆடல், தவிர்தல், விடுதல், வேறுபடல், பெருக்கல்.

மாறன் - பாண்டியன்.

மாறு - கைம்மாறு, துடைப்பம்.

மாறுகம் - சீலே.

மாறுகொளக்கூறல் - நூற்குற்றம் பத்திளென்று.

மாறுகோள் - ஒவ்வாமை, விரோதம்.

மாறுதல் - மயங்குதல்.

மாறுபடுபுகழ்நிலே - ஓரலங்காரம்.

மாற்றம் - சொல், பகை, வேற்றுமை.

மாற்றலர் - பகைவர்.

மாற்றல் - ஒன்று கொடுத்து ஒன்று வாங்கல், கொடாமை, ஒன்றை யொன்ருெருக்கல்.

மாற்றவள் - சக்களத்தி.

மாற்றார் - பகைவர்.

மான-உவமைச்சொல், முன்னிலேயசைச்சொல், விளேயெச்சம்.

மானசம் - கருத்து, மனது, மானதவாவி.

மானசாரம் - ஓர் சிற்பநூல்.

மானதக்காட்சி - பொறிவழியிற் கண்ட வுருவை மனத்தாற் குறித்துணர்தல்.

மானததீட்சை - அகத்தீட்சை.

மானதபூசை - மனோபூசை.

மானதப்பிரத்தியட்சம் - மானதக்காட்சி.

மானபோதம் - ஓர் சிற்பநூல்.

மானமா - கவரிமா.

மானம் - அபிமானம், அளவு, உவமை, குற்றம், பெருமை, வலி, வெட்கம், காலகணிதம், ஸௌரமானம், சாந்திரமானம் முதலியன.

மானல்-இலச்சை, ஐயம், ஒத்தல், மயக்கம்.

மானவம் - ஓர்தருமநூல், ஒருபபுராணம்.

மானவர் - ஆண்மக்கள், படைவீரர், மனிதர், மானமுடையோர்.

மானவு - தெளிவு.

மானுர் - பகைவர், பெண்கள்.

மானி - மானமுடையோன்.

மானிகை - ஓர் முகத்தலளவு, சாராயம்.

மானிடத்தன்மன் - குபேரன்.

மானிடமேந்தி } சிவன்.
மானேந்தி

மானிடர் } மனிதர்
மானுடர்

மானிதம் - கனம்.

மானியம்-சம்மானம், அரசர்கள் சம்மானத்தால் விட்டநிலம்.

மானினி - பெண்.

மானுடயாகம் - பஞ்சமகாயக்கியத்தொன்று.

மானேந்தி - சந்திரன்.

மானேறு - உத்திரநாள், கலைமான்.

மான் - உருவம், மகரமீன், மகரராசி, மான், விலங்கின்பொது.

மான்குளம்பு - அடம்பு.

மான்செவி - இலக்கள்ளி.

மான்மகன் - பிரமன், மன்மதன்.

மான்மதம் - கஸ்தூரி.

மான்றலை - மிருகசீரிடம்.

மான்றல் - மயக்கம்.

## மி

மி - ஓரெழுத்து.

மிகப்படல் - மிகுதல்.

மிகல் - அதிகரித்தல், மிகுதி.

மிகவல்லோர் - அறிஞர்.

மிகன்மக்கள் - பெரியோர்.

மிகுகொடையாளன் - கன்னன்.

மிகுண்டம் - சாரணை.

மிகுதி - அதிகம், திரட்சி, பூரிப்பு, பொலிவு.

மிகுத்தியல் - வில்வம்.

மிகுர்தவனம் - தண்ணீர்விட்டான்.

மிகுப்பலத்தம் - காத்தோட்டி.

மிகை - குற்றம் கேடு, துன்பம், மிகுதி, வருத்தம்.

மிகைப்படக்கூறல் - நூற்குற்றம் பத்தினொன்று.

மிக்கவை - ஊன், சோறு, நியாயமல்லவை, நிறைதல்.

மிக்கிளமை - கட்டிளமை.

மிக்கோர் - அறிஞர்.

மிக்கோன் - உயர்ந்தவன்.

மிசிரம் - கலப்பு.

மிசை-உணர்வு, உயர்ச்சி, சோறு, தரித்திரம், மிசையென்னேவல், மேடு, மேல்.

மிசைதல் - அனுபவித்தல், உண்டல்.

மிசைத்திரள் - கரடு.

மிசைவடம் - வீரதண்டை.

மிச்சம் - சேடம், மிகுதி.

மிச்சில் - எச்சில், ஒழிபொருள்.

மிச்சை-அஞ்ஞானம், தரித்திரம்.

மிஞிறு - வண்டு.

மிஞ்சல் - மிகுதல்.

மிடல் - வலி.

மிடறு - கண்டம், கழுத்து, கீழ்வாய், தொண்டை.

மிடா - பானை, மிடா.

மிடி-மிடியென்னேவல், வறுமை.

மிடித்தல் - வறுமையுறல்.

மிடிமை - வறுமை.

மிடியன் - வறியன்.

மிடை - தூறு, மிடையென்னேவல்.

மிடைதல் - நெருங்கல்.

மிண்டன் - திண்ணியன்.

மிண்டு - மதத்தாற் பிழைத்தல், மிண்டென்னேவல்.

மிண்டுதல் - நெருங்கல்.

மிதத்தல் - மிதப்பு.

மிதம் அளவு.

மிதலை - கொப்பூழ்.

மிதவை - சோறு, தெப்பம்.

மிதி - மிதித்தல், மிதியென்னேவல்.

மிதித்தல் - காலான்மிதித்தல், குதித்தல்.

மிதியடி - பாதக்குறடு.

மிதிலை - சனகநகர்.

மிதுனம் - இரட்டை, புணர்ச்சி, மிதுன விராசி.

மித்தியம் } பொய்.
மித்திமை }

மித்தியாவாசகம் - பொய்மொழி.

மித்திரநாள் - அனுடநாள்.

மித்திரபேதம் - நட்புப்பிரித்தல்.

மித்திரம் - நட்பு.

மித்திரர் - சினேகிதர்.

மித்திரன்-சினேகிதன், சூரியன்.

மித்தை - பொய்.

மியா - முன்னிலையசைச்சொல்.

மிரதம் - பாம்பு.

மிரிகை - பிருடை.

மிரிஞ்சி - செம்முருங்கை.

மிரியல் - மிளகு.

மிருகக்ஷீரம் - மான்பால்.

மிருகசயிடகம் - எருக்கு.

மிருகசிரம் - ஓர்நாள், சுபலட்சண முப்பத்து மூன்றினொன்று.

மிருகசீரிடம் - ஓர் நாள்.

மிருகசீவனன் - வேடன்.

மிருகசைடகம் - ஆண்பூனை.

மிருகண்டன் - ஓர் இருடி.

மிருகதஞ்சகன் - நாய்.

மிருகதந்தம் - பன்றிக்கொம்பு.

மிருகதரன் - சந்திரன்.

மிருகநாபி - கஸ்தூரிப்பூனை, கஸ்தூரி.

மிருகநாபிசம் - கஸ்தூரி.

மிருகபதி - சிங்கம்.

மிருகபந்தினி - மான்வலை.

மிருகபாலிகை - கஸ்தூரிப்பூனை.

மிருகமதம் - கஸ்தூரி.

மிருகம் - மான், விலங்கின்பொது.

மிருகாசன் - சிங்கம்.

மிருகவாகனன் - வாயு.
மிருகவ்வியம் - வேட்டை.
மிருகாங்கம் - காற்று.
மிருகாங்கன் - சந்திரன், சிவன்.
மிருகாதனம் - ஓர்வகைப்புலி, சிவிங்கி.
மிருகாதி - புலி.
மிருகாயினம் - மான்றோல்.
மிருகாரசிங்கி - ஓர் பாஷாணம்.
மிருகாரி - சிங்கம், நாய், புலி.
மிருகேந்திரன் - மிருகபதி.
மிருசம் - காட்சி.
மிருடங்கணம் - பிள்ளை.
மிருடன் - சிவன்.
மிருடாலகம் - மாமரம்.
மிரோடதயம் - பொய்.
மிருணாளம் - தாமரைக்கொடி.
மிருதங்கம்-ஓர்வாத்தியம், முழவு.
மிருதசஞ்சீவனி } இறந்தவர்
மிருதசஞ்சீவி } களை எழுப்பு மருந்து.
மிருதபாஷாணம் - ஓர் பாஷாணம்.
மிருதம் - போர், மிருதகம், நீர் வள்ளி.
மிருதாரசிங்கி - ஓர்வகைப்பாஷாணம்.
மிருதி - தருமநூல், மரணம்.
மிருது - சாந்தம், மென்மை.
மிருதுபாடிதம் - மென்மொழி.
மிருதுவாதம் - சிறுதென்றல்.
மிருதுன்னகம் - பொன்.
மிருதூற்பலம் - நீலோற்பலம்.
மிருதை - பூமி.
மிருத்தஞ்சயன் - சிவன்.
மிருத்திகை - மண்.
மிருத்தியு - மரணம், யமன்.
மிருத்து - மண், மரணம்.
மிருத்துசாந்தி - அவமிருத்தை நீக்குஞ்சாந்தி.
மிருத்துசூதகம் - மரணசூதகம்.
மிருத்துயுபஞ்சகம் } மரணபயம்.
மிருத்துபயம் }
மிருத்துசம் - மூங்கில்.
மிலாங்கலி - செங்காந்தள்.
மிலேச்சகந்தம்-வெள்வெங்காயம்
மிலேச்சம் - சரச்சுவதியாற்றின் வடதேசம்.
மிலேச்சாசம் - கோதுமை.
மிலைச்சல் - அணிதல்.
மிலைதல் - சூடுதல்.
மிழலை - ஒரு சிவதலம், மழலைச் சொல்.
மிழற்றல் - சொல்லல், நிரம்பா மென்சொல், பேசலாவெழு மொலி, பாடுதல்.
மிளகாய் - மிளகுகாய்.
மிளகு - ஓர்சரக்கு.
மிளகுசம்பா - ஓர்வகைநெல்.
மிளகுசாறு - மிளகுதண்ணீர்.

மிளகுதூள் - மிளகுபொடி.

மிளிர் - ஒளி, பெருமை.

மிளிர்தல் - ஒளிசெய்தல், கதிர் வீசுதல், பெருமைப்படல்.

மிளிறு - கரடி.

மிறல் - பெருமை.

மிறை-அச்சம், குற்றம், வருத்தம்.

மிறைக்கவி - சித்திரக்கவி.

மிறைத்தல் - துன்பப்படல்.

மினவு - உபசரிக்க.

மினுக்கம் - ஒளி.

மினுக்கு - விளக்கு, துலக்கு.

மினுக்குப்பசை - செய்வாரிடும் பசையிலொன்று.

மினுக்குமினுக்கென - மினு மினுக்க.

மினுங்கு - பிரகாசி.

மினுங்குதல் - மிளிர்தல்.

மினுமினுக்க - இலங்க.

மின் - ஒளி, பன்மை முன்னிலை ஏவல் வினை முற்று விகுதி, பெண்மகள், மின்னல், மின்னென்னேவல்.

மின்னல் - ஒளிசெய்தல்.

மின்னி - கருங்காக்கணம், நீர்ப் பயறு.

மின்னுதல் - பிரகாசித்தல், மின்னற்காலுதல்.

## மீ

மீ - ஆகாயம், உயர்ச்சி, ஓரெழுத்து, மேல்.

மீகண் - கண்ணினது மேலிடம்.

மீகான் - மீகாமன்.

மீக்குவம் - மருதமரம்.

மீக்குர்தல் - பெருகுதல்.

மீக்கூறுதல் - புகழ்தல், மெச்சல்.

மீக்கூற்று - புகழ்.

மீக்கோள் - ஏறுதல், மேற் போர்வை.

மீச்செலவு - மேற்போதல்.

மீட்சு - மீளுதல்.

மீட்டல் - சுண்டுதல், மீட்டுதல் வீணை வாசித்தல்.

மீட்டும் - திரும்பவும்.

மீதுரை - பலகால் விளம்பல்.

மீதூர்தல் - நெருங்கல்.

மீந்தோல் - மேற்றோல்.

மீமாஞ்சை - ஓர்சமயம், பிரமாணத்தாலுண்மையறிதல், பூர்வ மீமாஞ்சை, உத்திரமீமாஞ்சை.

மீமிசை - மேல், ஒருபொருட் பன்மொழியடுக்கு.

மீளல் - திரும்பல்.

மீளாக்கதி - மோக்கம்.

மீளி - அரசன், திண்ணியன், பாலைநிலத்தலைவன், பெருமை, மேன்மக்கள், வலி.

மீளுதல் - திரும்பிப்போதல்.

மீனகேதனன், மீனக்கொடியோன் - பாண்டியன், மன்மதன்.

மீனஞ்சு - மீன்கொல்லிப்பூடு.

மீனம் - மீனவிராசி, மீன்.

மீனம்பர் - செம்மீன்வயிரம்.

மீனவன் - மீனக்கொடியோர்.

மீனாட்சி - குபேரன் புத்திரி, அங்கயற்கண்ணி.

மீனெறி - மீன்குத்திக்குருவி.

மீனேறு - மகரமீன்.

மீன் - சித்திரைநாள், நெய்தற் பறை, மகரமீன், மச்சம், விண் மீன்.

## மு

மு - ஓரெழுத்து.

முகக்கட்டு - தாடி.

முகக்குறி - முகச்சாடை.

முகக்கோட்டம் - முகப்பொலி வழிவு.

முகடி - மூதேவி.

முகடு - சுவர்ப்புறத்து நீண்ட வுத்திரம், மலையுச்சி.

முகடேந்தல் - மேற்கொள்ளல்.

முகசம் - பல்லு.

முகத்தலளவையாகுபெயர் - அள வுக்குரியபெயரை யளக்குங் கருவிக்கு வழங்குவது.

முகத்தல் - மணத்தல், முகத்த லளவை, மொண்டுகொள்ளல், மொள்ளல்.

முகத்துதி - முகமன்வார்த்தை.

முகத்துவாரம் - கடலுமாறும் பொருந்துமிடம், முகப்பு, வாயில்.

முகநட்பு - பொய் நட்பு.

முகபடாம் - யானையின் முகப் போர்வை.

முகமன் - உபசாரம்.

முகமுகெனல்- ஈரொலிக்குறிப்பு.

முகம் - இடம், தொடக்கம், தோற்றம், முகம், வாயில்.

முகரிமை - பேரறிவு, திவ்விய ஞானம்.

முகரெனல் - ஒலிக்குறிப்பு.

முகவணை - முகவுரை.

முகவை - அகப்பை.

முகவுரை-நூலுக்கு முகம்போலச் சிறந்திருப்பது, முன்னுரைக் கப்படுவது.

முகன் - முகம்.

முகாரி - ஓரிராகம்.

முகில் - மேகம்.

முகிழம் - மலரும் பருவத்தரும்பு.

முகிழிதம் - முகிழம்.

முகிழ் - முகிழம், முகிழெழன்னே வல், கரலட்சணத்திதென்று.

முகிழ்த்தல் - குவிதல்.

முகினி - புளியமரம்.

முகுந்தன் - திருமால்.

முகுரம் - கண்ணடி.

முகுன் - மலரும்பருவத்தரும்பு.

முகூர்த்தம் - ஓர்காலவரையறை, அஃது — இரண்டு நாழிகை கொண்டது.

முகை - கூட்டம், மலரும் பருவத்தரும்பு, மிடா, முகையென்னேவல்.

முகைத்தல் - அரும்புதல்.

முக்கணன் - சிவன், விநாயகன், வீரபத்திரன்.

முக்கணி - காளி, பார்வதி.

முக்கல் - பேசலாவெழுமொலி.

முக்கறட்டை - ஓர் செடி.

முக்கனி - கதலி, பலா, மா இவற்றின் கனி.

முக்காணி-சிற்றிலக்கத்தொன்று.

முக்காணியர் - அந்தணர்களிலோர் பிரிவினர்.

முக்காலம் - இறந்தகாலம், எதிர்காலம், நிகழ்காலம், என மூன்று நேரம்.

முக்குடுமி - சூலம்.

முக்குடை - பொன்மணிமுத்து இவைகளாலாகிய குடை.

முக்குடைச்செல்வன் - அருகன்.

முக்குணம் - மூன்றுகுணம்.

முக்குளம் - பூராடம்.

முக்குளி - கோழி முளையான்.

முக்குற்றங்கடிந்தோன் - கடவுள், புத்தன்.

முக்குற்றம் - காமம், வெகுளி, மயக்கம்.

முக்கூடல் - ஓர்மலை.

முக்கூட்டு - பரணிநாள், அடுப்பு.

முக்கூற்று - ஒருவன், ஒருத்தி, ஒன்று என்கிற மூன்று பால்கள்.

முக்கோல் - திருவோணம், திரிதண்டம்.

முசகம் - எலி.

முசர் - தயிர்.

முசலம்-இருப்புலக்கை,உலக்கை.

முசலி - உடும்பு, ஓணான், தாழை, பலபத்திரன், பல்லி, முதலை.

முசலிகாசனம் முசலிகாதனம் } யோகநிலையிலொன்று.

முசலிகை - முசலி.

முசல் - முயல்.

முசித்தல் - மெலிதல்.

முசிப்பு - மெலிவு.

முசிரம் - வள்ளற்றன்மை.

முசு - ஓர் சாதிக்குரங்கு.

முசுகுந்தன் - ஓர் சக்கரவர்த்தி.

முசுடர் முசுண்டர் } கீழ்மக்கள்.

முசுட்டை - ஓர்கொடி.

முசுண்டி - படைக்கலம்.

முசுப்பதி - பாசறை.

முசுமுசுக்கை - ஓர் செடி.

முச்சகம் - பூமி, அந்தரம், சுவர்க்கம்.

முச்சத்தி - இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி.

முச்சந்தி - முத்தெருக்கூடுமிடம்.
முச்சி-உச்சி, உச்சிக்கொண்டை, மயிர்முடி.
முச்சியர் - உறைகாரர்.
முச்சிரம் - சூலம்.
முச்சில் - சிறுமுறம்.
முச்சீரடி - சிந்தடி.
முச்சுடர் - ஆதித்தன், சந்திரன், அக்கினி.
முச்சுட்டு - அ, இ, உ, என்னும் மூன்று சுட்டிடைச்சொல்.
முச்சொல்லலங்காரம் - ஓரலங் காரம்.
முஞல் - கொசுகு.
முஞ்சல் - சாதல், முற்றும், வியங் கோள்முற்று.
முடக்கம் - முடங்குதல்.
முடக்கு - முடக்கென்னேவல், முடங்கல், விரலணி.
முடங்கல் - ஓலை, தாழை, நோய், மடங்கல், மூங்கில்.
முடங்கு - நோய், முடங்கென் னேவல்.
முடங்குளை - சிங்கம், குதிரை யின் பிடரிமயிர்.
முடத்தெங்கு- முடங்கியதெங்கு.
முடமுடெனல் - அனுகரண வோசை.
முடலை - உண்டை, நாற்றம், பெருமை, வலி.
முடவன் - அருணன், சனி, நொண்டி முடவன்.
முடி - கிரீடம், குடுமி, தலை, துழாய், நாற்றுமுடி, மயிர்முடி, முடியென்னேவல், முடிவு.
முடிதல் - கடை, சாதல், முடிச்சு முடிதல்.
முடிதும்பை - ஓர்பூடு.
முடித்தல் - முற்றுவித்தல்.
முடித்துக்காட்டல் - முப்பத்தி ரண்டு உத்தியினொன்று.
முடிந்தது முடித்தல் - சொல்லி முடிந்ததைத்தொகுத்து முடித் தல்,
முடிபு - சொல் பொருள்முடிவு.
முடியல் - எல்லாம்.
முடிவு - கடை.
முடிவிடங்கூறல் - தான் சொல் லும் இலக்கணத்திற்கு இலக் கியந்தோன்றும் இடத்தைச் சொல்லுதல்.
முடுகல் - எதிர்த்தல், சீக்கிரம், மொய்த்தல், வலி.
முடுகியல் - வண்ணம்.
முடுகு-அராகம், கடமைப்பெண், முடுகென்னேவல்.
முடுகுவெண்பா - ஓர் வகை வெண்பா.
முடுக்கர் - மலைக்குகை.
முடுக்கல் - ஓட்டல், மொய்த்தல்.
முடுவல் - செந்நாய், நாய், பெண் ணாய்.

முடிவெற்படையோன் - வயிரவன்.

முடை - ஓலைக்குடை, கந்தம், தீயவாசனை, நாற்றம், புலால், முடையென்னேவல்.

முடைச்சேரி - முல்லை நிலத்தூர்.

முடைதல் - இளைத்தல், நிணத்தல், முடைதல்.

முட்கரம் - ஒட்டாரம்.

முட்டம் - ஓரூர்.

முட்டி - எட்டிமரம், கைப்பிடி, பிச்சை, கலைக்கியானம், காலட்சணமிருபத்து மூன்றி னொன்று.

முட்டிகை - தட்டார் குறடு.

முட்டு - கடிவாளம், குறைவு, முட்டென்னேவல், முட்டுகை, அடைப்பு.

முட்டுதல் - எதிர்த்தல், குறைவுறல், தாக்குதல்.

முட்டுப்பாடு - குறைபாடு, தீமை.

முட்டை - அண்டம், தவிடு.

முட்டைப்பாசி - ஓர் பாசி.

முட்பன்றி - முள்ளம்பன்றி.

முணங்கல் - அடங்கல்.

முணங்கு - அடக்கம்.

முண்டகம் - ஒருபகிடதம், கள், தாமரை, தாழை, நெற்றி, முட்செடி, முள்ளிச்செடி.

முண்டகன் - பிரமன்.

முண்டகாசனை - இலக்குமி.

முண்டம் - உடற்குறை, தலை, திரட்சி, மொட்டைத்தலை, நெற்றி, நிர்வாண சரீரம்.

முண்டணம் - மழித்தல்.

முண்டன் - நாவிதன்.

முண்டி - நாவிதன், முண்டியென்னேவல், மொட்டைத்தலையன்,

முண்டிதம் - மொட்டை.

முண்டித்தல் - மழித்தல்.

முண்டை - விதவை.

முண்மா - முட்பன்றி.

முதம் - உவகை.

முதல - முதற்று.

முதலல் - முதலாதல்.

முதலி - முதல்வல்.

முதலுதல் - முதலல்.

முதலெழுஞ்சனி - மகத்துச்சனி.

முதலெழுத்து - சார்பெழுத்துக்குக்காரணமான தலைமையான வெழுத்து.

முதலை - நீர்வாழ் முதலை.

முதலோன் - கடவுள்.

முதல் - ஆதி, எழனுருபு, முதலென்னேவல்.

முதல்வர் - வானோர்.

முதல்வள்ளல் - குறிப்பறிந்தீவோன்.

முதல்வன் - அரசன், அரன், அருகன், கடவுள்.

முதல்வி - தலைவி.

முதல்வினை-கர்த்தாவின்றொழில்,

முதல்வேதம் - இருக்கு.

முதற்கண் - முதலிடம்.

முதற்கருவி - செயப்படுபொருளோடொற்றுமையுடையது.

முதற்காரணம் - ஆதிகாரணம்.

முதற்குறிப்பு - ஒருபாட்டிலே முதல் நிற்குஞ் சொல்லை மாத்திரம் குறித்ததும், ஒரு சொல்லில் முதல் நிற்கும் எழுத்தை மாத்திரங் குறித்ததும்.

முதற்பா - வெண்பா.

முதற்பெயர் - சினைப்பெயரல்லாதது.

முதற்பொருள் - ஆதிகாரணப்பொருள், கடவுள்.

முதனுவிளிம்பு- அடிநாவின்ஓரம்.

முதனுள் - அசுவினி நாள்.

முதனிலை - எழுத்துக்கள் மொழிக்கு முன்னிற்கும் இலக்கணம், பகுதி.

முதனிலைத்தீவகம், முதனிலைவிளக்கு } தீபகாலங்காரத்தி ஞென்று.

முதனிலைத்தொழிற்பெயர் - பகுதிப்பொருண்மாத்திரமாய் நிற்கும் வினைச்சொல்.

முதனூல் - ஆதிநூல், முதல்வன் வாக்கு.

முதன்மாணுக்கர்-தலைமாணுக்கர்.

முதன்மை - தலைமை.

முதிதம் - உவகை.

முதியர் - மூத்தோர், பெரியோர், கற்றோர்.

முதிரம் - மேகம்.

முதிரை - அவரை, காராமணி, துவரை யிவைமுதலியன, ஓர் மரம்.

முதிர்ச்சி - முதிர்வு.

முதிர்தல், முதிர்ந்திடல் } காய்தல், வறத்தல், முற்றல்.

முதிர்ப்பு - கலக்கம்.

முதிர்வேனில் - ஆனியாடியின் பருவம்.

முது - பழமை.

முதுகாஞ்சி - ஓர் பிரபந்தம்.

முதுகாடு - பிறங்கியல், சுடுகாடு.

முதுகு - பின்புறம்.

முதுகுன்று - விருத்தாசலம்.

முதுக்குறைவு - பேரறிவு, ஞானவுணர்ச்சி, பெண்புத்தியறிகை.

முதுசொல் - பழஞ்சொல்.

முதுநிலம் - களர், பெரும்பாழ் நிலம்.

முதுமகன் - சனி.

முதுமை - பழமை, பழமொழி, மூப்பு.

முதுமொழி - முதுசொல்.

முதுவர் - புலவர், மந்திரிகள், மூதுணர்ந்தோர், மூத்தோர்.

முதை - காடுவெட்டிச்சுட்ட கொல்லை.

முதைப்புனம் - பழங்கொல்லை.

முதையல் - முதுகாடு.

முத்தகம் - சுருக்குவாளிமரம், தனித்தனியே முற்றுப்பெருஞ் செய்யுள்.

முத்தக்காசு - கோரைக்கிழங்கு.

முத்தமாடல் } முத்தமிடல்.
முத்தாடல் }

முத்தகுதி-மூன்றுதகுதி வழக்கு.

முத்தமிழுரியோன்- அகத்தியன், வயிரவன்.

முத்தமிழ்-இயல், இசை, நாடகம்.

முத்தம் - உதடு, பிரியம், மருத நிலம், முத்து, முத்தாதனம்.

முத்தரையர் - செல்வர்.

முத்தர் - திடர், பக்குவர்.

முத்தலை - சூலம்.

முத்தலைவேலோன் - வயிரவன்.

முத்தன் - அரசன், அருகன், புத்தன், வயிரவன், முத்தி பெற்றோன்.

முத்தாகலாபம் - முத்தாரம்.

முத்தாகாரம் - முத்துச்சிப்பி.

முத்தாதனம் - யோகனிலையி னொன்று.

முத்தாபலம் - இசங்கஞ்செடி, முத்து.

முத்தாவலி } முத்துமாலை,
முத்தாவளி } ஓர் தருக்கநூல்.

முத்தி - மோட்சம்.

முத்திதானம் - மோட்சதலம்.

முத்திதிசை - முத்தி.

முத்திபதம்-மோட்சபதம், முத்தி வழி.

முத்திரிகை - எழுத்துப்பரித்த மோதிரம்.

முத்திரை - அடையாளம், எழுத்துப்பொறித்தமோதிர முதலியன, ஒன்றின் மேற்பதிக்கு முத்திரை.

முத்திவிக்கினம் - முத்திக்கிடையூறு, அறியாமை, ஐயம், திரிபு.

முத்து - முத்தம்.

முத்தை - கவளம், திரட்சி, மிக வுந்தெரிவிலாள்.

முத்தொழிலோர் - வைசியர் பொது.

முத்தொழிற்பகவன் - கடவுள்.

முந்தல் - முற்படல்.

முந்தன் - கடவுள்.

முந்திரி - ஓர் சிற்றிலக்கம்.

முந்து-முந்தென்னேவல், வெண்ணுரை.

முந்நூழ் - மூங்கில், பழவினை.

முந்தை - பழமை.

முந்தையோர் - முன்னோர்.

முந்நீர் - கடல்.

முந்நூல் - முதனூல், வழிநூல், சார்புநூல்.

முப்பழம் - முக்கனி, அஃது—வாழை பலா, மா.

முப்பகை - காமம், மயக்கம் வெகுளி.

முப்பால் - முப்பகுதி, அஃது—ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால், திருக்குறள், மூன்று விதப்பால், அது—காய்ச்சுப் பால், திரட்டுப்பால், குழம்புப் பால்.

முப்பலை - திரிபலை.

முப்பான் - முப்பது.

முப்பானேழ் - முப்பத்தேழு.

முப்பிணி - வாதம், பித்தம், சிலேஷ்மம்.

முப்புடைக்காய் - தேங்காய்.

முப்புரம் - திரிபுரம்.

முப்புரிநூலோர் - அந்தணர்.

முயப்புள்ளி - ஆய்தவெழுத்து.

முப்பூரம் - பூரம், பூராடம், பூரட்டாதி.

முப்பொறி - மனம், வாக்கு, காயம்.

முமுட்சு - துறவு.

மும்மடியாகுபெயர் - ஒன்றற்கிரு மடியாகுபெயரால் நிற்பது அதனாலாய மற்றொன்றற்கும் பெயராய் வருவது.

மும்மணிக்கோவை-ஓர்பிரபந்தம்

மும்மணிமாலை - ஓர் பிரபந்தம், (வெண்பா, கலித்துறை, அகவல்)

மும்மலம் - ஆணவம், கார்மம், மாயை, முக்காலம், முப்பிறப்பு, மூன்றுயிருக்குந்தன்மை, மூன்று.

மும்மீன் மிருகசீரிடம்.

மும்மை - முப்பிறப்பு, மூன்றுயிருக்குந்தன்மை, மூன்று.

மும்மொழி - மெய்கூறல், புகழ் கூறல், பழிகூறல்.

முயக்கம் }
முயக்கு } முயங்கல்.

முயங்கல் - தழுவல்.

முயலல் - முயற்சி.

முயலின்கூடு - சந்திரன்.

முயலுதல் - முயலல்.

முயல்-போர், முயலென்னேவல், முயல்.

முயற்சி - ஊக்கம், நால்வகைத் தொழில்.

முயற்செவிக்கள்ளி - ஓர் கள்ளி.

முயற்றிசை - வடகீழ்த்திசை.

முயால் - முசல்.

முயிறு - எறும்பின் விசேடம், மந்தி.

முரசக்கொடியோன் - தருமன்.

முரசபலம் - பலா.

முரசம் - பறை.

முரசு - முரசு, வாச்சியப்பொது.

முரசறைதல் - பறைசாற்றல்.

முரசு - உத்திரட்டாதிநாள், முரசம், போர்.

முரட்கை - கலிப்பா.

முரண - மாற.

முரணுதல் - திரிக்குதல், மாறுதல்.

முரணல்-மாறுபடல், பொருதல்.

முரண் - ஓர்தொடை, பகை, போர், முரணென்னேவல், வலி, விகாரப்படுதல்.

முரண்கொள்சிந்தை - மாறுதலுள்ளமனம்.

முரண்மொழி - எதிர்மொழி.

முரதம் - பாஞ்சசன்னியம்.

முரம்பு - உப்பளம், கல்லின் மேடு, கழி, பரல்படுத்துயர் நிலம்.

முரலல் - ஒலித்தல், பேசலா லெழுமொலி.

முரலி - முரளி.

முரல்வு - உள்ளோசை.

முரளி - மூக்கால் வாசிக்கும் சிறுகுழல், வேய்ங்குழல்.

முரள் - இப்பி.

முரற்றல் - ஒலித்தல்.

முரன் - ஓரரக்கன்.

முராரி - திருமால்.

முரிதல் - ஒடிதல், கெடுதல், பறிதல்.

முரித்தல் - முறித்தல்.

முரிவு - முறிவு.

முருகன் - இளையோன், குமரன், வெறியாட்டாளன்.

முருகியம் - குறிஞ்சிநிலப்பறை.

முருகு - அகில், அழகு, இளமை, எழுச்சி, கள், திருவிழா, முருகன், வாசனை.

முருகேசன் - சுப்பிரமணியன்.

முருகை - ஓர்வகைக்கல்.

முருக்க - அழிக்க, உருக்க, கொல்ல.

முருக்கு - கிஞ்சுகம், எலுமிச்சை, கொலை, காட்டுமுருக்கு, கலியாணமுருக்கு, நரிமுருக்கு.

முருக்குதல் - கெடுத்தல்.

முருங்கல் - அழிதல்.

முருங்கு - அழிய.

முருங்கை - ஓர் மரம்.

முருடர் - வேடர்.

முருடு - ஓர் வாச்சியம், பறைப்பொது, பெருங்குறடு, வெட்டியமரத்தினடி.

முருந்து - இறகினடிக்குருத்து, கோமளாஸ்தி, வெண்மை, வெண்குருத்து.

முருமுரான் - சூரியன் குதிரையி லொன்று.

முலமுலெனல் - ஈரடிக்கொலிக் குறிப்பு.

முலாம் - பொன்வெள்ளிப்பூச்சு.

முலை-கொங்கை, விலங்கின்மடி.

முலைகுடி - முலைகுடிப்பிள்ளை.

முலைக்கச்சு - முலைக்கட்டு.

முலைக்கண் - சூசுகம்.

முலைக்காம்பு - முலைமுகம்.

முலைச்சிலந்தி - மார்பிலெழுங் கட்டி.

முலைத்தாய் - பால்கொடுப்பவள்.

முலைப்பாலெண்ணெய் - ஆமணக் கெண்ணையோடு கலந்தமுலைப் பால்.

முலைமறந்தபிள்ளை - பால் மறந்த பிள்ளை.

முலைமார்பு - மார்பு.

முலையுண்ண - முலைகுடிக்க.

முல்லை - இசை, ஓர்கொடி, ஓர்பூ, ஐவகைத் திணையில் ஒன்று, காடுங் காடுசார்ந்த இடமும், (இது இடைநிலம்) கற்பு, மன் மதன் கணையிலொன்று, வெற்றி, வனமல்லிகை.

முல்லைக்கருப்பொருள் - முல்லைத் தலைவன், முல்லைத்தெய்வம், முல்லைத்தொழில், முல்லைநீர், முல்லைப்பண், முல்லைப்பறை, முல்லைப்பூ, முல்லை மரம், முல்லைமாக்கள், முல்லையாழ், முல்லை, முல்லையுணவு, முல்லை யூர், முல்லை விலங்கு.

முல்லைக்காலம் - ஓர் காலம்.

முல்லைக்கான்யாறு - முல்லைநிலத் தெழும் ஆறு.

முல்லைமுதற்பொருள் - கார், புறவம், புறவுசார்ந்தவிடமும், மாலையென்னும் பெரும் பொழுது சிறுபொழுகளுமாம்.

முல்லையர் - இடையர்.

முல்லையுரிப்பொருள் - அகப் பொருள்.

முழக்கட்டை - நீளங்குறைந்தது.

முழக்கம்-குமுறுகை, ஆரவாரம், போர்ப்பறையினொர்ப்பு, இடி முழக்கம்.

முழக்கு - ஒளி, ஓசை, கொட்டு முழக்கு.

முழக்கோல் - அளவுகோல், ஒரு முழங்கொண்டகோல், தச்சர் வழங்குங்கோல்.

முழங்க - ஒலிக்க, வானங்குமுற.

முழங்கல் - ஒலித்தல்.

முழங்காற்சில் - முழங்காற்சிப்பி.

முழங்காற்படியிட - முழந்தாட் படியிட.

முழங்கை - மணிக்கட்டின்கீழ்.

முழத்தடி - நீளமுள்ளகொம்பு.

முழந்தாட்கச்சு - ஜல்லடம்.

முழந்தாள் - முழந்து.

முழம் - இருசாண்கொண்டது.

முழல் - கழற்சிக்கொடி.

முழவம் - குடமுழா, முரசு.

முழவு, முழா - பறைப்பொது.

முழுகல் - குளித்தல்.

முழுக்கு - முழுகல்.

முழுது - எல்லாம்.

முழுதும் } எல்லாம்.
முழுவதும்

முழுதொருங்குணர்ந்தோன் - அரன், அருகன், கடவுள்.

முழுத்தல் - மூழ்குவித்தல்.

முழுமகன் - அறிவில்லான்.

முழுமதி - பூரணசந்திரன்.

முழுமன் - எல்லாம்.

முழுமை - எல்லாம்.

முழுவலயம் - வென்றி.

முழுவெலும்பு - தசைகழிந்த வெலும்பு.

முழை - குகை, துடுப்பு, மலையினுட்குகை.

முழைஞ்சு - மலையினுட்குகை.

முழைத்தல் - எழுத்திலாவோசை.

முளரி - ஓமவிறகு, கடைக்கொள்ளி, காடு, தாமரை, நுண்மை, நெருப்பு, முட்செடி, விறகு.

முளரியான் - பிரமன்.

முளவு - முட்பன்றி.

முளி - மரமுதலியவற்றின் கரடு, முளியென்னேவல், பரடு.

முளித்தல் - காய்தல், வளத்தல்.

முளை - அங்குரம், தண்டாயுதம், தறி, மகன், முளையென்னேவல், மூங்கில்.

முளைத்தல் - முளைக்குதல்.

முள் - நுண்மை, முள்.

முள்ளி - ஓர்செடி.

முறம் - முற்றில், புடைக்குமுறம், விசாகநாள்.

முறி - இலை, எழுத்துமுறி, தளிர் முறியென்னேவல்.

முறிதல் } ஒடிதல்.
முறிவு

முறித்தல் - ஒடித்தல்.

முறியர்-விற்றற்குரியவடிமைகள்.

முறுகல்-கடுப்பு, திருகல், முறுக்குதல்.

முறுக்கல் - திருகல்,முறுக்குதல்.

முறுவல்-எயிறு, சிரிப்பு,நகைப்பு, முறுவலித்தல்.

முறை-இடைச்சொல், ஒழுக்கம், ஒழுங்கு, குணம், பழமை, புத்தகம், முறையீடு, வரிசை.

முறைதெரிந்தோன்- சிற்பாசாரி, பிரமன்.

முறைதெரிபகவன் - பிரமன்.

முறைநிரனிறை } நேர்நிரனிறை.
முறைநிரைனிரை

முறைப்பெயர் - முறைமையைப் பற்றி வரும்பெயர்.

முறைமைப்பொருள் - எழுத்துக்கள் முன்பின்னிற்கு முறையிலக்கணம்.

முறையடைதல் - ஒன்றையொன்று விசேடித்து வருதல்.

முறையிடல் - விதித்தல்.

முறையிலார் - கீழ்மக்கள்.

முறையிலுயர்புகவிற்சியணி - ஓரலங்காரம்.

முறையின்வைப்பு - நூலழகி ெலான்று. அது—அதிகார முதலானவைகளைக் காரண காரிய முறையாக வைத்தல்.

முற்கம் - பயறு, முற்கு.

முற்கரம் - படைகலம்.

முற்கலம் - ஒருபகிடதம்.

முற்கு - முற்கத்தெரித்தல்.

முற்குளம் - பூராடநாள்.

முற்கொழுங்கோல் - பூரட்டாதி.

முற்சனி - மகநாள்.

முற்றம் - முன்றில்.

முற்றல் - காழ்க்கோடல், பழுத்தல், முடித்தல், முடிவு, மூப்பு, வளைதல், வளைவு.

முற்றாய்தம் - ஆய்தக்குறுக்கம்.

முற்றியைபு - எல்லாச்சீர்க்கண்ணுமியைபு வரத்தொடுப்பது.

முற்று - இடைச்சொல்லின் பொருளில் ஒன்று, முடிவு, முற்றுகரம், முற்றுவினை.

முற்றுகரம் - குற்றுகரம்.

முற்றுதல் - முடிதல்.

முற்றுத்தொடர் - தெரிநிலை தெரியாநிலையாகிய முற்றுத்தொடர்.

முற்றுமடக்கு - ஓரலங்காரம்.

முற்றுமோனை - எல்லாச்சீர்க்கண்ணுமோனைவரத்தொடுப்பது.

முற்றும் - எல்லாம், கடை, பெயரெச்சம், மூலநாள்.

முற்றும்மை - முழுவும்மை.

முற்றுவிகுதி - முடிந்த சொல்லின் கடைநிலை.

முற்றுவினை - வினைமுற்று.

முற்றெச்சம் - வினையெச்சத்திற்காக வழங்கப்படும் வினைச்சொல்.

முற்றெதுகை - எல்லாச்சீர்க்கணுமெதுகைவரத் தொடுப்பது.

முனி - அகத்தி, தவத்தோன், முனியென்னேவல், யானைக்கன்று, வில்.

முனிதல் - சினக்குறிப்பு, சினம், வெறுத்தல்

முனிமர் - அந்தணர், சடைமுடியோர், தவத்தர்.

முனிவருமை - கோபமாருமை அஃது—உயிர் வேதனையி ெனான்று.

முனிவு - கோபம், சினம், வெறுப்பு.

முனீந்திரன் - புத்தன்.

முனை - நுனிவு, நுனி, பகை, முதன்மை, முனையென்னேவல், யுத்தம், வினை, வெறுப்பு.

முனைதல் - சினக்குறிப்பு.
முனைந்தோர் - பகைமர்.
முனைப்பதி - பகைவற்மேற்சென்றோருறைவிடம்.
முனைமுகம் - படைமுகம்.
முனையிடம் - பாலைநிலத்தூர், போர்க்களம்.
முனைவர் - பகைவர், முனிவர்.
முனைவன் - அருகன், கடவுள், பகைவன், பித்தன்.
முனைவு-கோபம்,சினம்,வெறுப்பு.
முன்-இனியென்பது, எழனுருபு, பக்கம், பழமை, முதல், முன்னென்னேவல், மேல்.
முன்சொல் - பழஞ்சொல்.
முன்பனி - மார்கழிதையின் பருவம்.
முன்பிறந்தாள் - அக்காள்.
முன்பு - பழமை, பெருமை, முன், வலி.
முன்முகப்பு - ஆசாரவாயில்.
முன்முகனை - துவக்கம்.
முன்முடுகுவெண்பா-ஓர் வெண்பா.
முன்மொழி - மூதுரை.
முன்மொழிந்துகோடல்- ஓருத்தி அது-முன் ஓரிடத்தொன்றைச் சொல்லிப் பின் வேண்டுமிடத்து அதனையெடுத்துக் கொள்ளல்.
முன்றுதை-பாட்டன்.
முன்றுய் - பாட்டி.
முன்றுனை - மேற்போர்வை.
முன்னதினுணர்தல் - குறிப்பினுற்பொருளறிதல்.
முன்றில் - முற்றம்.
முன்றோன்றல் - தமையன்.
முன்னடியான் - காவற்றேவதை.
முன்னம் - எண்ணம், கருத்து, குறிப்பு, சீக்கிரிமரம், மனம், முன்.
முன்னர் - ஆதி, இடம், நெஞ்சு, முன்.
முன்னர்விலக்கு - ஓரலங்காரம்.
முன்னல் - நினைத்தல், நெஞ்சு, வியங்கோண் முற்று.
முன்னவள் - அக்காள்.
முன்னவன் - கடவுள், சிவன், தமையன்.
முன்னவையகத்திணை - அகப்பாட்டுறுப்பினென்று.
முன்னிரவு - இரவின் முற்பகுதி.
முன்னிலை - காரணம், மூவிடத்தொன்று.
முன்னிலைச்சொல் - முன்னிற்பவனைக் குறிக்குஞ்சொல்.
முன்னிலைப்பொருள்- முன்னிலையிடப்பொருள்.
முன்னிலையசை - முன்னிலையிடத்துவருகிறஅசைச்சொல்.
முன்னிலையேவலொருமை - முன்னிற்கின்ற ஒருவனைப்பார்த்து ஏவுதல்.

முன்னிலையேவல்வினை - முன்னிற்பவனுக்குக் கட்டளையிடுந் தொழில்.

முன்னின்றமெய்திரிதல் - முன்னிருந்த மெய் மற்றொரு மெய்யாக விகாரப்படுவது.

முன்னிளவல் - தமையன்.

முன்னுருவு - பழையவடிவம்.

முன்னூல் - கடவுண்மொழிந்த நூல்.

முன்னூற்கேள்வன் - கடவுள்.

முன்னை - அக்காள், அண்ணன், முன்னைமரம்.

முன்னோர் - பழையோர், மந்திரிகள்.

முன்னோன் - அருகன், கடவுள், விநாயகன், தமையன்.

## மூ

மூ-ஓரெழுத்து, மூப்பு, மூவென்னேவல், மூன்று.

மூகம் - ஊமை, மௌனம்.

மூகன் - ஊமை, ஓரஸுரன், வறிஞன்.

மூகை - ஊமை.

மூக்கரிகத்தி - வெற்றிலைகிள்ளுங் கருவி.

மூக்கறட்டை - ஓர் பூடு.

மூக்கு - நாசி, பறவைமூக்கு.

மூங்கை - ஊமை.

மூசல் - சாதல், மொய்த்தல்.

மூச்சு-ஆண்மை, உயிர்ப்பு, பலம்.

மூஞ்சல் - மொய்த்தல்.

மூஞ்சூறு - சுசுந்தரி.

மூடர்-அறிவிலார், கீழ்மக்கள்.

மூடல் - மூடுதல்.

மூடிகம் - எலி, பெருச்சாளி.

மூட்டம் - ஆயத்தம், உலைமுகம், கம்மாளர்கருவி, மூடல், மூளல்.

மூட்டல் - இசைத்தல், எலிவிடுதல், கோண்மூட்டுதல், பற்றப்பண்ணுதல், வியங்கோண்முற்று.

மூட்டு - குதிரைக்கடிவாளம், சந்திப்பு, மூட்டென்னேவல்.

மூட்டை - சுமை, பொதி, மூட்டை.

மூதணங்கு - காடுகாள்.

மூதறிஞர் - பேரறிவுடையோர்.

மூதறிவு - பேறறிவு.

மூதா - தம்பலப்பூச்சி.

மூதாட்டி - முதியவள்.

மூதாதை - பாட்டன்.

மூதாய் - பாட்டி.

மூதிரி - எருமை.

மூதிரை - திருவாதிரைநாள்.

மூதுணர்வு - பேரறிவு.

மூதுரை - ஓர்செய்யுள், பழமொழி.

மூதேவி - இலக்குமி முன்பிறந்தாள்.

மூதை - வெட்டிச்சுட்டகாடு.

மூத்தத்திருப்பதிகம் - ஓர்நூல்.

மூத்தல் - முதுமையுறல்.

மூத்தாள் - அக்காள், கிழவி, தலைவி.

மூத்திரம் - சிறுநீர்.

மூத்தோர் - புலவர், மந்திரிகள், முதியோர்.

மூத்தோன் - அண்ணன், விநாயகன்.

மூப்பு - தலைமை, முதுமை.

மூய்தல் - மூடுதல்.

மூரல் - சிரிப்பு, சோறு, பல்.

மூரி - எருது, எருமை, ஓலைமூரி, சோம்பல், நெரிவு, பழைமை, பெருமை, வலி.

மூர்க்கம் - சலஞ்சாதித்தல், நாகப்பாம்பு, மூடத்தனம்.

மூர்க்கர் - கீழ்மக்கள்.

மூர்ச்சனம், மூர்ச்சை - நினைவுமயங்கிக் கிடத்தல்.

மூர்ச்சனை - இராகவோசையினிலை, நினைவுமயக்கம்.

மூர்த்தம் - இருகடிகைப்போழ்து, உடம்பு. உருவுடையது, தலை

மூர்த்தனி - தலை, சிரஸு.

மூர்த்தன்னியம் - கிளர்ச்சி.

மூர்த்தி - அருகன், உடல், உருவம், கடவுள், சிவன், புத்தன்.

மூர்த்திகரம் - தெய்விகம்.

மூர்த்திகன்-குமரன், வயிரவன்.

மூலகந்தம் - வெட்டிவேர்.

மூலகம் - கிழங்கு, முள்ளங்கி.

மூலதனம் - மூலத்திரவியம்.

மூவகைச்சீர் - நேரசையாவது நிரையசையாவது தன்னோடு தானேனும் ஒன்றோடொன்றேனும் புணர்ந்து மூன்றசை யடுக்கிவருவது.

மூலப்பிருகிருதி - பிரபஞ்சகாரணமாயை.

மூலமலம் - ஆணவமலம்.

மூலம் - ஓர்நாள், ஓர்நோய், காரணம், கிழங்கு, முதல், வேர்.

மூலாக்கிரம் - அடியுநுனியும்.

மூலாதாரம்-ஆறுதாரத்தொன்று.

மூலிகை - வேர்.

மூலியம் - விலை.

மூலைத்திசை - பெருந்திசை.

மூவரசன் - சேரன், சோழன், பாண்டியன்.

மூவழி - முதல், இடை, கடை.

மூவாட்டை - மூன்று ஆண்டு.

மூவிடம் - தன்மை, முன்னிலை, படர்க்கை.

மூவிலைவேல் - சூலம்.

மூவினம்.வல்லினம்,மெல்லினம், இடையினம்.

மூவுதல் - முடிதல்.

மூவுலகாதாரன், மூவுலகேந்தி - கடவுள்.

மூவுலகாளி - கடவுள்.

மூவுலகு - சுவர்க்கம், மத்யம், பாதாளம்.

மூவுலகுணர்ந்தோன் - அருகன்.

மூழி } அகப்பை, துடுப்பு,
மூழை } மத்து.

மூழ்கல் - முழுகல்.

மூழ்த்தல் - மொய்த்தல்.

மூளல் - மூளுதல்.

மூளுதல் - எழும்பல், நெருப்பு முதலிய மூளல்.

மூளை - தலை முதலியவற்றின் மூளை.

## மெ

மெச்சல் - கொண்டாடல், துதித்தல்.

மெத்து - மென்மை.

மெத்தை - அமளி, மேல்வீடு.

மெய் - உடல், உண்மை, ஒற்றெழுத்து, ஐம்பொறியுளொன்று நிச்சயம், மெய்யெழுத்து.

மெய்கண்டதேவர் - சுவேதவனப்பெருமாள்.

மெய்காப்பாளர் - காவலர்.

மெய்க்கவசம் - மெய்யுறை.

மெய்க்கீர்த்திமாலை - ஓர் பிரபந்தம்.

மெய்நலம் - வலி.

மெய்நூலன் - துரோணசாரியன்.

மெய்புகுகருவி - கவசம்.

மெய்ப்படாம் - நிலையங்கி.

மெய்ப்பரிசம் - அட்ட மெய்ப்பரிசம்.

மெய்ப்பாடு - சரீரக்குறிப்பு.

மெய்ப்பீரம் - மேகம்.

மெய்ப்பை - சட்டை.

மெய்ப்பொறி - கர்மேந்திரிய ஞானேந்திரியங்கள்.

மெய்மயக்கம்-ஒற்றெழுத்தியைபு.

மெய்ம்மை - உண்மை, கருத்து.

மெய்யர் - அந்தணர், முனிவர்.

மெய்யன் - உண்மையுள்ளோன், மகன்.

மெய்யீற்றுப்புணரியல் - மெய்யீற்றுப்பதம் புணருகிற இயல்பு.

மெய்யுரைத்தல்-உரைசொல்லல்.

மெய்யுரை - கவசம்.

மெய்விரதம் - தருமன், பீஷ்மன்.

மெலி - மெலிவு, மெல்லெழுத்து.

மெலிதல் } இளைப்பு.
மெலிவு }

மெலித்தல் - வல்லொற்றை மெல்லொற்றாக்கல்.

மெல்கல் - இலகுவாதல்.

மெல்லன்-நெய்தனிலத்தலைவன்.

மெல்லியர் - சிறியோர், மாதர்.

மெல்லியல் - பெண், மரத்திளங்கொம்பு.

மெல்லியாள் - பெண்.

மெல்லிலை - வெற்றிலை.

மெல்லினம் - மென்கணம்.

மெல்லினவெதுகை - ஓரின வெதுகை.

மெல்லெனல் - மந்தக்குறிப்பு.

மெழுகு - மெழுகு, மெழுகென்னேவல்.

மென்கணம் - மெல்லினம்.

மென்பால் - மருதநிலம்.

மென்மை - மிருது, மெல்லினம், எட்டேறிலொன்று.

மென்றொடர்-மெல்லெழுத்தைத் தொடருந்தொடர்ச்சி.

மென்னிலை - கரலட்சணத்தி னொன்று.

## மே

மே - ஓரெழுத்து.

மேகநாதம் - சிறுகீரை, முழக்கம்.

மேகநாதன் - இந்திரசித்து.

மேகபந்தி - முகினிரை.

மேகபுட்பம் - நீர்.

மேகப்புள் - வானம்பாடி.

மேகம் - ஓர் நோய், முகில்.

மேகரஞ்சி - ஓரிராகம்.

மேகராகக்குறிஞ்சி - ஓர்பண், குறிஞ்சித்திறத்தினொன்று.

மேகலை - சீலை, மாதரிடையணியி லெழுகோவை(ஒட்டியாணம்), மலைப்புடைப்பு.

மேகவண்ணக்குறிஞ்சி - ஓர்மரம்.

மேகவண்ணன் - விஷ்ணு.

மேகவாகனன் - இந்திரன்.

மேகாரம் - மயில்.

மேக்கு - உயர்ச்சி, மேல், மேற்கு.

மேசகம் - மயிற்றோகைக்கண்.

மேடம் - ஆடு, மேடவிராசி.

மேடவீதி - சித்திரை, வைகாசி, ஆனி மாதங்களிற் சூரியன் செல்லும் வீதி.

மேடு-உயர்ச்சி,ஊர், சிறுதிட்டை, வயிறு.

மேடுகம் - சுவர்.

மேடை - மேடு.

மேட்டினம் - மேன்மை.

மேதகம் - மதிப்பு, மேன்மை.

மேதகையோர் - உயர்ந்தோர்.

மேதம் - கொலை, யாசகம்.

மேதாரம் - மலை.

மேதாவியர் - அறிஞர்.

மேதி - எருமை.

மேதிச்சென்னிமித்தோள் -துர்க்கை.

மேதியன் - இமயன்.

மேதினி - பூமி.

மேதை - அறிவு, இறைச்சி, கள், தோல், நரம்பு, நிணம், புதன், மேன்மை.

மேதையர் - புலவர்.

மேத்தியம் - சுத்தம்.

மேநகை - தேவதாசி, மேருமலைக்குப் பெண்ணும், இமயமலைக்கு மனைவியுமாகிய மனோரமையென்பவள்.

மேனகைபுதல்வி - பார்வதி.
மேனை - மலையரையன்மனைவி.
மேம்பாடு - புகழ், மேன்மை.
மேய்தல் - உண்டல், வேய்தல்.
மேய்த்தல் - மேயச்செய்தல்.
மேரு - பொன்மலை, மலை, தேரின்மேலாசனம்.
மேருவில்லி - சிவன்.
மேலகம் - மோக்கம்.
மேலவரிறைவன் - முருகன்.
மேலவர் - மேலோர்.
மேலாலவத்தை - மேனோக்கி நிற்குமவத்தை.
மேலுலகம் - தேவலோகம்.
மேலோர் - அறிஞர், புலவர், வானோர், உயர்ந்தோர், முன்னோர்.
மேல் - அகலம், ஆகாயம், இனி, ஏழனுருபு,மிசை,மேல்,மேற்கு.
மேல்விதேகம் - நவகண்டத்தொன்று.
மேவலர், மேவார் - பகைவர்.
மேவலது - பொருந்தாதது.
மேவல்-ஆசை, சேரல், உண்டல், பிறத்தல், பொருந்தல், விரும்பல்.
மேவினர் - உறவோர், சிநேகிதர்.
மேவு - ஆசை, மேவென்னேவல்.
மேழகம் - கவசம், செம்மறிக்கடா, துருவாட்டேறு.
மேழி - கலப்பை, கலப்பையினேருறுப்பு.
மேழியர் - மருதநிலமாக்கள், வேளாளர்.
மேளம் - பலவாச்சியக்கூட்டம்.
மேளனம் - கூட்டம்.
மேற்கதி - மோட்சம்.
மேற்கதுவாய் - முதலயற்சீர்க்கணின்றியொழிந்த சீர்க்கண் மோனைவரத்தொடுப்பது.
மேற்கு - மேல், மேற்றிசை.
மேற்குலத்தோர் - அந்தணர்.
மேற்கோள் - ஆசிரியவசனம், எடுத்துக்காட்டுஞ் செய்யுள், சனி, மேன்மை, போர்வை.
மேற்செம்பாலை - ஓரிராகம்.
மேற்றிசைப்பாலன் - வருணன்.
மேனி-உடலுருவம், நிறம், வடிவு.
மேன்மக்கள் - பெரியோர்.

## மை

மை-அஞ்சனம், கறுப்பு, குற்றம், செம்மறியாடு, நீர், மசி, மலடு, மேகம், மேடவிராசி,மையென்னேவல், பண்புப்பெயர் விகுதி.
மைதல் - மையச்செய்தல்.
மைதிலி - சீதை.
மைதுனம் - புணர்ச்சி.

மைத்திரம் } சிநேகம்.
மைத்திரியம் }

மைத்திராவருணம் - ஓர் யாகம்.

மைத்துனன் - மச்சினன்.

மைநாகன் - மலையரசனுக்கும் மேனைக்கும் புத்திரன்.

மைந்தர் - ஆண்மக்கள், மனிதர்.

மைந்து - மயக்கம், வலி.

மைமை-மலடி, மலட்டெருமை.

மைம்மா - பன்றி.

மைம்முகன் - முசு.

மையம் - நடு.

மையல்-உன்மத்தம்,காமமயக்கம்.

மையாத்தல் - மயங்கல்.

மையுண்கண்ணி - மைதீட்டிய கண்ணுடையாள்.

மைரேயம் - கள்.

## மொ

மொ - ஓரெழுத்து.

மொகமொகெனல் - ஈரடுக் கொலிக்குறிப்பு.

மொக்குள் - கொப்பூழ், நீர்க் குமிழி, மலரும்பருவத்தரும்பு.

மொச்சை - ஓர் கொடி.

மொடமொடெனல் - ஈரடுக் கொலிக்குறிப்பு.

மொட்டம்பு - உதணம்.

மொட்டு - இளம்பூவரும்பு.

மொட்டை - மழித்தல்.

மொத்தம் - பொது.

மொத்தல் - அடித்தல்.

மொந்தை - ஒரு கட்பறை, ஒரு பாத்திரம்.

மொய் - கூட்டம், போர், போர்க் களம், மொய்த்தல், மொய் யென்னேவல், யானை, வண்டு.

மொய்கதிர் - முலை.

மொய்த்தல்-கூடுதல், நெருங்கல், மூடுதல்.

மொய்த்தாய் - தாய்.

மொய்ம்பு - தோள்.

மொழி - சொல், மொழியென் னேவல்.

மொழிதல் - சொல்லல்.

மொழிமாற்று - பொருள்கோ ளெட்டினொன்று.

மொழிமுதலெழுத்து - சொற்கு முதனிற்கு மெழுத்து.

மொழிமை - பழஞ்சொல்.

மொழியிடையெழுத்து - சொல் லிடை நிற்குமெழுத்து.

மொழியிறுதி - மொழியீறு.

மொள்ளல் - முகத்தல்.

## மோ

மோ - ஓரெழுத்து, முன்னிலை யசைச்சொல், மோவென்னே வல்.

மோகம் - ஆசை, உன்மத்தம், காமம்.

மோகர் - சித்திரகாரர்.

மோகனம் - அட்டசித்தியி ஞென்று, ஓரிராகம்.

மோகனுங்கனை - மோகினி.

மோகனுத்திரம்- மன்மதபாணம்.

மோகன் - மன்மதன்.

மோகினி - திருமால் பெண்ணு ருக்கொண்டமோகினி.

மோக்கம் - தீர்தல், பரகதி.

மோசம் - வஞ்சனை.

மோசனம்-ஓர்வகைநெல்,தீர்தல்.

மோசிகை - உச்சிமுடி.

மோடி - காடுகாள், பிணக்கு.

மோடு - உயர்ச்சி, பெருமை, மடமை, வயிறு.

மோட்சகாலம் - கிரகணம் விடுங் காலம்.

மோட்சம் - மோக்கம்.

மோதகம் - அப்பவருக்கம், இணக்கம், தோசை.

மோதம் - உவகை, வாசனை.

மோதல் - அடித்தல்.

மோதிரம் - ஆதி.

மோத்தல் - ஆக்கிராணித்தல்.

மோத்தை - வெள்ளாட்டுக்கடா.

மோவாய் - தாடி.

மோழல் - பன்றி.

மோழை - கஞ்சி, கொம்பின்மை கொம்பில்லாவிளங்கு.

மோனம் - மௌனம்.

மோனர் - முனிவர்.

மோனை - ஆதி, ஓர்தொடை.

## மௌ

மௌ - ஓரெழுத்து.

மௌஞ்சி-நாணற்புல்லாற் செய்த வரைஞாண்.

மௌட்டியம் - மூடத்தனம்.

மௌத்திகம் - முத்து.

மௌர்வி - வின்ஞண்.

மௌலி - கள், சிகை, மயிர்முடி, முடி.

மௌவல் - வனமல்லிகை.

மௌனம் - பேசாமை.

மௌனியர் - முனிவர்.

## ய

ய - இறந்தகால விடைநிலை, ஓரெழுத்து.

யகரவுடம்படுமெய்-வருமுயிர்க்கு யகரம் உடம்படுவது.

யக்கன் - குபேரன்.

யக்கர் - இயக்கர்.

யக்கராத்திரி-கிருத்திகா பூரணை.

யக்கியசாலை - யாகசாலை.

யக்கியசூத்திரம் - முப்புரிநூல்.
யக்கியநாபிகை - மகநக்ஷத்ரம்.
யக்கியபுருடன் - விஷ்ணு.
யக்கியம் - துவாபரயுகம், யாகம்.
யசமானன் - தலைவன், யாககுரு.
யசனம் - யாகம்செய்தல்.
யசாகன் - கொடையாளி.
யசுரு - இரண்டாம்வேதம்.
யச்சு - புகழ்.
யட்சர் - ஓர் சாதியர்.
யட்டி - ஊன்றுகோல், தண்டு, மாலை, முத்துத்தாழ்வடம்.
யதா - ஏற்ற, சரியான, தகுதியான.
யதாசக்தி - இயன்ற மாத்திரம்.
யதார்த்தம் - சரியான, முறையான.
யதி - அடக்கம், இளைப்பாற்றி, ஒன்றிப்பு, ஓர் ரிஷி, கைம்பெண், சன்னியாசி, தாளப்பிரமாணம்பத்திளென்று, முனி, மோனை, வாசகத்திற்றரிக்குமிடம்.
யதிபாத்திரம்-பிச்சைப்பாத்திரம்.
யது - ஓரரசன்.
யதுநாதன் - கிருஷ்ணன்.
யதேச்சை - இஷ்டம், விருப்பம்.
யதேஷ்டம் - இஷ்டப்படி, சுயேச்சை, மிகுதி.
யதேந்திரியம் - கற்புவழுவாமை.
யத்தனம் - முயற்சி.
யந்திரகிரகம் - சூத்திரம், செக்கு.
யந்திரம் - செக்கு, திரிகை, நீக்கடைகோல், தேர், பஞ்சறைக்குஞ்சூத்திரம், பொறி, மந்திரசக்கிரம்.
யந்திரலோகம் - பயறு.
யந்திரு - ஆளுவோன், குதிரைப்பாகன், தேர்ப்பாகன்.
யமகம் - வந்தசொல்லே வருதல்.
யமகிங்கரன் - நமனேவற்காரன்.
யமகீடம் - ஓர் புழு.
யமதூதன்-பாம்பி னச்சுப்பற்களிலொன்று. யமகிங்கரன்.
யமதேவதை - பரணிநட்சத்திரம்.
யமத்ருமம் - இலவமரம்.
யமப்ரியம் - ஆலமரம்.
யமம்-அடக்கம், இயமம், காக்கை, சனி, தருமநூல் பதினெட்டினொன்று, தவம், திருவிழா, பஞ்சகிருத்தியத்தொன்று.
யமவாகனம் - எருமைக்கடா.
யமராஜம் - யமுனாநதி.
யமவிரதம் - இயமானுட்டிப்பு, பட்சபாதமின்றி அரசுமுறை நடத்தல்.
யமளம் - இரட்டை.
யமனிகை - சீலைப்படல்.

யமன் - நமன்.

யமாந்தகன் - சிவன்.

யமி - ஓர் முனி.

யயாதி - குருகுலத்தரசர்களி லொருவன்.

யயு-அசுவமேதக்குதிரை,குதிரை.

யவகாரி - கிருஷ்ணன்.

யவசம் - வெடியுப்பு.

யவட்சாரம் - எவட்சாரம், வெடி யுப்பு.

யவபலம் - மூங்கில்.

யவம் - ஓர்வகைக் கோதுமை, நெல்லு.

யவகம் - ஓர்வகைத்தானியம்.

யவனப்பிரியம் - மிளகு.

யவனம் - ஓர்தேசம், சீக்கிரம்.

யவனர்-கம்மாளர்,சித்திரக்காரர், சோனகர்.

யவனசாரியன் - ஓர் சோதிட நூலாசிரியன்.

யவனிகை - திரைச்சீலை.

யவானி - ஓமம்.

யவ்வனம் - இளமை,யெளவனம்.

## யா

யா - அஃறிணைப்படர்க்கைப் பன்மைவினு, அசைச்சொல், ஓரெழுத்து, ஓர் மரம், யாவை.

யாகசாலை - வேள்விச்சாலை.

யாகசேனன் - ஓரரசன்.

யாகத்தம்பம் - வேள்வித்தூண்.

யாகத்திரவியம் - யாகப்பொருள்.

யாகபதி - ஓரரசன்.

யாகபத்தினி - துரோபதை.

யாகபாகம் - அவிர்பாகம்.

யாகபோசனர் - வானோர்.

பாகம் - பலி, வேள்வி.

யாகுவம் - சாவகம்.

யாக்குதல் - கட்டுதல்.

யாக்கை - உடல், கட்டு, சரீரம்.

யாக்கனம் - யாங்ஙனம்.

யாங்கனும் - எவ்விடமும்.

யாங்கு-இடத்தின் ஐயுற்றசொல்.

யாங்ஙனம் - எங்ஙனம்.

யாசகம் - இரப்பு, இராசயானை, மதயானை.

யாசகர் - இரப்போர்.

யாசனம் - பூசாபலி நடத்தல், வெடித்தல்.

யாசனை - பிச்சை.

யாசித்தல் - இரத்தல்.

யாஜ்ஞுவல்க்கியம் - ஓர்தருமநூல்.

யாஜ்ஞுவல்க்கியர் - ஓர் மகரிஷி.

யாடு - ஆடு.

யாணர் - அழகு, தச்சர், நன்மை, புதுமை, வளமை.

யாண்டு - இடஐயச்சொல், எந்த விடம், காலம், வருடம்.

யாண்டும் - எங்கும், ஏழுவிடத்திலும்.

யாதம் - பசுக்கூட்டம்.

யாதயாமம் - பழயது, சீர்ணம்.

யாதவன் - இடையன், கிருஷ்ணன்.

யாதனம் - தெப்பம், மரக்கலம்.

யாதனுசரீரம் - ஆக்கினை யநுபவிக்கத்தக்க சரீரம்.

யாதனை - துன்பம்.

யாதானும் - யாது ஆனாலும்.

யாதி - ஆழியகருத்து, ஞாபகம்.

யாதிகன் - வழிச்செல்லுவோன்.

யாது - அஃறிணைப்படர்க்கை யொருமைவினு, இராக்கதர்.

யாதோ - ஓர் ஐயச்சொல்.

யாதோநாதன் - ஸமுத்திரராஜன்.

யாத்தல் - கட்டல்.

யாத்திராகரணம் - பிரயாணம் புறப்படல், பொழுதுபோக்கு.

யாத்திரை - கடலேறிச்செல்லும் பயணம், கூத்து, திருவிழா, நடத்தல், பிரயாணம், வழக்கம்.

யாபனம் - இகழ்ந்துவிடல், தாமதித்தல், பொழுதுபோக்குதல்.

யாப்படி - செய்யுளடிகள்.

யாப்பருங்கலம் - ஓர் நூல்.

யாப்பியம் - அதமம், இகழ்ச்சி, எளிமை, பொழுது போக்கு.

யாப்பியயானம் - சிவிகை.

யாப்பிலக்கணம் - செய்யுளியல் புணர்த்தும்விதி.

யாப்பு - இயையு, கட்டு, செய்யுள்.

யாமகோடம் - சேவல், நாழிகை வட்டம்.

யாமநேமி - இந்திரன்.

யாமபதி - சந்திரன்.

யாமம் - இடக்கைமேளம், இராத்திரி, சாமம், தெற்கு, மாலைப் பொழுதின்பின்பத்துநாழிகை.

யாமவதி - இராத்திரி.

யாமளம் - இளமை, சோடு, பச்சை.

யாமளை - காளி, பார்வதி.

யாமி - இரா, கற்புடையாள், சகோதரி, தெற்கு, மகள், மருமகள்.

யாமிகன் - நகர்சோதனைக்காரன்.

யாமினீ - இராத்திரி.

யாமினீபதி - கர்ப்பூரம், சந்திரன்.

யாமியம் - ஓர் தருமநூல், சந்தனம், தெற்கு.

யாமியன் - அகஸ்தியன்.

யாமியாயனம் - தட்சிணாயனம்.

யாமுகம் - ஆலோசனை.

யாமுனம் - அஞ்சனக்கல்.

யாமை - இரா, தெற்கு, பரணி.

யாம் - நாம்.

யாரி - எதிரி, கதவு.

யாரும் - யாவரும்.

யார் - நத்தைச்சூரி, யாவர்.

யாவம் - ஆச்சாமரம்.
யாவகம்-காருளுந்து, செம்பஞ்சு.
யாவசூகம் - வெடியுப்பு.
யாவநாளம் - சோளம்.
யாவம் - அரக்கு, செம்பஞ்சு.
யாவரும் - எல்லாரும்.
யாவர் - உயர்திணைப்படர்க்கை முப்பாற்பொதுவினை.
யாவள் - உயர்திணைப் படர்க்கை யொருமைப்பெண்பால்வினை.
யாவன் - உயர்திணைப்படர்க்கை யொருமையாண்பால்வினை.
யாழ - முன்னிலையசைச்சொல்.
யாழல் - கறையான்.
யாழோர்கூட்டம் - காந்தருவ மணம்.
யாழ் - அச்வினி, ஆந்தை, திருவாதிரை, நீர்ச்சுழியின்றிரை, மீனவிராசி, வீணை.
யாழ்நரம்பு - தந்திரீ.
யாழ்ப்பாணம் - ஓரூர்.
யாழ்முரி - ஓர் கவி.
யாழ்வகை - குறிஞ்சி, நெய்தல், பாலை, மருதமென்று நானிலத்தியாழ்.
யாழ்வல்லோர் - கந்தருவர்.
யாழ்வல்லோன் - நாரதன்.
யாளி - சிங்கம், சிங்கவிராசி, மரக்கலப்பாய்க்கு நீர்வீசுங்கருவி, யாளி, யானை.
யாளியானை - பூட்கை.
யாளியூர்தி - காளி, துர்க்கை.
யாறு - ஆறு.
யாற்றுநீர்ப்பொருள்கோள் - பொருள்கோளெட்டி லொன்று, அஃது—அடிதோறும் யாற்று நீரொழுக்குப்போல நெறிப்பட்டு அற்றற்றொழுகுவது.
யாற்றுப்புனல் - யாற்றுநீர்ப் பொருள்கோள்.
யானபாத்திரம் - மரக்கலம்.
யானமுகம்-வண்டியினேர்க்கால்.
யானம்-அறைவீடு, கள், சிவிகை, போதல், மரக்கலம், வாகனம்.
யானை - இராசசின்னத்தொன்று, வடதிசைப்பாலன்குறி.
யானைக்கச்சை - யானைக்கழுத்தணி கயிறு.
யானைக்கண் - இலை காய் முதலிய வற்றில்விழும் புள்ளி.
யானைக்கம்பம்- யானைகட்டுந்தறி.
யானைச்சீரகம் - கத்தரிநாயகம்.
யானைத்திப்பிலி - ஓர் திப்பிலி.
யானைநெருஞ்சி - பெருநெருஞ்சி.
யானைவணங்கி - தேட்கொடுக்கி.
யானைவீரன் - அரசருக்குத்துணை வரிலொருவன்.

## யு

யுகதருமம் - யுகபேதத்தாலுண் டாகும் நடை.

யுகந்தரம் - ஓர்மலை. தேர் முத லியவற்றைப் பிணிக்குந்தறி.

யுகபத்திரம் - கோவிதாரமரம்.

யுகபத்திரிகை - அசோகமரம்.

யுகப்பிரளயம் - யுகமுடிவு.

யுகமுடிவு - உலகமுடிவு.

யுகம் - இரண்டு, இருபொருள், ஓர் காலத்தளவு, நாலுமுழங் கொண்டது, நுகத்தடி, பூமி.

யுகளம் - இரண்டு.

யுகாதி-அருகன்,கடவுள், காந்தம், யுகமுடிவு, வருஷாரம்பம்.

யுகாந்தம் - முடிவு.

யுக்மம் - இரண்டு.

யுஜாநன் - சாரதி.

யுதகம் - இரண்டு, ஐயம், சீலைத் தொங்கல், சம்பந்தம், நன் கொடை.

யுதிட்டிரன் - தருமநந்தனன்.

யுத்தகளம் - போர்க்களம்.

யுத்தசன்னத்தன் - போருக்கா யத்தமானோன்.

யுத்தசாரம் - குதிரை.

யுத்தந்தொடுத்தல் - போர்மூட்டு தல்.

யுத்தமுகம் - போர்முகம்.

யுத்தம் - உசிதம், கூடுதல், நாலு முழங்கொண்டது, நியாயம், பொருத்தமானது, போர்.

யுத்தவேது - ஓரலங்காரம்.

யுத்தி - அருத்தாபத்தி, உபாயம், ஓரலங்காரம், கூடுதல், தகுதி பொருத்தம், மேற்கோள் கூறல், யோசித்தல், வழக்கம்.

யுபம் - சாமர்த்தியம், புத்தி.

யுயு - குதிரை.

யுயுதானன் - இந்திரன், ஸாத்யகி.

யுவ - ஓராண்டு.

யுவதி - பதினாறுவயதுப்பெண்.

யுவநாச்வன் - சூரியகுலத்தரசரி லொருவன்.

யுவராசன் - இளவரசன், ஓர் சமண குரு.

யுவன் - பதினாறு வயதுக்கு மேல் முப்பது வயதிற்குட்பட்டவன்.

## யூ

யூகம் - அகப்பொருளறிதல், ஓர் புல், கருங்குரங்கு, கவந்தம், காந்தி, கோட்டான், தருக்கம், படை, படைவகுப்பு, பெண் குரங்கு, பெண்முசு, பேன், யோசிப்பு, விவேகம்.

யூகவான் - புத்திமான்.

யூகி - யூகியென்னேவல், விவேகி.

யூகித்தல் - ஆராய்தல், யோசி த்தல்.

யூகை - கல்வி, பேன்.

யூதபம் - இனத்தைக்காக்கும் யானை, யானைக் கூட்டத்திற்றலை யானை.

யூதம்-பசுக்கூட்டம், பட்சிசாலம், யானைக்கூட்டம், விலங்கின் கூட்டம்.

யூதர் - ஓர் சாதியார்.

யூதி - அம்பட்டன்,காட்டுமுல்லை.

யூபம்-உடற்குறை, படைவகுப்பு, யாகப் பசுவைக் கட்டுந்தறி, யாகம், வேள்வித்தம்பம்,வெற்றித்தம்பம்.

## யோ

யோகசத்தி - நவச்சாரம்.

யோகசமாதி - ஆத்மதரிசனம்.

யோகசம் - சிவாகமமிருபத்தெட்டினொன்று.

யோகசாதனை - யோகபரீட்சை.

யோகசாத்திரம் - கலைஞானமறுபத்து நான்கினொன்று.

யோகக்ஷேமம் - சமாசாரம், செய்தி.

யோகசைவம் - ஓர் சைவம்.

யோகஞ்செய்தல் - தியானஞ்செய்தல்.

யோகதீட்சை - ஓர் தீட்சை.

யோகநித்திரை - அறிதுயில்.

யோகபாதம் - யோகநிலை.

யோகபீடம் - யோகாசநம்.

யோகப்பிரத்தியட்சம் - யோகக்காட்சி.

யோகமாயை - பகவதி, விஷ்ணுமாயை.

யோகமார்க்கம் - யோகநிலை.

யோகம் - அட்டயோகம், அதிட்டம், உபாயம், உயர்ச்சி, உற்சாகம், எத்து, கூடல், கூட்டம், கூட்டல், சாவு, சிவிகை, சூத்திரம், தகுதி, தியானம், பக்கம், பஞ்சாங்கவுறுப்பினொன்று, பலன், பொருத்தம், போர்க்கவசம், வரம்.

யோகரங்கம் - கொளுஞ்சிமரம்.

யோகருடி - காரணக்குறி.

யோகர்-சமணமுனிவர், முனிவர்.

யோகாசாரியன் - யோகபோதகன், யோகாப்பியாசி.

யோகாதிசயம் - சுகம், நிலைபரம்.

யோகி - அரன், அருகன், ஐயன், முனிவன்.

யோகினி - காளி.

யோகினிதிசை - யோகினி தேவதையாலாளப்பட்டது.

யோகீசுவரன் - யாஞ்ஞவல்க்ய முனி, யோகஞ் செய்வோன்.

யோகேசன் - சிவன், முனிவன்.

யோகேசுவரன் - கிருஷ்ணன்.

யோக்கியதை - யோக்கியம்.

யோக்கியம் - ஆசாரம், தகுதி.

யோக்கியர்-தக்கவர், பெரியோர்.

யோசனம் - யோசனை.

யோசனன் - கடவுள்.

யோசனை - ஆலோசனை, ஓசை, ஒரெல்லையளவு, தியானித்தல், புத்தி.

யோசனை-ஆலோசனை,கூட்டுதல்.

யோசியம் - சோதிடம்.

யோசியர் - சோதிடர்.

யோதனன் - போர்வீரன்.

யோது - அளவு.

யோதேயன் - போர்வீரன்.

யோத்திரம் - நுகக்கயிறு.

யோனி - ஆண்குறி, காரணம், நீர், பிறவி, பெண்குறி.

யோனிக்கலப்பு - சாதிக்கலப்பு.

யோனிசங்கரன் - பிறப்பிலிழிந்தோன்.

யோனிபேதம் - பிறவிபேதம்.

யோனிப்படுத்தல் - பிறத்தல்.

யோனிப்பொருத்தம் - மணப்பொருத்தம் பத்திலொன்று.

யோனிமுத்திரை - யோனியாகாரமாகச்செய்யு முத்திரை.

யோனிரஞ்சநம் - பூப்பம்.

## யௌ

யௌகிகம் - பகுபதம்.

யௌதகம் - சீதனம்.

யௌதம் - ஓரளவு, பெண்கள் கூட்டம்.

யௌவதம் - யௌவநம்.

யௌவனகண்டகம் - முகப்பரு.

யௌவனதசை - வாலிபம், இளமைப் பருவம்.

யௌவனம் - அழகு, இளமை, களிப்பு, மகளிர்கூட்டம்.

யௌவனலட்சணம் - அழகு, கொங்கை.

யௌவநாசுவன் - மாந்தாதா.

## வ

வ - ஒரெழுத்து.

வஃகான் - வகர, வெழுத்து.

வகம் - காற்று வழி, வாகனம்.

வகரவுடம்படுமெய்-வருமுயிர்க்கு வகர ஒற்றுச்சம்பந்தப்படுவது.

வகித்தல் - சுமத்தல், சகித்தல்.

வகிர் - நரம்பு, பிளவு, வகிரொன்னேவல், வழி, வார்.

வகிர்தல் - அறுத்தல், கோதல், பங்குசெய்தல், போழ்தல்.

வகுண்டம் - கவிழ்த்தும்பை.

வகுண்டிகம் - கஞ்சாங்கோரை.

வகுதி - வகுப்பு.

வகுத்தல் - நூற்செய்தல், வகுத்துக்காட்டல், வகைப்படுத்தல்.

வகுத்திரம் - தெப்பம்.

வகுத்திராபிகாரம் - ஐம்பொறி.

வகுத்துக்காட்டல் - ஒருத்தி, அது — தொகுத்துக்காட்டிய வைகளைஒவ்வொன்றாய்ப்பிரித்துக் காட்டுதல்.

வகுந்து - வழி.

வகுப்பு-அழகு, பகுப்பு, பொலிவு.

வகுலி - மீன்.

வகுளம் - மகிழமரம்.

வகுளாபரணர் - சடகோபர்.

வகுளி - ஒலி.

வகுள் - சமுத்திரப்பச்சை.

வகுளிநாதர் - நவநாதசித்தரிலொருவர்.

வகை - இனம், உபாயம், ஏது, கூறுபாடு,தரம்,பருப்பு, முதல், முறை, வகுப்பு, வழி, வகை.

வகைச்சூத்திரம் - அது தொகையினை வேறு வேறு வகைப்படக்கூறும் வகைச்சூத்திரம்.

வகையகத்திணை - தொகையாயுரைத்தபொருளை வகையறுத்துரைத்தல்.

வகையுளி - அவ்வச்சொன் முடிவே சீர்முடிவாக்கித் தளைகொள்ளாமல் வேண்டியவிடத்துச் சீர்முடிவு செய்து தளைகோடல்.

வக்கணம் - நாகரிகம், நிந்தை, பட்டப்பெயர்,மார்பு,வர்ணனை, விற்பன்னம்.

வக்கணத்தி - ஓர் செடி.

வக்கா - ஓர் பறவை.

வக்கிரகண்டம் - அனந்தை.

வக்கிரக்கிரீவம் - ஒட்டகம்.

வக்கிரசஞ்சு - கிளி.

வக்கிரம் - கலக்கம், கொடுமை, நிமிர்தல், பொய், பொறாமை, மீளமடங்குதல், மீளுதல், வஞ்சனை, வட்டம், வளைவு.

வக்கிரன் - உருத்திரன், குரூரன், சனி, செவ்வாய், தந்தவக்கிரன்.

வக்கிராங்கம் - அன்னம்.

வக்கிராத்தமனம் - திரும்புதலோடத்தமனம்.

வக்கிரித்தல் - திரும்புதல்.

வக்கிரோதயம் - திரும்புதலோடுதித்தல்.

வக்கு - தொட்டி, தோல், வழி.

வக்த்ரு - சொல்லுவோன்.

வங்கசிந்தூரம் - ஈயபஸ்பம்.

வங்கசேனகம் - வெள்ளகத்தி.

வங்கணம் - உற்றநேசம், ஓர் தேசம், சிநேகம், வணக்கம்.

வங்கம் - ஆற்றுமடக்கு, ஈயம், ஓர்தேசம், கத்திரிச்செடி, கருத்து, சிறுகத்திரி, துத்தநாகம், பதினெண் பாடையினொன்று, மரக்கலம், வளைவு, வெள்ளி.

வங்கர் - ஓர் சாதியர், சண்டாளர்.

வங்கனம் - செம்பு.

வங்கனார் - ஓர் சங்கப்புலவர், ஆலங்குடி வங்கனார்.

வங்காரம் - உலோகக்கட்டி, பொன் வணிதம்.

வங்காளத்திப்பிலி - ஓர் திப்பிலி.

வங்காளப்பச்சை - ஓர்பூடு, ஓர் வண்ணம்.

வங்காளம்-ஓரிராகம், ஓர்தேசம்.

வங்கி - கைவளை, துடிவேலி, துறடு.

வங்கியம்-இசைக்குழல், மூங்கில், வளைவு.

வங்கிலம் - மூள்.

வங்கு - அளை, கழுதைப்புலி, கற்புழை, சந்து.

வங்கூழ் - காற்று, வாதம்.

வங்கை - பகை.

வசகம் - கொறடு.

வசக்கட்டு - ஆட்சி.

வசக்குதல் - படியப்பண்ணல், வசையப்பண்ணல்.

வசக்கேடு - சரீரமெலிவு.

வசதி - இடச்சுகம், இரா, இருப்பிடம், நல்லிடம், மருதநிலத்தூர், வீடு.

வசத்திற்சோதினி - எலுமிச்சை.

வசநாவி - நஞ்சு.

வசநீயம் - வார்த்தை.

வசந்தகாலம்- இளவேனிற்காலம்.

வசந்தசகன் - மன்மதன்.

வசந்தபைரவி - ஓரிராகம்.

வசந்தமாலை - ஓர் பிரபந்தம்.

வசந்தம் - இந்திரன் மாளிகை, இளவேனில்,ஓரிராகம், சின்னமுத்து, சுகந்தம், தென்னற்காற்று, வாசனை.

வசந்தன் - ஓர்கூத்து, குரங்கு, தென்னற்காற்று, மன்மதன்.

வசந்திகை - தேமல்.

வசம் - அமைச்சல், ஒழுங்கு, கீழ்ப்படிதல்,கைவசம்,துரைத்தனம், நிலவரம், பிறப்பு.

வசம்பு - ஓர் மருந்து, மிளகு, வசா.

வசவி - அசதி, துட்டை.

வசவு - இழிவுரை.

வசனம் - சொல், பழமொழி, பேச்சு, வாக்கியம், வாசகம்.

வசனித்தல் - சொல்லல், விவரித்தல்.

வசி - இருப்பிடம், குற்றம், கழுமுள், கூர்மை, சூலம், தழும்பு, திரட்சி, மழை, வசியம், வசியென்னேவல், வாள்.

வசிகம் - மிளகு.

வசிட்டன் - பிரமன் மானதபுத்திரன்.

வசித்தல் - தங்கல், வசனித்தல்.

வசித்துவம் - அட்டமாசித்தியி னொன்று, வசமாக்கல்.

வசநி - வன்னிமரம்.

வசியம் - எண்கருமத்தொன்று, காம்பு, கைவசம், மணப் பொருத்தம் பத்திலொன்று.

வசிரம் - ஆனைத்திப்பிலி, கடலுப்பு.

வசிவு - வளைவு.

வசீகரணம் - கீழ்ப்படுத்தல், புணர்ச்சிக்கிணக்கம், வசம்.

வசு - அஷ்டவஸுக்கள், ஓரரசன், ஓர்மணி, கிரணம், குபேரன், சிவன், சூரியன், செல்வம், தேவர், நீர், நெருப்பு, பசுவின் கன்று, பொருள், பொன், மரப்பொது, வெள்வெங்காயம்.

வசுக்கள் - அஷ்டவஸுக்கள், அவர்கள்—தவன், துருவன், ஸோமன், விஷ்ணு, அநிலன், அநலன், பிரபாஸன், ப்ரபவன்.

வசுசேனன் - கர்ணன்.

வசுதேவன் - கண்ணன்றந்தை.

வசுதை, வசுந்தரை, வசுமதி } பூமி.

வசுநாள் - அவிட்டநாள்.

வசுபை - புனர்பூச நட்சத்திரம்.

வசை - இகழ்ச்சிச்சொல், கணவன் சகோதரி, குற்றம், பசு, பெண், பெண்யானை, மகள், மலட்டுப்பசு, மனைவி, மூழை.

வச்சகம் - மலைமல்லிகை.

வச்சநாபி - வற்சநாபி.

வச்சலமணி - கோரோசனம்.

வச்சி - காயாமரம்.

வச்சிரகம் - தாமரைக்காய்.

வச்சிரதாரணை - நவதாரணையி னொன்று.

வச்சிரதுண்டம் - கருடன், கொசுகு, வலியான்.

வச்சிரபாணி - இந்திரன்.

வச்சிரபாதம் - இடியேறு.

வச்சிரபீசம் - கொடிப்புன்கு.

வச்சிரம் - அத்திரபேதி, இடி, எட்டு, ஓர்பிசின், குலிசம், கொடுஞ்சொல், சதுரக்கள்ளி, சிற்பநூல் முப்பத்திரண்டி னொன்று, தருப்பை, நித்திய யோகத்தொன்று, பசுமை, மாட்டுத்தோலின் றெடுக்கும் பசை, வச்சிராயுதம், வயிர மணி, வயிரம்.

வச்சிரவல்லி - பிரண்டை. பொழுது வணங்கிப்பூச்செடி.

வச்சிராங்கம் - சதுரக்கள்ளி.

வச்சிராவர்த்தம் - இராமன்வில்.

வச்சிரி - இந்திரன்.

வச்சிரீகரணம் - இடைபிங்கலை சுழிமுனை.

வச்சைசயம் - கலைமான்.

வஞ்சகம் - அணுப்பு, சூத்திரம், நரி, மடிப்பு, மறைவு, வஞ்சனை.

வஞ்சகன் - தூர்த்தன், வஞ்சிப்போன்.

வஞ்சப்பெண் - காளியேவல் செய்வோள்.

வஞ்சம்-கபடம்,கொடுமை,சிறுமை பொய், வடிப்பு, மாயம்,வாள்.

வஞ்சலம் - பாம்பு.

வஞ்சனம்-வஞ்சித்தல்,வஞ்சினம்.

வஞ்சனி-இடாகினி, காளியேவல் செய்வாள், பெண்.

வஞ்சனை-ஆணை, தெய்வப்பெண், பொய், மாயம், வஞ்சம்.

வஞ்சி - ஓர்கொடி, ஓர்பா, கருவூர், சீந்தில்கொடி, தருமதேவதை, பகைவர்மேற்செலவு, பகைவர்மேற் செல்வார்க்கு மாலை, பெண், வஞ்சியென்னேவல், வஞ்சித்தலை.

வஞ்சிச்சீர் - வஞ்சியுரிச்சீர்.

வஞ்சித்தல் - வஞ்சனைசெய்தல்.

வஞ்சித்தளை - கனிநிழலென்னும் வாய்பாடுகளின் பின் நேரசையேனு நிரையசையேனும் வருவது.

வஞ்சித்தாழிசை - நிரையசையோடேனு நேரசை யோடேனும் புணர்ந்து இருசீரடி நான்கு கொண்டொரு பொருள்மேல் மூன்றடுக்கி வருவது.

வஞ்சித்துறை - இருசீரடிநான்கு கொண்டு வருவது.

வஞ்சிப்பா - ஐந்துபாவினொன்று; அது—பெரும்பான்மை வஞ்சித் தளையுஞ் சிறுபான்மை பிறதளையுந் தழுவி இரு சீரடியானேனு முச்சீரடி யானேனு மூன்று முதலிய பல அடிகளைக் கொண்டு தனிச் சொற்பெற்று அகவற்சுரிதகத்தான்முடிவது.

வஞ்சியர் - பெண்கள்.

வஞ்சியுரிச்சீர் - நேரசையுநிரையசையுந்தம்முள் விரவிமூன்றடுத்து நிரையசை முடிவு பெற்று நிற்பது.

வஞ்சிவிருத்தம்-முச்சீரடி நான்கு கொண்டு வருவது.

வஞ்சிவேந்தன் - சேரன்.

வடகம் - உல்லாசம், ஓர் பணிகாரம், தோல், போர்வை, மேலங்கி, வற்றல்.

வடகிரி-பொன்மலை, மகாமேரு.

வடகீழ்த்திசைப்பாலன் - ஈசானன்.

வடகோடை - குன்றுவாடை.

வடக்கு - வடதிசை.

வடதிசைப்பாலன் - குபேரன்.

வடந்தை - வடகாற்று.

வடமரம்
வடவிருக்கம் } ஆலமரம்.

வடமீன் - அருந்ததி.

வடமேற்றிசைப்பாலன் - வாயு.

வடமொழி எதிர்மறை - எதிர்மறைப்பகுபதம்.

வடமொழிச்சந்தி - தீர்க்கம், குணம்,விருத்தி என்ற மூன்று சந்திகள்.

வடம் - ஆணிவடம், ஆலமரம், ஊர், ஓர் பணிகாரம், கயிறு, நாணி, பூவரும்பு, மணிவடம், வட்டம்.

வடாம் - தலைச்சீலை, பாய்.

வடவாசி - இயக்கன், ஆலடியில் வசிப்போன்.

வடவானலம்
வடவாமுகம் } ஊழித்தீ.
வடவாமுகாக்கினி

வடவேங்கடம் - திருப்பதி.

வடவை - அச்வினீ, அடிமைப் பெண், ஊழித்தீ, எருமை, பெண்குதிரை, பெண்யானை.

வடி - கயிறு, குசைக்கயிறு, கூர் மை, நாய், வடியென்னேவல்.

வடிகயிறு - குதிரைவாய்க்கயிறு.

வடிகதிர்
வடிக்கருவி } நூல்முருக்குமோர் கருவி.

வடிக்குதல் - களங்கமறுத்தல், வடியச்செய்தல்.

வடிதல்
வடிதல் } நீளம், நீளல், வடியல், வற்றுதல்.

வடித்தல் - கூராக்குதல், வடிக்கு தல், வசமாக்குதல்.

வடிப்பம்-அழகு, செப்பம், திறம்.

வடிப்பு - சலாகை, வடித்தல்.

வடிம்பு - நுதி, விளிம்பு.

வடிம்புக்கழி - எதிர்ச்சட்டம், குறுக்கு விட்டம்.

வடிவம் - உடல், உருவு.

வடிவு - அல்குல், அழகு, உருவு, வட்டஞ்சதுர முதலிய உருவங் களால் வருபெயர்.

வடிவுப்பண்தொகை - உருவுப் பண்பைக்காட்டி நிற்குந்தொ கைநிலை.

வடு - இளங்காய், குற்றம், செம்பு, தழும்பு, பிரமசாரி, மச்சம், மருதயாழ்த்திறம், வசை, வடுவென்னேவல், வண்டு, வாலிபன், வாள்.

வடுகச்சி - வடுகப்பெண்.

வடுகன் - பிரமசாரி, மூடல், வயி ரவன், வாலிபன்.

வடுகன்ருய்
வடுகி } காடுகாள்.

வடுகு - உபநயசம், இந்தளராகம், ஓர்சாதி, ஓர்தேசம், ஓர்பாஷை, மருதயாழ்த்திறம்.

வடுத்தல் - இளங்காயரும்பல்.

வடுப்படுதல் - ஏறுபடுதல், குற்ற மடைதல், வசைபூணுதல்.

வடுவரி - வண்டு.

வடகல் - கெடுதல், வெட்கம்.

வட்கார் - பகைவர்.

வட்சத்தலம்
வக்ஷஸ்தலம் } மார்பு.

வட்டகை - அடைப்புநிலம், சிறு கிண்ணம்,

வட்டணம் - பரிசை.

வட்டணிக்கை-சுற்றுகை, வட்ட வடிவு.

வட்டணை - தாளம், வட்டம்.

வட்டணையுறுத்தல் - தாளம் போடல்.

வட்டத்திருப்பி - பங்கம்பாளை, மலைதாங்கி.

வட்டப்பாலை-நால்வகைப்பாலையி ெனான்று.

வட்டமிடுதல் - சுற்றுதல்.

வட்டம் - குளம், கேடகம், கைமணி, கொள்கலம், சக்கரம், சீலை, தாழ்வு, திரிகை, நாணய மாற்றுதலின் கழிவு, நீர்ச்சால், பரிவேடம், பீடம், பொற்காசு முதலியவற்றின் வட்டம்,வளைதடி, வாகுவலயம்.

வட்டா - ஓர் பாத்திரம், தட்டம், தாம்பாளம்.

வட்டாரம் - சுற்றுப்புறம், தானியக்களஞ்சியம், வீடு.

வட்டி - கூடை, பலகரை, முதற்பொருட்கு வருமூதியம்,வட்டியென்னேவல்.

வட்டிகை - கூடை, கைம்மணி, சித்திரம், நால்வகைச்சாந்தி ெனான்று, வட்டம்.

வட்டித்தல் - ஆணையிடல், ஊணிடுதல், தாளம்போடல், வட்டமாதல்.

வட்டில் - ஓருண்கலம்,கிண்ணம், கூடை, சூதாடுகருவி, புட்டில், வழி.

வட்டு - ஓர்செடி, விளையாட்டு, கறிமுள்ளி, சூதாடுகருவி, திரட்சி, மரவட்டு.

வட்டுடை - சீலை.

வட்டை - இரதம், புலியினதுடல் வரி, வழி.

வட்புலி - சிங்கம்.

வணக்கம் - கீழ்ப்படிதல், சங்கித்தல், தொழுதல்.

வணக்கல் - வளைத்தல்.

வணங்கல் - தொழுதல், வளைதல்.

வணங்காமுடியினன் - துரியோதனன்.

வணர் - வளைவு.

வணிகம் - செட்டு, வியாபாரம்.

வணிகன் - செட்டி, துலாராசி, வியாபாரி.

வணிச்சியம் - வாணிச்சியம்.

வணிதம் - செப்பம்.

வண் - ஈகை.

வண்களமர்-சூத்திரர், வேளாளர்.

வண்சிறை - மதில்.

வண்டரம் - நாய், நாய்வால், மார்பு, முகில்.

வண்டர் - கடிகைமாக்கள், கவிகள், கற்றோர், மங்கலபாடகர், மிண்டர்.

வண்டல் - மகளிர் விளையாட்டு, வண்டல்.

வண்டன் - குள்ளன், திண்ணியன், தட்டன்.

வண்டானம் - நாரை.

வண்டு-அம்பு, குற்றம், கைவளை, சங்கு, பூசநாள், வண்டு.

வண்டுகொல்லி - ஓர்மரம், தேவதாரம்.

வண்டுணுமலர்மரம்-சண்பகமரம், வேங்கைமரம்.

வண்டுரை-எழுத்தில்லாவோசை.

வண்டோதரி - பஞ்சகன்னிகைகளிலொருத்தி.

வண்ணகம் - கலிப்பாமுடுகியல்.

வண்ணக்குழிப்பு - ஓரோசை.

வண்ணமகள்-கோலஞ்செய்வாள்.

வண்ணம் - அழகு, இராகம், ஒப்பனை, குணம், சந்தம், சந்தனம், சாந்துப்பொது, நன்மை, முடுகியல், நிறம், வகை, வடிவு, வாசனை.

வண்ணுர் - ஏகாலியர்.

வண்மை - அழகு, ஈகை, குணம், புகழ், மெய்மை, வளமை, விதம்.

வதந்தி - கதை, பேச்சு.

வதம் - கொலை.

வதரி - இலந்தை.

வதனம் - முகம், முக்கோணத்தின்மேற்கோணம்.

வதானியன் - குபேரன், வரையாது கொடுப்போன்.

வதி - சேறு, வழியென்னேவல், வழி.

வதிதல் - தங்கல்.

வதிரன் - செவிடன்.

வதிவு - இருத்தல்.

வதின்மொழி - பிரதிவாக்கு.

வதி - கொலைகாரன்.

வது - மகன் மனைவி, மனைவி, பெண்.

வதுகை - மனைவி.

வதுவடி - பாலை.

வதுவர்-குதிரைப்பாகர், யானைப்பாகர்.

வதுவை - கலியாணம், வலுவந்தம், வாசனை.

வதூ - புதுமணப்பெண், பெண், மனைவி.

வதூடி - மருமகள்.

வதை - உபத்திரவம், கொலை, துன்பம், தேவதை, வதையென்னேவல்.

வதைத்தல் - கொல்லல்.

வதோபாயம் - கொலைக்கேதுவான உபாயம்.

வத்தகமை } வத்திப்பு, வியாபாரம்.
வத்தகம் }

வத்தகன் - செட்டி, வியாபாரி.

வத்தசாலம் - நிகழ்காலம்.

வத்தகானம் - கருமம், சங்கதி, நிகழ்காலம், நிகழ்ச்சி.

வத்தர் - வத்திரு.

வத்தல்-சிறுவெள்ளல், செத்தல்.

